உ



# ஸ்ரீ வால்மீகி ஹ்ருதயம்

ஞானானந்த பாரதீ ஸ்வாமிகள்
இயற்றியது

பிரசுரித்தது
ஞானானந்த கிரந்த பிரகாசன ஸமிதி
தென்கரை B.O., மதுரை ஜில்லா:

அச்சிட்டது
ஸிடி பிரிண்டிங் ஒர்க்ஸ்
சென்னை

தபால் கட்டணம் வேறு] 1971 ரூபாய் 5.00

# முகவுரை

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண விஷயமாக ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகள் பூர்வாசிரமத்திலும் பின்னாலும் எழுதி ஸ்ரீ சங்கர க்ருபா பத்திரிகையில் வெளிவந்த வியாஸங்களை ஒன்றுசேர்த்து அத்யாயங்களாகப் பிரித்து புஸ்தக ரூபமாக இப்பொழுது வெளியிடப்படுகிறது. வாசகர்களுக்கு மிகவும் பிரயோஜனமாயிருக்குமென்று நம்புகிறோம்.

வியாஸங்கள் எழுதும்போது சிலஸமயம் கீதா பிரஸ் பதிப்பையும் சிலஸமயம் M. L. J. பிரஸ் பதிப்பையும் உபயோகிக்க நேரிட்டதால் ஸர்க்கம் சுலோகம் இவைகளின் லக்கங்களில் வித்யாஸமிருக்கும். இதில் இருக்கக்கூடிய அச்சுப் பிழைகளை வாசகர்களே ஸுலபமாய் திருத்திக்கொள்ள முடியுமானதினால் பிழைத் திருத்தம் சேர்க்கவில்லை.

இந்த புஸ்தகம் அச்சிட சின்னமனூர் பிரஹ்மஸ்ரீ பீதாம்பரம் கிருஷ்ணய்யர் ரூ. 1000/- கொடுத்து பேருதவி செய்து உத்ஸாஹம் ஊட்டியதற்கு எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அப்படியே இப்புஸ்தகத்தை மிகவும் அக்கரையுடன் மிக அழகாக அச்சிட்டுக் கொடுத்த ஸிடி பிரிண்டிங் ஒர்க்ஸ் அதிகாரிகளுக்கும் நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

R. RAMASWAMI AIYAR,
தலைவர்,
ஸ்ரீ ஞானானந்த கிரந்த பிரகாசன ஸமிதி.

தென்கரை.

# அட்டவணை

|| श्री गुरुभ्यो नमः ||

# ஸ்ரீ வால்மீகி ஹ்ருதயம்

## அத்யாயம் 1

### அவதார ரஹஸ்யம்

ஜகந்நியந்தாவான பகவான் சிஷ்டபரிபாலனம், துஷ்ட நிக்ரஹம் மூலமாக தர்மத்தை நிலைநாட்டுவதற்காக அவதாரம் செய்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட தேசத்தில், ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஒரு குறிப்பிட்ட சரீரத்துடன் ஆவிர்பவித்தார் என்றாலே, ஸர்வ வ்யாபகராய், காலாதீதராய், பரிச்சேதமற்றவராய் இருப்பவர் அளவுக்கு கட்டுப்பட்டாரென்றே ஏற்படுவதால், அவதாரம் என்பதே அம்சத்தினால்தான் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால் அம்சமென்பதற்கு ஒரு பகுதி என்று அர்த்தமில்லை. ஒரு காடு தீப்பற்றி எரியும் போது அதில் எரிந்து கொண்டிருக்கிற சிறு சுள்ளியை எடுத்தால், அந்தச் சுள்ளி மாத்திரம் காட்டில் ஒரு சிறு பகுதியாகுமே தவிர, அதில் எரிந்து கொண்டிருக்கும் அக்னி எவ்விதத்திலும் அக்னியின் பகுதியாகாது. கால் அக்னி, அரைக்கால் அக்னி, வீசம் அக்னி, என்ற வ்யவஹாரம் கிடையாது. எவ்வளவு சிறியதாய்த் தோன்றினாலும் அதுவும் அக்னிதான். அதற்கே எரிப்பதற்குப் பதார்த்தம் கொடுத்தால் அதுவே பெரியதாகிவிடும். ஆகையால் சிறியது பெரியது என்ற வ்யவஹாரம் எரிக்கப்படும் பதார்த்தத்தைச் சேர்ந்ததே தவிர, எரியும் அக்னியைச் சேர்ந்ததில்லை. வாமன ரூபம் எடுத்தபோது சின்ன ரூபம், த்ரிவிக்ரமரூபம் எடுத்தபோது பெரிய ரூபம் என்று சொல்லலாமே தவிர, அப்பொழுது சின்ன பகவான், இப்பொழுது பெரிய பகவான் என்று சொல்ல

முடியாது. பகவான் அந்தந்த ஸமயத்திற்கு வேண்டிய ரூபங்களுடன் ஆவிர்பாவமடைவதால் அவதாரங்களுக்குள் பேதமுண்டென்று நினைப்பது உசிதமாகாது, எந்த எந்த ஸந்தர்ப்பத்தில் எந்த எந்த சக்தியை உபயோகிக்க வேண்டுமோ அதை உபயோகப்படுத்துவதால், மற்றும் அவருக்குள்ள அனந்தமான சக்திகள் அவரிடம் அப்பொழுது கிடையாதென்று நினைத்துவிடக்கூடாது. சிலர் ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்தான் பரிபூர்ணமான அவதாரமென்றும், ஸ்ரீ ராமாவதாரம் அவ்விதமில்லையென்றும் சொல்கிறார்கள். இரண்டு அவதார ஸமயங்களிலும், மற்ற எந்த அவதார ஸமயத்திலும், ஸ்ரீ மகா விஷ்ணு வைகுண்டத்தைக் காலி பண்ணிக்கொண்டு, பூலோகத்திற்கு வந்துவிட்டதாக யாரும் சொல்லுவதில்லை. அப்பொழுதும் வைகுண்டபதி அங்கேயும் நித்ய விபூதியாய் விளங்கிக் கொண்டே இருந்திருக்கிறார்.

ராவணனை ஸம்ஹாரம் செய்வதற்கு தேவகந்தர்வாதிகளால் முடியாததினால் பகவான் மனுஷ்யராக அவதரிக்க வேண்டியிருந்தது. அவனை யுத்தத்தில் கொல்லவேண்டியிருந்ததால் க்ஷத்ரியனாக அவதரித்தார். அவன் மிகவும் பலசாலியாக இருந்தபடியால் அவனைவிட பராக்ரமசாலியாக இருக்க வேண்டியிருந்தது. அவர் தன்னுடைய தேவத் தன்மையைக் கொண்டு அவனை ஸம்ஹரிப்பதற்கு வழியில்லாமல் அவன் வரம் வாங்கியிருந்தபடியால், அவர் தன்னை மனுஷ்யனாகவே காட்டிக் கொள்ள வேண்டியிருந்தது. அதனால் அவர் தன் ஸ்வரூபத்தை மறந்திருந்தார் என்று நினைப்பது உசிதமாகாது. ஒரு புருஷன் ஸ்திரீ வேஷம் போட்டுக் கொண்டு நடிக்கும்போது அவனுடைய பேச்சு, நடை, உடை, பாவனை முதலியவை யாவும் ஸ்திரீக்குத் தகுந்ததாகவேயிருக்கும். ஆனால் அந்தப் புருஷன் தன்னை ஸ்திரீதான் என்று நினைத்து தான் புருஷன் என்பதை மறந்துவிட முடியாது. ஸ்ரீமத் ஆசார்யாரவர்கள்

मत्वा स्त्रीवेषधारी स्त्र्यहमिति कुरुते किं नटो भर्तुरिच्छाम् ।

என்று சதச்லோகியில் (சு. 7) எடுத்துக்காட்டியபடி, ஸ்திரீ வேஷம் போட்டிருப்பவன் தனக்கு ஒரு பர்த்தா வேண்டுமென்று நினைக்கமாட்டான். நாடகத்தில் அந்த ஸ்திரீக்கு பர்த்தாவாக வருபவனுடைய காமத்தை இவனால் பூர்த்தி செய்யவும் முடியாது. ஆகையால் அவனைத் தன்னை மறந்தவன் என்று சொல்லுவது பிசகு. தன்னை மறைத்தவன் என்று மாத்திரம் சொல்லலாம். அதிலும் இன்னார் இந்த ஸ்திரீ வேஷம் போட்டிருக்கிறு னென்று அறிந்தவன் ஏமாந்துவிட மாட்டான். அவன் வாஸ்தவத்தில் யாரென்று மற்றவர்களிடம் சொல்லா மலே தானும் நாடகத்தை ரஸித்து அனுபவிப்பான். அதனால் அவனுக்கும் உண்மை தெரியாதென்று நினைத்து விடக்கூடாது. அதேபோல ஸ்ரீராமர் தன்னை எவ்வளவோ மறைத்துக் காட்டி மனுஷ்யனைகக் காட்டிக் கொண்ட போதிலும், அவர் தன் ஸ்வரூபத்தை மறக்கவில்லை. உண்மையை அறிந்தவர்களும் மறக்கவில்லை என்பது ஸ்ரீமத் ராமாயணத்திலுள்ள பலஸந்தர்ப்பங்களிலிருந்து நன்ருகத் தெரிகிறது.

ஸ்ரீராமர் மாரீசனை ஸமுத்திரத்தில் அமிழ்த்தினது, ஸீதா வியோகம் ஏற்பட்டபோது ஜகத்தையே நாசம் செய்து விடுவேன் என்று சொன்னது, கரதூஷணுதி களைத் தனித்து நின்று ஸம்ஹரித்தது, ஸமுத்ரராஜனைப் பயமுறுத்தியது, ராவணனுடைய மூலபலத்துடன் யுத்தம் செய்யும்போது ஆயிரக்கணக்கான ராமராகத் தோன்றியது, முதலான ஸம்பவங்களெல்லாம் அஸ்திர பலத்திலுலேயே இருக்கலாம். அஹல்யை சாபவிமோ சனம், விராதனும் கபந்தனும் தன் நிலையடைந்தது, இவையெல்லாம் சாபம் ஏற்பட்ட காலத்திலேயே ராமரை ஸந்தித்தவுடன் ஏற்படும் என்று குறிக்கப்பட் டிருந்தபடியால் இவைகளினுல் ஸ்ரீ ராமர் அவதார புருஷன் என்று சொல்லமுடியாது.

*அதிகாயனோடு லக்ஷ்மணன் யுத்தம் செய்தபோது அவனை ப்ரஹ்மாஸ்திரத்தினுல்தான் கொல்ல முடியு மென்று வாயு பகவான் லக்ஷ்மணனிடம் சொன்னதாகக் காண்கிறது.*

अथैनमभ्युपागम्य वायुर्वाक्यमुवाच ह।
ब्रह्मदत्तवरो ह्येष अवध्यकवचावृतः।
ब्राह्मेणास्त्रेण भिन्ध्येनं एष वध्यो हि नान्यथा ॥ *யுத்த.* 71 (102)

*ஸ்ரீ ராமருக்கு யுத்த களத்தில் அகஸ்த்யர் தோன்றி ஆதித்யஹ்ருதயம் உபதேசம் செய்த பிற்பாடு, ஸ்ரீராமர் ஸூர்ய பகவானை அப்படியே ஆராதித்தவுடன் ஸூர்யன் தேவர்கள் மத்தியிலிருந்து கொண்டு சீக்கிரமாகவே ராவணனை ஸம்ஹாரம் செய்யும்படி சொல்லுகிறார்.*

अथ रविरवदन्निरीक्ष्य रामं
मुदितमनाः परमं प्रहृष्यमाणः।
निशिचरपतिसंक्षयं विदित्वा
सुरगणमध्यगतो वचस्त्वरेति ॥*யுத்த.* 107 (21)

*இந்திரன் தன் ரதத்தையும் பலவித ஆயுதங்களையும் அனுப்பிக் கொடுக்கிறான். அந்த ரத ஸாரதி மாதலியே ராவணனை ஸம்ஹரிக்க பிரஹ்மாஸ்திரத்தை பிரயோகிக் கும்படி ஸ்ரீராமரிடம் சொல்லுகிறான்.*

अथ संस्मारयामास राघवं मातलिस्तदा।
अजानन्निव किं वीर त्वमेनमनुवर्तसे।
विसृजास्मै वधाय त्वं अस्त्रं पैतामहं प्रभो ॥ *யுத்த.* 111 (1,2)

இவ்விதம் தேவர்களெல்லாம் ஸஹஜமாகப் பழகின திலுல் ஸ்ரீராமர் அவதார புருஷன் என்று தீர்மானம் செய்யலாமென்ருல், அந்த தேவேந்திரன் சரபங்கருடையவும், ஸுதீக்ஷ்ணருடையவும் ஆசிரமங்களுக்கு நேரில் வந்துவிட்டுப் போயிருக்கிருன். இந்திரனுடைய வேண்டுகோளின்படி தசரதரே வைஜயந்தம் என்ற நகரத்திலிருந்த 'திமித்வஜன்' (பெரிய மீனைக்கொடியிலுள்ளவன்) என்கிற சம்பராஸுரனுடன் தண்டகாரண்யத்தில் யுத்தம் செய்திருக்கிருர். அப்பொழுதுதான் அவர் கைகேயிக்கு வரம் கொடுத்தது. அந்த திமித்வஜனுடைய புத்ரனை ஸ்ரீராமரே ஸம்ஹரித்து பிரஹ்மாவிடம் உயர்ந்த அஸ்திரங்களை வாங்கியிருக்கிருர் என்பதை ஸுமித்ரை கௌஸல்யைக்கு தைர்யம் சொல்லும்போது சொல்லுகிருள்.

ददौ चास्त्राणि दिव्यानि यस्मै ब्रह्मा महौजसे ।
दानवेन्द्रं हतं दृष्ट्वा तिमिध्वजसुतं रणे । அயோ. 44 (11)

பிரஹ்மா வால்மீகி மஹரிஷியைப் பார்ப்பதற்காகவே பூலோகத்திற்கு நேரில் வந்திருக்கிருர். மஹாபாரதத்தில் அர்ஜுனன் தேவலோகம் போய்ச் சிலநாள் இந்திரனுடனிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் த்வாபரயுகத்திலேயே பூலோகத்திலிருப்பவர்களுக்கும் தேவர்களுக்கும் பழக்கமிருக்குமேயாஞல், அதற்கு முந்தின திரேதா யுகத்தில் இன்னமும் நெருங்கின பழக்கமிருப்பதில் ஆச்சர்யமில்லை. தேவர்களின் பழக்கமிருப்பதிஞல் மாத்திரம் ஒருவர் அவதார புருஷர் ஆகமாட்டார். ஸ்ரீமத் ராமாயணத்தில் அனேகவிடங்களில் ஸ்ரீராமர் விஷ்ணுவைப்போல் இருந்தார், பரமேசுவரருக்கு ஸமானமாக இருந்தார், என்றெல்லாம் காணுவதிலிருந்தும் அவரை நாம் யார் என்று கண்டுபிடிக்க முடியாது. ஆகையால் இவை போலுள்ள ஸம்பவங்களுக்குப் பிராதான்யம்

கொடுக்காமல் வேறு ஸம்பவங்களையே இங்கே எடுத்துக் காட்ட உத்தேசம்.

(1) ஸ்ரீராமரை அழைத்துப்போவதற்காக வந்த விசுவாமித்ரருக்கு அவரிடம் அதற்கு முன்னால் பரிசயம் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனாலும் பெற்று வளர்த்த தகப்பனாரைவிட ஸ்ரீராமரைப்பற்றி அவரே நன்கு தெரிந்துகொண்டிருக்கிறாரென்று தெரிகிறது. அவ்விதம் தெரிந்ததும் பரிசயத்தினால் அல்ல, தபஸினால்தான் என்பதையும் எடுத்துக்காட்டுகிறார். இவரைவிட மேலான தபஸ்வியான வஸிஷ்டருக்குத் தெரியுமா வென்றால், அவருக்கும் தெரியும், தபஸில் ஈடுபட்ட யாவருக்கும் தெரியும் என்கிறார்.

अहं वेद्मि महात्मानं रामं सत्यपराक्रमम् ।
वसिष्ठोऽपि महातेजाः ये चेमे तपसि स्थिताः ॥ பால. 19 (15)

ஸ்ரீராமர் பகவான் என்று அறிந்திருந்தும் உலக ஸம்ப்ரதாயப்படி அவருக்கு விசுவாமித்ரர் அஸ்திரங்களை உபதேசிக்கிறார். உடனே அவ்வஸ்த்ரங்கள் உருவம் தரித்து முன் வந்து நிற்கும்போது ஸ்ரீராமர் "என் மனஸில் இருங்கள். வேண்டியபோது ஸஹாயம் செய்யுங்கள்" என்கிறார்.

मानसा मे भविष्यध्वं इति तानभ्यचोदयत् । பால. 27 (28)
मानसाः कार्यकालेषु साहाय्यं मे करिष्यथ ॥ பால. 28 (14)

ஸித்தாசிரமத்திற்கு ஸமீபம் வருகையில் இது யாருடைய தபோவனம் என்று ராமர் கேட்டபோது, மஹா விஷ்ணு வாமனாவதாரத்தில் தபஸ் செய்தவிடம் என்று மாத்திரம் சொல்லி நிறுத்தாமல், பகவானே தங்க

ளுக்குப் புத்திரனுக ஜனிக்க வேண்டு மென்று காசியபர் கேட்கும்போது இன்னவிதமாக பகவானை ஸ்துதித்தார் என்பதையும் சொல்லுகிருர். அந்த ஸ்துதி அமைந்திருக் கிற மாதிரியில், தன் முன் நிற்கும் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி யையே விசுவாமித்ரர் மறைவாக ஸ்துதிக்கிருரோ வென்று தோன்றுகிறது. சிஷ்யமுறையில் தன்னுடன் வந் திருக்கிறவரை நேரில் ஸ்துதிப்பது உசிதமாகாதல்லவா? "தபோமயராய், தபோராசியாய், தபோமூர்த்தியாய், தபோதனராய், புருஷோத்தமராய் உம்மை நான் என் தபோவலிமையால் பார்க்கிறேன். உம்முடைய சரீரத்தில் இந்த ஜகத்பூராவையும் பார்க்கிறேன். உமக்கு உத்பத்தி கிடையாது. உம்மை இன்னவிதமென்று குறிப்பிட முடியாது. உம்மையே நான் சரணம் அடைந்திருக் என்கிருர்.

तपोमयं तपोराशिं तपोमूर्तिं तपोधनम् ।
तपसा त्वां सुतप्तेन पश्यामि पुरुषोत्तमम् ॥
शरीरे तव पश्यामि जगत् सर्वमिदं प्रभो ।
त्वमनादिरनिर्देश्यः त्वामहं शरणं गतः ॥ பால. 29 (13, 14)

(2) பரசுராமர் தன்னிடமிருந்த வைஷ்ணவ தனுஸை அதன் ஸ்வாந்தாரான விஷ்ணுவின் அவதார மான ஸ்ரீராமரிடமே கொடுத்துவிடத் தீர்மானித்து, அத்துடன் அதுவரை தான் தபஸினுல் ஸம்பாதித்திருக் கும் எல்லாப்புண்யங்களையும் அவரிடமே நேரில் அர்ப் பணம் செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் ஸ்ரீராம ரிடம் வருகிருர். ஆனுல் அவர் தன் தோரணையை விடா மல் உத்தண்டமாகவே பேசினதிலிருந்து பார்க்கிறவர் களுக்கு இருவர்களுக்குள்ளும் ஏதோ வாக்கு வாதம் நடந்தது போலத்தோன்றும். பாணத்திற்கு இரையாக ஏதேனும் பிராணியோ மனிதனே தான் இருக்கமுடியும்.

பரசுராமருடைய ஸஞ்சார சக்தியை அடிக்கட்டுமா, அவர் ஸம்பாதித்திருக்கும் புண்யலோகங்களை அடிக்கட்டுமா, என்று ஸாமான்ய மனுஷ்யன் கேட்க முடியுமா? ஸாமான்ய மனுஷ்யராக பரசுராமர் நினைத்திருந்தால், என் ஸஞ்சார சக்தியை அடிக்கவேண்டாம், லோகங்களையே அடிக்க வேண்டுமென்று சொல்லுவாரா?

इमां पादगतिं राम तपोबलसमार्जितान् ।

लोकानप्रतिमान् वा ते हनिष्यामि यदिच्छसि ॥ பால. 76 (7)

இந்த தனுஸை ஸ்ரீ ராமர் கையாளுகிறமாதிரியிலேயே அவர் மஹாவிஷ்ணுவென்று தெரிகிறது, மூவுலகத்திற்கும் நாதரானவரிடம் தனக்குத் தோல்வியேற்பட்டதில் ஸங்கோசப்படுவதற்கொன்றுமில்லை, என்று வியக்தமாகவே சொல்லுகிறார்.

अक्षय्यं मधुहन्तारं जानामि त्वां सुरोत्तमम् ।

धनुषोऽस्य परामर्शात् स्वस्ति तेऽस्तु परंतप ॥ பால. 76 (17)

न चेयं मम काकुत्स्थ व्रीडा भवितुमर्हति ।

त्वया त्रैलोक्यनाथेन यदहं विमुखीकृतः ॥ ,, ,, (19)

இவ்விதம் பரசுராமர் சொன்னதற்கெல்லாம் ஸ்ரீராமர் மறுப்புச் சொல்லவேயில்லை. மேலும் பரசுராமரிடம் வாங்கின தனுஸை வருணபகவானிடம் கொடுக்கிறார். இது மனுஷ்யனுக்கு ஸாத்யமாகுமா?

वरुणायाप्रमेयाय ददौ हस्ते ससायकम् ॥ பால. 77 (1)

(3) ஸுமித்ரைக்கு ஸ்ரீராமருடைய மாஹாத்ம்யம் நன்கு தெரியும் என்பதற்கு ஆதாரமாக லக்ஷ்மணனைப் பார்த்து அவள் சொல்லுகிற

रामं दशारथं विद्धि मां विद्धि जनकात्मजाम् ।
अयोध्यां अटवीं विद्धि गच्छ तात यथासुखम् ॥ அயோ. 40 (9)

என்ற சுலோகத்தை எடுத்துக்கொண்டு மிகவும் சிரமப் பட்டு "தசரத" என்றால் மஹாவிஷ்ணுவென்று வைத்துக் கொண்டு ராமரை மகாவிஷ்ணுவாக அறி, ஜனக புத்ரி யான ஸீதையை மா(லக்ஷ்மீ) என்று அறி, காட்டை அயோத்தி (அபராஜிதமென்ற வைகுண்டம்) என்று அறி, என்று சிலர் அர்த்தம் சொல்லுகிறார்கள். இதைவிட வியக்தமாக அவள் கௌஸல்யைக்கு ஸமாதானம் சொல் லும்போது "ராமர் ஸூர்யனுக்கும் ஸூர்யனாயிருப்பார்; அக்னிக்கும் அக்னியாயிருப்பார்; பிரபுவுக்கும் பிரபு வாவார்; லக்ஷ்மிக்கும் லக்ஷ்மியானவர்; கீர்த்திக்கும் கீர்த்தியாவார்; பொறுமைக்கும் பொறுமையாவார்; (பூமிக்கும் பூமியாவார்.) தேவர்களுக்கெல்லாம் தேவ ராவார்; ஜகத்தில் எல்லாவற்றிற்கும் மேலானவர்" என்று அவர் மகிமையைக் கூறுகிறாள்.

सूर्यस्यापि भवेत् सूर्यो ह्यग्नेरग्निः प्रभोः प्रभुः ।
श्रियः श्रीश्च भवेदग्र्या कीर्त्याः कीर्तिः क्षमाक्षमा ॥
दैवतं दैवतानां च भूतानां भूतसत्तमः । அயோ. 44 (15)

(4) பரத்வாஜருடைய ஆச்ரமத்தில் பரதன் தன் தாயாரைப் பற்றி தூஷணமாக சில வார்த்தைகள் சொன்னவுடன் அம்முனிவர் "தாயாரிடத்தில் தோஷ புத்தி வைத்துக் கொள்ளாதே; ராமர் காட்டுக்கு அனுப் பப்பட்டது க்ஷேமமாகவே முடியும்; தேவர்கள், தானவர்

கள், ஆத்மானு ஸந்தானம் செய்யும் ரிஷிகள், இவர்களுக்கெல்லாம் ராமர் காட்டிற்கு அனுப்பப்பட்டதிலிருந்து நல்லதுதான் ஏற்படப்போகிறது"

न दोषेणावगन्तव्या कैकेयी भरत त्वया ।
रामप्रव्राजनं ह्येतत् सुखोदर्कं भविष्यति ॥ அயோ. 92 (30)
देवानां दानवानां च ऋषीणां भावितात्मनाम् ।
हितमेव भविष्यद्धि रामप्रव्राजनादिह ॥ ,, ,, (31)

என்கிறார். ஆகையால் அவருக்கு அவதார ரஹஸ்யம் நன்றாய்த் தெரியும் என்று ஏற்படுகிறது.

(5) பிறகு தண்டகாரண்யத்தில் பிரவேசித்து சரபங்கருடைய ஆசிரமத்திற்குப் போனவுடன் அவர், தன்னை ப்ரஹ்மலோகம் அழைத்துப் போகத் தேவேந்திரன் வந்தபோது, ராமரைப் பார்க்காமல் தனக்குப் புறப்பட இஷ்டமில்லையென்று அவனையனுப்பிவிட்டு, தான் அதுவரை செய்திருந்த புண்யங்களால் கிடைக்கக்கூடிய எல்லாவித உத்தம லோகங்களையும் ராமருக்கு அர்ப்பணம் செய்கிறார். ஸ்ரீராமர் பகவான் என்ற எண்ணமில்லாதிருந்தால் அர்ப்பணம் செய்வது எப்படி?

अक्षया नरशार्दूल मया लोका जिताः शुभाः ।
ब्राह्म्याश्च नाकपृष्ठ्याश्च प्रतिगृह्णीष्व मामकान् ॥ அர. 5 (31,32)

ஸ்ரீராமருக்கும் தான் பகவான் என்ற ஞாபகமில்லாமல் போனால் "அப்படியே எல்லா லோகங்களையும் கிரஹித்துக் கொள்ளுகிறேன்"

अहमेवाहरिष्यामि सर्वलोकान् महामुने ॥ அர. 5 (33)

என்று சொல்லமுடியுமா? பிறகு ஸுதீக்ஷ்ணரின் ஆசிரமம் போனதும் அம்முனிவரும் தன்னிடம் இந்திரன் வந்து

விட்டுப் போனதாகவும், தான் தபஸ் செய்து ஸம்பாதித்திருக்கும் லோகங்களை அர்ப்பணம் செய்வதாகவும் சொன்னவுடன் அவரிடத்திலும் ஸ்ரீராமர் அவ்வுலகங்களை கிரஹித்துக் கொள்ளுகிறேனென்று சொல்லுகிறார். சரபங்கர் ஸ்ரீராமர் ஸன்னிதியில் அக்னி பிரவேசம் செய்து உடனே பிரஹ்மலோகம் போனது போல ஸுதீக்ஷ்ணர் புறப்படவில்லையென்பதுதான் வித்தியாஸம்.

(6) அகஸ்த்ய முனிவரும் ஸ்ரீராமர் அவரிடம் வந்தவுடன் "உன் மனஸிலுள்ள அபிப்ராயத்தை என் தபஸினால் அறிந்து கொண்டேன், அதனால்தான் பஞ்சவடிக்குப்போ என்கிறேன்" என்று சொல்லுகிறார்.

हृदयस्थश्च ते छन्दो विज्ञातस्तपसा मया ।
अतश्च त्वामहं ब्रूमि गच्छ पञ्चवटीमिति ॥ அர. 13 (18,19)

அத்துடன் நிற்காமல் தன்னிடமிருந்த தனுஸ், அக்ஷய தூணீரம், கத்தி, முதலிய யுத்தத்திற்கு வேண்டிய ஆயுதங்களையும் ஸ்ரீராமரிடம் கொடுக்கிறார்.

तद्धनुस्तौ च तूणीरौ शरं खड्गं च मानद ।
जयाय प्रतिगृह्णीष्व वज्रं वज्रधरो यथा ॥ அர. 12 (35)

இதிலிருந்து ராக்ஷஸர்களை ஸம்ஹரிக்க அவதாரம் செய்த மூர்த்தி ஸ்ரீராமர் என்பது அகஸ்த்யருக்கு நன்கு தெரியுமென்பது வியக்தமாகிறது.

(7) பின்னால் கரதூஷணாதிகளை ஸம்ஹரித்தவுடன் வனத்திலுள்ள ராஜரிஷிகளும், மஹரிஷிகளும், தேவேந்த்ரன் எதற்காக சரபங்காசிரமம் வந்தானென்பதையும்,

ஒவ்வொரு ரிஷியும் ஸ்ரீராமரை மேல் மேல் போகச் சொல்லி பஞ்சவடிக்கு அனுப்பி வைத்ததின் தையும் வியக்தமாகச் சொல்லுகிறார்கள்.

एतदर्थं महाभाग महेन्द्रः पाकशासनः ।
शरभङ्गाश्रमं पुण्यं आजगाम पुरंदरः ॥
आनीतस्त्वमिमं देशं उपायेन महर्षिभिः ।
एषां वधार्थं क्रूराणां रक्षसां पापकर्मणाम् ॥ அர. 30 (30,31)

தண்டகாரண்யத்தில் பிரவேசிக்கும் போதே அங்குள்ள தபஸ்விகள் (दिव्यज्ञानसंपन्नाः) திவ்யஞானத்துடன் கூடினவர்களென்று வர்ணித்திருக்கிறபடி ஸ்ரீராமர் அவதார புருஷர் என்பதை முனிவர் யாவரும் அறிந்தவர்களென்று தெரிகிறது. ஸீதையை ராவணன் அபஹரித்தவுடன் "அவதார கார்யம் இனி நிறைவேறி விட்டது" என்று பிரஹ்மா சொல்லிக் கொண்டதுடன், தண்டகாரண்யத்திலுள்ள மகரிஷிகள் ஸீதாபஹரணத்தில் வருத்தப்பட்ட போதிலும், ராவணனுக்கு விநாசம் நெருங்கிவிட்டதென்று ஸந்தோஷத்தையும் அடைந்தார்கள்.

कृतं कार्यं इति श्रीमान् व्याजहार पितामहः ।
प्रहृष्टा व्यथिताश्चासन् सर्वे ते परमर्षयः ॥
दृष्ट्वा सीतां परामृष्टां दण्डकारण्यवासिनः ।
रावणस्य विनाशं च प्राप्तं बुद्ध्वा यदृच्छया ॥ அர. 52 (13,14)

(8) பிறகு ஜடாயுஸுக்கு ஸ்ரீராமரே அக்னி ஸம்ஸ்காரம் செய்து அவரை உத்தமமான லோகத்திற்கு அனுப்பும்போது "என்னால் அனுமதிக்கப்பட்டு" "என்னால்

ஸம்ஸ்காரம் செய்யப்பட்டு," என்று குறிப்பிடுவதினால் தன்னுடைய பகவதம்சத்தை உபயோகிக்கிறாரென்பது நன்கு

या गतिर्यज्ञशीलानां आहिताग्नेश्च या गतिः ।
अपरावर्तिनां या च या च भूमिप्रदायिनाम् ॥
मया त्वं समनुज्ञातो गच्छ लोकाननुत्तमान् ।
गृध्रराज महासत्व संस्कृतश्च मया व्रज ॥ அர. 68 (30,31)

(9) வாலியிடம் தாரை சொல்லும் சில வாக்கியங்களிலிருந்து அவள், ஸ்ரீராமர் அவதார புருஷரென்று தெரிந்து கொண்டதாக வியக்தமாகத் தெரியாத போதிலும் அவருடைய மஹிமையை நன்கு உணர்ந்திருக்கிறாளென்று துலங்குகிறது. "ஸாதுக்கள் அண்டி இருக்கும் விருக்ஷம் அவர்; ஆபத்தில் அகப்பட்டவர்களுக்கு அவரே கதி; துக்கப்படுபவர்கள் சரணமடைய வேண்டியவர் அவர்; யசஸ்ஸுக்கு இருப்பிடம்; அறிவும் அனுபவமும் நிறைந்தவர்; பிதாவின் கட்டளையில் நிற்பவர்; தாதுக்களுக்கெல்லாம் எப்படி மலையோ அப்படி எல்லா குணங்களுக்கும் பெரிய சுரங்கம் அவர்"

निवासवृक्षः साधूनां आपन्नानां परा गतिः ।
आर्तानां संश्रयश्चैव यशसश्चैकभाजनम् ॥
ज्ञानविज्ञानसंपन्नो निदेशे निरतः पितुः ।
धातूनामिव शैलेन्द्रो गुणानामाकरो महान् ॥ கிஷ். 15 (19,21)

என்று ராம மஹிமையை வர்ணிக்கிறாள்.

(10) ஒருவன் மஹாராஜ வேஷம் போட்டுக்கொண்டு நடித்துக் கொண்டிருக்கும் ஸமயத்தில் அவனுடைய

சொந்த அத்தான் ஸ்வாதீனமாக வந்து "என்ன அம்மாஞ்சேய், ஸௌக்யமா"? என்று கேட்கமுடியுமா? ஒருவர் நியாயாதிபதியாய் நியாயஸ்தலத்தில் வீற்றிருக்கும் போது அவருடைய புத்திரன் எவ்வளவு அருமையாயிருந் தாலும் ஸமீபம் போய் "அப்பா" என்று கூப்பிட முடியுமா? அதே முறையில் தேவேந்திரன் சரபங்காசிர மத்திற்கு வந்த ஸமயம் ஸ்ரீ ராமர் அங்கே வந்திருக்கிரு ரென்பதைப் பார்த்தும் "இது அவருடன் பேசுவதற்கு உசிதமான காலமில்லே. அவர் வந்த காரியம் நிறைவேறி யாகட்டும்" என்று சொல்லி அவரை ஸந்திக்காமலே புறப்பட்டுவிட்டான்.

कर्म ह्यनेन कर्तव्यं महदन्यैः सुदुष्करम्
निष्पादयित्वा तत् कर्म ततो मां अர. 5 (23,24)

(11) அப்படியே பின்னுல் நாகபாசத்தினுல் கட்டுப் பட்டு ஸ்ரீராமர் இருக்கும்போது கருடபகவான் வந்து விடுவித்த ஸமயம் தாங்கள் யார் என்று ஸ்ரீராமர் கேட்ட தற்கு "நமக்குள் உள்ள ஸம்பந்தம் யுத்தம் முடிந்தபிறகு அறிவீர்" என்று மாத்திரம் பதில் சொல்லுகிருர். அதா வது தங்களுடைய தேவத்தன்மையை வெளியிடுவது இப்பொழுது எனக்காவது தங்களுக்காவது உசித மாகாது என்பது தாத்பர்யம்.

न च कौतूहलं कार्यं सखित्वं प्रति राघव ।
कृतकर्मा रणे वीरः सखित्वमनुवेत्स्यसि ॥ யுத்த. 50 (57)

(12) ராவணனுடைய மாதாமஹரின் தமையனுன மால்யவான் என்பவர் பலவித துர்நிமித்தங்களே எடுத்துக் காட்டி ஸ்ரீ ராமருடன் ஸமாதானம் செய்துகொள்வது தான் உசிதம் என்று ராவணனிடம் சொல்லும்போது

"ஸ்ரீ ராமர் வெறும் மனுஷ்யர் அல்ல. மஹாவிஷ்ணுதான் மனுஷ்ய சரீரத்துடன் வந்திருக்கிறார் என்று நினைக்கிறேன்"

विष्णुं मन्यामहे रामं मानुषं देहमास्थितम् ।
न हि मानुषमात्रोऽसौ राघवो दृढविक्रमः யுத்த. 35 (36)

என்கிறார். இவ்வளவு வியக்தமாய்ச் சொல்லியும் அதை ராவணன் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் புரிந்து கொண்டான். இரண்டாவது நாள் யுத்தத்தில் ஸ்ரீராமரால் அடிபட்டு வெட்கத்துடன் திரும்பிவந்த பிறகுதான், மனுஷ்யனிடமிருந்து தனக்கு பயமேற்படுமென்று பிரஹ்மா சொன்னதும், அனரண்யர் என்ற அயோத்யாதிபதி "என் வம்சத்தில் ஒருவன் பிறந்து உன்னைக் கொல்வான்" என்று சொன்னதும், மற்றும் தனக்கேற்பட்ட சாபங்களும், ராவணனுக்கு ஞாபகத்தில் வருகின்றன. அந்த மனுஷ்யன்தான் இந்த ஸ்ரீராமர் என்றும் எண்

विदितं मानुषं मन्ये रामं दशरथात्मजम् । யுத்த. 60 (8)

ஆனாலும் அவர் பகவானுடைய அம்சம் என்று நினைக்கவில்லை. கும்பகர்ணன் இறந்த பிறகும் விபீஷணரை விரட்டி விட்டதற்காக மாத்திரம் வருந்தினனே தவிர, ஸ்ரீ ராமருடைய மஹிமையை உணரவில்லை. கும்பகர்ணனுக்கு ஸமானமான சரீர பலத்தோடு அஸ்திரவித்தையிலும் வெகு சூரனாயிருந்த அதிகாயன் என்ற தன் புத்திரன் லக்ஷ்மணனால் ஸம்ஹரிக்கப் பட்டபிறகுதான், ராவணனுக்கு ராமர் ஸ்ரீ மஹாவிஷ்ணு என்ற எண்ணம் ஏற்பட்டது.

तं मन्ये राघवं वीरं नारायणमनामयम् । யுத்த. 72 (11)

இந்திரஜித்தும் போய்விட்ட பிறகு, ராவணனே கடைசியாய் யுத்தம் செய்யும்போது ஜயத்தில் ஆசை யற்றவனுயிருந்தபோதிலும் தன்னுடைய முழுவீரியத்தையும் காட்டி ஸ்ரீராமரால் மரணமடைந்து ஸத்கதியடைய வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டான்.

जेतव्यमिति काकुत्स्थो मर्तव्यमिति रावणः ।
धृतौ स्ववीर्यसर्वस्वं युद्धेऽदर्शयतां तदा ॥ யுத்த. 109 (7)

(13) பிறகு மண்டோதரி விலாபம் செய்யும்போது "ஸமுத்ரத்தில் அணைகட்டினவுடனேயே ராமர் ஸாமான்ய மனுஷ்யனில்லையென்று ஸந்தேஹப்பட்டேன்."

यदैव वानरैर्घोरैः बद्धः सेतुर्महार्णवे ।
तदैव हृदयेनाहं शङ्के राममानुषम् ॥ யுத்த. 114 (11)

என்று சொல்லி "இப்பொழுது அவர் ஆத்யந்தரஹிதரான சங்கசக்ர கதாதாரியான பரமாத்மா தான் என்று வியக்தமாகத் தெரிகிறது. அவரே வானர ரூபம் தரித்திருக்கும் தேவர்களுடன் சேர்ந்து வந்து உலக க்ஷேமத்தைக் கருதி, பரிவாரத்துடன் ராவணனை ஸம்ஹரித்திருக்கிறார்" என்கிறாள்.

व्यक्तमेष महायोगी परमात्मा सनातनः ।
अनादिमध्यनिधनो महतः परमो महान् ॥
तमसः परमो धाता शङ्खचक्रगदाधरः ।
श्रीवत्सवक्षा नित्यश्रीः अजय्यः शाश्वतो ध्रुवः ॥
मानुषं वपुरास्थाय विष्णुः सत्यपराक्रमः ।
सर्वैः परिवृतो देवैः वानरत्वमुपागतैः ॥

सर्वलोकेश्वरः साक्षात् लोकानां हितकाम्यया ।
सराक्षसपरीवारं हतवांस्त्वां महाद्युतिः ॥ யுத்த. (14–17)

இவ்விதம் இவ்வளவு தெளிவாக ராக்ஷஸ குலத்தார்களே ஸ்ரீராமருடைய தத்வத்தை அறிந்திருக்கிறபோது, மஹரிஷிகள் அறிந்திருந்தார்கள் என்பதில் ஆச்சர்யமில்லை. இவர்களெல்லாம் அறிந்திருக்கும்போது, ஸ்ரீராமருக்கு மாத்திரம் தெரியாதென்பது கொஞ்சமேனும் உசிதமாகாது.

(14) மேலும், ராவணனால் சக்தி ஆயுதத்தினால் அடிபட்டு லக்ஷ்மணன் கீழே விழுந்திருந்தபோது அவனைத் தூக்குவதற்கு ராவணன் பிரயத்தினப்பட்டான். ஆனால் லக்ஷ்மணன் தன்னுடைய வைஷ்ணவாம்சத்தை நினைத்துக் கொண்டதால் மலைபோல் கனத்து ராவணனால் தூக்கமுடியவில்லை. ஆனால் வெகு பக்தியோடு ஸ்நேஹ பாவத்துடன் ஹனுமார் தூக்கும்போது வெகு லேசாயிருந்தது. லக்ஷ்மணன் காயமில்லாமல் எழுந்திருந்ததும் இந்தவிதமாய்த் தன்னுடைய வைஷ்ணவாம்சத்தை அனுஸந்தானம் செய்ததினால்தான். இவ்விதம் லக்ஷ்மணனே தன்னுடைய வைஷ்ணவாம்சத்தை மறக்காமல் இருக்கிறபோது ஸ்ரீராமர் மறந்திருக்கமுடியுமா? காட்டிக் கொள்ளாமல் இருந்திருக்கலாம்.

हिमवान् मन्दरो मेरुः त्रैलोक्यं वा सहामरैः ।
शक्यं भुजाभ्यां उद्धर्तुं न संख्ये भरतानुजः ॥
शक्त्या ब्राह्मयापि सौमित्रिः ताडितस्तु स्तनान्तरे ।
विष्णोरचिन्त्यं स्वं भागं आत्मानं प्रत्यनुस्मरन् ॥
யுத்த. 59 (111, 112)

वायुसूनोः सुहृत्त्वेन भक्त्या परमया च सः ।
शत्रूणामप्रकम्प्योऽपि लघुत्वमगमत् कपेः ॥ யுத்த. 59 (119)
आश्वस्तश्च विशल्यश्च लक्ष्मणः शत्रुसूदनः ।
विष्णोर्भागममीमांस्यं आत्मानं प्रत्यनुस्मरन् ॥ ,, (121)

(15) ராவண ஸம்ஹாரமான பிறகு ஸ்ரீ ராமருடைய வாஸ்தவ ஸ்வரூபத்தை மறைப்பதற்கு அவசியமில்லாததிஞல் பிரஹ்மா, மஹேசுவரர் முதலான ஸகல தேவர்களும் ஸீதையின் அக்னிப்ரவேசத்தை நிமித்தமாக வைத்துக்கொண்டு நேரில் வந்துவிடுகிருர்கள். அப்பொழுது ஸ்ரீராமருடைய மஹிமையை "தாங்கள்தான் மூவுலகத்தையும் ஸ்ருஷ்டி செய்தவர்".

त्रयाणां त्वं हि लोकानां आदिकर्ता स्वयंप्रभुः । யுத்த. 120 (8)

என்றெல்லாம் தேவர்கள் சொல்லியும்கூட, தன் வேஷத்தைக் கலைக்க அப்பொழுதும் பிரியப்படாமல் ஸ்ரீராமர் பிரஹ்மாவிடம் "நான் தசரதரின் குமாரன், மனுஷ்யன் என்றே நினைத்துக் கொண்டிருக்கிறேன். நான் யார்? யாரைச் சேர்ந்தவன்? என்பதைத் தாங்கள் சொல்ல வேண்டும்" என்றே கேட்கிருர்.

आत्मानं मानुषं मन्ये रामं दशरथात्मजम् ।
योऽहं यस्य यतश्चाहं भगवांस्तद्ब्रवीतु मे ॥ யுத்த. 110 (11)

அதன்பேரில் பிரஹ்மா "தாங்கள் ஸ்ரீமான் நாராயணர்; வேதங்கள் எல்லாம் தங்கள் ஸம்ஸ்காரங்கள்; தாங்களில்லாத பதார்த்தமே கிடையாது. ஸீதை மஹாலக்ஷ்மி. தாங்கள் மஹாவிஷ்ணு. ராவணனுடைய ஸம்ஹாரத்

ரகாக மனுஷ்ய சரீரத்தையடைந்திருக்கிறீர்கள்" என்று விஸ்தாரமாய் எடுத்துச் சொல்லுகிருர்.

भवान् नारायणो देवः श्रीमान् चक्रायुधो विभुः । யுத்த. 120 (13)
संस्कारास्तेऽभवन् वेदाः न तदस्ति त्वया विना ॥ ,, ,, (25)
सीता लक्ष्मीः भवान् विष्णुः देवः कृष्णः प्रजापतिः । ,, ,, (27)
वधार्थं रावणस्येह प्रविष्टो मानुषीं तनुम् ॥ ,, ,, (28)

இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த ஸ்ரீராமர் கொஞ்சமேனும் ஆக்ஷேபிக்கவில்லையென்பது குறிப்பிடத் தக்கது. கூடவேயிருந்த தசரத மஹாராஜர் மாத்திரம், முன் நடந்த ஸம்பவங்களெல்லாம் ராவண வதத்தை யுத்தேசித்து தேவர்களால் செய்யப்பட்டவையென்பதை உணர்ந்தும், ஸ்ரீராமரிடம் தனக்கிருந்த புத்ரபாவனையை விடாமல் அவரை ஆசீர்வதிக்கிருர்;

इदानीं तु विजानामि यथा सौम्य सुरेश्वरैः ।
वधार्थं रावणस्येदं विहितं पुरुषोत्तम ॥ யுத்த. 122 (10)

"ஸஹோதரர்களுடன் சேர்ந்துகொண்டு ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டு தீர்க்காயுஸுடன் இரு" என்கிருர்.

भ्रातृभिः सह राज्यस्थो दीर्घमायुरवाप्नुहि ॥ யுத்த. 122 (23)

இவ்விதம் தேவத்தன்மை யடைந்தும் தசரதருக்கு ஸ்ரீராமரிடத்தில் மனுஷ்ய பாவனை போகவில்லையென்றல் நமக்கு இருப்பது ஆச்சர்யமில்லை. அவர் செய்த கார்யங்களில் இது சரி, இது பிசகு என்றுகூடத் தீர்மானிக்க ஆரம்பித்துவிடுகிறோம்.

பின்னுல் ஸ்ரீராமர் பூலோகத்தில் மனுஷ்ய சரீரத்துடன் இருந்த வரையிலும் மனுஷ்யத்தன்மைக்கு ஏற்பட்ட லௌகிக வைதிக கடமைகளைத் தவருமல் அனுஷ்டித்தே வந்திருக்கிருர். அனுஷ்டிப்பதினுல் அவருக்கு ஆகவேண்டிய கார்யமொன்று மில்லாமல் போனலும், அவதாரத்தின் முக்கிய பிரயோஜனமாகிய தர்மஸ்தாபனத்திற்காக, தானே அனுஷ்டித்துக் காட்டவேண்டியது அவசியமென்ற முறையில் அநேகவித யக்ஞங்களைச் செய்தார். அவரைப்பார்த்துக்கொண்டு எல்லா ஜனங்களும் பரஸ்பரம் ஹிம்ஸை செய்து கொள்ளாமல் தர்மத்திலேயே ஈடுபட்டுக்கொண்டு ஸந்தோஷமாய் இருந்தார்கள்,

पौण्डरीकाश्वमेधाभ्यां वाजपेयेन चासकृत् *யுத்த.* 131 (94)
ईजे बहुविधैर्यज्ञैः ससुहृज्ज्ञातिबान्धवः „ „ (97)
सर्वं मुदितमेवासीत् सर्वो धर्मपरोऽभवत् ।
राममेवानुपश्यन्तो नाभ्यहिंसन् परस्परम् ॥ „ (100)

பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் யாவரும் பேராசையற்றவர்களாகத் தங்கள் தங்கள் கார்யங்களில் திருப்தியுடன் தங்கள் கடமைகளில் ஈடுபட்டிருந்தார்கள்.

ब्राह्मणाः क्षत्रिया वैश्याः शूद्रा लोभविवर्जिताः ।
स्वकर्मसु प्रवर्तन्ते तुष्टाः स्वैरेव कर्मभिः ॥ *யுத்த.* 131 (104)

(16) இவ்விதமாக வெகுநாள் பூமியில் இருந்துவிட்டு கடைசியில் வைகுண்டாரோஹணம் செய்யும் ஸமயம் தன்னை அண்டியிருந்த ஸகல ஜனங்களையும் பிராணி வர்க்கங்களையும் அழைத்துக்கொண்டு போகும்போது, சாஸ்திரத்தில் கண்டபடி மஹா பிரஸ்தானத்திற்கு வேண்டிய பூர்வாங்கங்களை யெல்லாம் வஸிஷ்டர் செய்து வைக்கிருர்.

அதன்பேரில் ஸ்ரீராமர் குசத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, வேதத்தை ஆவிருத்தி செய்துகொண்டு, ஒன்றுமே பேசாமல் அரண்மனையை விட்டுப்புறப்பட்டு ஸரயூநதிதீரம் போய் பிரவாகத்தில் இறங்கினார். அப்பொழுது பிரஹ்மா வந்து நல்வரவு கூறும்போது ஸ்ரீராமர் நாமரூபங்களுக்கு அதீதமான பரமாத்மதத்வ மென்பதையும், லோகத்தின் அனுக்ரஹத்தை யுத்தேசித்து எந்த ரூபத்தையும் தரிக்கக்கூடியவர் என்பதையும் தெளிவுபடுத்துகிறார்.

यामिच्छसि महाबाहो तां तनुं प्रविश स्वकाम् ।
वैष्णवीं तां महातेजः तद्वाऽऽकाशं सनातनम् ॥ உத். 110 (9)

"தாங்கள் தான் லோகத்திற்கு கதி. தங்களுடன் நித்ய ஸம்பந்தமுடைய மாயாரூபிணியான அம்பிகையைத் தவிர யாரும் தங்களை மனஸிற்கு எட்டாதவராகவும், நாசமற்றவராகவும், எல்லாவற்றையும் தன்னிடம் அடக்கிக்கொண்டவராகவுமுள்ள மஹத்தான உண்மைப் பொருள் என்று அறியமாட்டார்கள்" என்றார்.

त्वं हि लोकगतिर्देव न त्वां केचित् प्रजानते ।
ऋते मायां विशालाक्षीं तव पूर्वपरिग्रहाम् ॥ உத் 110 (10)
त्वामचिन्त्यं महद्भूतं अक्षयं सर्वसंग्रहम् ॥ ,, ,, (11)

இதைக்கேட்டு மஹாவிஷ்ணுவின் அம்சமாகவே அவதரித்த படியால் அந்த தேஜஸ்ஸிலேயே கலந்து கொள்ளுவதென்று நிர்மானித்து ஸஹோதரர்களுடன் அங்கேயே ஐக்யத்தையடைந்தார்.

पितामहवचः श्रुत्वा विनिश्चित्य महामतिः ।
विवेश वैष्णवं तेजः सशरीरः सहानुजः ॥ உத். 110 (12)

மற்றவர்களும் ஸாந்தானிகாதி தேவலோகங்களை யடைந்தார்கள். ஸ்ரீராமரைப்பற்றி நமக்கு ஏதேனும் தெரியவேண்டுமானால் வால்மீகி மஹரிஷி சொல்லித்தான் தெரியவேண்டும். அப்படியிருக்க அவர் ஸ்ரீராமரை அவதார புருஷராகவே ஆரம்பம் முதல் கடைசிவரையில் வர்ணிக்கும்போது நாம் ஸ்ரீராமரை ஏதோ ராஜபுத்ர னென்று கருதினால் அபசாரமே யாகும். அவர் வெறும் மனுஷ்யராயிருந்தால் அவர் இந்த கலியுகத்தில்கூட உபாஸிக்கிற பக்தர்களுக்கு அனுக்கிரஹம் செய்து கொண்டிருக்கிற உபாஸ்ய மூர்த்தியாக இருக்க முடியுமா? ஸமீபகாலத்திலிருந்த ராமதாஸரும் தியாகராஜ ஸ்வாமி களும் திருஷ்டாந்தம் போதாதா? ஆகையால் ஸந்தேஹ மன்னியில் அவர் பரமாத்மாதானென்று திடமாக நம்பி அவரிடம் பக்தி செலுத்தி ஸ்ரீமத் ராமாயணத்தை தையுடன் பாராயணம் செய்து வந்தால் எவ் க குறைவுமன்னியில் பரமமான சிரேயஸ்ஸை அடைவோம்.

## அத்யாயம் 2

### கிரந்த மஹிமை

ஸ்ரீமத் ராமாயண பாராயணக் கிரமத்தில் சொல்லிவரும்

वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत् साक्षात् रामायणात्मना ॥

என்ற சுலோகத்தில், வேதத்தினுல் மாத்திரமே அறியக்கூடிய பரம புருஷன் தசரதகுமாரனுகப் பிறந்தார் என்று ஸங்கோசமன்னியில் கண்டுவிட்டு வேதம் ராமாயணரூபமாகப் பிறந்தது என்று சொல்லாமல் வால்மீகியிடமிருந்து வெளிப்பட்டது என்று கண்டிருப்பதினுல், வேதம் ராமாயணரூபமாக வெளிவருவதற்கு வால்மீகி ஒரு கருவியாக இருந்தாரே தவிர அவர் மற்ற கவிகளைப் போல அதை இயற்றினுரென்று சொல்வதற்கில்லை என்பது தெளிவாகிறது.

பிரஹ்ம தேவரே வால்மீகியின் ஆசிரமத்திற்கு வந்து, தன்னுடைய ஸங்கல்பத்தினுலேயே அவருக்கு கவிதா சக்தி ஏற்பட்டதென்றும் அதைக் கொண்டு ஸ்ரீராமருடைய சரித்திரத்தை எழுதும் படிக்கும் சொல்லி, முன் நடந்த எல்லா நிகழ்ச்சிகளையும் நடந்தபடியே அறியும் ஆற்றலையும் கொடுத்து "இதில் உன் எந்தச் சொல்லும் பொய்யாகாது" என்று விசேஷமாய் அனுக்கிரஹிக்கிருர்.

मच्छन्दादेव ते ब्रह्मन् प्रवृत्तेयं सरस्वती ॥ பால. 2 (31)
रामस्य सहसौमित्रेः राक्षसानां च सर्वशः ।
वैदेह्याश्च यद्वृत्तं प्रकाश यदि वा रहः ॥ ,, ,, (34)

यच्चाप्यविदितं सर्वं विदितं ते भविष्यति ।
न ते वागनृता काव्ये काचिदत्र भविष्यति ॥ ,, ,, (35)

*இவ்வித ஆசியைப் பெற்ற முனிவர் ஆசமனம் செய்து தர்ப்பாஸனத்தில் அமர்ந்து கைகூப்பினவராய் யோக நிஷ்டையில் நிலைத்து பழய நிகழ்ச்சிகள் யாவற்றையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் நேரில் கண்டார்.*

उपस्पृश्योदकं सम्यक् मुनिः स्थित्वा कृताञ्जलिः ।
प्राचीनाग्रेषु दर्भेषु धर्मेणावेक्षते गतिम् ॥ பால. 3 (2)
ततः पश्यति धर्मात्मा तत्सर्वं योगमास्थितः ।
पुरा यत्तत्र निर्वृत्तं पाणावामलकं यथा ॥ ,, ,, (6)

*இவ்விதம் நடந்ததையெல்லாம் அப்படியப்படியே குறிப்பிடும் பொருப்பு மாத்திரம் வால்மீகி முனிவருக்குக் கொடுக்கப்பட்டது. புது நிகழ்ச்சிகளையோ, சூழ்நிலைகளையோ, ஸம்பாஷணைகளையோ, அவரிஷ்டப்படிக் கல்பிக்க முடியாது. அப்படி அவர் கல்பித்தால் அவை பொய்யாகவேயாகும். பிரஹ்மாவின் வாக்கையும் மீறினதாகும். இயற்கைக் காக்ஷிகளை வர்ணிப்பதிலும் மக்கள் மனோநிலைக்கேற்ப இயற்கையில் தோன்றும் பிரதிபலனங்களை வர்ணிப்பதிலும் தன் கவிதா சக்தியை உபயோகிக்கலாமே தவிர, அந்த மனோநிலைகளை மாற்றியமைக்கும் உரிமை அவருக்குக் கிடையாது. உள்ளதையுள்ளபடி சொல்ல வேண்டுமென்பது ஒரு கட்டுப்பாடு ஆகுமானல், அதற்குட்பட்டே அவர் எழுதினர்.*

*உண்மையை கட்டுப்பாடு என்ருல், ஸர்வசக்தி வாய்ந்த பகவானும் அதற்கு உட்பட்டவர்தான்,*

அவரும் இஷ்டப்படி பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்க முடியாது. பிரபஞ்சத்தின் அடிப்படையான பஞ்சபூதங்கள், பிராணிகளின் புண்ணிய பாபகர்மாக்கள், அவர்கள் அனுபவிக்கவேண்டிய ஸுகதுக்கங்கள், எல்லாவற்றையும் அனுஸரித்துத்தான் ஸ்ருஷ்டி செய்ய முடியும். இரண்டை மூன்றால் பெருக்கினால் ஆறு, என்ற உண்மையை மாற்ற அவருக்கும் அதிகாரமில்லை. எனவே உண்மைக்குக் கட்டுப்படுவது எவ்வித கௌரவக்குறைவுமில்லை. ஸாதாரணக் கவிகளுக்கு இவ்வித கட்டுப்பாடு எதுவுமில்லை. மேலும் அவர்களுக்கு "கவிகளின் சலுகை" என்று ஒன்றுண்டு. அதாவது, உண்மைக்கு மாறாயிருந்தாலும் தங்கள் மனப் போக்கின்படி நிகழ்ச்சிகளைக்கூட கல்பித்துக் கொள்ளலாம். வால்மீகி ஸம்பந்தப்பட்ட மட்டில் இந்த சலுகைக்கு இடமில்லை

வேறு புராணங்களிலோ காவியங்களிலோ வேறு நூல்களிலோ வால்மீகி ராமாயணத்திலிருந்து வேறுபடும் விஷயங்கள் காணப்பட்டால், அவை அந்தந்த நூலாசிரியரின் கல்பனையென்றே அறிய வேண்டும். ஆனாலும் புதுமை அல்லது கவர்ச்சி காரணமாக இவ்வித மாறுபாடுகளுக்கு உலகில் செல்வாக்குக் கிடைத்து மக்கள் மனதில் பதிந்து அவைகளே உண்மையென்ற எண்ணம் ஏற்பட்டுவிடுகிறது. உதாஹரணமாக, மஹாபாரதத்திலுள்ள ஸாதாரணமாயுள்ள சகுந்தலையின் கதையை காளிதாஸர் எல்லோர் மனதையும் கவரக்கூடிய ஓர் உயர்ந்த நாடகமாகக் கல்பித்துவிட்டார். பாரதத்தில் துர்வாஸரோ மாய மோதிரமோ இடம் பெறவேயில்லை. இதுபோலவே ராமாயண விஷயமாயும் பலகல்பனைகள் செய்யப்பட்டு அவைகளும் ராமாயணத்தில் இருப்பதாக மக்கள் நினைக்கும்படி ஏற்பட்டு விடுகிறது. பிரவசனம் செய்கிறவர்களும் அவை கல்பனையென்று சொன்னால் ஸ்வராஸ்யம் கெட்டுவிடுமென்று நினைத்து ராமாயணத்

தில் ருப்பவை போலவே சொல்லிவிடுகிறார்கள். கல்பனைகளில் எடுத்துக்காட்ட

(1) "தசரதருக்கு கௌஸல்யையிடம் சாந்தா என்று ஒரு பெண் பிறந்திருந்தாள். அவளை வெகு காலத்திற்கு முன்பே தசரதர் தன் நண்பரான அங்கதேசமன்னர் ரோமபாதருக்கு மகளாகக் கொடுத்துவிட்டார். அன்று முதல் அவள் ரோமபாதரின் மகளாகவே வளர்ந்து மனைவியானாள்"

தசரதர் தன் வம்சத்தை நீடிக்க மகன் இல்லையென்று தபித்ததும் தனக்குக் குழந்தையேயில்லை என்று ரோம பாதரிடம் சொன்னதும் சாந்தாவை ரோமபாதரின் மகள் என்றே தசரதர் சொன்னதும் இவ்விதம் முன்னமேயே சாந்தாவை ரோமபாதருக்குக் கொடுத்துவிட்டதினால், என்கிறார்கள்.

வாஸ்தவத்தில், சாந்தை ரோமபாதரின் பெண்தான். இவ்விஷயம் ஹரிவம்சம் 31வது அத்யாயத்திலிருந்து ஸந்தேஹத்திற்கிடமன்னியில் தெரிகிறது. அந்த ரோம பாதருக்கே தசரதர் என்ற பெயரும் உண்டு. இதுவே தட்டுக்கிடலுக்குக் காரணம். இரு தசரதர்களும் ஸம காலத்தவர்கள் என்பதுடன் நெருங்கிய நண்பர்கள். இவ்விருவரையும் வேறுபடுத்தவே அங்கதேசாதிபதிக்கு ரோமபாதர் என்ற வேறு பெயர் வழங்கிவந்தது. அவர் கால்களில் அதிகமாக ரோமம் இருந்திருக்குமென்று தோன்றுகிறது வால்மீகி அங்கராஜனுக்கிருந்த தசரதர் என்ற பெயரையே சொல்லாமல் ரோமபாதர் என்ற காரணப் பெயரை மட்டும் சொல்லியிருக்கிறார். அவர் அவ்வளவு எச்சரிக்கையாய் இருந்தும்கூட தட்டுக்கிடல் ஏற்பட்டுவிட்டது.

ஹரிவம்ச வாக்கியங்களாவன—

अङ्गपुत्रो महानासीत् राजेन्द्रो दधिवाहनः ।
दधिवाहनपुत्रस्तु राजा दिविरथोऽभवत् ॥ ४३ ॥
पुत्रो दिविरथस्यासीत् शक्रतुल्यपराक्रमः ।
विद्वान् धर्मरथो नाम तस्य चित्ररथः स्मृतः ॥ ४४ ॥
अथ चित्ररथस्यापि पुत्रो दशरथोऽभवत् ।
लोमपाद इति ख्यातो यस्य शान्ता सुताऽभवत् ॥ ४६ ॥
तस्य दाशरथिर्वीरश्चतुरङ्गो महायशाः ।
ऋश्यशृङ्गप्रसादेन जज्ञे कुलविवर्धनः ॥ ४७ ॥

'அங்கராஜனது மகன் பெருமை பொருந்திய ததிவாஹனராஜன். ததிவாஹனனது மகன் திவிரதராஜன்; திவிரதனது மகன் அறிவாளியான தர்மரதன்; இவன் இந்திரனுக்கு ஸமமான பராக்கிரமம் உள்ளவன். இவனுடைய மகன் சித்திரரதன். இந்த சித்திரரதனுடைய மகனே ரோமபாதன் என்று பிரசித்திபெற்ற தசரதன். இவனுடைய மகள் சாந்தை. இந்தத் தசரதரின் புத்திரனே பிரஸித்திபெற்ற சதுரங்கன் என்பவன்; இவன் ரிசியசிருங்கர் அருளால் வமிசம் வளரப் பிறந்த மகன் ஆவான்'"

தன் மாமனுரான ரோமபாத தசரதன் வமிசம் வளர ஒரு மகன் பிறக்க மாப்பிள்ளை ரிசியசிருங்கரே காரணம் என்பதும் இதனுல்

தசரதர் ரோமபாதரைப் பார்க்கவும் ரிசியசிருங்கரை அழைக்கவும் சென்றபோது தம் அந்தப்புரத்தோடு சென்றுர்; அவருடைய மகிஷிகள் வெகுநாளாகத்

நங்களைப் பிரிந்திருக்கும் மகளைப் பார்க்க விரும்பியதே இதற்குக் காரணம் என்றுகூட ராமாயண வியாக்கியானக் காரர் ஒருவர் சொல்கிறார், ஸ்திரீகளே ஸ்திரீகளை அழைப்பது முறையாதலாலும் ரிசியசிருங்கரும் அவர் மனைவியும் தாம் செய்யும் யாகத்துக்கு வரவேண்டும் என்பது தசரதரின் விருப்பமாதலாலுந்தான் அவர் அந்தப்புர மகிஷிகளை அழைத்துச் சென்றதன் காரணம் ஆகும்.

(2) தசரதர் இறக்கும் தருவாயில் தம் வாழ்க்கையில் முன் நேர்ந்த துக்ககரமான ஒரு ஸம்பவம் நினைவுக்கு வருகிறது. இருள் மிகுந்த ஓர் இரவில் தசரதன் வனவாஸிகளான தம்பதிகளின் ஒரே மகனை, அறியாமல் அம்பால் கொன்றுவிடுகிறார். அந்தக் கிழத்தம்பதிகள் தசரதரை நோக்கி, "நீயும் புத்திரன் பிரிவினால் ஏற்படும் சோகத்தால் சாவாய்" என்று சபித்துவிடுகிறார்கள். பக்தர் சிலர் இந்தச் சாபத்தையே ஆசிர்வாதம் என்று வியாக்கியானம் செய்கிறார்கள். "இந்தச் சாபம், தசரதருக்கு ஒரு மகன் பிறப்பான் என்பதை நிச்சயமாக்கிவிடவில்லையா? ஒரு மகனை வேண்டித்தானே தசரதர் இத்தனை வருஷங்களாக ஏங்கித் தவிக்கிறார்!" என்பது இவர்கள் விளக்கம். இத்தகைய விளக்கத்துக்கு வால்மீகி இடமே வைக்கவில்லை. இந்த ஸம்பவத்தின்போது தசரதர் சிறுவர், இளவரசர், மணமாகாதவர். அவர் கௌஸல்யையிடம் சொல்லும்போது, 'அப்போது உன்னை மணக்கவில்லை' என்று சொல்கிறார். அவளே மூத்ததாரம்.

देव्यनूढा त्वमभवो युवराजो भवाम्यहम् ॥ அயோ- 63 (14)

तदा बाल्यात् कृतं देवि शब्दवेध्यनुकर्षिणा ॥ அயோ. 64 (58)

அப்பொழுது அவர் __ . என்று ஏங்கி பிருக்கமுடியாது. ராமாயணத்துக்குள் )த்தகைய கருத்

துக்களை ஏற்றுவது ஸ்வாரஸ்யமாகத் தோன்றலாம் என்றாலும் இவை வெறும் கற்பனை. வால்மீகி ராமாயணத்தில் இவைகளுக்கு இடம்

(3) சபரியின் பக்தியைப் பெருமைப்படுத்துவதற்காக 'நல்ல ருசியான பழங்களைப் பொறுக்கி எடுத்துக் கடித்துக் கடித்து ருசிபார்த்து அவள் ஸ்ரீ ராமருக்கு என்று சேர்த்து வைத்திருந்தாள், ஸ்ரீராமரும் அவற்றை அளவற்ற அன்போடு ஏற்றுக்கொண்டார்' என்று சொல்லப்படுகிறது. அவள் சபர ஜாதியைச்சேர்ந்த ஸாதாரண ஸ்தீரீ அல்ல. நிறைந்த பக்தியோடு பல ரிஷிகளுக்கு ஸேவை செய்தவள்; தானும் தபஸில் ஈடுபட்டிருந்தவள். ஸ்ரீராமர் அவளிடம், "ஆரோக்கியமாக இருக்கிறாயா?" என்று கேட்கவில்லை. "எல்லா இடையூறுகளையும் வென்றுவிட்டாயா? உன் தபஸ் மேலும் மேலும் வளர்ந்து வருகிறதா? கோபத்தையும் பசியையும் வென்றுவிட்டாயா?" என்பது போன்ற கேள்விகளையே கேட்கிறார். 'தபஸ்ஸையே தனமாகக் கொண்டவளே' என்ற சிறந்த அடைமொழியாலேயே ஸ்ரீராமர் அவளை அழைக்கிறார்.

कच्चित्ते निर्जिता विघ्नाः कच्चित्ते वर्धते तपः ।

कच्चित्ते नियतः क्रोधः आहारश्च तपोधने ॥ அர. 74 (8)

அவளோ தன் தபோ மஹிமையினால் தன் உடலையே அக்னியில் ஆஹுதி செய்து ஸ்ரீராமர் ஸந்நிதியில் ஸ்வர்க்கத்தை அடைகிறாள். இத்தகைய பெருமையுள்ளவள், தான் கடித்து ருசிபார்த்த பழங்களின் சேஷத்தை ஸ்ரீராமருக்கு அளித்தாள் என்பதை நம்பமுடியுமா? இப்படி அவள் செய்தாள் என்று நினைப்பது அவளுக்கு மட்டும் அல்ல, அவள் ஸேவை புரிந்த மகரிஷிகளுக்கும் ஸ்ரீராமருக்கும்கூட அபசாரமே ஆகும். அப்படியே அவள்

கொடுத்ததாகக் கொண்டாலும் எச்சிற் பழங்களையும் ஏற்று உண்ணுதல் ஆசாரக்குறைவு என்பதைக்கூட அறியாதவரா ஸ்ரீராமர்?

मया तु विविधं वन्यं संचितं पुरुषर्षभ ।
तवार्थे पुरुषव्याघ्र पम्पायास्तीरसंभवम् ॥ அர. 74 (17)

"பம்பா நதிக்கரையில் ... பல காட்டுப் பொருள்களை நான் தங்களுக்காக என்றுதான் சபரி சொல்கிறாள்.

இந்தச் சொற்களில் இல்லாதவற்றை யெல்லாம் கற்பித்துக்கொள்ள அவசியமே இல்லை. ஸ்ரீராமர் அவற்றை ஏற்றுக்கொண்டார் என்ற சொல்லும் ராமாயணத்தில் இல்லை; எனவே அவர் அவற்றை உண்டார் என்று எப்படி கல்பனை செய்யமுடியும்? கங்கைக்கரையில் குஹன் சில உணவுப்பண்டங்களைத் தந்தபோது, ஸ்ரீராமர் கூறிய பதில் இங்கே கூறிப்பிடத் தக்கதாகும். சிலர் சொல்வதுபோல் குஹன் தீண்டாத ஜாதியான் அல்ல. அவன் அநுலோம நிஷாத ஜாதியைச் சேர்ந்தவன். சபரியைவிட உயர்ந்த ஜாதிக்காரன்.

यदेतद्भवता किंचित् प्रीत्या समुपकल्पितम् ।
सर्वं तदनुजानामि न हि वर्ते प्रतिग्रहे ॥ அயோ. 50 (43,44)

"என்னிடம் உள்ள அன்பு காரணமாக நீ கொண்டு வந்து கொடுத்திருக்கும் பொருள்களை எல்லாம் நீயே திரும்ப எடுத்துச்செல்ல நான் அநுமதிக்கிறேன். இப்போது எதையும் ஏற்றுக்கொள்ளும் நிலையில் நான் இல்லை."

ஸ்ரீ ராமர் விரும்பிய தீர்த்தத்தைக்கூட ஸ்ரீலக்ஷ்மணனே எடுத்துத் தந்தான்.

जलमेवाददे भोज्यं लक्ष्मणेनाहृतं स्वयम् அயோ. 50 (49)

பரதனோடு பேசும்போது குஹன் இதை நன்கு தெளிவுபடுத்துகிறான்.

अन्नमुच्चावचं भक्षाः फलानि विविधानि च ।
रामायाभ्यवहारार्थं बहु चोपहृतं मया ॥
तत्सर्वं प्रत्यनुज्ञासीत् रामः सत्यपराक्रमः ।
न तु तत्प्रत्यगृह्णात् सः क्षत्रधर्ममनुस्मरन् ॥
न ह्यस्माभिः प्रतिग्राह्यं सखे देयं तु सर्वदा ।
इति तेन वयं राजन्ननुनीता महात्मना ॥
लक्ष्मणेन समानीतं पीत्वा वारि महामनाः ।
औपवास्यं तदाऽकार्षीत् राघवः सह सीतया ॥ அயோ. 87 (14-17)

"ஸ்ரீராமர் உண்பதற்காக பலவகை உணவுப் பண்டங்களையும் பக்ஷணங்களையும் பலவகைப் பழங்களையும் கொண்டுபோனேன்; ஆனால் ஸ்ரீராமர் க்ஷத்திரிய தர்மத்தை நினைத்துக்கொண்டு ஒன்றையும் ஏற்றுக் கொள்ளவில்லை. நண்பனே, நாம் எதையும் ஏற்கக் கூடாது; எப்பொழுதும் கொடுக்கத்தான் வேண்டும் அல்லவா? என்று சொல்லி எங்களை ஸமாதானப்படுத்தினார். அவர் லக்ஷ்மணர் கொண்டுவந்த தண்ணீரைக் குடித்துவிட்டு ஸீதாதேவியோடு உபவாஸம் இருந்தார்."

சபரியைப் பார்த்தபோது மட்டும் அவர் ஒழுக்கம் மாறிவிட்டது என்று சொல்லமுடியுமா? தண்டகாரணி ல )ருந்தபோது ஸ்ரீ ராமர், பரத்வாஜர், அத்ரி,

சரபங்கர், அகஸ்தியர் முதலிய ரிஷிகளுக்கு அதிதியாக இருக்கத் தயங்கவில்லை என்பதைக் கவனிக்கவேண்டும் இது அவர் க்ஷத்திரிய தர்மத்துக்கு முரண் அல்ல. சுக்ரீவனுக்கோ விபீஷணனுக்கோகூட ஸ்ரீராமர் அதிதியாக இருந்தார் என்று வால்மீகி எங்கும் சொல்லவே இல்லை. ஒழுக்கத்தில் ஸ்ரீராமர் எவ்வளவு கண்டிப்பாக இருந்தார் என்பதையே இது காட்டுகிறது.

(4) "ராவணனின் புத்திரனை இந்திரஜித் அரிய வரம் பெற்றவன் ஆஹாரமும் தூக்கமும் இல்லாமல் பன்னிரண்டு வருஷகாலம் விரதம் பூண்ட ஒருவனாலேயே அவனைக் கொல்ல முடியும்; அப்படிப் பட்டவன் லக்ஷ்மணன் ஒருவனே" என்று சொல்லக் கேட்கிறோம். இதற்கு ஆதாரம் அத்யாத்ம ராமாயணத்தில் காண்கிறது. ஸ்ரீராமரே இந்திரஜித்துடன் யுத்தம் செய்ய நினைக்கையில், அது ஸாத்தியமில்லையென்றும் பன்னிரண்டு வருஷம் ஆஹார நித்திரையில்லாத லக்ஷ்மணனால் தான் அவனைக் கொல்ல முடியுமென்று விபீஷணர் சொல்கிறார்.

विभीषणोऽपि तं प्राह नासावन्यैर्निहन्यते ।
यस्तु द्वादश वर्षाणि निद्राहारविवर्जितः ।। யுத்த. 8 (64)
तेनैव मृत्युर्निर्दिष्टो ब्रह्मणाऽस्य दुरात्मनः ।
लक्ष्मणस्तु अयोध्याया निर्गम्यायात् त्वया सह ।। யுத்த. 8 (65)
तदादि निद्राहारादीन् न जानाति रघूत्तम । யுத்த. 8 (66)

"ஆனால் விபீஷணர் அவரிடம் சொல்கிறார்—இவன் வேறு யாராலும் கொல்லப்படமாட்டான். எவன் 12 வருஷங்கள் நித்திரையும் ஆஹாரமுமில்லாமலிருந்திருக

கிருனே, அவனுல்தான் இந்த துஷ்டனுக்கு மரண மென்று பிரஹ்மாவினுல் குறிப்பிடப்பட்டிருக்கிறது. லக்ஷ்மணனே அயோத்தியிலிருந்து உங்களுடன் வெளிக் கிளம்பி அதுமுதல் நித்திரை ஆஹாரம் முதலியதை அறிந்த

இதே விஷயம் ஆனந்த ராமாயணத்திலும் ஸார காண்டம் 11வது அத்யாயம் 176, 177 சுலோகங்களில் காண்க

இது வால்மீகி ராமாயணத்திலிருப்பதற்கு மாறுபட்டிருப்பதினுல் சமத்கார கல்பனை என்ருவது வேறு கல்பத்தில் நடந்த ராமாயணக் கதை என்ருவது தான் ஸமாதானம் செய்து கொள்ள வேண்டும். அயோத்யையை விட்டுப் புறப்பட்டு பரத்வாஜருடைய ஆசிரமம் சென்று அங்கிருந்து சித்திரகூடம் போகும் வழி யில் ஓரிரவு லக்ஷ்மணன் நன்ருய் தூங்கிவிட்டதாகவும் அவனை ஸ்ரீராமர் எழுப்பினதாகவும் வியக்தமாக சொல் லப்பட்டிருக்கிறது.

अथ रात्र्यां व्यतीतायां अवसुप्तमनन्तरम् ।
प्रबोधयामास शनैः लक्ष्मणं रघुनन्दनः । அயோ. 56 (1)
स सुप्तः समये भ्रात्रा लक्ष्मणः प्रतिबोधितः ।
जहौ निद्रां च तन्द्रीं च प्रसक्तं च पथि श्रमम् ।। ,, ,, (3)

அப்படியே தண்டகாரண்யத்தில் ஸஞ்சரிக்கும் போது அங்குள்ள மஹரிஷிகள் லக்ஷ்மணனுக்கு பலவித ஆஹாரங்களைக் கொடுத்ததாகத் தெரிகிறது.

एवमुक्त्वा फलैर्मूलैः पुष्पैरन्यैश्च राघवम् ।
वन्यैश्च विविधाहारैः सलक्ष्मणमपूजयन् ।। அர. 1 (22)

அகஸ்திய மஹர்ஷியும் ஸ்ரீராமர் லக்ஷ்மணன் ஸீதை மூவருக்கும போஜனம செய்வித்ததாகத் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது.

अग्निं हुत्वा प्रदायार्घ्यं अतिथीन् प्रतिपूज्य च ।
वानप्रस्थेन धर्मेण स तेषां भोजनं ददौ ।। அர. 12 (27)

(5) ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்தின்போது ஸீதாதேவி தன் கழுத்திலிருந்த அழகிய முத்துமாலை ஒன்றைக் கழற்றி ஸ்ரீராமருடைய அனுமதியின் பேரில் ஹநுமாருக்கு கொடுக்கிருள். ஹநுமார் அந்த மாலையில் இருந்த ஒவ்வொரு முத்தையும் தனித்தனியே எடுத்துக் கடித்துக் கடித்து துப்பி விட்டார் என்றும், தான் எப்பொழுதும் தன் நாவில் தரித்திருக்கும் ஸ்ரீராம நாமத்தின் ருசி முத்துக்கள் ஒன்றிலும் இல்லை என்று அவர் சொன்னதாகவும், ஒரு கற்பனை. இது ஹனுமாரின் பக்திப் பெருமையை அழுத்திக் காட்டுவதற்காக என்ற நினைப்பு. அவர் இப்படி ஏதாவது செய்திருந்தால் ஸ்ரீராமருடைய பாராட்டுக்கோ பரிசுக்கோ, ஸ்ரீ ஸீதையின் பாராட்டுக்கோ பரிசுக்கோ, அருகராகவே இருந்திருக்கமாட்டார். இந்தக் கதை குழந்தைகளுக்கு ருசிக்கலாம். ஆனல் இந்தக் கருத்து ராமாயணத்தில் புகத் தக்கதல்ல. ஹனுமாரின் உயர்ந்த ஒப்பற்ற குணத்துக்கும் ஒழுக்கத்துக்கும் சற்றும் பொருந்தாது. இந்த மாலையால் அலங்கரிக்கப்பட்ட ஹநுமார் சந்திர நிலவுபோலுள்ள வெண்மையான மேகத்திஞல் அலங்கரிக்கப்பட்ட மலைபோல் விளங்கிஞர் என்றே வால்மீகி சொல்லுகிருர்.

हनुमांस्तेन हारेण शुशुभे वानरर्षभः ।
चन्द्रांशुचयगौरेण श्वेताभ्रेण यथाऽचलः ।। யுத்த. 131 (83)

மேலே காட்டிய உதாஹரணங்களால், ராமாயண பிரவசனம் செய்பவர்கள் அதில் உள்ளதை விளக்கு வதோடு திருப்தி அடையாமல், அதைப் பெருமைப் படுத்துவதாக எண்ணி அதில் இல்லாத பல செய்திகளை யும் அதில் இருப்பதாகச் சொல்லி விடுகிறார்கள். இத் தகைய கருத்துக்கள் பல இடங்களில் துரதிருஷ்ட வசமாக ராமாயண காவியத்தின் லட்சியத்துக்கே முரணாக அமைந்து விடுகின்றன; காவியபாத்திரங்களின் குணப் பெருமையைச் சிதைத்து விடுகின்றன; பல அஸம்பாவிதங்களைத் தோற்றுவித்து விடுகின்றன; என்பது நன்கு விளங்கியிருக்கும். ஸாதாரணப் பொது மக்களுக்கு ராமாயண காவியத்தை முழுவதும் படிக்க நேரம் இருப்பதில்லை. எனவே அதை பிரவசனம் செய் கிறவர் சொல்லும் செய்திகளை அப்படியே மனப்பூர்வ மாக நம்பி விடுகிறார்கள். அவர்கள் சொல்லுவதற்கெல் லாம் ஆதாரம் வால்மீகி ராமாயணத்தில் இருப்பதாகவே எண்ணிவிடுகிறார்கள். எனவே பிரவசனம் செய்கிறவர் களுக்குப் பொறுப்பு அதிகம். இதை உணர்ந்து இவர்கள் உண்மைக்கு மாறுபாடு நேராதபடி நடந்து கொள்ள வேண்டும். வேறு புராணங்களிலோ காவியங்களிலோ வியாக்கியானங்களிலோ இருந்து அவர்கள் நிறைய மேற் கோள்கள் காட்டலாம். ஆனால் அவை எல்லாம் வால்மீகி ராமாயணத்தில் இருப்பதாக தவறான கருத்து ஏற்படும்படி அவர்கள் செய்துவிடக்கூடாது.

நாரதரால் வித்திடப்பட்டு, பிரஹ்மதேவரால் ஊக்கம் ஊட்டப்பட்டு, வால்மீகி முனிவரால் எழுதப் பட்டு, குசன் லவன் என்ற இளவரசர்களால் கானம் செய்யப்பட்டு, சிறந்த மஹரிஷிகளாலும் ஸ்ரீராமராலுமே அசுவமேதயாக காலத்தில் கேட்கபட்டது இந்த காவியம். அதை கேட்பவர் உள்ளங்களில் அறிவொளியை உண்டாக்குவதே அதன் லக்ஷ்யமேயன்றி சோம்பேறி களின் பொழுது போக்குக்காக ஏற்பட்டது அல்ல.

இந்தக் காவியத்தினிடமும் அதன் பாத்திரங்களிடமும் உயர்ந்த கௌரவ புத்தி இருந்தால் தான் நாம் அதற்குள் வேறு கருத்துக்களைப் புகுத்த அஞ்சுவோம். 'வால்மீகி முனிவர் நன்ருக எழுதியிருக்கிருர்' என்று பாராட்டுவது கூட அவமரியாதையே ஆகும். அந்த முனிவரையும் அவர் எழுத்தையும் எடைபோட நமக்கு என்ன தகுதி இருக்கிறது? அதில் குற்றம் காணுவதும், அந்தக் கருத்துக்களை மேலும் சிறப்பிக்க எண்ணுவதும் மிக்க அவமரியாதையே ஆகும். 'அதைப் படிப்பவர் அல்லது கேட்பவருக்கு அதன் உண்மையில் நம்பிக்கை வேண்டும்; அதனிடம் பக்தி வேண்டும். அப்போதுதான் இம்மை மறுமைப் பயன் இரண்டும் அதனல் கிடைக்கும்' என்று ராமாயண காவியமே வற்புறுத்துகிறது.

यः शृणोति सदा भक्त्या स गच्छेद्वैष्णवीं तनुम् ।
पुत्रदाराश्च वर्धन्ते संपदः सन्ततिस्तथा ।।
यः पठेच्छृणुयान्नित्यं चरितं राघवस्य च ।
भक्त्या निष्कल्मषो भूत्वा दीर्घमायुरवाप्नुयात् ।।
शृण्वन् रामायणं भक्त्या यः पादं पदमेव वा ।
स याति ब्रह्मणः स्थानं ब्रह्मणा पूज्यते सदा ॥ உத். 111 (16,19,24)

நினைத்தவர்களெல்லாம் நினைத்தபடி கையாளுவதற்குரிய புத்தகம் அல்ல ஸ்ரீ வால்மீகி ராமாயணம். நல்ல மரியாதையோடும் அதன் உண்மையில் நிறைந்த நம்பிக்கையோடுமே நாம் அதை உபாஸிக்க வேண்டும்.

सत्यमेतद्विदित्वा तु श्रोतव्यं नियतात्मभिः । உத்தர. 111 (17)

ஸ்ரீ ராமர் நமக்கு அத்தகைய நம்பிக்கையைத் தந்து ரக்ஷிப்பாராக!

---

## அத்யாயம் 3

## போதிக்கும் முறை

வேதமானது ராமாயண ரூபமாக வால்மீகியிடமிருந்து வெளிப்பட்டது என்று சொல்வதையனுஸரித்து வால்மீகியும், குசலவர்கள் வேதாத்யயனம் செய்து மிகவும் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள் என்பதை நன்கு அறிந்து வேதார்த்தத்தை அவர்களுக்கு நன்கு விஸ்தரித்து போதிக்க வேண்டுமென்பதற்காகவே, ராமாயணத்தை அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்ததாகக் காண்கிறது.

स तु मेधाविनौ दृष्ट्वा वेदेषु परिनिष्ठितौ
वेदोपबृंहणार्थाय तावग्राहयत प्रभुः பால. 4 (6)

வேதமென்பது இரண்டு பாகங்களோடு கூடியது. ஒரு பாகம் கர்மாவை போதிப்பது. மற்றொன்று பிரஹ்மத்தை போதிப்பது. கர்மத்தினுடைய மேலான பலன் ஸ்வர்க்கம். பிரஹ்ம ஞானத்தினுடைய பலன் மோக்ஷம். ஆக வேதமே ராமாயண ரூபமாக வந்ததேயானால், கர்ம காண்டத்தையும் சொல்லவேண்டும், ஞான காண்டத்தையும் சொல்ல வேண்டும். வால்மீகி ராமாயணம் என்று பிரஸித்தியடைந்திருக்கும் பாகம் கர்மானுஷ்டானத்தையே பிரதானமாக உடையது. வால்மீகியே எழுதினதாக சொல்லப்படும் வாஸிஷ்ட ராமாயணம் ஞானத்தையே முக்யமாகக் கொண்டது. கர்ம ப்ரதானமாயிருக்கிற கர்மகாண்டத்தில்கூட சுத்த ஞான விஷயமான பிரஹ்மாத்மைக்யத்தை போதிக்கக் கூடிய பல வாக்யங்கள் வருகின்றன. ஸாமான்யமான ஸந்தியா வந்தன கர்மாவிலேயே असावादित्यो ब्रह्म என்று சொல்

லும்போது, பிரஹ்மத்தைக் காட்டிலும் வேருக இல்லாத பிரத்யகாத்மாவின் விசேஷ உபலப்திஸ்தானமான ஹ்ருதயத்தைச் சுட்டிக் காட்ட வேண்டியிருக்கிறது. தைத்திரீய ஆரண்யகத்தில் இந்த வாக்யத்திற்குப் பிற்பாடு ब्रह्मैव सन् ब्रह्माप्येति य एवं वेद என்றும் கண்டிருக்கிறது. அதேமாதிரி வால்மீகி ராமாயணத்திலும் சில இடங்களில் ஞான விஷயமான வாக்யங்கள் வருகின்றன. உதாஹரணமாக, ராமர் காட்டிற்குப் போகவேண்டுமென்று கைகேயி சொன்ன வார்த்தை அப்ரியமாகவும் மரணத்திற்கு ஸமானமாகவும் இருந்தது என்று வால்மீகி வர்ணித்து விட்டு, ஆனல் ராமர் கொஞ்சமேனும் வருந்தப்படவில்லை என்பதையும் காட்டுகிருர்—

तदप्रियममित्रघ्नो वचनं मरणोपमम् ।
श्रुत्वा न विव्यथे रामः कैकेयीं चेदमब्रवीत् அயோ. 19 (1)

ராஜ்யத்தை விட்டுவிட்டுக் காட்டிற்குப் போகிற ராமருக்கு மனதில் ஒருவிதமான விகாரமும் ஏற்படவில்லை, என்று வால்மீகி சொல்லும்போது, ஸர்வ பிரபஞ்சத்தையும் துச்சமாக நினைத்து இருக்கும் ஜீவன் முக்தனையே ராமருக்கு திருஷ்டாந்தமாகச் சொல்லுகிருர்—

न वनं गन्तुकामस्य त्यजतश्च वसुन्धराम् ।
सर्वलोकातिगस्येव लक्ष्यते चित्तविक्रिया ॥ அயோ. 19 (33)

பரதன் ராமரைப் பற்றிச் சொல்லும்போது "உலகத்தில் உம்மைப்போல் யார் இருப்பார்கள்? துக்கம் உங்களை சிரமப்படுத்தாது. ஸுகம் ஸந்தோஷத்தைக் கொடுக்காது. ஒருவன் இறந்து போனலும் உயிருடன் இருந்தா

லும் ஏதாவது ஒன்று கிடைத்தாலும் கிடைக்காமல் போனாலும் ஒரே மாதிரியாக இருக்கக்கூடிய புத்தியோடு கூடினவன் எதனால்தான் தாபத்தை அடைவான்? எவர் ஒருவர் உத்கிருஷ்டமான பிரஹ்மஸ்வரூபத்தையும், நிக்ருஷ்டமான ஜகத்தின் ஸ்வரூபத்தையும் அறிகிறாரோ அவர் மாதிரி அல்லவா நீர் இருக்கிறீர்? இவ்விதமான பெரிய வ்யஸனத்தை அடைந்தும்கூட, நீர் தேவதுல்யமான ஸ்வபாவத்தை உடையவர்; மஹாத்மா, ஸத்யஸந்தர், ஸர்வக்ஞர், எல்லாவற்றையும் அறியக்கூடியவர்; ஸூக்ஷ்மமான புத்தியுடன் கூடியவர்; இவ்விதமாக உத்தமமான குணங்களோடு கூடினவராகவும், ஜகத்தின் உத்பத்திலயங்களை அறிந்தவராகவும் இருக்கிற உம்மை எவ்வளவு தாங்கமுடியாத துக்கமாயிருந்தாலும் என்ன செய்யமுடியும்?" என்கிறான்.

को हि स्यादीदृशो लोके यादृशस्त्वमरिन्दम ॥
न त्वां प्रव्यथयेद् दुःखं प्रीतिर्वा न प्रहर्षयेत् ।
यथा मृतस्तथा जीवन् यथाऽसति तथा सति ।
यस्यैष बुद्धिलाभः स्यात् परितप्येत केन सः ॥
परावरज्ञो यश्च स्यात् तथा त्वं मनुजाधिप ।
स एवं व्यसनं प्राप्य न विषीदितुमर्हति ॥
अमरोपमसत्त्वस्त्वं महात्मा सत्यसङ्गरः ।
सर्वज्ञः सर्वदर्शी च बुद्धिमांश्चासि राघव ॥
न त्वामेवंगुणैर्युक्तं प्रभवाभवकोविदम् ।
अविषह्यतमं दुःखमासादयितुमर्हति ॥ அயோ. 106 (2-7)

இந்த சுலோகங்கள் பகவத்கீதையிலுள்ள

दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः । அ. 2 (56)

यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ।। ,, ,, (57)

समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ அ. 14 (24)

यस्मिन् स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते॥ அ. 6 (22)

இது முதலான சுலோகங்களையும், உபநிஷத்திலுள்ள

भिद्यते हृदयग्रन्थिः........तस्मिन् दृष्टे परावरे ।।

இது முதலான வாக்கியங்களையும் ஞாபகப்படுத்துகின்றன.

அசோகவனத்தில் ஸீதையைக் கண்டு ராவணனும் ராக்ஷஸிகளும் பலவிதமாகக் கடுமையான வார்த்தைகளைச் சொல்லி பயமுறுத்தினதின் பேரில் ஸீதை பிராணத்யாகம் செய்வதே நல்லது என்று நினைத்துப் புலம்பும்போது, பிரியம் அப்பிரியம் இரண்டுமற்ற நிலையிலுள்ள மஹான்களை நினைத்துக் கொண்டு அந்நிலை தனக்கு ஏற்படவில்லையே என்று எண்ணுவதுடன், அவர்களுடைய நிலை தனக்கு வெகு தூரத்திலிருப்பதாகத் தோன்றி அவர்களை உத்தேசித்து வணங்கத்தான் முடியுமென்பதைக் காட்டுகிறாள்.

धन्याः खलु महात्मानो मुनयस्त्यक्तकिल्बिषाः ॥
जितात्मानो महाभागा येषां न स्तः प्रियाप्रिये ।
ताभ्यां ये वियुज्यन्ते नमस्तेषां महात्मनाम् । சுர். 6 (47-49)

*சரீர அபிமானமிருக்கும்வரை பிரியாப்பிரியங்கள் இருந்தே தீரும். சரித்திரத்தில் தாதாம்ய புத்தியில்லாதவர்களை பிரியாப்பிரியங்கள் தொடவே தொடாது என்று* न वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति । अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः *என்று சொல்லும் உபநிஷத்தின் அர்த்தமே ஸீதையின் வாக்கியத்தில் காண்கிறது*

*இவ்விதம் சிற்சிலவிடங்களில் ஞானமார்க்கம் ஸூசிக்கப்பட்டிருந்த போதிலும் ஸ்ரீமத் ராமாயணம் முக்கியமாக தர்மத்தையே போதிக்க ஏற்பட்டது.*

*ராமாயணத்தில் வரும் மஹரிஷிகள் வானப்ரஸ்தர்களாகவும் கிருஹஸ்தர்களாகவும் இருக்கிறார்களே தவிர, ஒருவரும் ஸந்யாஸியாக இல்லை. தவிரவும் ஸத் கதி அடைந்ததாக ராமாயணத்தில் சொல்லப்படும் எல்லோரும் உத்தமமான லோகங்களுக்குப் போனதாகச் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, ஒருவரும் வைராக்யமடைந்து ஆத்மஞானம் பெற்று இங்கேயே கைவல்யமாகிற பரம முக்தியை அடைந்ததாகக் காணவில்லை. இதிலிருந்தும் தர்மானுஷ்டானம், யக்ஞ யாகாதிகள், தபஸ், யோகம், உபாஸனை முதலிய கர்ம காண்டத்தில் அடங்கிய ஸாதனங்களே ராமாயணத்தில் காணப்படுவதாலும் ஆத்ம விசாரம், சிரவண, மனன, நிதித்யாஸனாதிகள் இவைகளைப்பற்றிச் சொல்லப்படாததினாலும் ஸ்ரீமத்ராமாயணம் கர்மகாண்டபரம் என்றே தெளிவாகத் தெரிகிறது.*

உலகில் நாம் அனுஷ்டிக்க வேண்டிய தர்மங்களை போதிப்பதற்கு வேதமும், ஸ்மிருதிகளும், இருக்கையில் அதே விஷயங்களை அறிவுறுத்துவதற்கு ராமாயணம் எதற்காக என்று கேட்கலாம். நம் பெரியோர்கள் போத க்ரமத்தை மூன்று விதமாகப் பிரித்திருக்கிறார்கள்—

1. யஜமானன் ஸேவகனைப் பார்த்து இவ்விதம் செய், அவ்விதம் செய்யாதே என்று கட்டளை இடுவது ஒரு க்ரமம். அவ்விதம் கட்டளை இடும்போது அந்த ஸேவகன் யஜமானனைப் பார்த்து ஏன் கட்டளை இடுகிறீர் என்று கேட்க முடியாது. யஜமானன் சொன்னபடி நடத்தவேண்டியதைத் தவிர அக்கட்டளையைப்பற்றி ஒரு விதமான சர்ச்சையும் செய்வதற்கு அவனுக்கு அதிகாரம் கிடையாது.

2. ஒரு ஸிநேஹிதன் இன்னொரு ஸிநேஹிதனைப் பார்த்து இவ்விதம் செய், உனக்கு இந்த அனுகூலம் கிடைக்கும், அவ்விதம் செய்யாதே, அவ்விதம் செய்தாயேயானால் இன்ன கெடுதல் ஏற்படும் என்று சொல்வது ஒருமுறை. இதில் சொல்கிறவனும், கேட்கிறவனும் ஸமானகோடியில் இருந்தபோதிலும் ஒருவன் தெரிந்தவன். மற்றொருவன் தெரியாதவன் என்கிற வித்தியாஸம் உண்டு. சொல்லுகிறவன் தெரிந்தவனாகவும் ஸிநேஹிதனாகவும் இருக்கிறபடியால் நம்முடைய ஹிதத்தையே சொல்லுவான் என்கிற விசுவாஸத்துடன் அவன் சொல்வதைக் கேட்கத் தோன்றும். இது இரண்டாவதுமுறை.

3. கட்டளை இடாமலும், விஷயத்தைத் தெளிவாக எடுத்துச் சொல்லாமலும் ஏதோ அகஸ்மாத்தாக பிரஸ்தாவித்தது போல் காட்டிக் கொண்டு தன் உத்தேசத்தை இன்னொருவனைக் கொண்டு நிறைவேற்றிக் கொள்ளுவது மூன்றாவது முறை.

முதல் முறையை 'ப்ரபுஸம்மிதம்' என்று சொல்லு வார்கள். வேதம் இடும் கட்டளைகள் அதில் சேரும். நம் மைப்போல் மனுஷ்யர்களாக இருந்து தக்க ஸாதனங் களை அனுஷ்டித்து மேல் பதவியை அடைந்திருக்கும் மஹ ரிஷிகள் மற்ற மனுஷ்யர்களும் சிரேயஸ்ஸை அடைய வேண்டுமென்று கருதி ஸாதனங்களை எடுத்துச் சொல் லும் தர்ம சாஸ்திரங்கள் இரண்டாவது முறையான ஸுஹ்ருத்ஸம்மிதத்தில் சேரும். தனக்கு ஆஸ்தை இருப்ப தாகக் காட்டிக் கொள்ளாமல் அகஸ்மாத்தாக பிரஸ்தா வம் செய்து ஒரு ஸ்திரீயானவள் தன் பர்த்தா மூலம் தன் னுடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்து கொள்ளும் முறைபோல் மூன்றாவது முறை இருப்பதால் அதை 'காந்தாஸம்மிதம்' என்று சொல்லுவார்கள். அப்படியே ஸாக்ஷாத்தாக கட்டளை ரூபமாகவோ பலன்களை எடுத்துக் காட்டியோ சொல்லாமல், வேறு விஷயத்தைப்பற்றிச் சொல்லிக்கொண்டுவரும் மத்தியில் தர்மத்தைப் பற்றி பிரஸ்தாவிக்கக்கூடிய ரீதி காந்தாஸம்மிதம் என்கிற மூன் றாவது முறையில் சேரும்.

வால்மீகி மஹரிஷி இயற்றிய ஆதி காவ்யமான ஸ்ரீமத் ராமாயணம் காந்தாஸம்மிதம் என்கிற முறையிலேயே போதிக்கிறது. சுருதியிலும் தர்ம சாஸ்திரத்திலும் சொல்லப்பட்ட விஷயத்தையே தனிப்பட்டதான சிறந்த முறையில் ராமாயணம் போதிக்கிறது. மனிதர்களுக்கு லகுவான வழியில் தர்ம விஷயமான ஞானம் ஏற்படும் படி செய்வதற்கு இம்முறையே மிகவும் அவசியமானது. ராமாயணத்தில் தர்மம் எப்படி போதிக்கப்பட்டிருக் கிறது என்பதைப் பற்றி எடுத்துச் சொல்லுவதானால் வெகுவாக விரியும். சில உதாஹரணங்களை மாத்திரம் இங்கு எடுத்துக் காட்ட நினைக்கிறோம்

பசுமாட்டைக் காலால் தொடக்கூடாது; ஸூர் யனைப் பார்த்து உட்கார்ந்துகொண்டு மூத்திர விஸர் ஜனம் செய்யக்கூடாது; ஸந்தியா காலத்தில் படுத்துக்

கொண்டிருக்கக் கூடாது; புதிதாகக் கன்று போட்டிருக்கிற பசுமாட்டைக் கறக்கக்கூடாது; என்றெல்லாம் சொன்னால் ஏன் செய்யக் கூடாது? செய்தால் என்ன? என்ற கேள்விகள் கேட்கத் தோன்றும். கௌஸல்யை தன்னிடம் ஸந்தேஹிக்கிறாள் என்று தோன்றின ஸமயத்தில் பரதன் பலவிதமான சபதங்கள் செய்யும்போது இவ்விதம் நிஷித்தமான காரியங்களைச் செய்பவன் எந்த தோஷத்தை அடைவானோ அந்த தோஷம் ராமர் காட்டிற்குப் போனது எவனுக்கு ஸம்மதமாயிருக்குமோ அவனை அடையட்டும் என்று சொல்கிறான். இவன் சொல்லுகிறதிலிருந்து அவைகள் தோஷம்தான் என்பது யாருக்கும் அனாயாஸமாகத் தெளிவாகத் தெரியவரும்.

गाश्च स्पृशतु पादेन .... । அயோ. 75 (31)

.... .... .... सूर्यं च प्रति ,, ,, (22)

उभे सन्ध्ये शयानस्य यत्पापं परिकल्प्यते । ,, ,, (44)

बालवत्सां च गां दोग्धु यस्यार्योऽनुमते गतः ॥ ,, ,, (56)

சித்ரகூட பர்வதத்தில் பரதன் வந்தவுடன் அவனிடம் யோகக்ஷேமங்களைப் பற்றிக் கேட்கிற முறையில் ராமர் அநேக தர்மங்களை எடுத்துக் காட்டுகிறார். உதாஹரணமாக, தூக்கத்திற்கு அதிக இடம் கொடுக்காமல் இருக்கிறாயா? ஸரியான காலத்தில் விழித்துக்கொள்கிறாயா? நாஸ்திக வாதம் சொல்லும் பிராஹ்மணர்களுக்கு இடம் கொடுக்காமல் இருக்கிறாயா? ஸ்திரீகளை ஸமாதானப்படுத்தி நன்கு ரக்ஷித்து வருகிறாயா? ஆனால் அவர்களை நம்பி ரஹஸ்ய விஷயங்களை அவர்களிடம் சொல்லாமல் இருக்கிறாயா? உனக்கு வரவு அதிகமாக இருக்கிறதா? வரவைவிடக் குறைவாகச் செலவழிக்கிறாயா?

कच्चिन्निद्रावशं नैषी: कच्चित्काले प्रबुध्यसे । அயோ. 100 (17)

कच्चिन्न लौकायतिकान् ब्राह्मणांस्तात सेवसे ,, (38)

कच्चित् स्त्रियः सान्त्वयसि कच्चित् ताश्च सुरक्षिताः

कच्चिन्न श्रद्दधास्यासां कच्चिद् गुह्यं न भाषसे ॥ ,, (44)

आयस्ते विपुलः कच्चित् कच्चिदल्पतरो व्ययः । ,, (54)

என்றெல்லாம் கேட்கிறார். இந்தக் கேள்விகளிலிருந்து நாம் நடந்துகொள்ளவேண்டிய ஒழுங்கு முறையை நன்கு கற்றுக் கொள்ளலாம்.

ராமர் ஸுதீக்ஷ்ணரின் ஆச்ரமத்திலிருந்து கிளம்பும் போது ஸூர்யன் மிகவும் உக்ரமாக தபிப்பதற்கு முன்னால் புறப்படுவது நல்லதென்று சொல்லுகிறார். ஸஹிக்க முடியாத வெப்பத்தோடு கூடிய ஸூர்யனுக்கு திருஷ்டாந்தமாக, ஸத்குலத்தில் பிறவாமல் நியாயமற்ற முறையில் ஐசுவரியம் ஸம்பாதித்து ஜனங்களை துன்பப்படுத்தும் மனுஷ்யனை எடுத்துக்காட்டுகிறார்—

अविषह्यातपो यावत् सूर्यो नातिविराजते ।

अमार्गेणागतां लक्ष्मीं प्राप्येवान्वयवर्जितः ॥ அர. 8 (8)

ஸீதையை ராவணன் தூக்கிக்கொண்டு போகும் போது அவனுக்குத் தெரியாமல் சில நகைகளை அவள் ஒரு துணியில் முடிச்சுப் போட்டுக் கீழே போட்டிருந்ததை ஸுக்ரீவன் ராமருக்குக் காட்டும்போது ராமர் லக்ஷ்மணனைப் பார்த்து நீயும் பார் என்று சொல்லுகிறார். அப்பொழுது லக்ஷ்மணன் அவளுடைய தோள் வளைகளையும், காது குண்டலங்களையும் தனக்குத் தெரியாதென்

றும், ஆனால் நித்யம் அவளை நமஸ்காரம் செய்திருப்பதால் கால் நூபுரங்களை மாத்திரம் அறிவேன் என்றும் சொல்லுகிறான். இதிலிருந்து எவ்வளவு நெருங்கிப் பழகினாலும், எவ்வளவு அபிமானம் இருந்தாலும், தன் ஸ்திரீயைத் தவிர மற்ற ஸ்திரீகளை நிமிர்ந்து பார்ப்பது கூட நியாயமில்லை என்பதை இந்த ஸம்பவம் சொல்லாமலே எடுத்துக் காட்டுகிறது.

नाहं जानामि केयूरे नाहं जानामि कुण्डले ।
नूपुरे त्वभिजानामि नित्यं पादाभिवन्दनात् ॥ கிஷ். 6 (22)

ஹநுமார் அசோக வனத்தில் பார்த்துக்கொண்டிருக்கும்போது ஒரு உயர்ந்த பாறையிலிருந்து ஒரு சிற்றாறு கீழே குதித்து ஓடுகிறது. அது, மிகவும் பிரியமாயிருக்கிற பர்த்தாவின் மடியில் உட்கார்ந்துகொண்டிருந்த ஒரு பெண் பர்த்தா சொன்ன ஏதோ ஒரு வார்த்தையினால் ரோஷம்வந்து கீழே குதித்து ஓடுவதுபோல், காண்கிறது. அவ்விதம் பர்த்தாவினிடமிருந்து பிரிந்து போகும் பார்யையை அதுவே நியாயமென்று அவள் பந்துக்கள் சொல்லுவது சரியாகாது. வாஸ்தவமாகப் பிரீதியோடு கூடின பந்துக்களாக இருந்தார்களேயானால், அவள் எவ்வளவு கோபித்துக்கொண்டிருந்தாலும் அவளை ஸமாதானப்படுத்தித் தடுக்க வேண்டியதே நியாயமாகும். அதுபோலவே, இந்த நதியின் இருபுறமுள்ள மரங்கள் கவிழ்ந்து தன்னுடைய கிளைகளினால் ஜலத்தைத் தொட்டுக்கொண்டு பிரவாஹ வேகத்தைத் தடுக்கின்றன. இவ்விதம் வேகம் தடைபடும்போது அந்த ஜலம் வேகத்தைவிட்டு மறுபடியும் மெதுவாக எதிர்த்துப் போகும். இதைப் பார்த்தால் பந்துக்களினால் ஸமாதானம் செய்யப்பட்ட ஸ்திரீயானவள் கோபத்தைவிட்டு எப்படி மறுபடியும் பர்த்தாவினிடம் மெள்ள மெள்ளப் போவாளோ அப்படி இருக்கிறதென்று வால்மீகி மஹரிஷி வர்ணித்திருக்கிறார். இதிலிருந்து தம்பதிகள் நடந்து

கொள்ளவேண்டிய முறை, அவர்களுக்குள் ஏதேனும் மனஸ் தாங்கல் ஏற்பட்டால் பந்துக்கள் நடந்துகொள்ள வேண்டிய முறை, இது முதலான தத்வங்கள் வெகு ஸுலபமாக வெளியாகின்றன.

ददर्श च नगात्तस्मात् नदीं निपतितां कपिः ।
अङ्कादिव समुत्पत्य प्रियस्य पतितां प्रियाम् ।।

जले निपतिताग्रैश्च पादपैरुपशोभिताम् ।
वार्यमाणामिव क्रुद्धां प्रमदां प्रियबन्धुभिः ।।

पुनरावृत्ततोयां च ददर्श स महाकपिः ।
प्रसन्नामिव कान्तस्य कान्तां पुनरुपस्थिताम् ।। ஸுந். 14 (29-31)

நாம் பேசும் போது ஸ்பஷ்டமாகவும், அக்ஷரப் பிசகில்லாமலும் பேசினால்தான் கேட்கிறவர்கள் ஸரியான படி அர்த்தம் புரிந்துகொள்ள முடியும். सकृत् (ஸக்ருத்) என்றால் "ஒரு தடவை" என்று அர்த்தம். அதை शकृत् (சக்ருத்) என்று உச்சரித்துவிட்டால் "சாணம்" என்று அர்த்தமாகிவிடும். सवम् (ஸவம்) என்றால் "யாகம்" என்று அர்த்தம். शवम् (சவம்) என்று உச்சரித்து விட்டால் "பிரேதம்" என்று அர்த்தமாகிவிடும். இவ்விதமாக, சொல்லும் வார்த்தையை நன்கு திருத்தமாகச் சொல்ல வேண்டியது அவசியம். அலங்காரம் செய்து கொள்ளாமல் இருக்கிற ஸீதையை ஹநுமார் மிகவும் சிரமப்பட்டுத் தான் அறிய முடிந்தது என்று வால்மீகி சொல்லும் போது, அதற்கு உபமானமாக திருத்தமில்லாத வாக்கு வேறு அர்த்தத்தைச் சொல்லக் கூடியதாக ஏற்படும்

போது ஸரியான அர்த்தத்தைக் கண்டு பிடிப்பது எவ்வளவு சிரமமோ அவ்விதம் இருந்ததென்று சொல்லுகிறார்.

दुःखेन बुबुधे सीतां हनुमाननलंकृताम् ।
संस्कारेण यथा हीनां वाचमर्थान्तरं गताम् ॥ ஸுந். 15 (39)

வேதாத்யயனம் செய்து, பிறகு அதை ஸரியானபடி செய்யாதவனுக்கு எப்படி அந்த வித்யை தளர்ந்து போய்விடுமோ அவ்வளவு தளர்ச்சியுடன் ஸீதை இருந்தாள். அநத்யயனதினமான ப்ரதமையன்று வாசிக்கும் வாசிப்பு எப்படி விருத்தியடையாமல் வர வர க்ருசமாகப் போய்விடுமோ அவ்வளவு க்ருசமாக ஸீதை தோன்றினாள்.

आम्नायानामयोगेन विद्यां प्रशिथिलामिव ॥ ஸுந். 15 (38)
प्रतिपत्पाठशीलस्य विद्येव तनुतां गता ॥ ஸுந். 59 (31)

என்றெல்லாம் வால்மீகி வர்ணிப்பதிலிருந்து குருமுகமாகப் பெற்றுக்கொண்ட வித்யையை நாம் தளரவிடக் கூடாது, அநத்யயன தினத்தில் வித்யாப்யாஸம் செய்யக் கூடாது, என்பது முதலான தர்மங்கள் நமக்கு ஸுலபமாக போதிக்கப்படுகின்றன. இவ்விதம் ஸுலபமாக தர்மங்களை போதிப்பதற்காகத்தான் காவ்யரீதியாக ராம சரித்திரத்தை வால்மீகி எழுதி இருக்கிறார்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸாமான்யமான லௌகிக ஆசாரங்களும் வெகுவாகக் காணப்படுகின்றன. பெரியோர்களிடத்தில் அரசர்கள் எவ்வளவு மரியாதையுடன் நடந்து கொண்டார்கள் என்பதையும், அரசர்களிடத்தில்

அப்பெரியோர்கள் எவ்வளவு கௌரவ புத்தி வைத்திருந்தார்கள் என்பதையும் பல இடங்களில் காண்கிறோம். இது தவிர நித்ய வாழ்க்கையில் ஏற்படக்கூடிய அநேக ஸந்தர்ப்பங்களில் நாம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று நமக்கு போதிப்பதற்குப்போல, அநேகம் சில்லரை விஷயங்களில் எது நியாயமான முறையென்பது வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அவைகளையெல்லாம் எடுத்துச் சொல்லுவதானால் வெகுவாக விரியுமாதலால் சிலவற்றை மாத்திரம் இங்கு உதாஹரிக்க நினைக்கிறேன்.

(1) ராமர் காட்டிற்குப் போவதென்று தீர்மானமானவுடன் தன்னுடைய சொந்த சொத்துக்களை பிராஹ்மணர்களுக்கும் எளியோர்களுக்கும் தானம் செய்துவிட்டு வஸிஷ்ட புத்ரனை ஸுயக்ஞரை அழைத்து வரும்படி லக்ஷ்மணனை அனுப்புகிறார். அப்பொழுது அக்னிஹோத்ரசாலையில் ஸுயக்ஞர் இருந்து வருகிறார். அவரை நமஸ்கரித்துவிட்டு லக்ஷ்மணன் அழைக்கிறான். அவர் ஸந்தியாகார்யத்தை முடித்துக்கொண்டு லக்ஷ்மணனோடு ராமருடைய கிருஹத்திற்கு வருகிறார். உடனே ராமர் அஞ்ஜலிபந்தம் செய்துகொண்டு ஸீதையோடுகூட மிக மரியாதையாய் அநேகம் ஆபரணங்களை அவருக்குக் கொடுக்கிறார். அப்பொழுது ஸீதைக்கு ஸுயக்ஞருடைய பார்யைக்குத் தானும் ஏதேனும் கொடுக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் அவள் ஸுயக்ஞருடைய பார்யையை அழைத்துவரும்படி சொல்லவில்லை. தன்னுடைய அபிப்ராயத்தை ராமரிடத்தில் சொல்கிறாள். அதன்பேரில் ராமர் ஸுயக்ஞரிடம் ஸீதையினுடைய அபிப்ராயத்தைச் சொல்லி, ஸீதை அவருடைய பார்யைக்குக் கொடுத்ததாகச் சொல்லிக் கொடுக்கிறார். ஒரு ஹாரம், தங்கச் சங்கிலி, ஒட்டியாணம், பலவிதமான அங்கதங்கள், கேயூரங்கள், உத்தமமான விரிப்புப் போட்டு பலவித ரத்னங்களினால் அலங்கரிக்கப்பட்டிருந்த ஒரு கட்டில், இவைகளைக் கொடுக்கிறார். ராமரும்

தனக்குத் தன் மாமனிடமிருந்து கிடைத்த சத்ருஞ்ஜயம் என்கிற யானையை ஆயிரம் பொன்னுடன் சேர்த்து ஸுயக்ஞருக்குக் கொடுக்கிறார். இவைகளைப் பெற்றுக் கொண்டு ஸுயக்ஞர் ராமர், லக்ஷ்மணர், ஸீதை இவர்களை ஆசீர்வதிக்கிறார். இந்த ஸம்பவத்திலிருந்து ஒரு ஸ்திரீ தன்னுடைய சொந்தமான ஆபரணங்களையோ சொத்துக்களையோ தானம் செய்ய வேண்டுமென்று நினைத்தால் பர்த்தா மூலமாகவே கொடுக்கவேண்டுமென்று தெரிகிறது. வாங்குகிறவள் ஸ்திரீயாயிருந்தால் அவளும் நேருக்குநேர் வாங்கிக் கொள்ளாமல் தன்னுடைய பர்த்தா மூலமாகவே வாங்கிக் கொள்ளுவது தான் உசிதம் என்று தெரிகிறது.

सुयज्ञं स तदोवाच रामः सीताप्रचोदितः ॥

हारं च हेमसूत्रं च भार्यायै सौम्य हारय ।
रशनां चाधुना सीता दातुमिच्छति ते सखे ॥

अङ्गदानि विचित्राणि केयूराणि शुभानि च ।
प्रयच्छति सखे तुभ्यं भार्यायै गच्छती वनम् ॥

पर्यङ्कमग्र्यास्तरणं नानारत्नविभूषितम् ।
तमपीच्छति वैदेही प्रतिष्ठापयितुं त्वयि ॥

नागः शत्रुञ्जयो नाम मातुलो यं ददौ मम ।
तं ते निष्कसहस्रेण ददामि द्विजपुङ्गव ॥

इत्युक्तः स हि रामेण सुयज्ञः प्रतिगृह्य तत् ।
रामलक्ष्मणसीतानां प्रयुयोजाशिषः शिवाः ॥ அயோ. 32 (6-11)

(2) மஹா தேஜஸ்வியான த்ரிஜடர் என்னும் ஓர் பிராஹ்மணர் உஞ்சவிருத்தியினுல் காலக்ஷேபம் செய்து கொண்டிருந்தார். தாரித்ர்யத்தினுல் ஏற்படும் சிரமத்தை அவருடைய பார்யையே மிகவும் உணர்ந்ததாகத் தெரிய வருகிறது. அப்படியிருந்தும் ராமர் தானம் செய்யும் இடத்திற்குத் தான் போய்க்கேட்காமல், பர்த்தாவையே கேட்கும்படி செய்கிருள். இதிலிருந்தும் எவ்வளவு சிரம தசை இருந்தபோதிலும் ஸ்திரீகள் செய்யும் பிரவிருத்தி பர்த்தா மூலமாகவே செய்ய வேண்டுமென்பது தெரிகிறது.

तं वृद्धं तरुणी भार्या बालानादाय दारकान् ।।

अब्रवीद् ब्राह्मणं वाक्यं दारिद्र्येणाभिपीडिता ।

रामं दर्शय धर्मज्ञं यदि किञ्चिदवाप्स्यसि ।

भार्याया वचनं श्रुत्वा शाटीमाच्छाद्य दुश्छदाम् ।।

स प्रातिष्ठत पन्थानं यत्र रामनिवेशनम् ।। அயோ. 32 (30-33)

(3) ராமர் ஸீதைக்கு வனவாஸத்திலுள்ள சிரமத்தை எவ்வளவு எடுத்துச் சொல்லியும் அவள் கேட்காமல் மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதின் பேரில் அவளையும் அழைத்துப்போக ஸம்மதித்தார். அவளுக்கு பர்த்தாவினுடைய அனுமதி கிடைத்து விட்டபடியால், வேறு யாரையும் அனுமதி கேட்க அவசியமில்லை. லக்ஷ்மணனும் கூடவே வருவேனென்று சொன்னபோது ராமர் தடுத்துப் பார்த்தும் அவனை நிறுத்தமுடியாமல் அழைத்துப்போக ஸம்மதித்தார். அவன் தன் பிதாவிடம் மிகவும் கோபமாக இருந்தபடியால் தசரதரிடம் போய் அவன் அனுமதி வாங்கிக் கொள்ளமாட்டான். இந்த ஸமயத்திலும் குடும்பத்தலைவர் தசரதர்தான்

என்பதை ராமர் மறக்கவில்லையாதலால், தானாக ஸ்வதந்திரமாக ஸீதையையோ, லக்ஷ்மணனையோ தன்னுடன் அழைத்துப்போவது நியாயமில்லையென்பதை உணர்ந்தார். ஆகையால் அவ்விருவர்களையும் தன்னுடன் தசரதருடைய ஸமீபத்திற்கு அழைத்துச்சென்று "ஹே மஹாராஜரே! எனக்கு உத்திரவு கொடுங்கள்; எங்கள் எல்லோருக்கும் தாங்களே பிரபு; நான் தண்டகாரண்யத்திற்குப் புறப்பட்டிருக்கிறேன். குசலமான பார்வையுடன் என்னைப் பாரும். லக்ஷ்மணனுக்கும் அனுமதி கொடுங்கள். ஸீதையும் என்னுடன் காட்டிற்கு வருகிறாள்; எவ்வளவோ நியாயமான காரணங்கள் எடுத்துச் சொல்லித் தடுத்தும் அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால், தாங்கள் சோகத்தைவிட்டு எங்கள் எல்லோருக்கும் அனுமதி கொடுங்கள்"

आपृच्छे त्वां महाराज सर्वेषामीश्वरोऽसि नः ।
प्रस्थितं दण्डकारण्यं पश्य त्वं कुशलेन माम् ॥
लक्ष्मणं चानुजानीहि सीता चान्वेति मां वनम् ।
कारणैर्बहुभिस्तथ्यैः वार्यमाणौ न चेच्छतः ॥
अनुजानीहि सर्वान् नः शोकमुत्सृज्य मानद । அயோ. 24 (22-24)

என்கிறார். பிறகு புறப்படும்போது ராமர், ஸீதை, லக்ஷ்மணர் மூவரும் அஞ்ஜலிபந்தத்துடன் தசரதருக்கு நமஸ்காரம் செய்து பிரதக்ஷிணமும் செய்துவிட்டுப் புறப்படுகிறார்கள்.

अथ रामश्च सीता च लक्ष्मणश्च कृताञ्जलिः ।
उपसंगृह्य राजानं चक्रुर्दीनाः प्रदक्षिणम् ॥ அயோ. 40 (1)

(4) அதன் பிறகு இவர்கள் ரதத்தில் ஏறிக்கொண்டு போகும்போது தசரதரும் கௌஸல்யையும் நடு வீதிக்கு வந்து அலறிக்கொண்டு ரதத்தைப் பின் தொடர்ந்து ஓடி வருகிறார்கள். அப்பொழுது அங்குள்ள மந்திரிகள் தசரதரைப்பார்த்து "புறப்பட்டுப் போகிறவன் க்ஷேமமாகத் திரும்பி வரவேண்டுமென்றிருந்தால் வழி அனுப்புவதற்கு அதிக தூரம் போகக்கூடாது" என்று சொல்லுகிறார்கள். இந்த நியாயமான வார்த்தையைக் கேட்டு தசரதர் கௌஸல்யையோடு கூட நின்ற இடத்திலேயே நின்றுகொண்டு ராமரைப் பார்த்துக் கொண்டே இருந்தார்.

यमिच्छेत् पुनरायान्तं नैनं दूरमनुव्रजेत् ।
इत्यमात्या महाराजं ऊचुर्दशरथं वचः ॥
तेषां वचः सर्वगुणोपपन्नं
प्रस्विन्नगात्रः प्रविषण्णरूपः
निशम्य राजा कृपणः सभार्यो
व्यवस्थितस्तं सुतमीक्षमाणः ॥ அயோ. 40 (50-51)

எவ்வளவு துக்கதசை ஏற்பட்டபோதிலும் ஆசார ஸம்பிரதாயத்தை எடுத்துச் சொன்னவுடன் தசரதர் இருந்துவிட்டார் என்றால் அவருடைய உத்தமமான தார்மிக ஸ்வபாவம் நன்கு வெளியாகிறது.

(5) ராமர் காட்டிற்குப் போனபிற்பாடு தசரதர் காலமாகி பரதன் வந்து அவருடைய கிரியைகளைச் செய்து விட்டு ராமரைத் தேடிக்கொண்டு சித்ரகூடத்திற்கு வந்து தசரதர் காலமான விவரத்தை பரதன் ராமனிடம் சொல்லுகிறான். அதைக் கேட்டவுடன் ஸீதை

உள்பட எல்லோரும் கண்ணீர் சொரிய துக்கப்படுகிறார்கள். அந்த ஸமயத்திலும் துக்க பிரச்நம் கேட்க வேண்டியமுறையை ராமர் அனுஷ்டித்துக் காட்டுகிறார். ஸீதையைப் பார்த்து "என் தகப்பனார் காலம் சென்றுவிட்டார், அல்லது மஹாராஜர் காலம் சென்றுவிட்டார்" என்று சொல்லாமல் "ஹே ஸீதே! உன் மாமனார் இறந்துவிட்டார்" सीते मृतस्ते श्वशुरः— அயோ. 102. (15) என்று அவளுக்குள்ள உறவைக் குறிப்பிட்டுச் சொல்லுகிறார். அப்படியே லக்ஷ்மணனிடம் "நம் தகப்பனார் போய் விட்டார்" என்று சொல்லாமல் "ஹே லக்ஷ்மணா! உனக்கு இனி பிதா இல்லை என்று ஆகிவிட்டது" पित्रा हीनोऽसि लक्ष्मण— அயோ. 102. (15) என்று சொல்லுகிறார்.

(6) சித்ரகூட பர்வதத்தில் ராமரிடமிருந்து பாதுகையைப் பெற்றுக்கொண்டு பரதன் திரும்பும்போது ராமரிடமிருந்து பிரிய மனதில்லாமல் தாயார்கள் ராமரிடம் சொல்லிக் கொண்டு புறப்படுவதற்கு முடியாமல் தயங்கித்தயங்கி நின்றார்கள். அதற்கு முடிவு செய்யவேண்டுமென்று ராமரே அவர்களுக்கு நமஸ்காரம் செய்துவிட்டுத் தன் குடிசைக்குள் நுழைந்துவிட்டார்,

तं मातरो बाष्पगृहीतकण्ठ्यो

दुःखेन नामन्त्रयितुं हि शेकुः ।

स त्वेव मातॄरभिवाद्य सर्वा

रुदन् कुटीं स्वां प्रविवेश रामः ।। அயோ. 112 (31)

அவர்களாகச் சொல்லிக் கொண்டு போகமாட்டார்கள் என்று இருந்தபடியால் ராமர் அவ்விதம் செய்ய ஏற்பட்டது.

(7) ராமர் ஸீதா லக்ஷ்மணர்களோடு கூட தண்டகாரண்யத்தில் முதலாவதாக அத்ரிமஹரிஷியினுடைய ஆசிரமத்திற்குப் போகிறார். அங்கு போனவுடன் அம் மஹரிஷி அவர்களை வெகு அபிமானத்தோடு வரவேற்று தன்னுடைய பத்நீ அனஸூயை உள்ளே இருப்பதால் அங்கே அவளிடம் ஸீதை போகட்டும் என்று சொல்லுகிறார். இது அத்ரி மஹரிஷி ராமரைப் பார்த்துச் சொன்ன வார்த்தை. பர்த்தா ஸமீபத்தில் இருக்கும்போது மஹரிஷியினுடைய வாக்யத்தை மாத்திரம் கேட்டு அவள் உள்ளே போவது தர்மமாகாது. பர்த்தாவினுடைய அனுமதியும் இருக்கவேண்டும். இதற்காக ஸீதையை உள்ளே போ என்று சொல்லுவதற்கு அவசியம் ஏற்பட்டது. ஆனால் ரிஷியினுடைய வாக்யத்திற்கு பிராமாண்யம் கொடுக்காமல் பர்த்தாவினுடைய வாக்யத்தையனுஸரித்து அவள் உள்ளே போனால், ரிஷியினுடைய வாக்யத்தை உதாஸீனம் செய்த தோஷம் ஏற்படக்கூடும். ஆகையால் ஸீதை உள்ளே போகவும் வேண்டும், மஹரிஷியினுடைய வாக்யத்தை அனுஸரித்ததாகவும் இருக்கவேண்டும், அவளுக்குத் தான் அனுமதி கொடுத்ததாகவும் இருக்கவேண்டும், என்று எல்லா அம்சங்களையும் மனதில் வைத்துக்கொண்டு ராமர் ஸீதையைப் பார்த்துச் சொல்லுகிறார். "ஹே ராஜபுத்ரி! மஹரிஷி சொன்னாரே! அவ்வார்த்தை உன் காதில் பட்டதா? உன்னுடைய க்ஷேமத்திற்காகவே உள்ளே இருக்கிற தபஸ்வினியிடம் சீக்கிரம் போ" என்று சொன்னார். அதன் பேரில் ஸீதை அனஸூயையிடம் போகிறாள்.

तामिमां सर्वभूतानां नमस्कार्यां यशस्विनीम् ।

अभिगच्छतु वैदेही वृद्धामक्रोधनां सदा ॥

एवं ब्रुवाणं तमृषिं तथेत्युक्त्वा स राघवः ॥

सीतामुवाच धर्मज्ञां इदं वचनमुत्तमम् ।
राजपुत्रि श्रुतं त्वेतत् मुनेरस्य समीरितम् ।।
श्रेयोऽर्थमात्मनः शीघ्रं अभिगच्छ तपस्विनीम् ।
सीता त्वेतद्वचः श्रुत्वा राघवस्य हितैषिणः ।।
तामत्रिपत्नीं धर्मज्ञां अभिचक्राम मैथिली । அயோ. 117 (13-17)

(8) லோக ராவணன் (ஜனங்களைக் கதறவைப்பவன்) என்று பெயர்பெற்ற ராவணன், பகவானே ராம மூர்த்தியாக அவதாரமெடுத்து நிக்ரஹம் செய்யவேண்டியவனாக இருந்தபோதிலும், அவனை மஹாதபஸ்வி என்றும், ஈசுவராராதனம் செய்பவன் என்றும், ஆஹிதாக்நி என்றும், அவனுடைய நகரத்தில் எப்பொழுதும் வேதகோஷம் நிறைந்திருந்தது யக்ஞயாகாதிகள் விசேஷமாக நடந்து வந்தது என்றும், ப்ரஜைகளை மிகவும் அன்பாக பரிபாலனம் செய்து வந்தானென்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அவனைப்பற்றி விபீஷணர்,

धर्मज्ञश्च कृतज्ञश्च राजधर्मविशारदः ।
परावरज्ञो भूतानां त्वमेव परमार्थवित् ।। ஸுந். 52 (7)

"தாங்கள் நன்கு தர்மமறிந்தவர்; நன்றியுள்ளவர்; ராஜ தர்மத்தில் தேர்ச்சியுள்ளவர்; உத்தமமான ஞானத்தோடு கூடினவர்; வாஸ்தவமான தத்வத்தை அறிந்தவர்." என்று சொல்லுகிறார். அவன் ஸீதையை அபஹரிப்பது என்று தீர்மானம் செய்து கொண்டு அவளுக்கு ஸமீபத்தில் ஸ்வாதீனமாகப் போவதற்கு ஸந்யாஸி வேஷம் போட்டுக் கொண்டால் ஸௌகர்யம் என்று நினைத்துக் கொண்டான். ஸந்யாஸிகள் நான்குவிதம்.

குடீசகர், பஹூதகர் இருவருக்கும் சிகா யக்ஞோபவீதங்கள் உண்டு. ஹம்ஸர் ஜடாதாரியானதினுல் தனியாக சிகை கிடையாது. பரம ஹம்ஸருக்கு சிகா, யக்ஞோபவீதம் இரண்டுமே கிடையாது. ஸீதையை அபஹரிக்க வேண்டிய ஸௌகர்யத்திற்காக திடீரென்று ஜடை வளர்த்துக் கொள்வது ஸாத்யமில்லை. சிகா, யக்ஞோபவீதங்களை எடுத்து விட்டு பரமஹம்ஸரூபம் தரித்து ராவணன் போய்விட்டு வந்தால் ஸாயங்காலம் செய்ய வேண்டிய அக்னிஹோத்திரத்திற்கு இடைஞ்சல் வரும். மனப்பூர்வமாக சிகா, யக்ஞோபவீதங்களை எடுத்த தோஷத்திற்காக பிராயச்சித்தம் செய்து கொண்டு மறுபடியும் சௌளம், உபநயனம் செய்துகொள்ளும்படி ஏற்படும். ராவணன் தர்மக்ஞனைபடியால் அவ்விதம் பிராயச்சித்தாதிகளுக்கு இடம் வைக்கக் கூடாதென்றே தீர்மானித்து சிகா யக்ஞோபவீதங்களுள்ள ஸந்யாஸி வேஷத்தையே தரித்துக்கொண்டான். இதை வால்மீகி,

श्लक्ष्णकाषायसंवीतः शिखी छत्री उपानही ।
वामे चांसेऽवसज्याथ शुभे यष्टिकमण्डलू ॥
परिव्राजकरूपेण वैदेहीमन्वपद्यत । அர. 46 (3,4)

"அழகான காஷாய வஸ்திரத்தை உடுத்திக் கொண்டு சிகையோடு குடை, பாதுகை தரித்து இடது தோளில் அழகான தண்டத்தையும், கமண்டலுவையும் தரித்துக் கொண்டு பரிவ்ராஜக ரூபத்துடன் ஸீதையினிடம் வந்தான்." என்று வெகு ஜாக்கிரதையாக வர்ணிக்கிருர். பிற்பாடு பலாத்காரமாக ஸீதையைத் தூக்கிக் கொண்டுதான் போகவேண்டுமென்று தீர்மானித்த ஸமயத்தில், தான் ஸந்யாஸி ரூபத்துடன் அவளைத் தூக்கினுல் அது உசிதமாகாது என்பதை உணர்ந்து ஸந்யாஸி ரூபத்தை விட்டு தன்னுடைய

சொந்த ரூபத்தை எடுத்துக் கொண்ட பிறகே அவளைத் தூக்குகிறான்.

सद्यः सौम्यं परित्यज्य भिक्षुरूपं स रावणः ।
स्वं रूपं कालरूपाभं भेजे वैश्रवणानुजः ॥ அர. 49 (6)
दशास्यो विंशतिभुजो बभूव क्षणदाचरः ॥
स परिव्राजकच्छद्म महाकायो विहाय तत् ॥ ,, ,, (8)
प्रतिपेदे स्वकं रूपं रावणो राक्षसाधिपः ॥ ,, ,, (9)

இதிலிருந்து அதர்மம் செய்ய உத்தேசிக்கும் ராவணனுக்குக்கூட திடமான ஆசாரவாஸனை இருந்ததென்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஸன்யாஸியாகப் பொய் வேஷம் போட்டாலும், அந்த வேஷத்துடன் ஸ்திரீயைத் தொடுவது உசிதமில்லை யென்பதை நன்கு உணர்ந்திருந்தான்.

(9) ஸீதாபஹரணத்திற்குப் பிற்பாடு ஸீதையைத் தேடிக்கொண்டு ராமலக்ஷ்மணர்கள் பம்பாதீரம் போகும் போது ஸுக்ரீவன் வெகு தூரத்திலிருந்து பார்த்து விட்டு அவர்களிடம் ஹநுமாரை அனுப்புகிறான். அனுப்பும் போது "நீ ஸாமான்ய மனிதனைகவே போய் அவர்கள் யார் என்று தெரிந்துகொண்டுவா"

तौ त्वया प्राकृतेनेव गत्वा ज्ञेयौ प्लवङ्गम । கிஷ். 2 (24)

என்று சொல்லுகிறான். உடனே ஹனுமார் தன்னுடைய வானர ரூபத்தைவிட்டுவிட்டு பிக்ஷு ரூபத்துடன் போகிறார் "பிக்ஷு" என்றால் பிரஹ்மசாரிக்கும் சொல்லலாம், ஸந்யாஸிக்கும் சொல்லலாம், பிச்சைக்காரனுக்கும் சொல்லலாம். ஹனுமார் ஏற்கனவே பிரஹ்மசாரி

யாயிருப்பதால் பிரஹ்மசாரி வேஷம் தரிக்கவேண்டிய அவசியமில்லை. பிச்சைக்காரனாயிருந்தால் அவர்களிடம் போய் ஸ்வாதீனமாய் நீங்கள் யார் என்று கேட்க முடியாது. ஆகையினால் ஹனுமார் எடுத்துக் கொண்ட ரூபமும் ஸந்யாஸி வேஷம்தான் என்று தோன்றுகிறது. ஆனால் ஸுக்ரீவனுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு இந்த வேஷம் போட்டுக் கொண்டாரே தவிர ராம லக்ஷ்மணர்களிடம் போய் அவர்களுடைய நிர்மலமான முகத்தைப் பார்த்த ஸமயத்தில் தன் வேஷத்தை மறந்து அவர்களை நமஸ்காரம் செய்துவிடுகிறார். அவர்களும் ஸுக்ரீவனைத் தேடிக்கொண்டே வந்திருக்கிறார்களென்று தெரிந்தவுடன் அவ்விருவர்களையும் முதுகில் தூக்கிக் கொண்டு ஸுக்ரீவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்க நினைத்தார். ஸந்யாஸி வேஷத்துடன் அவர்களைத் தூக்குவது உசிதமில்லையென்பதையும் உணர்ந்தார். உடனே பிக்ஷு ரூபத்தை விட்டுவிட்டு வானர ரூபத்தைத் தரித்துக் கொண்டு அவர்களைத் தூக்கிச் சென்றார்.

भिक्षुरूपं परित्यज्य वानरं रूपमास्थितः ।
पृष्ठमारोप्य तौ वीरौ जगाम कपिकुञ्जरः ॥ கிஷ். 4 (34)

அவர்களை ரிச்யமூக பர்வதத்தில் கொண்டுபோய் கீழே இறக்கிவிட்டு ஸுக்ரீவன் இருக்குமிடமான மலய பர்வதத்திற்கு ஹனுமார் போகிறார். அங்கு போகும் போது வானர ரூபத்துடன் போனால் "ஏன் நான் சொன்னபடி வேறு ரூபம் எடுத்துக்கொள்ளவில்லை?" என்று கேட்கக்கூடுமாதலால், ராம லக்ஷ்மணர்களை இறக்கிவிட்ட பிற்பாடு ஹனுமார் மறுபடியும் பிக்ஷு ரூபம் தரித்துக்கொண்டே ஸுக்ரீவனிடம் போனதாகத் தெரிகிறது. பிறகு ஸுக்ரீவனிடம் ராமருடைய மனோ பாவத்தை நன்கு எடுத்துச் சொல்லி இருவரும் ஸ்நேஹம் செய்துகொள்ள வேண்டியது மிகவும் அவசியம் என்று

தீர்மானமானவுடன் இவர்கள் இருவருக்குள் ஸக்யம் அக்னி ஸாக்ஷிகமாகவே இருக்க வேண்டுமென்று ஹனுமார் நினைத்தார். தான் ஸந்யாஸி ரூபத்தில் இருக்கும்போது அக்னியைத் தொடுவது உசிதமில்லை யென்பதை உணர்ந்தார். ஆகையினால் அவர் அக்னியை மூட்டுவதற்கு முன்னால் பிக்ஷு ரூபத்தை விட்டுவிட்டு தன்னுடைய சொந்த ரூபத்தோடு கூட அக்னியை உண்டு பண்ணினார்.

ततो हनूमान् संत्यज्य भिक्षुरूपमरिंदमः ।।
काष्ठयोः स्वेन रूपेण जनयामास पावकम् ।। கிஷ் 5 (14, 15)

இவ்விதம் ராவணனும் ஹனுமாரும் ஸந்யாஸி வேஷத்திற்கே அவ்வளவு மதிப்புக்கொடுத்து அந்த வேஷத்திற்கு விரோதமான கார்யங்களைச் செய்தால் பெரிய அபசாரமாகுமென்பதை உணர்ந்தார்களென்பதை வால்மீகி நன்கு எடுத்துக் காட்டுகிறார்.

(10) ஹனுமார் ராமரிடம் முதலாவதாக வந்த ஸமயம், தான் ஸுக்ரீவனுடைய மந்திரி என்று சொல்லிக்கொண்டார். அதைக்கேட்டு ராமரும் தனக்கு மந்திரி ஸ்தானம் வஹித்து வருகிற லக்ஷ்மணனைப் பார்த்து ஹநுமாருடன் பேசும்படி சொல்லுகிறார். அதாவது, ராஜா என்கிற முறையில் ராமரும் ஸுக்ரீவனும் ஸமானமான அந்தஸ்துள்ளவர்கள். அப்படியே மந்திரி என்ற முறையில் லக்ஷ்மணனும், ஹனுமாரும் ஸமான அந்தஸ்துள்ளவர்கள். அந்த முறையில் ஸக்யம் ஏற்பட்ட பிற்பாடு ஸால விருக்ஷத்திலிருந்து இலை அடர்ந்த ஒரு கிளையை ஸுக்ரீவன் ஒடித்துக் கீழே போட்டுக்கொண்டு ராமருடன் தானும் உட்காருகிறான். லக்ஷ்மணனுக்கு சந்தன விருக்ஷத்தின் சாகை ஒன்றை

ஹநுமார் ஒடித்து உட்காருவதற்குப் போடுகிறார். தன் யஜமானருக்கு முன்னால் தான் உட்காருவது உசிதமில்லை யென ஹநுமார் லக்ஷ்மணருடன் உட்காரவில்லை.

ततः स पर्णबहुलां छित्त्वा शाखां सुपुष्पिताम् ॥
सालस्यास्तीर्य सुग्रीवो निषसाद सराघवः ।
लक्ष्मणायाथ संहृष्टो हनुमान् प्लवगर्षभः ॥
शाखां चन्दनवृक्षस्य ददौ परमपुष्पिताम् ॥ கிஷ். (19-21)

இவ்விதம் நடந்த ஸம்பவத்தில் ஒரு விதமான அனுசித அம்சமும் கிடையாது. அப்படியிருந்தும் சிலர் ஸுக்ரீவன் லக்ஷ்மணருக்கு ஆஸனம் போடாமல் இருந்தது பிசகு என்றும், அதனாலேயே வாலியுடன் நடந்த முதல் யுத்தத்தில் ஸுக்ரீவன் அடிபடட்டும் என்று ராமர் வேடிக்கை பார்த்துக்கொண்டு இருந்ததாகவும், லக்ஷ்மணருடைய ஆசீர்வாதத்துடன் போனால்தான் ஸுக்ரீவனுக்கு ஜயம் ஏற்படும் என்பதைக் காட்டுவதற்காகவே ராமர் லக்ஷ்மணனைக்கொண்டு ஸுக்ரீவன் கழுத்தில் கஜ புஷ்ப மாலை போடும்படி சொன்னதாகவும் வர்ணிக்கிறார்கள். ஏற்கனவே சொன்னபடி, ஸுக்ரீவன் செய்ததில் ஒருவிதமான பிசகும் இல்லை: முதல் யுத்தத்தில் வாலி ஸுக்ரீவன் இருவருக்குள் வித்யாஸம் தெரியவில்லை யென்றும், அதனால்தான் தான் தலையிடவில்லையென்றும், ராமர் வ்யக்தமாகச் சொல்லும்போது அந்த வாக்யத்திற்கு பிராமாண்யமில்லை என்று வைத்து, ராமர் வேண்டுமென்றே ஸுக்ரீவனுக்கு அடிவாங்கி வைத்தார் என்று சொல்லுவது பெரிய அபசாரமேயாகும். அவர் வாஸ்தவமான காரணத்தை மறைத்து வேறு காரணத்தைச் சொன்னதாக சொன்னால், அவர் ஸத்யஸந்தர் என்பதை மறந்து சொன்னதேயாகும். தவிரவும் முதலிலேயே

ஸுக்ரீவனைப் பார்த்து லக்ஷ்மணனுக்கும் ஒரு ஆஸனம் போடு என்று ராமர் சொல்லியிருந்தால், ஸுக்ரீவன் செய்யாமல் இருந்திருக்கமாட்டான். அவனிடம் பிசகு செய்ததாக எடுத்துக்காட்டாமல், அடிமாத்திரம் வாங்கிக் கொடுத்தால் ஒருவித பிரயோஜனமும் கிடையாது. ராஜநீதி, லௌகிக மரியாதை, தர்ம நிஷ்டை, இவைகளைக் குறிப்பாக வைத்துக்கொண்டே ராமாயணத்திலுள்ள ஸம்பவங்களை வால்மீகி வர்ணித்திருப்பதால், நம்முடைய அல்ப புத்தியைக்கொண்டு விபரீதார்த்தம் செய்வது எவ்வித நியாயமுமில்லை. இவ்விதமாக ராமாயணம் லோகநீதியும் நிறைந்தது என்பது இங்கு குறிப்பிடப்பட்டது.

— o —

## அத்யாயம் 4

## முக்கிய தர்மங்கள்

ஸ்ரீமத் ராமாயணம் என்ற ஆதிகாவ்யத்தை பகவான் வால்மீகி மஹரிஷி ரசனை செய்யும் பொழுது அதற்கு என்ன பெயர் வைக்கவேண்டுமென்று ஆலோசித்து, ஆரம்பம் முதல் கடைசிவரையில் ஸ்ரீராமருடைய சரித்திரமாகவேயிருப்பதால் ராமாயணம என்று பெயரிட்டார். ஆனால் அவருடைய சரித்திரத்தை வர்ணிக்க ஆரம்பித்ததில் அவர் ஜனித்தார் என்று கண்டிருக்கும் ஸர்க்கத்திலேயே அவருடைய விவாஹத்தைப் பற்றி தசரதமஹாராஜர் ஆலோசித்துக் கொண்டிருந்தார் என்று வர்ணித்திருக்கிறபடியால், ராமருடைய பாலலீலைகளை வர்ணித்துக் கொண்டு தாமதம் செய்யக்கூடாது, சீக்கிரமாகவே அவர் ஸீதையை விவாஹம் செய்து கொண்ட விஷயத்திற்குப் போகவேண்டுமென்று வால்மீகி அவஸரப்பட்டதாகத் தோன்றுகிறது. ஆகையால் இந்தக் காவியம் ஆதிமுதல் முடிவுவரையில் ஸீதையின் வரலாற்றையே சொல்லுவதாகவும் வைத்துக்கொள்ளலாம். ஸ்ரீராமருடைய அவதாரத்திற்கு நிமித்தமே ராவணனை ஸம்ஹாரம் செய்யவேண்டியதுதான் என்று முதலிலேயே சொல்லிவிட்டு, விசுவாமித்ர மஹரிஷி ஸ்ரீராமரை அழைக்கவந்த போதே ராவணனைச் சேர்ந்த மாரீசன் ஸுபாஹு இவர்களை நிக்ரஹம் செய்யவேண்டுமென்று சொல்லியிருப்பதால், முதலிலிருந்து கடைசிவரையில் இந்தக் காவியம் ராவண ஸம்ஹாரத்தையே ஸம்பந்தித்தது என்றும் சொல்லலாம். இந்தக் காரணங்களினாலேயே

काव्यं रामायणं कृत्स्नं सीतायाश्चरितं महत् ।
पौलस्त्यवधमित्येवं चकार चरितव्रतः ॥ பால. 4 (7)

என்று சொல்லப்பட்டிருக்கிறது. "இந்தப் பெரிய காவியத்தை பூராவும் ராமருடைய விருத்தாந்தமாகவும்,

பூராவும் ஸீதையின் சரித்திரமாகவும், பூராவும் ராவண ஸம்ஹார விஷயமாகவும் செய்தார்." என்று இந்த சுலோகத்தின் தாத்பர்யத்தைக் கிரஹிப்பது உசிதமாகும்.

ராமருடைய சரித்திரத்தினால் பித்ருபக்தியையும், ஸீதையின் சரித்திரத்தினால் பதிவிரதா தர்மத்தையும், ராவணனுடைய சரித்திரத்தினால் கர்மகதியையும், வால்மீகி மஹரிஷி நன்கு எடுத்துக்காட்டியிருக்கிறார். பித்ருபக்தியை ராமர் எப்படி அனுஷ்டித்துக் காட்டினார் என்று விவரிக்கவேண்டுமானால் ராமாயணம் பூராவையும் சொல்லவேண்டும். அப்படியே ஸீதை பதிவிரதா தர்மத்தை எப்படி அனுஷ்டித்தாளென்றாலும் ராமாயணம் பூராவையும் சொல்லவேண்டும் அவ்விதமே செய்வினை எப்படி ராவணனைத் தொடர்ந்ததென்று தெரிந்து கொள்ளவேண்டுமானாலும் ராமாயணம் பூராவையும் தெரிந்து கொள்ளவேண்டும். ஆகையால் இம்மூவருடைய சரித்திரங்களை எடுத்துச் சொல்லாமலே, பித்ரு பக்தி, பதிவ்ரதா தர்மம், கர்மகதி, என்ற மூன்று விஷயங்கள் ஸம்பந்தமாய் ஸ்ரீமத்ராமாயணத்தில் காணப்படும் சில பொதுவாக்கியங்களை மாத்திரம் இங்கே எடுத்துச் சொல்ல நினைக்கிறேன். அவ்வாக்கியங்கள் யாவும் பழமொழிகளாகவும், பழமொழிபோல் அமைந்தவைகளாகவும் இருப்பதால் இவற்றைத் தெரிந்து கொள்வது, யாவரும் தம்முடைய தினசரி வாழ்க்கையில் தர்மங்களை அனுஷ்டித்து வருவதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

## (1) பித்ருபக்தி

ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து பரிபாலிக்கிறவராக ஈசுவரன் ஒருவர் இருக்கிறாரென்பது வேதப்பிரமாணத்தினாலும், அதையனுஸரித்த ஸ்மிருதி புராணாதிகளாலும்,

பெரியோர்களின் உபதேசத்திலுைம், ஒருவாறு யுக்தியினுலும் தெரியவருகிறதே தவிர அவர் ஜனங்களுக்கு முன் வந்து நின்று தன்னைக் காட்டிக் கொள்ளுவது கிடையாது. ஆனல் நம்மை உண்டுபண்ணி, பரிபாலித்து வந்தவர்கள் நம் மாதாபிதாக்கள் என்பது நமக்கே ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது. அவர்களே நமக்கு முதல் ப்ரத்யக்ஷதைவமாக இருக்கையில் அவர்களிடத்தில் பக்தி செய்து அவர்களுக்குப் பணிவிடை செய்யவேண்டியதே நம்முடைய முதல் கடமையல்லவா?

यतोमूलं नरः पश्येत् प्रादुर्भावमिहात्मनः ।
कथं तस्मिन् न वर्तेत प्रत्यक्षे सति दैवते अயோ. 18 (16)

நாம் பிறந்த பிற்பாடு நம்முடைய ஆஹாராதிகளைத் தேடிக் கொண்டு நம் கார்யத்தை நாமே பார்த்துக் கொள்ள முடியாத நிலையில் நமக்கு ஸ்நாநம் செய்வித்து, வஸ்திரம் உடுத்தி, அன்னமிட்டு, வேண்டுவதையெல்லாம் கொடுத்து, பிரியமாக நம்முடன் பேசி, நம்மை வளர்த்து வந்திருக்கிறார்களே நம் பெற்றோர்கள், அவர்கள் நமக்குச் செய்திருக்கும் பேருதவிக்கு நம்மால் எவ்வளவு பதில் பிரயோஜனம் செய்தாலும் அதற்கு ஈடாகாது. அதற்குத்தக்கபடி நம்மால் பதில் செய்யவும் முடியாது.

यन्मातापितरौ वृत्तं तनये कुरुतः सदा ।
न सुप्रतिकरं तत्तु मात्रा पित्रा च यत्कृतम् ॥
यथाशक्ति प्रदानेन स्नापनाच्छादनेन च ।
नित्यं च प्रियवादेन तथा संवर्धनेन च ॥ அயோ. 111 (9,10)

மனுஷ்யனை பிதா உண்டுபண்ணுகிறன். தாயார் வளர்க்கிறள். இவ்விரண்டுபேர்களால் வளர்க்கப்

பட்டவனை அறிவாளியாகச் செய்வது ஆசார்யர். ஆகையால் இம்மூவருமே பூஜிக்கத்தகுந்தவர்கள்.

पुरुषस्येह जातस्य भवन्ति गुरवस्त्रयः ।
आचार्यश्चैव काकुत्स्थ पिता माता च राघव ।।
पिता ह्येनं जनयति पुरुषं पुरुषर्षभ ।
प्रज्ञां ददाति चाचार्यः तस्मात् स गुरुरुच्यते ।। ,, ,, (2,3)

இம்மூவரும் நம் கண்ணுக்குத் தென்பட்டுக் கொண்டிருக்கிற தெய்வங்களாக இருக்கையில் இவர்களை விட்டு விட்டு நமக்கு எட்டாமலிருக்கும் தேவதைகளை ஆராதிப்பது நியாயமாகுமா?

स्वाधीनं समतिक्रम्य मातरं पितरं गुरुम् ।
अस्वाधीनं कथं दैवं प्रकारैरभिराध्यते ।। அயோ. 30 (33)

அவர்கள் நமக்குச் செய்திருக்கும் உபகாரத்தை நாம் மறந்துவிட்டோமேயானால் நாம் மிகவும் நன்றிகெட்டவர்களாக ஆகிவிடுவோம். பிரஹ்மஹத்திக்கும், ஸுராபானத்திற்கும் பிராயச்சித்தமிருக்கிறது. பசுவைக் கொன்று விட்டாலும், விரதத்திற்கு பங்கமேற்பட்டாலும் பிராயச்சித்தமுண்டு. நன்றி கெட்டவனுக்கு மாத்திரம் பிராயச்சித்தமே கிடையாது.

ब्रह्मघ्ने च सुरापे च गोघ्ने भग्नव्रते तथा ।
निष्कृतिर्विहिता सद्भिः कृतघ्ने नास्ति निष्कृतिः ।। கிஷ். 34 (12)

ஆகையால் பிதாவை ஸேவிக்க வேண்டியதும் அவர் சொல்படி நடக்கவேண்டியதும் மிகவும் அவசியம்.

இதற்கு மேல்பட்டதான தர்மானுஷ்டானம் கிடையாது.

न ह्यतो धर्मचरणं किंचिदस्ति महत्तरम् ।
यथा पितरि शुश्रूषा तस्य वा वचनक्रिया ॥ அயோ- 19 (22)

உலகத்தில் ஸத்யம் தவறுமலிருப்பது, தானம் செய்வது, பெரியோர்களை மதிப்பது, தக்க தக்ஷிணை கொடுத்து யாகாதிகளைச் செய்வது, இவைகளெல்லாம் தர்மம் தான். ஆனாலும் பிதாவின் ஸேவையினால் என்ன மேன்மை கிடைக்குமோ அது இந்த ஸாதனங்களால் கிடைக்காது.

न सत्यं दानमानौ वा न यज्ञाश्चाप्तदक्षिणाः ।
तथा बलकराः सीते यथा सेवा पितुर्मता ॥ அயோ. 30 (35)

பிதாவை ஸேவித்தால் அவருடைய பிரீதியை ஸம்பா கொள்ளலாம்; லௌகிகமாக சில ஸௌகர்யங்களையும் அடையலாம் என்பது வாஸ்தவம். ஆனால் இந்த லோகத்திலேயே நமக்குத் தேவையாயிருப்பதையெல்லாம் அவர் கொடுக்க முடியுமா? அப்படியே முடியுமென்று வைத்துக் கொண்டாலும், பரலோகத்தில் உள்ள ஸுகங்களை அவர் எப்படிக் கொடுக்க முடியும்? என்று தோன்றலாம். பிதாவிற்கு சக்தியிருக்கிறதா இல்லையா வென்பது பிரகிருதமில்லை. பித்ரு ஸேவைக்கு அவ்வளவு சக்தியுண்டாவென்பது தான் பிரகிருதம். ஸேவையென்பது ஜடமாயிருந்தாலும் எல்லாக்கர்மாக்களுக்கும் அதற்குத் தக்கபடி பலன்களை அளிக்கக்கூடியவராக ஸர்வக்ஞராக பகவான் ஒருவர் இருப்பதினால் அந்த ஸேவை ஒருநாளும் வீண்போகாது. அந்த ஸேவையின் தன்மையிலுள்ள வித்யாஸத்திற்குத் தக்கபடி இந்த லோகத்திலேயே தனமாகவே, தான்யமாகவோ, படிப்பு

மூலமாகவோ, மக்கள் வடிவமாகவோ, வேறு ஸ¬கஸாத னங்களாகவோ, பலன் ஏற்படும். அப்படியே இவன் செய்யும் பித்ரு ஸேவையிலுள்ள தாரதம்யத்தை அனு ஸரித்து ஸ்வர்க்கமோ, கந்தர்வலோகமோ, கோலோ கமோ, பிரஹ்மலோகம் கூடவோ கிடைக்கும். பித்ரு சுச் ருஷை, மாத்ரு சுச்ருஷை செய்கிறவர்களால் இஹலோ கத்திலோ, பரலோகத்திலோ அடையக்கூடாதது ஒன்றுமே கிடையாது.

स्वर्गो धनं वा धान्यं वा विद्याः पुत्राः

गुरुवृत्त्यनुरोधेन न किंचिदपि दुर्लभम् ।

देवगन्धर्वगोलोकान् ब्रह्मलोकांस्तथा नराः ।

प्राप्नुवन्ति महात्मानो मातापितृपरायणाः ॥ அயோ. 30 (36,37)

தவிரவும் பிதாவின் வார்த்தைப்படி நடப்பவர் யாரும் கெட்டுப்போய் விட்டாரென்பது கிடையாது.

पितुर्हि वचनं कुर्वन् न कश्चिन्नाम हीयते ॥ அயோ. 21 (73)

இந்த லோகத்தில் பிதாவை ஸேவித்து ஐஹிகமான ஸௌகர்யங்களையும் பாரலௌகிகமான சிரேயஸ்களையும் இவன் அடைகிறபடியால் இந்த லோகத்தில் பிதாவின் ஸந்தோஷத்தையும், பரலோகத்தில் அவருடைய சிரேயஸ்ஸையும் ஸம்பாதித்துக் கொடுக்கவேண்டிய பொறுப்பு இவனுக்கு உண்டு. அவருக்கு நரகம் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டியது முதல் கடமையாகும். "புத்" என்ற நரகத்திலிருந்து அவரைக் காப்பாற்றிக் கொடுப்பதினாலேயே இவனுக்கு "புத்ரன்" என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

पुन्नाम्नो नरकाद्यस्मात् पितरं त्रायते सुतः ।
तस्मात् पुत्र इति प्रोक्तः पितॄन् यः पाति सर्वतः ॥ அயோ. 107 (12)

நரகத்திலிருந்து காப்பாற்றினால் மாத்திரம் போதாது. பிதாவைப் புண்ய லோகங்களுக்கு அனுப்பி வைக்கக்கூடிய சிராத்த தர்ப்பண பிண்டதானங்களையும் செய்யவேண்டும். அதிலும் கயாக்ஷேத்திரம் போய் இவைகளைச் செய்வது மிகவும் சிலாக்கியம். அதனால் ஒரு புத்ரன் மாத்திரமிருந்தால் அவனுக்கு கயைக்குப் போய் வருவதற்கு வேண்டிய ஸௌகர்யமில்லாமல் போய்விடக் கூடுமென்று நினைத்து, நல்ல குணசாலிகளாக நல்ல வித்வான்களாக அநேக புத்திரர்களிருந்தால் அவர்களில் யாரேனும் ஒருவர் அங்கேபோய்ச் சிராத்தாதிகளைச் செய்து வரமாட்டாரா வென்ற காரணத்தினாலேயே அநேக புத்திரர்களை அபேக்ஷிக்க வேண்டியது நியாயமாகும்.

एष्टव्या बहवः पुत्राः गुणवन्तो बहुश्रुताः ।
तेषां वै समवेतानां अपि कश्चिद्गयां व्रजेत् ॥ அயோ. 107 (13)

பித்ருவாக்கிய பரிபாலன விஷயத்தில் வேறு சில அம்சங்களும் கவனிக்க வேண்டியதுண்டு. பிதாவே ஒரு ஸமயம் ஒரு விதமாயும், மற்றொரு ஸமயம் வேறு விதமாயும், சொன்னால் என்ன செய்கிறது? எந்த வாக்கியத்தின்படி புத்திரன் நடக்கவேண்டும்? பிதா, மாதா, குரு மூவருமே பெரியோர்களென்று சொல்லியிருப்பதால் பிதா ஒருவிதமாயும் மாதா ஒரு விதமாயும் சொன்னால் என்ன செய்கிறது? பிதா ஒருவிதமாயும் குரு ஒரு விதமாயும் சொன்னால் என்ன செய்கிறது? என்ற ஸந்தேஹங்கள் வரக்கூடியது ஸஹஜம். இதற்கெல்லாம் பதில் ஸ்ரீராமருடைய சரித்திரத்தில் நன்கு காணலாம்.

ஸ்ரீராமரைக் காட்டுக்குப் போவென்று தசரதர் முதலில் நேரில் சொல்லாமலிருந்தபோதிலும், இவருடைய அபிப்ராயமாகக் கைகேயி சொன்னதைக் கேட்டு ராமர் புறப்படும்போது தசரதர் தடுக்காமல் "தர்மத்தினால் கட்டுப்பட்டவனாகி விட்டேன்" என்றே சொன்னார்.

धर्मबन्धेन बद्धोऽस्मि । அயோ. 14 (24)

பின்னால் "நீயே அயோத்திக்கு அரசனாக இரு" என்று ராமரைப் பார்த்துச் சொல்லும் பொழுது "என்னை நிக்ரஹம் செய்துவிட்டு" என்கிறார்.

अयोध्यायास्त्वमेवाद्य भव राजा निगृह्य मां ॥ அயோ. 34 (26)

இதிலிருந்து அவர் ஸ்வாதீனமாயிருந்தால் தர்மத்திற்குக் கட்டுப்பட்டுத்தானிருப்பார் என்று தெளிவாகிறது. "ஒருநாள் தங்கிவிட்டுப் போகலாமே" என்று அவர் சொன்னதும் அபிமானத்தினால்தான். அவரே "என் வாக்கு தவறக்கூடாதென்று நீ செய்வது ஆச்சர்யமில்லை" என்

न चैतदाश्चर्यतमं यत् त्वं ज्येष्ठसुतो मम ।
अपानृतकथं पुत्र पितरं कर्तुमिच्छसि ॥ அயோ. 34 (28)

அவரே பின்னால் ராமரைப் பார்த்து 'க்ஷேமமாய்ப் போய்விட்டுவா' என்றும் சொல்லுகிறார்.

श्रेयसे वृद्धये तात पुनरागमनाय च ।
गच्छस्वारिष्टमव्यग्रः पन्थानमकुतोभयम् ॥ அயோ. 34 (31)

பிறகு அவரே ஸுமந்திரனைப் பார்த்து 'ரதத்தில் ராமரை ஏற்றிக்கொண்டு நாட்டுக்கு அப்புறம் கொண்டு போய்விடு' என்கிறார்.

औपवाह्य रथं युक्त्वा त्वमायाहि हयोत्तमैः ।
प्रापयैनं महाभाग इतो जनपदात् परम् ॥ அயோ. 39 (10)

*ஆகையால் தசரதர் தனக்கு எவ்வளவு அப்பிரியமாயிருந்த போதிலும் ஸத்தியத்திலிருந்து நழுவவேயில்லை. ஆனாலும் அவர் சொல்லியபடி ராமர் கேட்காமல் இருந்துவிட்டால் தசரதர் கைகேயிக்குக் கொடுத்த வாக்கு பொய்யாய்ப் போய்விடும். அப்படியானால் அதனால் ஏற்படும் தோஷம் தசரதரைப் பாதிக்கும். அசுவமேதம் வரையிலுள்ள உத்தமமான யாகங்களைச் செய்து தர்ம ரீதியாகவே அரசாண்டு வந்தவருக்கு உத்தமமான லோகம் போவதற்கு இந்த தோஷம் இடைஞ்சலாக நிற்கும். அதற்கிடமன்னியில் ஸ்ரீராமர் தசரதரிடம் "தங்களிடம் ஸத்யஸ்வபாவமே இருக்க வேண்டுமென்றும், தங்களிடத்தில் ஸத்தியத்திலிருந்து வழுவுதல் இருக்கக் கூடாதென்பதுமே என் எண்ணம்" என்கிறார்.*

त्वामहं सत्यमिच्छामि नानृतं पुरुषर्षभ । அயோ. 34 (48)

*பிதா சொன்னபடியே பதினான்கு வருஷங்கள் வனவாஸமிருந்து விட்டபடியால் இடைஞ்சலன்னியில் தசரதர் ஸ்வர்க்கம் போகமுடிந்தது. அதனால் அவர் ஸ்வர்க்கம் போனதற்கு ராமரே காரணமென்று ஸ்ரீபரமேசுவரர் சொல்லுகிறார்.*

एष राजा विमानस्थः पिता दशरथस्तव ।
काकुत्स्थ मानुषे लोके गुरुस्तव महायशाः ॥
इन्द्रलोकं गतः श्रीमान् त्वया पुत्रेण तारितः । யுத்த. 122 (7,8)

*ராமர் வனவாஸம் செய்து தந்தையின் வாக்கை ஸத்யமாகச் செய்ததால் தான் தசரதருக்கு ஸ்வர்க்க வாஸம்*

கிடைத்தது என்று பரமசிவன் சொன்னதை தசரதரும் ஆமோதித்துப் பேசுகிருர்.

तारितोऽहं त्वया पुत्र सुपुत्रेण महात्मना யுத்த. 122 (14)

இதிலிருந்து தசரதர் வெவ்வேறு விதமாகச் சொல்லவேயில்லை யென்றும், வெவ்வேருகச் சொன்னதாகத் தோன்றினுலும் தர்மத்தை ஆதாரமாகக் கொண்ட வாக்கியத்திற்குப் பிராமாண்யமே தவிர, அதற்கு மாறுதலாக அபிமானத்தின் பேரில் சொல்லும் வாக்கியத்திற்குப் பிராமாண்யமில்லையென்றும் தெரிகிறது.

அப்படியே கௌஸல்யை "ராமா, நீ காட்டுக்குப் போகக் கூடாது. எவ்விதம் மஹாராஜா உன்னுல் பூஜிக்கத்தக்கவரோ, அதேமாதிரிதான் நானும். நீ காட்டுக்குப் போக நான் அனுமதி கொடுக்கமாட்டேன். நீ போகக் கூடாது." என்று தாயார் முறையில் புத்திரனிடம் அதிகாரம் செலுத்திப் பார்க்கிருள்.

यथैव राजा पूज्यस्ते गौरवेण तथा ह्यहम् ।
त्वां नाहमनुजानामि न गन्तव्यमितो वनम् ॥ அயோ. 21 (25)

தாயாரின் அதிகாரத்தை ஸ்ரீராமர் ஆக்ஷேபிக்காமல் அவளும் தசரதருக்குக் கட்டுப்பட்டவளானதினுல் அவருடைய ஆக்ஞைக்கு விரோதமாய் இவள் ஆக்ஞை செய்வது உசிதமில்லை யென்பதை ஸ்ரீராமர் எடுத்துக்காட்டிவிடுகிருர்.

त्वया मया च वैदेह्या लक्ष्मणेन सुमित्रया ।
पितुर्नियोगे स्थातव्यं एष धर्मः सनातनः ॥ அயோ. 21 (49)

ஆசார்யரான வஸிஷ்ட மஹரிஷி "இக்ஷ்வாகு வம்சத்தில் ஜ்யேஷ்டனுக்குத்தான் ராஜ்யம். ஆகையால் இது

உன் சொந்த ராஜ்யம். அதைப் பெற்றுக் கொள். ஜனங்
ளைப் பரிபாலனம் செய்யும் ராஜா. இக்ஷ்வாகுக்களில் மூத்தவர்தான் ராஜாவாக வருவார்".

तद्गृहाण स्वकं राज्यं अवेक्षस्व जनं नृप ।
इक्ष्वाकूणां हि सर्वेषां राजा भवति पूर्वजः ॥ அயோ. 110 (35)

என்று சொல்லிவிட்டு, அப்படியானால் பிதாவின் வார்த்தையை மீறினதாகுமே என்ற ஸந்தேஹத்திற்கு பதிலாக "நான் உனக்கும் உன் பிதாவிற்கும் ஆசார்யர். நான் சொல்லுகிறபடி கேட்டால் ஸாதுக்களின் ஒழுக்கத்திலிருந்து நழுவினவனாக ஆகமாட்டாய்" என்றார்.

सोऽहं पितुराचार्यः तव चैव परंतप ।
मम त्वं वचनं कुर्वन् नातिवर्तेः सतां गतिम् ॥ அயோ. 111 (4)

அதாவது "நான் உனக்கு ஆசார்யர் என்ற முறையிலேயே நீ என் வார்த்தையைக் கேட்க வேண்டும். உனக்கு ஆக்ஞை செய்த பிதாவிற்கும் நான் ஆசார்யராக இருப்பதால் அவருடைய ஆக்ஞையை மீறுவது தோஷமில்லை" என்றார். ஸ்ரீராமர் "என் பிதாவிடம் நான் ஏற்றுக்கொண்டதைப் பொய்யாக்கமுடியாது" என்று பதில் சொன்னதின் பேரில் வஸிஷ்டர் பதிலே சொல்லவில்லை.

आज्ञातं यन्मया तस्य न तन्मिथ्या भविष्यति । அயோ. 111 (11)

ஆசார்யர் பிதாவைவிட மேல் அதிகாரமுள்ளவரென்றே வைத்துக் கொண்டாலும், அவர் பிதாவைக் கண்டித்துத் தன் ஆக்ஞையை மாற்றும்படி செய்ய வேண்டியது முறையே தவிர பிதாவிற்கு ஸம்பந்தமில்லாமல் புத்திரனிடம் அதிகாரம் செலுத்த நினைப்பது

கொஞ்சமேனும் நியாயமில்லை. தசரதர் ஸ்ரீராமரைக் காட்டுக்குப் போகும்படி சொன்னது, வஸிஷ்டருக்குத் தெரிந்திருந்தும் அவர் தசரதரைக் கண்டிக்கவேயில்லை. மேலும் கைகேயி ஸீதைக்கு மரவுரி கொண்டுவந்து கொடுத்த பொழுது வஸிஷ்டர் கோபத்துடன் பேசும் போதும், கைகேயி மஹாராஜாவை வஞ்சித்துவிட்டா ளென்றுரே தவிர, தசரதர் அவளுக்கு வாக்குக் கொடுத்த படி ராமரை அனுப்பிவிட நினைத்தது பிசகு என்று சொல்லவேயில்லை. தவிரவும், தசரதரைப் பார்த்தாவது ராமரைப் பார்த்தாவது வனவாஸம் போகவேண்டா மென்று சொல்லாமலிருந்ததுடன் வனவாஸம் போக வேண்டியதுதான் என்ற தீர்மானத்திலேயே ஸீதைக்குப் பட்டாபிஷேகம் செய்து விடுவோமென்கிறுர். பிறகும் அவரே தான் ராமரிடம் சொல்லி பரதனுக்குப் பாதுகை களை வாங்கிக் கொடுக்கிறுர். ஆகையால் பிதாவின் வார்த் தையை மீற வேண்டுமென்ற அபிப்ராயம் வஸிஷ்டருக்கு இருந்ததில்லை என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

## (2) ஸ்த்ரீ தர்மம்

ஸ்திரீகளுக்கு விவாஹமான பிறகு பர்த்தாவே தைவம் என்பது வாஸ்தவம். விவாஹத்திற்கு முன்னல் அவர்களுக்கும் பித்ருபக்தி அவசியம் இருக்க வேண்டும். குசநாபருடைய பெண்களை வாயுதேவன் இச்சிக்கும் போது அவர்கள் "எங்களுக்குப் பிதாதான் பிரபு. அவரே மேலான தைவம். அவர் பார்த்து எங்களை யாருக்கு கொடுக்கிறுரோ அவரேதான் எங்களுக்கு பர்த்தா. அவரை லக்ஷ்யம் செய்யாமல் நாங்களாக பர்த்தாவைத் தேடிக்கொள்ளும்படியான காலம் எங்களுக்கு வரவேண் டாம்." என்கிறுர்கள்.

मा भूत स कालो दुर्मेधः पितरं सत्यवादिनम् ।
अवमन्य स्वधर्मेण स्वयंवरमुपास्महे ॥

पिता हि प्रभुरस्माकं दैवतं परमं च नः ।
यस्य नो दास्यति पिता स नो भर्ता भविष्यति ॥ பால. 32 (21,22)

*புராணங்களில் ஸ்வயம்வரம் என்று ஏற்பாடு பண்ணியிருந்தாலும் தகப்பனுரே ஏற்பாடு பண்ணிப் பெண்ணின் மனோபாவத்தையும், வரனுடைய சௌர்யம் முதலானவைகளையும் கவனித்து அவளுக்கு விவாஹம் செய்து வைத்ததாகக் காண்கிறதே தவிர வேறுவிதமாயில்லை. "காந்தர்வ விவாஹம்" ஸ்வயம்வரத்தில் சேராது. பிதாவாக கவனித்துப் பர்த்தாவைத் தீர்மானித்துக் கன்யையைத் தானம் செய்து கொடுத்தால் அந்த தாம்பத்யம் இந்த லோகத்தில் ஸுகமாய் நீடித்திருக்குமென்பதுடன் பரலோகத்திலும் நிலைத்து நிற்கும்.*

इहलोके च पितृभिः या स्त्री यस्य महामते ।
अद्भिर्दत्ता स्वधर्मेण प्रेत्यभावेऽपि तस्य सा ॥ அயோ. 29 (18)

*விவாஹமான பிற்பாடு பர்த்தாதான் ஸ்திரீகளுக்கு பிரத்யக்ஷமான தைவம். அவர் குணசாலியாயிருந்தாலும் கெட்ட குணங்களுடன் கூடியவராயிருந்தாலும் அவரை ஆராதிக்க வேண்டியதுதான் இவள் கடமை.*

भर्ता तु खलु नारीणां गुणवान् निर्गुणोऽपि वा ।
धर्मं विमृशमानानां प्रत्यक्षं देवि दैवतम् ॥ அயோ. 62 (8)

*தந்திகளில்லாமல் வீணை வாசிக்க முடியுமா? சக்கிரங்கள் இல்லாமல் ரதம் ஓடுமா? அப்படித்தான் பதியில்லாத ஸ்திரீ ஸுகமாக வாழமுடியாது. நூறு மக்களும் என்ன பிரயோஜனம்?*

नातन्त्री वाद्यते वीणा नाचक्रो वर्तते रथः ।
नापतिः सुखमेधेत या स्यादपि शतात्मजा ॥ அயோ. 39 (29,30)

*ஒரு பெண்ணுக்குப் புத்திரர்களோ, தனமோ, தான்யமோ, எல்லாம் ஏராளமாக இருந்தாலும், பர்த்தா இல்லையானால், அவளை விதவை யென்று தானே ஜனங்கள் சொல்லுவார்கள்?*

पतिहीना तु या नारी कामं भवतु पुत्रिणी ॥
धनधान्यैः सुपूर्णाऽपि विधवेत्युच्यते जनैः । கிஷ். 23 (12,13)

*பிறந்தகத்திலிருந்து இவளுக்குத் தகப்பனார் எவ்வளவு தான் கொடுக்க முடியும்? தாயார்தான் எவ்வளவு கொடுக்கமுடியும்? புத்திரனே எவ்வளவு கொடுத்துவிட முடியும்? அளவில்லாமல் கொடுப்பது பர்த்தா ஒருவர் தான். அவரைப் பூஜிக்காமலிருக்கலாமா?*

मितं ददाति हि पिता मितं माता मितं सुतः ॥
अमितस्य हि दातारं भर्तारं का न पूजयेत् । அயோ. 39 (30,31)

*தகப்பனாரோ தாயாரோ ஸஹோதரனோ புத்திரனோ நாட்டுப் பெண்ணோ, அவர்கள் செய்த புண்யத்தையனுஸரித்து இந்த லோகத்திலும், பரலோகத்திலும் ஸுகத்தை அனுபவிக்கிறார்கள். அவர்களுடைய புண்யத்தில் இவளுக்குப் பங்கே கிடையாது. பர்த்தாவின் புண்ணியத்தில் இவள் மாத்திரம் பங்காளியாகிறாள்.*

आर्यपुत्र पिता माता भ्राता पुत्रस्तथा स्नुषा :
स्वानि पुण्यानि भुञ्जानाः स्वं स्वं भाग्यमुपासते ॥
भर्तुर्भाग्यं तु भार्यैका प्राप्नोति पुरुषर्षभ । அயோ. 27 (3,4)

பர்த்தாவை எதிர்பாராமல் பெற்றோர்களோ, புத்திரனோ, தோழிகளோ அல்லது தானோ இஹபர சிரேயஸ்ஸைத் தேடிக் கொடுக்க முடியுமா? எப்பொழுதும் பர்த்தா ஒருவரே கதி.

न पिता नात्मजो नात्मा न माता न सखीजनः ।
इह प्रेत्य च नारीणां पतिरेको गतिः सदा ॥ அயோ. 27 (5)

ஆகையால் பர்த்தா ஜீவித்திருக்கும் வரையில் அவருக்கு சுசுரூஷை செய்வதுதான் சாசுவதமான தர்மமாகும்.

यावज्जीवति काकुत्स्थः पिता मे जगतीपतिः ।
शुश्रूषा क्रियतां तावत् स हि धर्मः सनातनः அயோ. 24 (13)

ஒருக்கால் அவர் ஆயுஸ் நீடித்திருந்து இவள் முன்னால் போவதாயிருந்தால் அவர் ஜீவித்திருக்கும் வரை ஸேவிக்க முடியாதே என்றால், இவள் ஜீவித்திருக்கும் வரை செய்யலாமல்லவா? பர்த்தாவையே பிரபுவாகவும் தைவமாகவும் ஆராதிக்க வேண்டும்.

जीवन्त्या हि स्त्रिया भर्ता दैवतं प्रभुरेव च । அயோ. 24 (21)
शुश्रूषामेव कुर्वीत भर्तुः प्रियहिते रता ॥ ,, ,, (27)

பர்த்தாவையே ஆராதித்துக் கொண்டு வந்தால் மற்ற தேவதைகளை ஆராதிக்க வேண்டாமா என்றால், மற்ற தேவதைகளை உபாஸிக்கவோ, விரதாதிகளை அனுஷ்டிக்கவோ வேண்டாமென்று சொல்லவில்லை. ஸ்ரீராமர் கௌஸல்யையைப் பார்த்து இவைகளையெல்லாம் அனுஷ்டிக்க வேண்டியதுதான் என்றும் சொல்லுகிறார்.

अग्निकार्येषु च सदा सुमनोभिश्च देवताः ॥ அயோ. 24 (28)
पूज्यास्ते मत्कृते देवि ब्राह्मणाश्चैव सुव्रताः । ,, ,, (29)

ஆனால் தேவபூஜை முதலானவைகளைச் செய்யாம லிருந்து பர்த்தாவின் ஸேவையை மாத்திரம் செய்து கொண்டிருந்தால் ஸ்வர்க்கம் கிடைக்குமாவென்று ஸந்தேஹப்படவேண்டாம்.

भर्तुः शुश्रूषया नारी लभते स्वर्गमुत्तमम् ॥
अपि या निर्नमस्कारा निवृत्ता देवपूजनात् । அயோ. 24 (26,27)

பர்த்தாவிற்கு சுச்ரூஷை செய்யாமல் விரதானுஷ்டானம் செய்கிறேன், உபவாஸமிருக்கிறேன், என்றால் அவைகளினால் எவ்வித நன்மையும் ஏற்படாது என்பதுடன் துர்கதிக்கே காரணமாகும்.

व्रतोपवासनिरता या नारी परमोत्तमा ॥
भर्तारं नानुवर्तेत सा तु पापगतिर्भवेत् । அயோ. 24 (25)

ஸாமான்யமாக ஸ்திரீகளின் ஸ்வபாவமே பர்த்தா ஸௌகர்யமாயிருக்கும் போது பிரியமாயிருப்பார்கள்; சிரமம் ஏற்பட்டால் விலகிவிடுவார்கள். அவர்களுடைய சாஞ்சல்யம் மின்னலை ஒத்தது. அவர்களுடைய கடுமை ஆயுதங்களை யொத்தது; அவர்களுடைய மனோநிலை மாறுபடும் வேகம், கருடனையும் காற்றையும் ஒத்தது, என்று அகஸ்திய மஹரிஷி வர்ணிக்கிறார்.

एषा हि प्रकृतिः स्त्रीणां आसृष्टेः रघुनन्दन ।
समस्थमनुरज्यन्ति विषमस्थं त्यजन्ति च ॥

शतह्रदानां लोलत्वं शस्त्राणां तीक्ष्णतां तथा ।
गरुडानिलयोः शैघ्र्यं अनुगच्छन्ति योषितः ॥ அர. 13 (5,6)

கௌஸல்யையும் பொதுவாக ஸ்திரீகளைப்பற்றிச் சொல்லும் பொழுது "முன்னால் பர்த்தாவினால் ப்ரீதியுடன் அளிக்கப்பட்ட இஷ்ட வஸ்துக்களைப் பெற்று ஸுகத்தை அனுபவித்திருந்த போதிலும், அல்பமான ஆபத்து ஏற்பட்டு விட்டால் உடனே தானும் கெட்டு, பர்த்தாக்களைப் பரித்யாகம் செய்துவிடுகிறார்கள். குலத்தையோ, முன் செய்த நன்மையையோ, வித்யையோ, முன் கொடுத்திருப்பதையோ, சேர்த்து வைத்ததையோ, ஸ்திரீகளுடைய மனஸ் நாடாது; அவர்கள் மனஸ் நிலையற்றது" என்கிறாள்.

असत्यः सर्वलोकेऽस्मिन् सततं सत्कृताः प्रियैः ॥
भर्तारं नानुमन्यन्ते विनिपातगतं स्त्रियः ।
एष स्वभावो नारीणां अनुभूय पुरा सुखम् ॥
अल्पामप्यापदं प्राप्य दुष्यन्ति प्रजहत्यपि ।
न कुलं न कृतं विद्या न दत्तं नापि संग्रहः ॥
स्त्रीणां गृह्णाति हृदयं अनित्यहृदया हि ताः । அயோ. 39 (20,24)

"உத்தமமான ஸ்திரீகளுக்கோ பர்த்தாதான் மேலான தெய்வம். அவரைவிட மேலான பந்துவும் கிடையாது. அவர் நகரத்திலிருந்தாலும் காட்டிலிருந்தாலும், நல்லவராயிருந்தாலும் கெட்டவராயிருந்தாலும், கெட்ட நடத்தையுள்ளவரா யிருந்தாலும், காமத்தில் ஈடுபட்டவரா யிருந்தாலும், தனமே யில்லாதவராயிருந்தாலும், அந்த பர்த்தாவே பிரியமானவர் என்று எந்த ஸ்திரீகள் மதிக்கிறார்களோ அவர்களுக்குத்தான் உத்தமமான

லோகங்கள் கிடைக்கும்" என்று பதிவிரதா சிரோமணி யான அனஸூயாதேவி ஸீதையிடம் சொல்லுகிறாள்.

नगरस्थो वा वनस्थो वा शुभो वा यदि वाऽशुभः ।
यासां स्त्रीणां प्रियो भर्ता तासां लोका महोदयाः ॥ அயோ. 117 (23)
दुःशीलः कामवृत्तो वा धनैर्वा परिवर्जितः ।
स्त्रीणामार्यस्वभावानां परमं दैवतं पतिः ॥ ,, ,, (24)
नातो विशिष्टं पश्यामि बान्धवं विमृशन्त्यहम् ॥ ,, ,, (25)

இதை தானும் அறிந்திருப்பதாகச் சொல்லி ஸீதை யும் அனுவாதம் செய்கிறாள்.

विदितं तु ममाप्येतद् यथा नार्याः पतिर्गुरुः ॥ அயோ. 118 (2)
यद्यप्येष भवेद्भर्ता अनार्यो वृत्तवर्जितः ,, (3)

கௌஸல்யையும் அவ்விதமே "நல்ல நடத்தை, ஸத்யம், படிப்பு, தன் நிலை இவைகளில் ஸ்திரமாயிருக்கும் ஸாதுக்களான ஸ்திரீகளுக்கு வெகு பவித்திரமானவர் பர்த்தாவேயாவார். அவரே மற்றெதையும்விட மேலானவர்" என்கிறாள்.

साध्वीनां तु स्थितानां हि शीले सत्ये श्रुते स्थिते ॥ அயோ. 39 (24)
स्त्रीणां परमं पवित्रं पतिरेको विशिष्यते । ,, ,, (25)

பின்னால் ஸீதை லங்கையில் அக்னிப் பிரவேசம் செய்யும்போது ஸ்ரீ ராமரைப் பார்த்து "ஏதோ சில ஸ்திரீ களின் நடத்தை சரியில்லையென்ற காரணத்தினால் ஸ்திரீ என்ற இனம் பூராவையும் ஸந்தேஹிக்கிறீர்" என்கிறாள்.

पृथक्स्त्रीणां प्रचारेण जातिं तां परिशङ्कसे । *யுத்த*. 119 (3)

*தசரதரும் கைகேயியிடம் கோபத்துடன் "பெண்டுகளே அயோக்யர்கள், எப்பொழுதும் தன் நலத்தையே கோறு பவர்கள்-சுடு அவர்களை" என்று சொல்லிவிட்டு "இது எல்லா ஸ்திரீகளையும் குறித்துச் சொல்லவில்லை. பரத னுடைய தாயாரை மாத்திரம் சொல்கிறேன்" என்று சேர்த்துக் கொண்டார்.*

धिगस्तु योषितो नाम शठाः स्वार्थपराः सदा ।

न ब्रवीमि स्त्रियः सर्वाः भरतस्यैव मातरम् ॥ *அயோ*. 12 (101)

*ஆகையால் இஹலோகத்திலோ பரலோகத்திலோ சிரேயஸ் வேண்டுமானால், பர்த்தாவை ஆராதிப்பதைத் தவிர வேறு வழி கிடையாது. பர்த்தா காலமான பிறகு புத்திரனை அண்டியிருக்கலாம். புத்திரன் இல்லையானால் பர்த்தாவின் ஞாதிகளை அண்டியிருக்கலாம். இவர்களைத் தவிர நாலாவதாக யாரையும் ஆசிரயிப்பது முறை யாகாது.*

गतिरेका पतिर्नार्याः द्वितीया गतिरात्मजः ।

तृतीया ज्ञातयो राजन् चतुर्थी नेह विद्यते ॥ *அயோ*. 61 (24)

*பர்த்தா காலமாகாமலிருக்கையில் பரித்யாகம் செய்து விட்டாலும் இதே நியாயம்தான் என்பதை ஸ்ரீ ராமர் ஸீதையை கிரஹித்துக் கொள்ள மறுத்தபோது காட்டு கிறார். "எனக்கு உன்னிடத்தில் பிடிமானம் இல்லை. நீ இங்கிருந்து உன்னிஷ்டப்படி போகலாம்" என்று பொது வாகச் சொன்னவர், எங்கே போனால் அங்குள்ளவர் உன் புத்திரன் மாதிரியும் ஞாதிகள் மாதிரியும் சௌகர்யமாய் வைத்துக்கொள்வார்களோ, அதாவது லக்ஷ்மணனிடத்*

லோ பரதனிடத்திலோ ஸுக்ரீவனிடத்திலோ விபீஷணனிடத்திலோ, எங்கேயிருந்தால் ஸௌகர்ய மென்பதைத் தீர்மானித்துக்கொள்” என்கிறார். முன் கண்ட சுலோகத்தில் நாலாவதாகக்கூடப் பிறந்தகத்தைக் குறிப்பிடாதபடியால் ஸ்ரீ ராமரும் ஜனகரைப்பற்றி சொல்லவில்லை யென்று தோன்றுகிறது.

(3) காம கடு

கர்மாவின் தன்மையைப் பற்றி மந்தோதரி “நல்லது செய்பவன் நல்லதையடைவான்; கெட்டது செய்பவன் கெட்டதையடைவான்” என்று வெகு சுருக்கமாகச் சொல்லியிருக்கிறாள்.

शुभकृत् शुभमाप्नोति पापकृत् पापमश्नुते ॥ யுத்த. 114 (26)

நல்லது கெட்டது என்ற இந்தப் பிரிவு உலகம் ஸ்ருஷ்டிக்கப்பட்ட காலம் முதலே உண்டு. நல்லதை தர்மம் என்றும், கெட்டதை அதர்மம் என்றும் சொல்வார்கள். தர்மத்தையே முக்கியமாகக் கையாண்டவர்கள் தேவர்கள்; அதர்மத்தையே முக்கியமாகக் கையாண்டவர்கள் அஸுரர்கள். தர்மம் மேலிட்டு அதர்மம் மங்கியிருக்கும் காலம் கிருத யுகம் என்பார்கள்; அதர்மம் மேலிட்டு தர்மம் மங்கியிருக்கும் காலம் கலியுகம் என்பார்கள்.

असृजद् भगवान् पक्षौ द्वावेव हि पितामहः ।
सुराणां असुराणां च धर्माधर्मौ तदाश्रयौ ॥ யுத்த. 35 (12)
धर्मो वै ग्रसतेऽधर्मं ततः कृतमभूद्युगम् ।
अधर्मो ग्रसते धर्मं ततः तिष्यः प्रवर्तते ॥ ,, ,, (14)

எந்த கர்மாவானாலும் முதலில் அதைச் செய்ய வேண்டுமென்ற ஸங்கல்பம் மனஸில் உதிக்கும்; பிறகு மனஸ் இந்திரியங்களை ஏவும்; இந்திரியங்களின் ஏவுதல் படி சரீரம் சேஷ்டிக்கும். ஆகையால் எல்லா கர்மா விற்குமே மனஸ்தான் மூல காரணம். அது சுத்தமா யிருந்தால் மற்றதெல்லாம் சுத்தமாயிருக்கும்; அதில் தோஷமிருந்தால் பாபத்திலேயே கொண்டுவிடும்.

मनो हि हेतुः सर्वेषां इन्द्रियाणां प्रवर्तने । ஸாந். 11 (43)

ஆக மனஸ் இந்திரியம் சரீரம் இம்மூன்றுமே கர்மாவில் ஸம்பந்தப்படுவதால், கர்மாவும் மானஸிகம் (எண்ணம்) வாசிகம் (பேச்சு) காயிகம் (செயல்) என்று மூன்று விதமாகும்.

कायेन कुरुते पापं मनसा संप्रधार्य च ।
अनृतं जिह्वया चाह त्रिविधं कर्म पातकम् ॥ அயோ. 109 (21)

இந்த வாக்கியத்தில் பாபத்தைக் கண்டிருந்த போதி லும் புண்ணியத்திற்கும் அதே நியாயம்தான்.

ஆகையால் சுத்தமான மனஸ், சுத்தமான இந்திரி யம், சுத்தமான சரீரம் இவைகள் மூலமாகச் செய்யப் படும் கர்மாதான் சுபத்தைக் கொடுக்கும். அதிலும் கர்மா செய்வதற்கு ஏற்றது இந்த பூலோகம்தான். பூலோகத்திலும் நல்ல கர்மா செய்வதற்கு வேண்டிய அனுகூலங்கள் ஏராளமாயிருப்பது நம் தேசம். மற்ற சரீரங்களைவிட கர்மா செய்வதற்கு மனுஷ்ய சரீரத்தில் தான் யோக்கியதை அதிகம். இவ்விதமாக இந்தலோகம், இந்த தேசம், இந்தப் பிறவி என்ற மூன்றுமே கர்ம பூமி யாகும். இவைகளையடைந்து வீணாக்காமல் சுபமான கர்மாவையே செய்ய வேண்டியது நம் கடமையாகும்.

कर्मभूमिमिमं प्राप्य कर्तव्यं कर्म यच्छुभम् । அயோ. 109 (28)

*செய்கிற கர்மாவிற்குத் தக்கபடியே பலன் ஏற்படுமென்பதில் ஸந்தேஹமில்லை.*

यदाचरति कल्याणि शुभं वा यदि वाऽशुभम् ।

तदेव लभते भद्रे कर्ता कर्मजमात्मनः ॥ அயோ. 63 (6)

*ஆனால் அந்த பலன் இந்த ஜன்மாவிலேயே ஏற்படுமென்று சொல்ல முடியாது; பரலோகத்திலோ மறு ஜன்மாவிலோ ஏற்படலாம்; எப்படியும் பலன் ஏற்பட வேண்டிய ஸமயத்தில் ஏற்பட்டே திரும்.*

अवश्यमेव लभते फलं पापस्य कर्मणः ।

घोरं पर्यागते काले कर्ता नास्त्यत्र संशयः ॥ யுத்த. 114 (25)

*அபத்யமான பதார்த்தங்களோடு கலந்த அன்னத்தை சாப்பிட்டால் எப்படி இந்த சரீரத்திலேயே வியாதி ஏற்படுமோ, அதேபோல சில பாபங்கள் இந்த ஜன்மாவிலேயே கெடுதலான பலனைக் கொடுக்கும். தசரதர் பால்யத்தில் ஒரு ரிஷி புத்திரனைக் கொன்றதினால் தனக்குப் புத்திர வியோகமேற்பட்டதென்று உணர்ந்து இவ்விதம் சொல்கிறார்.*

तस्यायं कर्मणो देवि विपाकः समुपस्थितः ।

अपथ्यैः सह संभुक्ते व्याधिरन्नरसे यथा ॥ அயோ. 64 (59)

*ஸ்ரீ ராமர் வாலிக்கு ஸமாதானம் சொல்லும்போது "தங்கை அல்லது தம்பியின் பார்யை இவர்களுடன் காமத்தினால் ஸம்ஸர்க்கம் செய்தால் அந்த பாபத்திற்கு வதம்தான் தண்டனை" என்கிறார்.*

भ्रातुर्वर्तसि भार्यायां त्यक्त्वा धर्मं सनातनम् ।
भ्रातृभार्याविमर्शेऽस्मिन् दण्डोऽयं प्रतिपादितः ॥ கிஷ். 18 (18)
औरसीं भगिनीं वाऽपि भार्यां वाऽप्यनुजस्य यः ।
प्रचरेत नरः कामात् तस्य दण्डो वधः स्मृतः ॥ ,, ,, (23)

ஸுக்ரீவனுடைய பார்யையை அபஹரித்துக் கொண்டு அவனை விரட்டிவிட்ட தோஷத்தினால்தான் இந்த பலன் ஏற்பட்டதென்பதை தாரையும் சொல்கிறாள்.

सुग्रीवस्य त्वया भार्या हृता स च विवासितः
यत्तु तस्य त्वया व्युष्टिः प्राप्तेयं प्लवगाधिप ॥ ஃ. 20 (11)

ஹனுமார் ராவணனிடம், இவ்வளவு காலமாக மஹத்தான ஐசுவரியத்துடனும் ஆயுதியுடனும் உத்தமமான ஸுகபோகங்களுடனும் இருந்து அனுபவித்ததினால் அவன் செய்திருந்த புண்ணியங்களெல்லாம் செலவழிந்துவிட்டபடியால், இனி அவன் செய்துள்ள பாபங்கள் பலன் கொடுக்க ஆரம்பிக்குமென்பதை ஞாபகப் படுத்துகிறார்.

प्राप्तं धर्मफलं तावत् भवता नात्र संशयः ।
फलमस्याप्यधर्मस्य क्षिप्रमेव प्रपत्स्यसे ॥ ஸுந். 51 (29)

ராவண வதமான பிற்பாடு மந்தோதரி விலாபம் செய்யும்போது "எத்தனை குலஸ்திரீகளை பர்த்தாக்களை இழக்கும்படி செய்திருக்கிறீர்? பதிவிரதைகளுடைய கண்ணீர் பூமியில் விழுந்தால் வீண் போகுமா?" என்கிறாள்.

यास्त्वया विधवा राजन् कृता नैकाः कुलस्त्रियः ॥ யுத்த. 111 (64)

पतिव्रतानां नाकस्मात् पतन्त्यश्रूणि भूतले (67)

இவ்விதமாக இந்த லோகத்தில் இந்த ஜன்மாவி லேயே அனுபவிக்கக்கூடிய பலன்கள் இருப்பதுபோல, லோகாந்தரத்தில் அனுபவிக்கக்கூடிய பலன்களும் உண்டு. அவைகளை இங்கே விஸ்தரிக்க அவசியமில்லை. சரபங்க மஹரிஷி, ஜடாயுஸ், சபரி, தசரதர் முதலானவர்கள் புண்ணிய கர்மாவிற்கு திருஷ்டாந்தமாவார்கள். ஒரு தபஸ்வி எப்பொழுதும் கையில் கத்தியை வைத்துக் கொண்டு தபஸை விட்டு க்ரூரமாகிவிட்டபடியால் நரகத்தையடைந்தார் என்பதை ஸீதை சொல்கிறாள்.

तस्य शस्त्रस्य संवासात् जगाम नरकं मुनिः ॥ அர. 9 (22)

அப்படியே ஜன்மாந்திரத்தில் பலன் கொடுக்கக் கூடிய கர்மாக்களும் உண்டு. கௌஸல்யை ஸ்ரீ ராமரை விட்டுப் பிரியும்படி ஏற்பட்டபோது "முன் ஜன்மத்தில் கன்றுகள் பால் குடிக்கும்போது. எனக்கு பால் வேண்டு மென்ற பேராசையினால், தடுத்திருப்பேன், ஸந்தேஹ மில்லை" என்கிறாள்.

निःसंशयं मया मन्ये पुरा कदर्यया ।

पातुकामेषु वत्सेषु मातॄणां शातिताः स्तनाः अயோ. 43 (17)

ஸ்ரீ ராமரும் "என் தாயார் முன் ஜன்மத்தில் தாயாரையும் புத்திரனையும் பிரித்துவிட்டிருப்பாள். அதனால் தான் இப்படி ஏற்பட்டிருக்கிறது" என்கிறார்.

नूनं जात्यन्तरे स्त्रियः पुत्रैर्वियोजिताः

जनन्या मम सौमित्रे तस्मादेतदुपस्थितम् அயோ. 53 (19)

ஸீதையும் தனக்கு ஏற்பட்டிருக்கும் சிரமத்திற்குக் காரணம் தான் முன் செய்த பாபமே என்கிறாள்.

भाग्यवैषम्ययोगेन पुरा दुश्चरितेन च।
मयैतत् प्राप्यते सर्वं स्वकृतं ह्युपभुज्यते ॥ யுத்த. 116 (3 9

ஆகையால் இந்த உலகத்திலோ மறு ஜன்மாவிலோ ஸுகமடைய வேண்டுமானால் தர்மத்தையே அனுஷ்டிக்க வேண்டும். அதிலிருந்து எல்லாம் கிடைக்கும். ஜகத்தே அதைத்தழுவியிருக்கிறது.

धर्मादर्थः प्रभवते धर्मात् प्रभवते सुखम् ।
धर्मेण लभते सर्वं धर्मसारमिदं जगत् ॥ அர. 9 (30)

தர்மத்தை அனுஷ்டிப்பதில் பலவித நியமங்களிருப்பதால் சிரமம் இருக்கத்தானிருக்கும். அந்த சிரமத்தைப் பொருட்படுத்தாமல் பிரயத்தினம் செய்தால் தான் தர்மம் கைகூடும். சிரமமாயிருக்கிறதேயென்று நினைத்து அந்த வழிக்கே போகாமல் ஸுகமாக இருந்து விடலாமென்று இருந்துவிட்டால் மேல் அடைய வேண்டிய உத்தமமான ஸுகம் கிடைக்காது.

आत्मानं नियमैस्तैस्तैः क्लेशयित्वा प्रयत्नतः ।
प्राप्यते निपुणैर्धर्मो न सुखाल्लभ्यते सुखम् ॥ அர. 9 (31)

இதனால் எல்லாரும் எல்லாவித கர்மாக்களையும் அனுஷ்டானம் செய்து எல்லாவித ஸுகங்களையும் அடைந்துவிடலாமென்று நினைத்துவிடக் கூடாது. இரண்டுவிதமான வரையறைகள் ஏற்பட்டிருக்கின்றன.

முதலாவதாக, இப்பொழுது தனக்குள்ள யோக்கியதை, அதிகாரம், சக்தி இவைகளை மீறிப் பிரயத்தினம் செய்யக் கூடாது. இரண்டாவதாக, பூர்வஜன்மாக்களில் செய்திருக்கும் கர்மா குறுக்கே நிற்கக் கூடாது. முதலாவது அம்சத்தை அநேகமாய் தானே தீர்மானித்துக் கொள்ளலாம். தூக்க முடியாத பாரத்தைத் தூக்க பிரயத்தினம் செய்யக்கூடாது. ஜரிக்கமுடியாமல் வியாதியைக் கொடுக்கக்கூடிய அன்னத்தை சாப்பிடக்கூடாது.

स भारः सौम्य भर्तव्यो यो नरं नावसादयेत् ।
तदन्नमपि भोक्तव्यं जीर्यते यदनामयम् ॥ அர. 50 (18)

ஒரு கர்மாவை ஆரம்பிக்கிறதற்கு முன் அது செய்ய முடியுமா முடியாதா, அதினால் என்ன பலன் கிடைக்கும், என்ன கெடுதல் ஏற்படக்கூடியது, என்று அறிந்து கொள்ளாமல் ஆரம்பித்தால், அவனைக் குழந்தையென்றே சொல்ல வேண்டும். மாமரத்தில் புஷ்பம் வெகு சிறிதாக விருப்பதால் பிரயோஜனமில்லையென்று நினைத்து மாந்தோப்பையே வெட்டிவிட்டு அந்தவிடத்தில் பலாச புஷ்பம் அழகாயிருப்பதால் பழமும் நன்றாயிருக்குமென்று நினைத்து அந்த மரங்களைக் கொண்டு வந்துவைத்து நீர் பாய்ச்சினால், பழுக்கும் ஸமயம் வரும் போது துக்கத்தையே அடைவான். பலன் என்னவென்று நன்கு தெரிந்து கொள்ளாமல் அவஸரமாய் கர்மா செய்யத்தலைப்படுபவன், இந்தப்பலாச மரத்திற்கு நீர்பாய்ச்சினவன் போல, துக்கத்தைத்தான் அனுபவிப்பான்.

गुरुलाघवमर्थानां आरम्भे कर्मणां फलम् ।
दोषं वा यो न जानाति स बाल इति चोच्यते ।
कश्चिदाम्रवणं छित्वा पलाशांश्च निषिञ्चति ।
पुष्पं दृष्ट्वा फले गृध्नुः स शोचति फलागमे ॥

अविज्ञाय फलं यो हि कर्म त्वेवानुधावति ।
स शोचेत् फलवेलायां यथा किंशुकसेचकः ॥ அயோ. 63 (7-9)

பின்னால் ஏதேனும் கெடுதல் ஏற்படுமோவென்று ஸந்தேஹமேற்பட்டால், முன்னமேயே ஜாக்கிரதையாக இருந்து கேடு வராமலிருப்பதற்குச் செய்யக்கூடிய கார்யங்களைச் செய்து கொள்ள வேண்டும்.

अनागतविधानं तु कर्तव्यं शुभमिच्छता ।
आपदं शङ्कमानेन पुरुषेण विपश्चिता ॥ அர. 24 (11)

அதை விட்டு விட்டு, முன்னால் செய்யவேண்டியதைப் பின்னாலும், பின்னால் செய்ய வேண்டியதை முன்னாலும், ஒருவன் புத்திமோஹத்தினால் செய்வானாகில் அவனுக்கு நீதி தெரிந்ததாக எப்படியாகும்?

यः पश्चात् पूर्वकार्याणि कुरुते बुद्धिमोहितः ।
पूर्वं चोत्तरकार्याणि न स वेद नयानयौ ॥ யுத்த. 12 (32)

தவிரவும், எந்தக் கார்யம் செய்வதாயிருந்தாலும் இதினால் புண்ணியம் ஏற்படுமா, உலகத்திலாவது நான்கு பேர்கள் புகழ்வார்களா, சாசுவதமான யசஸ் ஏற்படுமா, என்று ஆலோசிக்க வேண்டும். இவ்விதமாக திருஷ்ட பலனோ அதிருஷ்ட பலனோ இரண்டும் கிடைக்காமல் சரீரத்திற்கு சிரமம் மாத்திரம் ஏற்படக்கூடிய கார்யத்தைச் செய்வது கொஞ்சமேனும் உசிதமாகாது:

यत् कृत्वा न भवेद् धर्मो न कीर्तिः न यशो भुवि ।
शरीरस्य भवेत् खेदः कस्तम् कर्म समाचरेत् ॥ அர. 50 (19)

இவ்விதமாக முதலாவது அம்சமாகக் குறிப்பிட்ட நம் யோக்கியதைக்குத் தகுந்தவாறு நன்கு ஆலோசித்து கர்மாக்களைச் செய்து புண்ணிய பாபங்களை ஸம்பாதித்துக்கொள்ள நமக்கு ஸ்வாதந்தர்யம் உண்டு. இதையே புருஷகாரம், பௌருஷம், என்பார்கள்

இரண்டாவது அம்சமான பூர்வகர்மாக்களின் பலனாகிய ஸுகதுக்கங்களை அனுபவிப்பதில் நமக்கு ஸ்வாதந்தர்யம் கிடையாது. நம்முடைய அபேக்ஷையையாவது பிரயத்தினத்தினத்தையாவது எதிர்பாராமல் ஸுகம் ஏற்படும். அப்படியே நாம் வேண்டாமென்று எவ்வளவு நினைத்தாலும், வரக்கூடாதென்று தடுத்துப் பார்த்தாலும், துக்கம் ஏற்பட்டே தீரும். இதையே தைவம் என்பார்கள். நாம் ஏதேனும் செய்யவாரம்பிக்கும் போது அதை மேல் நடத்த முடியாமல் சிலஸமயம் தடங்கல் ஏற்பட்டுவிடுகிறது. அதற்கு என்ன காரணமென்று நம்மால் கண்டுபிடிக்க முடிகிறதுமில்லை அவ்விதம் நாம் நினைக்காமல் காரணம் தெரியாமல் ஏற்படும் ஸம்பவங்களெல்லாம் தைவத்தைச் சேர்ந்தவை.

ह यदकस्मात् प्रवर्तते ।

न्वायोरम्भमारब्धं ननु दैवस्य कर्म तत् ॥ அயோ. 22 (24)

காரணமென்னவென்று நம்மால் ஊஹிக்கமுடியாததே தைவம் என்றிருப்பதினால், அதை எதிர்க்கவோ தடுக்கவோ எப்படி ஸாத்யம்?

यदचिन्त्यं तु तद् दैवं भूतेष्वपि न हन्यते ।

कश्च दैवेन सौमित्रे योद्धुमुत्सहते पुमान् ॥ அயோ 22 (20-21)

கர்மாவில் தான் நமக்கு ஒருவாறு ஸ்வாதந்தர்யமே தவிர, கர்மபலனில் கொஞ்சமேனும் ஸ்வாதந்தர்யம் கிடையாது.

नात्मनः कामकारोऽस्ति पुरुषोऽयमनीश्वरः ।
इतश्चेतरतश्चैनं कृतान्तः परिकर्षति ॥ அயோ. 105 (15)

*தைவம்தான் எல்லாரையும் ஆட்டிவைக்கிறது. ஒருவன் சாக வேண்டுமென்று அவனுடைய முன் கர்மாவின் பலனாகிய தைவம் இருந்தால்தான் அவனைக் கொல்ல முடியும். அது பலன் கொடுக்கவாரம்பித்துவிட்டால், அதை பணத்தினாலோ விருப்பத்தினாலோ அதிகாரத்துடன் கட்டளையிட்டோ மாற்றிவிட பராக்கிரமத்தினாலோ முடியாது.*

दैवं चेष्टयते सर्वं हतं दैवेन हन्यते । யுத்த. 113 (24)
नैवार्थेन न कामेन विक्रमेण न चाज्ञया ।
शक्या दैवगतिर्लोके निवर्तयितुमुद्यता ॥ யுத்த. 113 (26)

*திரிசங்குவிற்கு தைவம் மேலிட்டதென்பது நன்றாகத் தெரியும். ஆனாலும் இந்த சரீரத்தோடு ஸ்வர்க்கம் போக வேண்டுமென்ற ஆசையினால் புருஷப்பிரயத்தினத்தால் அதை மாற்றிவிடும்படி விசுவாமித்ரரிடம் கேட்கிறான். விசுவாமித்ரருடைய பிரயத்தினமும் ஸபலமாகவில்லையென்பது பிரஸித்தம்.*

दैवमेव परं मन्ये पौरुषं तु निरर्थकम् ॥ பால. 58 (22)
दैवेनाक्रम्यते सर्वं दैवं हि परमा गतिः । ,, ,, (23)
दैवं पुरुषकारेण निवर्तयितुमर्हसि ॥ ,, ,, (24)

*அப்படியே லக்ஷ்மணனும் தன்னுடைய பராக்கிரமத்தினால் தைவத்தை மாற்றிவிடலாமென்று நினைத்துச்*

சொல்கிறான்: "வீர்யமில்லாதவன் தான் தைவத்தையனுஸரிப்பான். தன் மதிப்புள்ள வீரர்கள் தைவத்தையனுஸரிக்க மாட்டார்கள். எவன் தன்னுடைய பிரயத்தினத்தினால் தைவத்தைத் தடுத்துவிட ஸாமர்த்தியமுள்ளவனோ, அவனை தைவம் கெடுக்காது. அவனும் சோர்வடையமாட்டான்" என்கிறான்.

विक्लवो वीर्यहीनो यः स दैवमनुवर्तते ।
वीराः संभावितात्मानो न दैवं पर्युपासते ॥
दैवं पुरुषकारेण यः समर्थः प्रबाधितुम् ।
न दैवेन विपन्नार्थः पुरुषो सोऽवसीदति ॥ அயோ. 23 (17,18)

ஆனால் வாஸ்தவத்தில் புண்ணிய பாப கர்மாக்களின் பலனை அவசியம் அனுபவித்தே தீரவேண்டும், தடுக்க முடியாது.

அதர்மம் செய்கிறவர்கள் இப்பொழுது ஐசுவர்யத்துடன் இருக்கிறார்களேயென்று மலைக்க வேண்டாம். அவர்கள் உடனேயே வேர் அறுபட்ட மரங்கள் போல செழிப்புக் குறைய ஆரம்பிக்காத போனாலும் சீக்கிரமாகவே கீழே சாய்ந்து விடுவார்கள். மரத்தில் எவ்வித புஷ்பமும் இல்லாத போனாலும் புஷ்பிக்க வேண்டிய காலம் வரும்போது எப்படி புஷ்பங்கள் ஏற்படுகின்றனவோ, அப்படியே புண்ணிய பாபங்கள் பலன் கொடுக்கவாரம்பிக்கும் காலத்தில் ஏற்படுவதைத் தடுக்க முடியாது. நன்றாயிருந்ததென்று உத்ஸாஹமாக அன்னத்தை சாப்பிட்டு ஸந்தோஷமாயிருந்தாலும், அதில் விஷம் கலந்திருந்தால் அதிக தாமஸமன்னியில் மரணம் ஏற்படத்தான் ஏற்படும். கர்மாவின் பலனும் அப்படியேதான்.

न चिरं पापकर्माणः क्रूरा लोकजुगुप्सिताः ।
ऐश्वर्यं प्राप्य तिष्ठन्ति शीर्णमूला इव द्रुमाः ॥
अवश्यं लभते जन्तुः फलं पापस्य कर्मणः ।
घोरं पर्यागते काले द्रुमः पुष्पमिवार्तवम् ॥
नचिरात् प्राप्यते लोके पापानां कर्मणां फलम् ।
सविषाणामिवान्नानां भुक्तानां क्षणदाचर ॥ *அர.* 29 (7-9)

*இந்த "தைவம்" என்பதையே, காலத்தையெதிர் பார்த்து பலன் கொடுப்பதால் "காலம்" என்றும், இந்த ஜன்மா ஏற்படுவதற்கு முன்னமேயே தீர்மானிக்கப்பட்டிருப்பதால் "நியதி" அல்லது "விதி" என்றும் சொல்லுவார்கள். முன் ஜன்மங்களில் செய்த கர்மாவினால் ஏற்பட்டபடியால் இப்பொழுது நம் கண்ணுக்குப் புலப்படாமலும் மனஸினால் ஊஹித்தறிய முடியாமலுமிருப்பதால், இதை "அதிருஷ்டம்" என்றும் சொல்வார்கள்.*

*மேலே கண்ட முக்கிய தர்மங்களைத் தவிர அநேக சிற்சில உபதேசங்களும் ஸ்ரீமத் ராமாயணத்தில் காணுகின்றன. உதாஹரணமாக, உலகத்தில் ஒருவன் ஸாத்விக ஸ்வபாவத்துடன் இருந்து வந்தால் அவனை சக்தியற்றவன் என்றே ஸாமான்ய ஜனங்கள் மதித்து அலக்ஷியம் செய்வார்கள்.*

मृदुर्हि परिभूयते । *அயோ* 21 (12)

*)ல் உலகத்தில் கார்யம் நடக்க வேண்டுமானால், அதிகார தோரணையை அவலம்பித்து கொஞ்சம் க்ரூரனாகவும் இருக்க வேண்டியது அவசியமாயிருக்கிறது. இதைக் கொண்டு எல்லோரும் க்ரூரனாகவே இருக்க வேண்டும*

கண்டித்தால், அவர் நம்மிடம் வைத்திருக்கும் அபிமானத்தினாலேயே கண்டிக்கிறாரென்பதை ஞாபகம் வைத்துக் கொண்டால் அவரிடம் நமக்குக் கோபம் விலகிவிடும்:

न ह्यनिष्टोऽनुशिष्यते ॥ அர. 10 (21)

ஆகையால் தன்னுடைய பெருந்தன்மையினாலேயே கோபத்தைத் தடுத்துக் கொள்ள வேண்டும். இதை ஸீதை कार्यं करुणं आर्येण (யுத். 16-44) என்றும், ஸ்ரீராமர் 'அவ்விதம் தடுப்பவனே மனிதசிரேஷ்டன்'

कोपं आर्येण यो हन्ति स वीरः पुरुषोत्तमः ॥ கிஷ். 31 (6)

என்றும் சொல்லுகிறார்கள்.

இவ்விதமாக நம் நித்யவாழ்க்கையில் உபயோகிக்கக் கூடிய உபதேச மொழிகள் ஸ்ரீமத் ராமாயணத்தில் ஏராளமாக இருக்கின்றன. ஸ்ரீமத் ராமாயணம் என்பதே ஒரு பெரிய தர்ம சாஸ்திரமாகும்.

## அத்யாயம் 5

## தசரதரின் நன்கொடை

ஸ்ரீ வால்மீகி மஹரிஷி அருளிய ஸ்ரீமத் ராமாயணம் ஒரு பெரிய தர்மநிதியாகும். நாம் ஸாதாரணமாக நித்யம் நடந்துகொள்ள வேண்டிய விஷயங்களில்கூட அநேக தத்வங்களை அதிலிருந்து ஸுலபமாகக் கற்றுக்கொள்ள முடிகிறது. அதில் விசேஷமான வைதிக கர்மாக்களைப் பற்றியும், உத்தமமான ஆத்ம குணங்களைப் பற்றியும் வெகுவாகச் சொல்லப்பட்டிருப்பதுடன், ஸர்வ ஜனங்களுக்கும், வித்வான்களுக்கும், பாமரர்களுக்கும், பலவித தாரதம்யம் உள்ள எல்லா மனிதர்களுக்கும் உபயோகப் படக்கூடிய சிறு சிறு உபதேசங்கள்கூட அதில் ஏராளமாகக் காணப்படுகின்றன. உதாஹரணமாக, ஸர்வஜன பிரஸித்தமான விவாஹத்தைப் பற்றி எவ்விதம் வால்மீகி பகவான் வர்ணித்திருக்கிறார் என்ற விஷயத்தைக் கொஞ்சம் எடுத்துக் காட்டலாமென்று நினைக்கிறோம்.

ராமாயணத்தில் பலவிதமான தம்பதிகள் வருகிறார்கள். ராஜ அந்தஸ்தில் தசரதரும் அவருடைய மூன்று பத்னிகளும் வர்ணிக்கப்படுகிறார்கள்; அவர்களில் ஒவ்வொருவரும் வெவ்வேறு ஸ்வபாவத்துடன் கூடினவர்களாயிருந்தபோதிலும் மூவரும் தசரதரிடத்தில் ஸமானமான அபிமானத்தையே வைத்திருந்தார்கள். அப்படியே ராவணனுக்கு மண்டோதரி, தான்யமாலினி முதலான அநேகம் பத்னிகள் இருந்ததாகத் தெரிகிறது; அவனுடைய அந்தப்புரத்தில் அவனை நேசிக்காத ஸ்திரீ ஒருவர்கூடக் கிடையாது என்று வால்மீகி எடுத்துக் காட்டியிருக்கிறார். வானர ஜாதியில் வாலியும் தாரையும், அப்படியே ஸுக்ரீவனும் ருமையும் வருகிறார்கள். அத்ரி மஹரிஷியையும் அவருடைய தர்மபத்னியான

அனஸூயையையும் அவர்களுக்குள் பரஸ்பரம் இருந்து வந்த அபிமானம், கௌரவபுத்தி இவைகளையும் வால்மீகி மஹரிஷி வெகு அழகாக வர்ணித்திருக்கிறார். கௌதமர் அவருடைய பார்யை அஹல்யை, சுநச்சேபனுடைய பெற்றோர்களான ரிசீகமஹரிஷியும் அவருடைய பத்னியும், தபஸ்வியான த்ரிஜடரும் அவருடைய பத்னியும், தசரதர் அறியாமையினால் கொன்ற பையனுடைய பெற்றோர்களும் ஆகிய இவர்களுடைய குடும்ப வரலாறுகளையும், கொஞ்சம் கொஞ்சம் காட்டுகிறார். கேகய மஹாராஜா தன்னிடம் பிடிவாதம் காட்டிய பார்யையை என்ன செய்தார் என்றும் சொல்லுகிறார். தவிரவும் தாம்பத்ய வாழ்க்கைக்குப் பிரஸித்தமான உதாஹரணமாக நளன்—தமயந்தி, ச்யவனர்—ஸுகன்யா, முதலான அநேகரைப் பற்றியும் பிரஸ்தாபிக்கிறார்.

இவ்விதமாக அநேக தம்பதிகளை வெகு அத்புதமாக வர்ணித்திருக்கிறார். இவர்களில் ஏதேனும் ஒரு தம்பதியை எடுத்துக் கொண்டு அவர்கள் எவ்விதம் நடந்து கொண்டார்கள் என்பதை நாம் கவனித்தால் நம்முடைய இல்லற வாழ்க்கையில் நாம் நடந்துகொள்ள வேண்டிய மேலான தர்மங்களை வெகு ஸுலபமாக அறிந்து கொள்ளலாம். இவ்விதமான பிரஸித்திபெற்ற தம்பதிகளுக்கு மேலாக விசேஷ சோபையுடன் ஸ்ரீராமரும் ஸீதையும் பிரகாசிக்கிறார்கள். அவர்கள் எந்தவிதத்தில் மற்றவர்களைவிட மேலானவர்கள் என்பதைப் பற்றி இப்பொழுது எடுத்துச் சொல்ல உத்தேசமில்லை. அவர்களுக்குள் பரஸ்பரம் இருந்த ப்ரீதியையும் மதிப்பையும் பற்றியாவது, பார்யை பர்த்தாவிடம் நடந்துகொள்ள வேண்டிய கடமையைப் பற்றியாவது, பர்த்தா தன் பத்னீ விஷயமாய் வஹிக்கவேண்டிய பொறுப்பைப் பற்றியாவது, இப்பொழுது பிரஸ்தாவிக்க உத்தேசமில்லை. இவ்விஷயங்களைப் பற்றி அவர்களுடைய ஜீவிய சரித்திரமான ஸ்ரீமத் ராமாயணத்தில்

ஏராளமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்பொழுது அவர்கள் கிருஹஸ்தாசிரமத்தில் பிரவேசித்த ஸந்தர்ப்பத்தை மாத்திரம் எடுத்துக் காட்ட உத்தேசம்.

ஸ்ரீராமசந்திரமூர்த்தியும் அவருடைய ஸஹோதரர்களும் பிறந்ததை வர்ணிக்கும் ஸர்க்கத்திலேயே அவர்கள்

सर्वे वेदविदः शूराः सर्वे लोकहिते रताः ।
सर्वे ज्ञानोपसंपन्नाः सर्वे समुदिता गुणैः ॥ பால. 18 (24)
ते चापि मनुजव्याघ्रा वैदिकाध्ययने रताः ।
पितृशुश्रूषणरता धनुर्वेदे च निष्ठिताः ॥ ,, ,, (35)

"எல்லோரும் வேதவித்துக்களாகவும், சூரர்களாகவும் உலகத்தின் நன்மையில் ஈடுபட்டவர்களாகவும், விசேஷ ஞானமுடையவர்களாகவும், மேலான குணங்களோடு கூடினவர்களாகவும் இருந்தார்கள்."

"அந்த மனித சிரேஷ்டர்கள் வேதாத்யயனத்திலும் பிதாவின் சுச்ருஷையிலும் ஈடுபட்டவர்களாக இருந்ததுடன் தனுர் வேதத்திலும் மேன்மையடைந்திருந்தார்கள்." என்றும்

तेषामेवंप्रभावाणां सर्वेषां दीप्ततेजसाम् ।
पिता दशरथो हृष्टो ब्रह्मा लोकाधिपो यथा ॥ பால. 28 (34)

"இவ்விதமான பிரபாவத்துடன் ஜ்வலிக்கிற தேஜஸ்ஸோடு கூடிய அவர்களால், தகப்பனார் தசரதர், ஸகல லோகங்களுக்கும் அதிபதியான பிரஹ்மாவைப்போல் ஸந்தோஷத்தை அடைந்தார்." என்றும் வர்ணிக்கிறார்.

அவர்களுக்கு விவாஹம் செய்து வைக்க ஸரியான காலம் வந்துவிட்டதென்று அவர் நிர்மானித்து, அவர் தன்னுடைய குல குருவான வஸிஷ்டர், பந்துக்கள், மந்திரிகள், இவர்களுடன் ஆலோசனை செய்து கொண்டிருந்தார். அந்த ஸமயம்தான் விசுவாமித்திரர் வந்து சேர்ந்தது.

अथ राजा दशरथस्तेषां दारक्रियां प्रति ।
चिन्तयामास धर्मात्मा सोपाध्याय: सबान्धव: ॥ பால. 18 (36)
तस्य चिन्तयमानस्य मन्त्रिमध्ये महात्मन: ।
अभ्यागच्छन्महातेजा विश्वामित्रो महामुनि: ॥ ,, ,, (37)

தசரதர் சக்ரவர்த்தி; இவ்வுலகம் பூராவும் அவருக்குக்கீழ்பட்டது; அவருடைய செல்வாக்கு ஸ்வர்க்கம் வரையில் பரவி இருந்தது; தேவேந்திரனுக்கு அஸுரர்களுடன் போர் ஏற்படும்போது சில ஸமயங்களில் இவருடைய உதவியையும் அவன் நாடி இருக்கிறான்; இவருடைய ஐசுவர்யத்திற்கும், கியாதிக்கும் நிகரே கிடையாது; அப்படி இருக்க அவருடைய குமாரர்களுக்கு கன்னிகை கிடைப்பதில் ஒருவித சிரமமும் இருக்கவேமுடியாது; மேலும் புத்திரர்கள் எல்லோரும் அழகு வாய்ந்தவர்களாகவும், குணசாலிகளாகவும், ஆரோக்யமுடையவர்களாகவும், இருந்ததுடன் வேதங்களிலும் மற்றும் கலைகளிலும், வித்யைகளிலும், மிகவும் தேர்ச்சி பெற்றவர்களாகவும், உத்தமமான சீலத்துடனும், சக்தியுடனும் பிரகாசித்து வந்தார்கள். இவ்வளவு யோக்யதைகளுடன் கூடின இவர்களுக்குத் தகுந்த பெரிய கௌரவமான ராஜ வம்சங்களிலிருந்து பெண்கள் கிடைப்பது சிரமமாக இருந்திருக்கமுடியாது. விவாஹத்திற்கு யோக்யமான பெண்களை வைத்துக்

கொண்டிருக்கும் அரசர்கள் யாவருமே இவர்களைத் தங்கள் மருமகன்களாக ஆக்கிக்கொள்ள மிகவும் உத்ஸாகத்துடன் இருப்பார்கள். அப்படியிருக்கையில் இவர்களுடைய விவாஹத்தைப் பற்றி தசரதர் ஆலோசிக்க என்ன அவசியம்? புரோஹிதர், மந்திரிகள், பந்துக்கள் இவர்களிடம் கலந்து யோஜிப்பதற்குத்தான் என்ன அவசியம் ஏற்பட்டது? இக் கேள்விக்கு பதில் ஒரே வார்த்தையில் வால்மீகி குறிப்பிட்டிருக்கிறார். அதாவது :

தசரதரைப்பற்றிச் சொல்லும்போது அவருக்கு 'தர்மாத்மா' என்று ஒரு விசேஷ அடைமொழி கொடுத்திருக்கிறார். அவருடைய ஸ்வபாவம் பூராவும் தர்மத்திலேயே ஊறி இருப்பதால் அவர் அவ்விதம் செய்தார் என்பதைக் குறிப்பிடுகிறார். அவருக்கு தர்மத்தில் இருந்த விசேஷ சிரத்தையினால் அவர் கவலைப்பட்டு ஆப்தர்களுடன் கலந்து யோஜிக்கும்படி ஏற்பட்டது. தன்னுடைய குடும்பத்தின் பரிசுத்தத் தன்மையையும் கௌரவத்தையும் குறைபடாமல் ஸம்ரக்ஷித்துவர நினைப்பவர் யாருமே தன் கிருஹத்திற்கு வரும் மருமகள் சரியானபடி இருக்கவேண்டுமே என்று கவலைப்பட வேண்டியது மிகவும் அவசியம்: ஏனென்றால் குடும்பத்தின் பரிசுத்தத் தன்மையும், கௌரவமும் அவள் கையில் தான் இருக்கின்றன. ஒரு குடும்பத்தில் பெண் பிறந்த போதிலும் அங்கே இருப்பதில்லை. இன்னொரு குடும்பத்திற்குப்போய் அந்தக் குடும்பத்தின் நல்ல பெயரையும், மரியாதையையும், காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அவளைச் சேர்ந்ததாக ஆகிறது ; அவள் விவாஹத்திற்குப் பிறகு நடந்துகொள்ளும் முறை அவளை வளர்த்து வந்த பெற்றோர்களுக்கு யசஸ்ஸையோ, கவலையையோ கொடுக்கலாம். ஆனால் அவர்களுடைய குடும்பத்தின் சுத்தத் தன்மையை எவ்விதத்திலும் பாதிக்க முடியாது ; அவள் வாஸ்தவமாக நல்ல பெயரோ கெட்ட பெயரோ வாங்கிக் கொடுப்பதும், தூக்கிவைப்பதோ, கெடுப்பதோ

எல்லாம் அவள் புகுந்த குடும்பத்தைத்தான். தசரத மகாராஜா லௌகிகமாகவும், வைதிகமாகவும், உன்னத மான ஸ்தானத்தை அடைந்து இருந்தபடியால் எல்லா விதத்திலும் அந்த ஸ்தானத்தைக் காப்பாற்றக்கூடிய தக்க மருமக்கள் கிடைக்க வேண்டுமென்று கவலைப்பட் டது நியாயமே ஆகும்.

ரியர்களுக்குள் வயது வந்த பெண்களைக் கல்யாணம் செய்துகொள்வது வழக்கமாயிருந்த போதி லும் தசரதர் தர்மாத்மாவாயிருந்தபடியால், உத்தம மான ரீதியிலேயே தன் குமாரர்களுக்கு விவாஹத்தைச் செய்து வைக்க வேண்டுமென்று விரும்பினார். பெண் களுக்கு தங்களுக்கென்று பழக்க வழக்கங்கள் ஏற்படு வதற்குமுன் அவர்கள் மனது படிந்து பர்த்தாக்களின் குடும்ப பழக்க வழக்கங்களை ஸுலபமாகக் கற்று அனு ஸரிக்கக்கூடிய வயதிலேயே அவர்களுக்கு விவாஹத்தைச் செய்விப்பது உசிதமென்று உணர்ந்தார். பையன் களுக்கு தர்மத்தில் பயிற்சி ஏற்படுவதற்காக இளம் வயதிலேயே குருவினிடம் ஒப்புவிப்பதுபோல, இளம் வயதிலேயே பெண்களைக் கல்யாணம் செய்து பர்த்தாவி னிடம் ஒப்புவிப்பது நியாயமாகும். இளம் வயதில் பர்த்தாவின் குடும்பத்தில் புகுந்தால், அவள் அக்குடும் பத்தைச் சேர்ந்தவளாகி வளர்ந்து எவ்வித சிரமமு மன்னியில் அக்குடும்பத்தின் ஸ்வபாவத்திற்கு இசைந்தவ ளாக ஆகிவிடுவாள். அப்படிக்கன்னியில் ஏற்கனவே ஒரு விதமான பழக்க வழக்கங்கள் ஏற்பட்ட ஒரு பெண் இன்னொரு குடும்பத்தில் வாழ்க்கைப்பட நேர்ந்தால், அப்புதிய சூழ்நிலைக்குத் தக்கபடி தன்னை மாற்றிக் கொள்ள மிகவும் சிரமமாக இருக்கும். அக்குடும்பத்தார் களுக்கும் இவளுக்குத் தக்கபடி தங்களை மாற்றிக் கொள்ளுவதும் ஸாத்யமாகாது. கடைசியில் பிரதி தினம் அபிப்ராய பேதமும், சச்சரவும் ஏற்பட்டுக் குடும்பமே உலைந்துபோகும். ஆகையினாலேயே இளம்

பிராயத்திலிருந்து தன் குடும்பத்திலேயே ஒற்றுமையாக வளர்ந்து வரக்கூடிய மருமக்கள் வேண்டுமென்று தசரத மஹாராஜன் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்.

தவிரவும், பையன்கள் யௌவன வயதை அடைந்த பிறகு, அவர்கள் இஷ்டப்படி பார்யைகளைத் தேடிக் கொள்கிறது அவ்வளவு நியாயம் என்று தசரதர் நம்ப வில்லை. வயது வந்த பிற்பாடு, தானுகவே பெண்களைத் தேடப்போனால் வெளிப் பார்வையினால் இழுக்கப்பட்டு முக்கிய அம்சங்களாகிய நீடித்த தாம்பத்ய ஸுகத்தையும் நல்வாழ்க்கையையும் கொடுக்கக்கூடிய உத்தமமான குலம், சுத்தமான நடத்தை, நல்ல பயிற்சி, இவைகளை மறந்து விடுவார்கள் என்ற விஷயத்தையும் நன்கு அறிந் தவர் தசரதர். தவிரவும் இந்த முக்யமான அம்சங்களைப் பற்றித் தெரிந்து தீர்மானித்துக்கொள்ள அவர்களால் முடியாது என்பதையும் நன்கு அறிந்தவர். இதற் கெல்லாம் காரணம் அவர் தர்மாத்மாவாக இருந்தது தான். இவ்விஷயங்கள் மிகவும் முக்கியமாயிருப்பதால் அதைத் தீர்மானிக்கும் பொறுப்பைத் தான் மாத்திரம் வைத்துக்கொள்வது நியாயமில்லையென்றும், தன் னுடைய அத்யந்த ஆப்தர்களுடைய ஸஹாயத்தையும் கோருவது அவசியமென்றும் தசரதர் நன்கு உணர்ந்தார் என்று தெரிகிறது. சுத்தமான ஆசார தர்மத்தை கவனிக்கும் விஷயத்தில் குல புரோஹிதர்தான் அபிப்பி ராயம் சொல்ல அர்ஹதையுள்ளவர். இன்னெரு குலத் துடன் ஸம்பந்தம் செய்யும் விஷயத்தில் குடும்பஸ்தர் களே மிகவும் அக்கறை பெற்றவர்களாயிருப்பதால், பந்துக்களையே கலந்து தீர்மானிக்க வேண்டியது அவசிய மாகும். ராஜ புத்ரர்களாயிருப்பதால் அவர்களுடைய கல்யாணத்தை பற்றி அவர்களோ அவர்களது பெற்றோர் களோ தங்கள் சொந்தக் கார்யமென்று பாவித்து அரசாங்க மந்திரிகளைக் கலக்காமல் தீர்மானிப்பது நியாய

மாகாது. ஏனென்றால் அவர்களின் விவாஹத்தில் ராஜ்யம் பூராவுக்கும் அக்கரை உண்டு.

ராமாயணத்தில் இந்த ராஜ புத்ரர்களின் விவாஹ விஷயமாக அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டதாகவே தெரியவில்லை; அவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று யாருக்கும் தோன்றினதாகக்கூடத் தெரியவில்லை; இதிலிருந்து பெரியோர்கள் ஏதோ அதிகார தோரணையில் செய்துவிட்டார்கள் என்றாவது, இச்சிறுவர்கள் அடிமைத்தனத்தால் பணிந்திருந்தார்கள் என்றாவது எண்ணுவதற்கு இடமில்லை; வாஸ்தவத்தில் தசரதர் பிதா என்கிற முறையில் எவ்வளவு பொறுப்பு வஹித்தார் என்பதும், புத்ரர்கள் அவரிடம் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தார்கள் என்பதும் நன்கு துலங்குகிறது. மேலும் இந்த முக்கிய விஷயத்தில் அப்புத்திரர்களைப் பெற்ற தாய்மார்களையும்கூடக் கேட்டதாகத் தெரியவில்லை. இதிலிருந்தே அக்குடும்ப அங்கத்தினர்களுக்குள் எவ்வளவு ஒற்றுமை இருந்தது என்பதும், குடும்ப நன்மையைப் பற்றி தங்களுடைய விசேஷ ஞானத்தினாலும், அனுபவத்தினாலும் பெரியோர்களே நிர்மானிக்கும் பொறுப்பை முழுவதும் ஏற்று இருந்தார்கள் என்பதும் வெளியாகிறது. குடும்பத்தினர்களுக்குள் தனித்தனி அக்கரைகள் ஏற்பட்டு முரண்பட்டாலும், அபிப்பிராய பேதம் ஏற்பட்டாலும், அவ்விஷயமாகத் தீர்மானம் செய்யமுடியாமல் பெரியோர்கள் திகைத்தாலும், அவர்களுடைய ஸ்தானத்திற்கு உரித்தான விசுவாஸத்திற்கு அவர்கள் பாத்ரமாகாமல் போனாலும், சிரமங்கள் ஏற்படுவது ஸஹஜம். அப்படிக் கன்னியில் தசரத மஹாராஜன் குடும்பத்தலைவராக இருக்கும்போது மற்றவர்களுடைய அக்கரைகள் அவனுடைய அக்கரைக்கு வேறுபடாமல் இருந்தபடியால், எல்லா விஷயங்களையும் நிர்மானிக்கவேண்டிய

பொறுப்பு அவரையே சேர்ந்ததாக இருந்தது. இதை அக்குடும்பத்தினர்கள் நன்கு அறிந்தவர்கள்.

இவ்விதம் தசரதர் புத்ரர்களின் விவாஹ விஷயமாக மந்திரிகளுடனும், பந்துக்களுடனும் ஆலோசனை செய்து கொண்டிருக்கும் ஸமயத்தில் விசுவாமித்திரர் வந்து சேர்ந்தது விசேஷமான சுப சகுனமாகும்; பின்னல் கல்யாணம் நடந்த உடனேயே மிதிலையை விட்டு விசுவாமித்ரர் புறப்பட்டுப் போனதிலிருந்து ராமருக்கு ஸீதையுடன் விவாஹம் செய்து வைப்பதை உத்தேசித்தே அவர் தசரதரிடம் வந்திருப்பதாகத் தெரிகிறது; ஆனல் அவர் இவ்விவாஹ விஷயத்தைப்பற்றி ஒருவார்த்தை கூடச் சொல்லவில்லை. பொதுவாக

श्रेयश्चास्मै प्रदास्यामि बहुरूपं न संशयः । பால. 19 (10)

'இவனுக்குப் பலவிதமான சிரேயஸ்ஸைச் செய்து கொடுக்கிறேன்; ஸந்தேஹம் வேண்டாம்' என்ற வாக்யத்தில் உள்ளடங்கியது என்று வைத்துக்கொள்ளலாம். விசுவாமித்ரருக்கு மனதிற்குள் இந்த உத்தேசம் இருக்கிறதென்று வஸிஷ்டருக்குத் தெரிந்திருந்தாலும், அவர் அதை வெளிப்படுத்தவில்லை. வஸிஷ்டர் விசுவாமித்ரரைப்பற்றி சொல்லும்போது அவருடைய பராக்ரமத்தைப்பற்றி எடுத்துச் சொல்லுகையில் "அவர் ராக்ஷஸர்களை நிக்ரஹம் செய்வதற்கு சக்தியுள்ளவர்; ஆனல் உம்முடைய புத்திரனின் ஹிதத்தை உத்தேசித்துத்தான் அவர் உம்மிடம் வந்து யாசிக்கிறார்" என்று சொல்கிறார்.

तेषां निग्रहणे शक्तः स्वयं च कुशिकात्मजः ।
तव पुत्रहितार्थाय त्वामुपेत्याभियाचते ॥ பால. 21 (21)

இதிலிருந்து விசுவாமித்ரர் தான் செய்யும் யாகத்திற்கு ஏற்பட்டு வரும் இடையூறுகளை நிவிருத்தி செய்வதற்காக ராமனுடைய உதவியை அபேக்ஷித்து தசரதனிடம் வந்ததாகச் சொன்னபோதிலும், விசுவாமித்ரருடைய வாஸ்தவமான உத்தேசம் வேறு என்பதை வ [illegible] ந்தவர் என்பது தெரிகிறது. இம்முனிவர்களுடைய வார்த்தைகளிலிருந்து விவாஹ ஸம்பந்தமாக இருக்கலாமென்று தசரதரோ மற்றும் யாருமோ ஊஹிப்பதற்கு இடமில்லை.

விசுவாமித்ரர் ராமலக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டு ஸித்தாச்ரமம் சென்றதும், அங்கு ராமனால் ராக்ஷஸர்கள் விரட்டப்பட்டு ஆறுநாள் யாகமும நிர்விக்னமாய் நடந்து முடிந்தபின், மறுநாளே அங்குள்ள ரிஷிகள் விசுவாமித்ரரை முன்னிட்டுக் கொண்டு ராமனிடம் சொல்லுவதாவது :—

मैथिलस्य नरश्रेष्ठ जनकस्य भविष्यति।
यज्ञः परमधर्मिष्ठस्तस्य यास्यामहे वयम् ॥
त्वं चैव नरशार्दूल सहास्माभिर्गमिष्यसि ।
अद्भुतं च धनूरत्नं तत्रैकं द्रष्टुमर्हसि ॥ பால. 33 (6,7)
न शेकुरारोपयितुं राजपुत्रा महाबलाः ॥ ,, ,, (10)

"மிதிலாபதி ஜனகமஹாராஜா ஒரு உத்தமமான யாகத்தைச் செய்யப்போகிறார் நாங்கள் அங்கே போக உத்தேசித்திருக்கிறோம். நீங்களும் எங்களுடன் அங்கே வரலாம்; அங்கே ஒரு அத்புதமான தனுஸ் இருக்கிறது; எவ்வளவோ ராஜபுத்ரர்கள் பலிஷ்டர்களாயிருந்தாலும் அதில் ஞாண் பூட்டமுடியவில்லை."

இவ்விதம் அம்முனிவர்கள் ராம லக்ஷ்மணர்களுடைய உத்ஸாஹத்தைக் கிளப்பி விட்டார்கள். அந்த வில்லில் ஞாண் பூட்டுகிறவனுக்கு ஜனக மஹாராஜன் தன் பெண் ஸீதையைக் கொடுப்பதாக பிரதிக்ஞை செய்திருக்கிறார் என்ற விஷயத்தைப் பற்றிச் சொல்லாமல் ஜாக்கிரதை யாக இருந்திருக்கிறார்கள். ராமரிடம் போட்டியிட வேண்டுமென்ற எண்ணத்தை மாத்திரம் அவர்கள் காட்டினார்களே தவிர, அப்போட்டியில் ஜயிக்கிறவனுக்குக் காத்துக் கொண்டிருக்கும் விலை உயர்ந்த பரிசைப் பற்றி அவர்கள் பிரஸ்தாவிக்கவே இல்லை. ஆசைப்படக்கூடிய ஒரு பரிசை எதிர்பார்த்துப் பிரவிருத்தி செய்தால், எவருடைய மனதும் கொஞ்சம் தன் நிலையிலிருந்து வழுவக் கூடும். அவ்விதம் ராமர் விஷயத்தில் ஏற்படக்கூடாதென்றும்; ராமர் வில்லை வளைத்து ஞாண் பூட்டுவதில் தன் ஸாமர்த்தியத்தைக் காட்டும்போது, அவ்விதம் ஞாண் பூட்டினால் ஒரு அழகான பெண் கிடைப்பாள் என்ற எண்ணம் ராமர் மனதில் இருக்கக்கூடாது என்றும் எண்ணினார்கள்.

மேலும், ஸித்தாசிரமத்திலிருந்து புறப்படும் போது ஜனகருடைய அபிப்ராயத்தைப்பற்றி ராமரிடம் சொல்லியிருந்தால், அவர் அயோத்திக்கே திரும்புவது தான் நியாயம் என்று நினைப்பார். அவருக்கு தகப்பனாரிடம் இருந்த விசேஷ பக்தியினால் தனக்குப் பெண் வரக்கூடிய எவ்வித காரியத்திலும் ஈடுபட மறுத்து, அம்முனிவர்களை தசரதரிடம் போய் அவருடைய அனுமதியைப்பெற்று வந்தாலொழிய, தன்னை மிதிலைக்கு அழைத்துப் போகக் கூடாதென்று உடனே சொல்லி இருப்பார். ராமலக்ஷ்மணர்களை தசரதர் விசுவாமித்ரரிடம் ஒப்புவித்திருப்பதால் அம்மஹரிஷி அவர்களையும் தன்னுடன் ஜனகமஹாராஜனின் யாகத்தைப் பார்க்க அழைத்துப்போவதிலாவது, அங்கு போன இடத்தில் ராமருக்கு தனுஸ்ஸைக் காட்டி

சொல்லுவதிலாவது எவ்வித தவறும் இல்லை; வில்லை வளைத்ததற்காக ராமருக்கு ஒரு பெண் கல்யாணம் செய்துவைக்க உத்தேசிப்பது வேறு விஷயம். அந்தப் பெரிய பொறுப்பை ராமராவது விசுவாமித்ரராவது ஏற்றுக்கொள்ளுவது நியாயமாகாது. அவ்விஷயத்தில் தீர்மானம் செய்யவேண்டியது தசரதரையே சேர்ந்தது.

இப்பொறுப்பை தசரதர் நன்கு அறிந்தும்கூட ஒரு சரியான தீர்மானத்திற்கு வருவதற்கு மந்திரிகளுடையவும், பந்துக்களுடையவும், அபிப்ராயத்தையும் கலந்து கொள்ளவேண்டியது அவசியம் என்று உணர்ந்தார். அவர் செய்யும் தீர்மானம் எல்லோருக்கும் திருப்திகரமாக இருக்க வேண்டியதுடன், தர்மத்தை ஒட்டியும். லௌகிக ரீதியை ஒட்டியும், மிகவும் நியாயமாகவும், பொருத்தமாகவும் இருக்கவேண்டும். அதனால்தான் அவர் புத்திரர்களின் கல்யாண விஷயமாய் எல்லோருடனும் ஆலோசித்துக் கொண்டிருந்தார். அவ்வாலோசனை மத்தியில் வந்து இடைஞ்சல் செய்ததாகத் தோன்றும்படி விசுவாமித்ரர் வந்தபோதிலும், தசரதர் எண்ணிக்கொண்டிருந்த எண்ணத்தை நிறைவேற்றிக் கொடுப்பதற்காகவே அவர் வந்திருக்கிறார். ஆனால், அவர் ராஜ்யபாரம் வஹித்து லௌகிக முறையிலும் தத்காலம் மஹரிஷி என்ற முறையிலும், உலகத்தை நன்கு அறிந்திருந்தபடியால். ராமரின் பராக்ரமம் வெளியாகி, அவருடைய கல்யாணம் அநேகமாய்த் தீர்மானமாகி, தசரதருடைய ஸம்மதத்தை எதிர் பார்க்கும் ஸமயம் வரும்வரையில் தசரதரிடமாவது, மற்றவர்களிடமாவது இது விஷயமான ஆசையை உண்டு பண்ணக்கூடாதென்று தீர்மானித்திருந்தார். பின்னல் விசுவாமித்ரர் ஜனகரோடு பேசிக்கொண்டிருந்த போது கூட, வில்லை வளைத்து நாண் பூட்டினல் ராமர் ஸீதையை விவாஹம் செய்து கொள்ளுவார் என்று சொல்லவில்லை. ராமர் அங்கே வந்தது ஏதோ அகஸ்மாத்தாக ஏற்பட்

டது போலவும், அதற்கும் ஜனகருடைய பிரதிக்ஞைக்கும், யாதொரு ஸம்பந்தமும் இல்லை போலவுமே விசுவாமித்ரர் காட்டி இருக்கிறார்.

पुत्रौ दशरथस्येमौ क्षत्रियौ लोकविश्रुतौ ।
द्रष्टुकामौ धनुः श्रेष्ठं यदेतत् त्वयि तिष्ठति ॥
एतद्दर्शय भद्रं ते कृतकामौ नृपात्मजौ ।
दर्शनादस्य धनुषो यथेष्टं प्रतियास्यतः ॥ பால 66 (5,6)

"இவர்கள் கியாதி பெற்ற க்ஷத்ரியர்கள். தசரதருடைய புத்ரர்கள். உம்மிடமிருக்கிற உத்தமமான தனுஸைப் பார்க்க ஆசைப்படுகிறார்கள்; அதைக் காட்டும். அந்த தனுஸைப் பார்த்தவுடன் இவர்களுடைய ஆசை பூர்த்தியாகி இவ்விரு ராஜகுமாரர்களும் அவர்களுடைய இஷ்டப்படி திரும்பிப் போய் விடுவார்கள்" என்றே விசுவாமித்ரர் சொல்கிறார்.

ஸ்ரீ ராமருக்கு ஸீதையினிடம் ஏற்பட்டிருந்த விசேஷமான பிரியம் அவளுடைய சரீரலாவண்யத்தைப் பார்த்து ஏற்படவில்லை என்பதில் கொஞ்சம்கூட ஸந்தேஹத்திற்கு இடமன்னியில் வெகு தெளிவாக வால்மீகி மஹரிஷி எடுத்துக் காட்டுகிறார். அவருக்கு அவளிடத்தில் ஏற்பட்ட அபிமானத்திற்கு மூலகாரணம் அவள் தனக்கு தகப்பனாரால் கொடுக்கப்பட்ட நன்கொடை என்கிற எண்ணமேதான். தகப்பனாருடைய அபிப்ராயத்திற்கு மதிப்புக் கொடுத்து ராமர் அந்த நன்கொடையைப் பெற்றுக் கொண்டார்; பஹுமானித்தார்; பிறகு அபிமானித்தார். அவள் சரீரத்தினுடைய லாவண்யமும், அவளுடைய மனதின் தூய்மையும் ஸாமான்யமானது அல்ல. ஆனால் அவர் அவளிடம் வைத்த அபிமானத்

திற்கு இவை மூலகாரணமல்ல. அவருக்கு முதலில் ஏற்பட்ட அபிமானத்தை திடப்படுத்தவும், விருத்தி செய்யவும், இவைகள் உபயோகப்பட்டன என்பது வாஸ்தவம்.

प्रिया तु सीता रामस्य दाराः पितृकृता इति ।
गुणाद्रूपगुणाच्चापि प्रीतिर्भूयोऽभ्यवर्धत ॥ பால. 77 (27)

"ராமருக்கு அவர் பார்யை ஸீதையானவள் தகப்பனூரால் கொடுக்கப்பட்டாள் என்ற காரணத்தால் பிரீதிக்கு விஷயமாக இருந்தாள். அந்த பிரீதியானது அவளுடைய குணத்தினாலும் ரூபத்தினாலும் வெகுவாக விருத்தியடைந்தது."

இக்காலத்திலுள்ள சிலர்களின் அபிப்ராயத்தில் விவாஹம் என்பது ஸ்திரீ புருஷர்களுக்குள் பரஸ்பரம் கவர்ச்சியினால் ஏற்படுகிறதென்றும், ஆகையினால் விவாஹத்திற்கு முன்னலேயே அக்கவர்ச்சி அவசியம் ஏற்பட வேண்டுமென்றும் தோன்றுவதால் ராமாயணத்தில் கண்டிருக்கும் தத்வங்கள் அவர்களுக்கு ருசிக்காமல் இருக்கலாம். தத்கால நாகரீகம் என்பதே விவாஹத்தை அதன் உயர்ந்த நிலையிலிருந்து தாழ்த்திவிடவே உத்தேசிக்கிறது. இந்த வெளிக் கவர்ச்சியானது எவ்வளவுதூரம் சிலர்களின் நடத்தையைக் கெடுத்துவிடும் என்பதை வால்மீகி உணராதவர் இல்லை. ஏனென்றால் ராமாயணம் பூராவிலும் ராவணன் ஸீதையின் லாவண்யத்தைக் கண்டு மோஹித்ததை வைத்தே பிரதானமாக கதை ஏற்பட்டிருக்கிறது. அதுமாதிரி சரீர லாவண்யத்தினால் இழுக்கப்பட்டு ராமர் ஸீதையை விவாஹம் செய்துகொண்டார் என்று யாரும் நினைக்கக்கூடாதென்பதே வால்மீகியின் நோக்கம். அப்படி இருந்தும் நம் தேசத்திலேயே சில கவிகள் இந்த ஸந்தர்ப்பத்திலேயே சிருங்காரத்தை நுழைத்துவிடுகிறார்கள். அதைச் சேர்க்காமல்போனால்

கதை ஸ்வாரஸ்யமாக இராதென்பது அவர்களுடைய எண்ணம்போலும். வால்மீகிக்கு அவ்வெண்ணம் கொஞ்சமேனும் இல்லாதபடியால், அவர் பிரஹ்மதேவருடைய அனுக்ரஹத்தினுல் தெரிந்த விஷயங்களை அப்படி அப்படியே நடந்தது நடந்தபடி வர்ணித்திருக்கிறார். சிலர்களுடைய ருசிக்கு இடம் கொடுப்பதற்காக ஸத்யத்தைக் கொஞ்சமேனும் மாற்றுவதில் அவருக்கு இஷ்டமில்லை. விவாஹத்திற்கு முன்னுல் தம்பதிகளுக்குள் சரீரலாவண்யத்தினுல் கவர்ச்சி ஏற்பட்டு விவாஹம் நடந்ததென்று யாரும் நினைப்பதற்கு இடமில்லாமல் விவாஹ ஸமயத்தில் ராமருக்கும் ஸீதைக்கும் என்ன வயது என்பதை வெகு ஜாக்ரதையாகவும், வெகு தெளிவாகவும் எடுத்துச் சொல்லி இருக்கிறார்.

விசுவாமித்ரர் தசரதரிடம் வந்து ராமரைக் கேட்கும் போது ராக்ஷஸர்களுடன் போரிட்டு, தான் நடத்தும் யாகத்திற்கு இடைஞ்சல் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறார். அப்பொழுது தசரதர், ராமருக்குக் கௌமாரப்பருவம் நீங்கவில்லையென்றும், ராக்ஷஸர்களுடன் சண்டையிட யோக்யதை ஏற்படவில்லையென்றும் சொல்லுகிறார். அந்த ஸமயத்தில் கௌமார தசை நீங்கும் வயதான பதினுறுவது வயது இன்னும் வரவில்லையென்று சொல்லுகிறார்.

ऊनषोडशवर्षो मे रामो राजीवलोचनः ।
न युद्धयोग्यतामस्य पश्यामि सह राक्षसैः பால. 20 (2)

ராமருடைய துல்யமான வயதைச் சொல்லுவதற்கு அப்பொழுது அவசியமில்லை. இருந்தாலும் அவர் சொன்னதின் தாத்பர்யம் பின்னுல் ஒரு ஸந்தர்ப்பத்தில் வெளியாகிறது. ராவணனிடம் மாரீசன் முதல் முதல் தான் ராமரைப் பார்க்க நேரிட்டதைப்பற்றிச் சொல்லும்போது

ராமருக்கு யௌவன தசையின் அடையாளங்கள் ஏற்பட வில்லையென்று சொல்கிறான். தசரதரிடம் விசுவாமித்ரர் வந்த ஸமயத்தில் தசரதர் தன் பையன் பன்னிரண்டு வயதுள்ளவனென்றும், அஸ்திரங்களைப் பயிற்சி செய்ய வில்லையென்றும் சொன்னதாகவும் சொல்லுகிறான்.

अजातव्यञ्जनः श्रीमान पद्मपत्रनिभेक्षणः ।। அர. 38 (14)

प्रत्युवाच महाभागं विश्वामित्रं महामुनिम् ।

बालो द्वादशवर्षोऽयमकृतास्त्रश्च राघवः ।। ,, ,, (6)

மாரீசன், ராவணன் ஸீதையைத் தூக்கிக்கொண்டு போகாமல் இருக்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் ராமருடைய வயதை வேண்டுமென்றே குறைத்துச் சொல்லி இருக்கக்கூடுமென்று நினைக்கலாம். ஆனால் அவன் சொன்னது ஸத்யம்தான் என்பதற்கு ஸீதையே ஸாக்ஷியாக இருக்கிறாள். நடுக்காட்டில் ராவணன் ஸீதையிடம் வந்து "நீ யார்? நீ ஏன் இங்கே தனியாக இருக்கிறாய்?" என்று கேட்டதற்கு ஸீதை தனக்கு ஸ்வபாவ ஸித்தமான ருஜுத் தன்மையினால் அவனிடம் சொல்லுவதாவது:—

दुहिता जनकस्याहं मैथिलस्य महात्मनः ।

सीता नाम्नास्मि भद्रं ते रामस्य महिषी प्रिया ।।

उषित्वा द्वादश समा इक्ष्वाकूणां निवेशने ।

भुञ्जानामानुषान् भोगान् सर्वकामसमृद्धिनी ।।

ततस्त्रयोदशे वर्षे राजामन्त्रयत प्रभुः ।

अभिषेचयितुं रामं समेतो राजमन्त्रिभिः ।। அர. 47 (3,5)

मम भर्ता महातेजा वयसा पञ्चविंशकः ।।

अष्टादश हि वर्षाणि मम जन्मनि गण्यते । (10,11)

"நான் மிதிலாதிபதியான ஜனகரின் குமாரி; என் பெயர் ஸீதை; நான் ராமருடைய பிரியமான பத்நீ; நான் இக்ஷ்வாகு வம்சத்தாருடைய அரண்மனையில் திவ்ய போகங்களை அனுபவித்துக் கொண்டு எல்லாவிதமான ஸுகங்களுடன் பன்னிரண்டு வருஷங்கள் இருந்து வந்தேன்; பிறகு பதின்மூன்றாவது வருஷத்தில் மஹாராஜர் மந்திரிகளுடன் ஆலோசித்து ராமருக்கு அபிஷேகம் செய்விக்கத் திர்மானித்தார்; .... அப்பொழுது மஹாதேஜஸ்வியான என் பர்த்தாவிற்கு வயது இருபத்தைந்து; நான் பிறந்து பதினெட்டு வருஷங்கள் ஆகி இருந்தன."

ராமர் காட்டிற்கு புறப்படும்போது அவருக்கு வயது இருபத்தைந்தென்றும், அதற்கு முன்னால் தம்பதிகள் அரண்மனையில் தங்கியிருந்தது பன்னிரண்டு வருஷங்கள் என்றும் வ்யக்தமாய் தெரிகிறபடியால் விவாஹ ஸமயத்தில் அவருக்கு பதின்மூன்றாவது வயது என்பதில் ஸந்தேஹமில்லை. தனக்கும் ராமருக்கும் ஏழு வருஷம் வயது வித்யாஸம் என்று ஸீதையின் வார்த்தையிலிருந்தே தெரிகிறபடியால் அவளுக்கு விவாஹமாகும்போது ஆறாவது வயதென்று தெரிகிறது. இது மிகவும் இளம்பிராயமாகத் தோன்றலாம். ஐந்தாவது வயதிலேயே, சில ஸமயத்தில் அதற்கும் முன்னாலேயே, விவாஹம் செய்து கொள்ளலாம் என்று சாஸ்திரம் விதிக்கிறபடியால், தர்மானுஷ்டானத்தில் மிகவும் ஈடுபட்டு க்யாதி பெற்றிருந்த ஜனகமஹாராஜன் தன் பெண்ணுக்குக் குழந்தைப் பருவத்திலேயே கல்யாணம் செய்துவிட வேண்டுமென்று எண்ணியிருந்தார். ஆனால் சிவதனுஸ்ஸை வளைக்க வேண்டுமென்று ஒரு நியமம் ஏற்படுத்தியிருந்தபடியாலும், வளைக்க முடியாமல் போனவர்களினால் ஏற்பட்ட தொந்தரவினாலும், ஒரு வருஷத்திற்குமேல் தாமதமாகி விட்டது.

ஸீதையின் விவாஹம் ருதுவான பிற்பாடுதான் நடந்ததென்று சொல்வதற்கு நினைத்த ஒருவர் அவள் பூமியிலிருந்து ஜனகமஹாராஜனால் எடுக்கப்படும்போதே ஏழு, எட்டு வயதுள்ளவளாக இருந்திருக்கலாம் என்று சொல்லுகிறார். அப்படியானால் விவாஹ ஸமயத்தில் அவளுக்கு வயது பதிமூன்று, பதினான்கு இருக்கவேண்டும். ராமரை விட பெரியவளாகவும் இருக்கும்படி ஏற்படும். அதே மனப்பான்மையுள்ள

पतिसंयोगसुलभं वयो दृष्ट्वा तु मे पिता ।
चिन्तामभ्यगमद्दीनो वित्तनाशादिवाधन: அயோ. 118 (34)

"பதிஸம்யோகத்திற்கு உசிதமான வயது அடைந்துவிட்டதைப் பார்த்து என் பிதா கவலைப்பட்டார்" என்ற வாக்யத்தை உதாஹரிக்கிறார்; பதிஸம்யோகம் என்பது விவாஹத்தையே குறிக்குமே தவிர, ஸம்போகத்தைக் குறிக்காது; ராமருக்கும் ஸீதைக்கும் ஒரே வயது என்பதைக் காட்டுவதற்காக,

तुल्यशीलवयोवृत्तां तुल्याभिजनलक्षणाम् ।
राघवोऽर्हति वैदेहीं तं चेयमसितेक्षणा ॥ ஸுந். 16 (5)

என்று ஹநுமார் சொல்லும் வாக்யத்தைப் பிரமாணமாகச் சொல்லுகிறார்கள். அவ்விடத்தில் "துல்ய" என்கிற சப்தமானது "உசிதம்" என்கிற அர்த்தத்தில் உபயோகப்படுத்தியிருக்கிறதே தவிர, "ஸமமான" என்கிற அர்த்தத்தில் உபயோகப்படுத்தவில்லை என்பது அந்த சுலோகத்திலேயே ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஸீதையினுடைய சீலமும், விருத்தமும், குலமும், ராமருடைய சீலம், விருத்தம், குலம் இவைகளுடன் ஒன்றாக

இருந்திருக்க முடியாது. இதிலிருந்தே "துல்ய" என்பதற்கு, "தகுந்த" என்றுதான் அர்த்தமென்று நன்ருய் தெரிகிறது.

ஸீதையை ராமருக்குக் கொடுத்தது தசரதர் என்பது வாஸ்தவம்தாஞ என்பதை கவனிப்போம். ஸீதையை ராமருக்கு ஸாக்ஷாத்தாக கைபிடித்துக் கொடுத்தது ஜனக மஹாராஜன் என்பதில் ஸந்தேஹமில்லை. சிவதனுஸ்ஸை வளைத்து நாண் பூட்டுகிறவருக்குப் பெண்ணைக் கொடுப்பதாக ஜனகர் பிரதிக்ஞை செய்திருக்கும்போது அதை வளைத்து நாண் பூட்டும் போது ஒடித்த ராமர் அந்த ஸீதையை ஸம்பாதித்தவராக ஆகிருர். இந்த ஸந்தர்ப்பத்தில் தசரதருக்கு எவ்விதப் பங்கும் கிடையாது. அவருக்கு இவ்விஷயமே ஜனகருடைய தூதர்கள் பின்னல் வந்து சொன்ன பிறகுதான் தெரியும். ஆகையால் ஸீதையை ராமருக்குக் கொடுத்தது தசரதர் என்பது பொருத்தமில்லையென்று தோன்றக்கூடியதே. ஆனல் வால்மீகி மஹரிஷி அவ்விதம் தோன்றுவதற்கு இடமன்னியில் நன்கு விஸ்தாரமாக வர்ணித்திருக்கிருர். ராமர் தனுஸ்ஸை எடுக்கும் பொழுது ஸீதை தனக்குக் கிடைக்கப் போகிருள் என்ற எண்ணம் அவருக்குக் கிடையாது. தனுஸ் ஒடிந்துபோன பிற்பாடு ஜனகர் பெண்ணைக் கொடுக்க வந்தபோது ராமர் கண்டிப்பாய் மறுத்துவிட்டார். இவ்வித ராஜகுமாரன் தனக்கு மாப்பிள்ளையாய் வரவேண்டுமென்ற ஆவலுடன் தானம் செய்வதற்காக ஜனகர் கையில் ஜலபாத்திரத்தையும் தூக்கிவிட்டார். ஆனலும் தசரதருடைய அபிப்ராயம் தெரியாமல் அவளைப் பெற்றுக் கொள்ள ராமர் மறுத்துவிட்டார்.

ततोऽहं तत्र रामाय पित्रा सत्याभिसन्धिना ।
निश्चिता दातुमुद्यम्य जलभाजनमुत्तमम् ।:

दीयमानां न तु तदा प्रतिजग्राह राघवः ।
अविज्ञाय पितुश्छन्दमयोध्याधिपतेः प्रभोः ॥ அயோ. 118 (50,51)

*விவாஹம் என்பது ராமரை மாத்திரம் பொருத்த தல்ல. ராமர் தன் இஷ்டப்படி நடத்தக்கூடிய காரிய மாக இருந்தாலும் தன்னுடைய தகப்பனுர் என்ன சொல்லுகிருரோ அவ்விதமே செய்யும் ஸ்வபாவத்தை யுடையவர். அவர் சொன்னபடி கேட்பதில் தனக்கு ஆபத்து நேரிட்டாலும் அதைப் பொருட்படுத்த மாட்டார். பொதுவாகவே தகப்பனுர் சொன்ன வார்த் தையைக் கேட்டு யாருமே கெட்டுப்போனது இடையாது என்ற நிச்சயத்தோடு கூடியவர்.*

पितुर्हि वचनं कुर्वन् न कश्चिन्नाम हीयते ॥ அயோ. 21 (37).

*அவர் "ராஜா உத்திரவு செய்தால் நான் நெருப்பில் விழுவேன்; க்ரூரமான விஷத்தை விழுங்குவேன்; ஸமுத் திரத்தில் மூழ்குவேன்; சொல்லுகிறவர் எனக்கு குரு, தகப்பனுர், ராஜா, என்னுடைய ஹிதத்தைக் கோருகிறவர்."*

अहं हि वचनाद्राज्ञः पतेयमपि पावके ॥
भक्षयेयं विषं तीक्ष्णं मज्जेयमपि चार्णवे ।
नियुक्तो गुरुणा पित्रा नृपेण च हितेन च ॥ அயோ. 18 (28,29)

*என்று பெற்ருேர்களின் வார்த்தையில் தீவ்ரமான மதிப்பு வைத்திருந்த ராமர் தனக்கு பாதகம் ஏற்பட்டா லும்கூட அதன்படி நடக்க ஸித்தமாயிருந்தபோது விவாஹமென்ற முக்யமான விஷயத்தில், அதிலும் தன் குலத்தையும், ராஜ்யத்தையும் கவனித்துத் தீர்மானிக்க*

வேண்டிய விஷயத்தில் தகப்பனுர்தான் பொறுப்பு எடுத்துக் கொண்டு நிர்மானிக்க வேண்டியது, அவர் இந்த ஸம்பந்தத்தில் திருப்திப்பட்டு ஸீதையை ஒப்புக் கொள்ளும்படி சொன்னுல் நல்லது, அப்படிக்கன்னியில் ராமரை அயோத்திக்குத் திரும்பிவிடும்படி சொன்னுலும் அதுவும் நல்லது என்றபடி ராமர் மிகவும் உதாஸீன முறையில் இருந்திருக்கிருர். இந்த பூதேவியின் குமாரியான பெண்ணின் அழகில் கொஞ்சமேனும் ராமர் ஈடுபட்டிருந்தால் அவ்விதம் உதாஸீனமாக இருந்திருக்க முடியாது. ஆகையினுல் ஜனகருடைய பிரதிக்ஞையை நிறைவேற்றுவதற்காக ஸீதையை ராமர் ஒப்புக் கொள்ளவில்லை; தான் தனுஸ்ஸை வளைத்ததற்காகவும் ஒப்புக்கொள்ளவில்லை; அவர் ஒப்புக்கொண்டதற்குக் காரணம் இந்த ஸம்பந்தத்திற்கு தசரதர் ஸம்மதம் கொடுத்ததே ஆகும். அவர் ஸம்மதிக்காத விஷயத்தில் இவ்விவாஹம் நடந்தே இராது. ஆகையால் ஸீதையை ராமருக்கு கொடுத்தது தசரதருடைய ஸம்மதிதான். பிற்பாடு ஸீதை தன்னுடைய அபிமானத்திற்கு நல்ல பாத்திரமென்று ராமர் தெரிந்துகொண்ட பிறகு இவ்விதமான உத்தமமான பத்னியைக் கொடுத்ததற்கு மிகவும் கிருதக்ஞுக இருந்தார். அவருக்கு எல்லா விஷயங்களிலும் தர்மம் பிரதானமே தவிர அர்த்தத்திற்காவது காமத்திற்காவது இடம் கொடுப்பது அவர் ஸ்வபாவத்தில் கிடையாது.

विद्धि मामृषिभिस्तुल्यं केवलं धर्ममास्थितम् ॥ அயோ. 19 (20)

"என்னை தர்மத்தில் மாத்திரம் நிலைபெற்றவனுக, ரிஷிகளுக்கு ஸமானனுகத் தெரிந்துகொள்". அவருக்கு ஸீதையைவிட தர்மமே முக்யமென்பதை அவரே ஸீதையுடன் பேசும்போது வ்யக்தமாய்ச் சொல்லுகிருர்.

अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम् ।

न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः ॥ அர. 10 (19)

'என்னுடைய உயிரை விட்டாலும் விடுவேன்; விட்டாலும் விடுவேன்; லக்ஷ்மணனை விட்டாலும் விடுவேன். பிரதிக்ஞை செய்துவிட்டு, அதிலும் பிராஹ்மணர்களுக்கு பிரதிக்ஞை செய்துவிட்டு, அதை விடவே மாட்டேன்". இந்த வாக்யம் மிகவும் ஸத்யமென்பதை ராமர் ராவண ஸம்ஹாரமான பிற்பாடு லங்கையில் ஸீதை அக்னிப்பிரவேசம் செய்யும்படி பார்த்துக் கொண்டிருந்ததிலிருந்தும், பின்னால் அவள் கர்ப்பிணியாயிருக்கும்போது காட்டிற்கு அனுப்பியதிலிருந்தும், வ்யக்தமாய்த் தெரிகிறது.

மாரீசன் ராமரைப்பற்றிச் சொல்லும்போது அவர் தர்மமே விக்ரஹமெடுத்தவர்,

रामो विग्रहवान् धर्मः । அர. 37 (13)

என்று சொல்லுகிறான். அதில் பெற்றோர்கள் சொன்னபடி கேட்கவேண்டியது என்கிற ஸாதாரண தர்மத்தை ராமர் மறந்திருப்பாரா! இவ்விஷயத்தைப்பற்றி ராமாயணத்தில் ஏராளமாகக் காணும் வாக்யங்களை உதாஹரிப்பது ஸாத்யமாகாது. ஆனாலும் ராமர் ஸீதையிடத்தில் அபிமானம் வைத்ததற்குக் காரணம் தகப்பனார் கொடுத்த நன்கொடை என்பதுதான் என்பதைக் காட்டக்கூடிய சில வாக்யங்களை மாத்திரம் குறிப்பிடப்பட்டது. ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸீதாகல்யாணத்தை வால்மீகி வர்ணித்திருக்கும் ரீதியில் ஸ்வாரஸ்யமாய் வாசித்துக்கொண்டு போகும்போது அவரைப்படுபவர்களுக்கு அநேக விஷயங்கள் மனதில் நன்கு பதியாமல் இருக்கக்கூடியது ஸஹஜம். அவைகளையும் கொஞ்சம் எடுத்துக்காட்ட உத்தேசம்.

ஸித்தாசிரமத்திலிருந்து முனிவர்கள் விசுவாமித்ரரை முன்னிட்டுக்கொண்டு ராமலக்ஷ்மணர்கள் ஸஹிதமாகப்

புறப்பட்டு மிதிலை சென்று ஜனகரிடம்போய் அவரால் நன்கு வரவேற்கப்படும்போது இவ்வழகான பாலகர்கள் யார் என்று மிகவும் குதூஹலத்துடன் ஜனகர் கேட்கிறார். அதற்கு விசுவாமித்ரர் "இவர்கள் தசரதருடைய புத்ரர்கள். தனுஸ்ஸைப் பார்க்க விரும்புகிறார்கள். அதைப் பார்த்துவிட்டு ராஜகுமாரர்கள் திரும்பிப் போய் விடுவார்கள்." என்று சொல்லுகிறார்.

एतद्दर्शय भद्रं ते कृतकामौ नृपात्मजौ ।
दर्शनादस्य धनुषो यथेष्टं प्रतियास्यतः ।। பால. 66 (6)

அதன் பிறகுதான் ஜனகர் அந்த தனுஸ்ஸின் வரலாற்றைச் சொல்லி, அதை வளைக்கிறவருக்கு பெண்ணைக் கொடுப்பதாக பிரதிக்ஞை செய்ததின்பேரில் அனேகர் வந்து வளைக்க முடியாததினால் கோபம் கொண்டு, மிதிலையை ஒரு வருஷம் முற்றுகை போட்டதாகவும் கடைசியில் பகவானுடைய அனுக்ரஹத்தினால் அவர்கள் விரட்டப்பட்டார்கள் என்றும் வர்ணிக்கிறார். பிற்பாடு "இவ்வில்லை ராமர், லக்ஷ்மணர் இருவருக்கும் காட்டுகிறேன். ராமர் நாண் பூட்டிவிட்டால் அவருக்கு என் பெண் ஸீதையைத் தருகிறேன்" என்று முடிக்கிறார்.

रामलक्ष्मणयोश्चापि दर्शयिष्यामि सुव्रत ।
यद्यस्य धनुषो रामः कुर्यादारोपणं मुने ।
सुतामयोनिजां सीतां दद्यां दाशरथेरहम् ।। பால. 66 (26)

விசுவாமித்ரர், இரண்டு ராஜபுத்ரர்களும் தனுஸ்ஸைப் பார்க்க ஆசைப்படுவதாகச் சொன்னபோதிலும், ஜனகரும் இருவர்களுக்கும் காட்டுவதாகச் சொன்ன போதிலும், ஸீதையைக் கொடுப்பதாகச் சொல்லும்

போது ராமரை மாத்திரம் குறிப்பிட்டிருக்கிறார் என்பதை கவனிக்க வேண்டும். அவர் ஸகல சாஸ்திரங்களிலும் கியாதி பெற்றவராயிருந்தபடியால், தனுஸ்ஸை எடுக்கும்படி இரண்டு ராஜகுமாரர்களிடத்திலும் சொன்னால் உசிதமாகாது என்று நன்கு உணர்ந்தவர். இரண்டுபேர்களும் தேவதைகளுக்குத் துல்யமான ப்ராக்ரமத்தோடு இருக்கிறார்கள் என்றும் ஒருவருக்கொருவர் உயரத்திலும் ஜாடையிலும் சேஷ்டிதங்களிலும் ஒரே மாதிரி இருக்கிறார்கள் என்றும் ஜனகரே சொல்லுகிறார்.

इमौ कुमारौ भद्रं ते देवतुल्यपराक्रमौ ।। பால. 50 (17)
परस्परस्य सदृशौ प्रमाणेङ्गितचेष्टितैः ।। ,, ,, (21)

இருவருமே தனுஸ்ஸை எடுத்து வளைத்துவிட்டால் அவர் ஸீதையை யாருக்குக் கொடுப்பது? மூத்தவர் என்ற முறையில் ராமருக்குக் கொடுத்தால், வில்லை வளைக்கிறவனுக்குப் பெண்ணைக் கொடுக்கிறேனென்று செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்றுவதற்கு லக்ஷ்மணனுக்குக் கொடுக்க இரண்டாவது ஸீதை கிடையாதே? தவிரவும் விசுவாமித்ரராவது ஜனகராவது தனுஸ்ஸை எடுக்கும்படி முதலில் லக்ஷ்மணனைப் பார்த்துச்சொல்லி அவன் வளைத்திருந்தாலும், ஏதேனும் காரணத்தினால் முதலில் ராமர் எடுத்தும் வளைக்கமுடியாமல் போய் லக்ஷ்மணன் வளைத்து விட்டாலும், ராமருக்கு விவாஹம் ஆகாமல் இருக்கும்போது லக்ஷ்மணனுக்குப் பெண்ணை ஜனகர் கொடுக்கமுடியுமா? அதைத்தான் லக்ஷ்மணன் ஒப்புக் கொள்வானா? அதற்கு விசுவாமித்ரர் இடம் கொடுப்பாரா? தமையனுக்கு விவாஹம் ஆகாமல் இருக்கும் போது இளையவன் விவாஹம் செய்து கொள்ளுவது பெரிய பாபமென்றும், அப்பாபம் அவ்விருவர்களுக்கும் உண்டென்பதுடன், கூடவிருந்து நடத்தினவர்களுக்கும் உண்டென்று சாஸ்திரம் சொல்லுகிறது; தமையனார்

ஸந்நியாஸியாகப் போய்விட்டாலோ, வேறு குறிப்பிட்ட ஸந்தர்ப்பங்களிலோ மாத்திரம் அவ்விதம் விவாஹம் செய்து கொள்ள ஸாஸ்திரம் ஸம்மதிக்கிறது. இவ்வித ஸந்தேஹத்திற்கு எவ்வித இடமுமன்னியில் ஜனகர் நடந்து கொண்டார். அதாவது, விசுவாமித்ரருடைய வேண்டுகோளின்படி தனுஸ்ஸை இரண்டுபேருக்கும் காட்டலாம், ஆனால் ராமர்தான் எடுத்து வளைக்கவேண்டு மென்று குறிப்பிட்டார். இது மிகவும் நியாயம் என்று விசுவாமித்ரரும் உணர்ந்தார். எவ்வித ஸந்தேஹத்திற்கும் இடமன்னியில் இருக்கவேண்டுமென்று அவர் ஜனகரைப்பார்த்துச் சொல்லும்போது தனுஸ்ஸை ராமருக்குக்காட்டும் என்று ஜனகரிடம் சொல்லுகிறார்.

जनकस्य वचः श्रुत्वा महामुनिः
धनुर्दर्शय रामाय इति होवाच पार्थिवम् ॥ பால. 67 (1)

ஆனால் இருவரும் தனுஸ்ஸைப் பார்ப்பதில் ஜனகருக்கு ஆக்ஷேபணை இல்லாததினால், இருவருக்குமே காட்டும்படி விசுவாமித்ரரைக் கேட்டுக்கொள்கிறார்.

दर्शयैतन्महाभाग अनयो राजपुत्रयोः । பால. 67 (11)

ஆனால் தர்மத்தில் ஊறின விசுவாமித்ரர், ராமர் மாத்திரம் பார்த்தால் போதுமென்று ராமரை மாத்திரம் பார்த்துச் சொல்லுகிறார்:

विश्वामित्रस्तु धर्मात्मा श्रुत्वा जनकभाषितम् ।
वत्स राम धनुः पश्य इति राघवमब्रवीत् ॥ பால. 67 (12)

பிறகு ராமர் பெட்டியின் மூடியைத் தூக்கி உள்ளே இருக்கும் தனுஸ்ஸைப் பார்க்கிறார். ஸித்தாசிரமத்தி

விருந்து புறப்படும்போது ஜனகரிடம் பார்க்க வேண்டியதாக ஒரு அற்புதமான தனுஸ் இருப்பதாக ராமர் தெரிந்து கொண்டார். அந்த தனுஸ்ஸைப் பார்க்க ராஜகுமாரர்கள் விரும்புவதாக விசுவாமித்ரர் ஜனகரிடம் சொன்னார். இப்பவும் விசுவாமித்ரர் ராமரைப் பார்க்கும்படி சொல்லி இருக்கிறார். ராமர், அப்படியே பார்த்தாய் விட்டது; அதற்குமேல் ஏதேனும் செய்வதற்கு ராமருக்கு எவ்வித ஆக்ஞையாவது அனுமதியாவது இல்லை; இந்த தனுஸ்ஸைப் பார்த்தவுடன் அதனுடைய கனம், விஸ்தாரம், பலம் இவைகள் ராமரைத் தூண்டிவிட்டன. ஆனால் விசுவாமித்ரர் அனுமதி கொடுக்காமலிருந்தபடியால், ராமர் விசுவாமித்ரரை நிமிர்ந்து பார்த்து அவருடைய அனுமதியைக் கேட்கிறார்.

मञ्जूषां तामपावृत्य दृष्ट्वा धनुरथाब्रवीत् ॥
इदं धनुर्वरं ब्रह्मन् संस्पृशामीह पाणिना ।
यत्नवांश्च भविष्यामि तोलने पूरणेऽपि वा ॥ பால· 67 (13,14)

"நான் இந்த தனுஸ்ஸைக் கையால் தொடலாமா? அதை தூக்குவதற்கு பிரயத்னம் செய்யலாமா? அதை இழுத்து நாண் பூட்டலாமா?" என்று விசுவாமித்ரரைப் பார்த்தே ராமர் கேட்கிறார். ஆனால் ஜனகமஹாராஜன் தன்னுடைய தனுஸ்ஸாக இருப்பதால், உடனே அப்படியே செய்யலாமென்று சொல்லுகிறார். ஆனால் இது ராமருக்குப் போதாது அவர் குருவின் ஸமீபத்திலிருந்து அவருடைய அனுமதியையே கேட்டிருக்கிறபடியால் குருவின் அனுமதியை எதிர்பார்த்தே இருந்தார். ஆகையால் விசுவாமித்ரரும் ராமரைப்பார்த்து, அப்படியே செய்யலாமென்று சொன்னார். அதன் பிறகுதான், ராமர் வில்லைக் கையில் எடுத்தது. அப்பொழுதும் அவர் தனுஸ்ஸை எடுத்தது ஜனகரின் வாக்யத்தின்பேரில்

அல்ல, விசுவாமித்ரரின் வாக்யத்தின் பேரில்தான் என்பதை வால்மீகி சுட்டிக் காட்டுகிறார்.

बाढमित्येव तं राजा मुनिश्च समभाषत ।
लीलया स धनुर्मध्ये जग्राह वचनान्मुने: ॥ பால. 67 (15)

பிற்பாடு ராமர் தனுஸ்ஸை வளைத்து நாண்பூட்டி இழுக்கும்போது அது மத்தியில் ஒடிந்துவிட்டது; அப்பொழுது ஏற்பட்ட சப்தத்தில் பூமி நடுங்கிற்று. ஜனக மஹாராஜன், விசுவாமித்திரர், இவ்விரு ராஜகுமாரர்கள் இவர்களைத்தவிர அங்குள்ள மற்றும் யாவரும் மூர்ச்சையடைந்தார்கள். இந்த ஆச்சர்யமான ஸம்பவம் எதிர்பார்க்கப் படவில்லை. அது ஏற்பட்டவுடன் ஜனகருக்கு ஏற்பட்ட ஸந்தோஷத்தில் தன்னுடைய பிரதிக்ஞைப்படி உடனேயே ஸீதையை ராமருக்குக் கொடுத்துவிட யத்தனித்தார். ஆனால் ஜனகருடைய மனோபாவத்தில் அந்த பிரதிக்ஞை எவ்வளவு முக்யமாகத் தோன்றினாலும் விசுவாமித்ரராவது ராமராவது, வில்லை வளைத்தால் ஸீதையை ஒப்புக்கொள்ளுவதாகச் சொன்னது கிடையாது என்பதை மறந்துவிடக்கூடாது. விசுவாமித்ரர் ஸம்பந்தப்பட்டமட்டில் அந்த தனுஸ்ஸின் வரலாறையும் ஜனகருடைய உத்தேசத்தையும் பற்றி ஜனகர் சொல்லக் கேட்டிருக்கிறார். ஆனால் அவ்வுத்தேசத்தை நடத்திக் கொடுப்பதாக ஏற்றுக்கொள்ளவில்லை. அவ்விஷயமாக ஒன்றுமே சொல்லாமல் தனுஸ்ஸை ராமருக்குக் காட்டும் என்று மாத்திரம் சொன்னார். ராமர் ஸம்பந்தப்பட்டமட்டில், ராமருக்கும் ஜனகருக்கும் நேரடியாகப் பேச்சே இல்லை. தனுஸ்ஸை எடுப்பதற்கு விசுவாமித்ரரை அனுமதி கேட்டாரே தவிர, ஜனகரைக் கேட்கவே இல்லை. ஆகையால் ஸீதையை ராமருக்கு கொடுக்க ஜனகர் பிரயத்னப்பட்டபோது, தன் தகப்பனாருடைய அபிப்ராயம் தெரிந்துகொள்ளாமல்

கொள்ள மறுத்துவிட்டார். மேல் என்ன செய்வது என்று திகைத்து ஜனகர் விசுவாமித்ரரிடம் திரும்பினார். ஆனால் ராமர் செய்ததுதான் உசிதமென்று அம்முனிவருக்கு நன்றாகத்தெரியும். இந்த ஸ்திதியில் தன் பிரதிக்ஞையை நிறைவேற்றவேண்டுமானால் விசுவாமித்ரராவது, ராமராவது, சொந்த நிலைமையில் யாதொன்றும் செய்யமுடியாதென்றும், அப்பொறுப்பு தசரதரிடமே இருக்கிறதென்றும் ஜனகர் நன்கு உணர்ந்தார். பிறகு விசுவாமித்ரரிடம் ஆலோசனை செய்துகொண்டு தசரதருக்குத் தூதர்களை அனுப்பினார். இங்கு நடந்த ஸம்பவங்களை அவரிடம் சொல்லி, அவர் இந்த ஸம்பந்தத்தில் பிரீதியுள்ளவராக இருந்தால், அவரை அழைத்துவரும்படி சொல்லி அனுப்பினார். ஜனகருடைய பிரதிக்ஞையை நடத்திக் கொடுக்கவேண்டியது தசரதரைப் பொறுத்தே இருந்தபடியால் அவ்விஷயத்தைக் குறிப்பிட்டே சொல்லி அனுப்பினார்.

प्रतिज्ञां तर्तुमिच्छामि तदनुज्ञातुमर्हसि ।। பால. 68 (13)

प्रतिज्ञां मम राजेन्द्र निर्वर्तयितुमर्हसि ।। ,, ,, (14)

प्रीयमाणं तु राजानं आनयन्तु सुशीघ्रगाः ।। ,, 67 (26)

தூதர்கள் மூலமாக விஷயத்தைத் தெரிந்துகொண்ட தசரதர் தன்னை விட்டுச்சில நாட்களுக்கு முன் பிரிந்து சென்ற குமாரர்கள் விசுவாமித்ரருடன் ஸௌக்யமாயிருக்கிறார்கள் என்றே முதலில் ஸந்தோஷத்தையடைந்தார். இரண்டாவதாக ராமருடைய வீர்யம் ஜனகருடைய ஸதஸ்ஸில் காட்டப்பட்டதைப்பற்றி மிகவும் ஸந்தோஷித்தார். ஜனகர் தன் பெண்ணை ராமருக்கு கொடுக்க நினைக்கிறார் என்பதில் ஏற்பட்ட ஸந்தோஷம்

மூன்றாவதாக. அவர் வஸிஷ்டர் முதலானவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்:—

गुप्तः कुशिकपुत्रेण कौसल्यानन्दवर्धनः ।।
लक्ष्मणेन सह भ्राता विदेहेषु वसत्यसौ
दृष्टवीर्यस्तु काकुत्स्थो जनकेन महात्मना
संप्रदानं सुतायास्तु राघवे कर्तुमिच्छति । பால. 69 (17,19)

ஆனால் விவாஹ விஷயத்தைப்பற்றி, தான் சொந்தப் பொறுப்பில் தீர்மானம் செய்வது நியாயமில்லையென்று உணர்ந்தபடியால் அவர் தன் மந்திரிகளிடம் அபிப்ராயம் கேட்கிறார். அவர்களுக்கும் திருப்தியாயிருந்ததேயானால், தாமதமன்னியில் மிதிலாபுரிக்குப் புறப்படலாமென்று சொல்லுகிறார்.

यदि वो रोचते वृत्तं जनकस्य महात्मनः ।। பால. 68 (19)
पुरीं गच्छामहे शीघ्रं माभूत् कालस्य पर्ययः ।। ,, ,, (20)

இப்பொழுதுதான் ஸ்ரீ ராமரின் விவாஹம் உறுதிப் படுவதால், தசரதர்தான் ஸ்ரீ ராமருக்கு ஸீதையைக் கொடுத்தவராகிறார்.

## அத்யாயம் 6

## விவாஹச் சிறப்பு

தசரதரின் அபிப்ராயத்திற்கு யாவரும் உத்ஸாஹத்துடன் இணங்கினபடியால் மறுநாள் காலையில் புறப்பட்டு ஸகல பரிவாரங்களுடன் மிதிலைபோய் ஜனக மஹாராஜனால் வரவேற்கப்படும் போது அவர் தசரதரிடம் "நாளை காலையில் யாகம் முடிந்ததும் விவாஹத்தை நடத்திக் கொள்ளுங்கள்" என்று சொன்னதற்கு தசரதர் தன்னுடைய பெருந்தன்மைக்குத் தக்கபடி பதில் சொல்லுகிறார்.

प्रतिग्रहो दातृवशः श्रुतमेतन्मया पुरा ॥

यथा वक्ष्यसि धर्मज्ञ तत् करिष्यामहे वयम् । பால. 69 (14,15)

"தானத்தைப் பெற்றுக்கொள்ளுவது தானத்தைக் கொடுப்பவரைப் பொருத்திருக்கிறது என்று முன்னமேயே கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகையால் தாங்கள் எப்படிச் சொல்லுகிறீர்களோ அந்தப்படி நாங்கள் செய்கிறோம்". இவ்விதம் தசரத மஹாராஜன் உண்மையோடும் மனப்பூர்வமாயும் அளித்த இந்த உத்தமமான பதிலானது ஜனகருக்கு விசேஷமான ஆச்சர்யத்தைக் கொடுத்தது. தன்னுடைய புத்ரியை தசரதர் தன் புத்ரனுக்கு விவாஹம் செய்துகொள்ளுவதாக ஏற்றுக் கொண்டதையே பெரும் பாக்யமாக நினைத்தார். அப்படியிருக்கையில் தன்னைக் கொடையாளியாக பாவித்து தசரதர் தானம் வாங்க வந்தவர் போலச் சொன்னது மிகவும் ஆச்சர்யத்தைக் கொடுத்தது.

धर्मिष्ठं च यशस्यं च वचनं सत्यवादिनः ॥

श्रुत्वा विदेहाधिपतिः परं विस्मयमागतः । பால. 69 (15,16)

பதிலிலிருந்து தசரதர் எவ்வளவு பெருந் தன்மை உள்ளவர், எவ்வளவு வினயத்தோடு கூடினவர் என்பதை நன்கு உணர்ந்து தசரதரிடம் ஜனகருக்கு ஏற்பட்ட மதிப்புக்கு அளவே இல்லை. ஸாமான்யமாக, தானத்தில் கொடுப்பவர் கை மேலேயும், வாங்குபவர் கை கீழேயும் இருப்பது வாஸ்தவம். அதே மனோபாவத்தைக் கன்யாதான விஷயத்திலும் தசரதர் வைத்துக் கொண்டது ஜனகருக்கு மிகவும் ஆச்சர்யத்தை உண்டுபண்ணியது. ஜனகர் ஸாமான்ய உலக ரீதியில் மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் பெண்வீட்டுக்காரர்களை அவமதித்து நடத்துவதைப் பார்த்திருக்கிறார். பெண்வீட்டுக்காரர்களைவிட அந்தஸ்தில் குறைந்திருந்தாலும், ஸமானமாக இருந்தாலும், மாப்பிள்ளை வீட்டுக்காரர்களுடைய அவமதிப்புக்கு உள்ளாகவேண்டியதுதான்; தேவேந்திரனுக்கு ஸமமாக இருந்தாலும் பெண்ணைப்பெற்றவருக்கு அவமதிப்பு உண்டு; என்பது உலக வழக்கம்.

सदृशाच्चापकृष्टाच्च लोके कन्यापिता जनात् ।
प्रधर्षणमवाप्नोति शक्रेणापि समो भुवि ।। அயோ. 118 (35)

விவாஹத்திற்கு வேண்டிய வயது வந்ததைப் பார்த்து ஜனக மஹாராஜன் மிகவும் கவலைப்பட்டார்; தனக்கும் அவ்வித அவமதிப்பு ஏற்படுமே என்று மிகவும் சிந்தையுடன் இருந்துவந்தார்.

पतिसंयोगसुलभं वयो दृष्ट्वा तु मे पिता ।
चिन्तामभ्यगमद्दीनो वित्तनाशादिवाधनः ।। அயோ. 118 (34)

तां धर्षणामदूरस्थां दृष्ट्वा चात्मनि पार्थिवः ।
चिन्तार्णवगतः पारं नाससादाप्लवो यथा ।। ,, ,, (36)

இவ்விதம் தனக்கு ஸமானமான குடும்பத்திலி ருந்தோ, கீழ்பட்ட குடும்பத்திலிருந்தோ, மாப்பிள்ளை ஏற்பட்டால் அவமதிப்பு ஏற்படுமென்று பயந்துகொண் டிருந்த ஜனகருக்கு ஸூர்யவம்சத்திலிருந்து தசரதச் சக்ர வர்த்தியின் குமாரரே மாப்பிள்ளையாகக் கிடைக்கும்படி ஏற்பட்டது. ஜகத்பூராவையும் ஆண்டுவந்து, தேவராஜ னுக்கு மிகவும் நெருங்கின ஸ்நேஹிதராக இருந்து, சில ஸமயங்களில் அஸுரர்களோடு யுத்தம் செய்வதில் ஸஹாயம் செய்திருந்த தசரதரோடு ஸம்பந்தம் ஏற்படும் போது ஜனகர் ஏதேனும் அவமதி ஏற்படுமென்று நினைத் துத் தயங்கினால் அதில் ஆச்சர்யமில்லை. அப்படியிருக் கையில், தசரதர் ஜனகரிடம் ஏதோ நன்கொடை வாங்கு வதற்கு வந்தவர்போல மிகவும் விநயத்துடன் சொன்ன தைக்கேட்டு ஜனகர் ஆச்சர்யப்பட்டது மிகவும் நியாயம்தானே.

தசரதருடைய மனோபாவத்துடன் இக்காலத்திலும் ஜனங்கள் கூடியவரை நடந்து கொண்டால் ஸம்பந்தி களுக்குள் ஏற்பட்டுவரும் சச்சரவுகள் மிகவும் குறையும். ராமாயணத்தை வாசித்து அதைப் புகழும் மனிதர்கள் கூட அதில் கண்டு வர்ணிக்கப்பட்டிருக்கும் பெருந்தன் மையைக் கையாளாமலிருந்தால் அவர்கள் ராமாய ணத்தை வாசித்தது வீண் சிரமமேயாகும். அவர்கள் அவ்வுத்தம கிரந்தத்தை தொடாமல் இருப்பதே சிலாக் யம். அது வெறும் பொழுதுபோக்குக்காக எழுதின புஸ்தகம் ல.

தசரதர் மிதிலைக்கு வந்து சேர்ந்தவுடன் அவர் புத்ரர் கள் நடந்து கொண்டமாதிரியைப் பற்றிக் கொஞ்சம் சொல்லவேண்டியது உண்டு. தசரதர் அவர்களை விசுவா மித்ரரிடம் ஒப்பிவித்திருப்பதால், அம்முனிவருடைய அனுமதியில்லாமல் தாங்களாக தசரதரிடம் போய்விட முடியாது; அவர்களைப் பார்க்க எவ்வளவு ஆவலுடன்

தசரதர் இருந்தபோதிலும் அவரும்கூட அவர்களைத் தானாக, தன்னிடம் அழைத்துக் கொள்ளுவது உசிதமாகாது; தசரதர் ஜனகரிடம் பேசிக்கொண்டிருந்த போது அங்குள்ள முனிவர்கள் ஒருவருக்கொருவர் ஸந்தித்ததில் ஏற்பட்ட ஸந்தோஷத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அதன் பிறகுதான் விசுவாமித்ரருடைய ஸௌகர்யத்தை எதிர்பார்த்து அவரை முன்னிட்டுக் கொண்டு தசரதரிடம்போய் நமஸ்கரித்த புத்ரர்களைப்பார்த்து அவர் மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தார்.

अथ रामो महातेजा लक्ष्मणेन समं ययौ ॥
विश्वामित्रं पुरस्कृत्य पितुः पादावुपस्पृशन् ।
राजा च राघवौ पुत्रौ निशाम्य परिहर्षितः பால. 69 (17,18)

மறுநாள் காலையில் ஜனகருடைய அழைப்பின்பேரில் தசரதர் தன்னுடைய மந்திரிகள், பந்துக்கள் இவர்களுடன் வஸிஷ்டரை முன்னிட்டுக்கொண்டு ஜனகருடைய ஸபைக்குப் போய் சேருகிறார். அங்கே தசரதர் "இக்ஷ்வாகு குலத்திற்கே தெய்வமாயிருக்கும் வஸிஷ்ட மஹரிஷியே எல்லா காரியங்களிலும் சொல்லவேண்டிய விஷயத்தை சொல்லுவார்" என்று சொன்ன பிற்பாடு ராமருடைய வம்சாவளியை வஸிஷ்டர் எடுத்துச் சொல்லுகிறார்; ஆதிமுதல் ஸ்ரீராமர் வரை எல்லா அரசர்களையும்பற்றிச் சொல்லும்போது அவர்கள் பரிசுத்தமான குலமுள்ளவர்களாகவும், பரம தார்மிகர்களாகவும், பராக்ரமசாலிகளாகவும், ஸத்யம் தவறாதவர்களாகவும் இருந்துவந்தார்கள் என்பதைச் சொல்லிவிட்டு, "இப்பொழுது ராமர், லக்ஷ்மணர் இவர்களுக்காக உம்முடைய இரண்டு புத்ரிகளையும் நான் வரிக்கிறேன்; அவர்கள் இவ்விரு புத்ரர்களுக்கும் தகுந்தவர்களாயிருப்பதால் கொடுக்கவேண்டும்" என்று சொல்லுகிறார்.

रामलक्ष्मणयोरर्थे त्वत्सुते वरये नृप ॥

सदृशाभ्यां नरश्रेष्ठ सदृशो दातुमर्हसि ॥ பால. 70 (45, 46)

ஜனகர் ஸீதையை ராமருக்குக் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறதையனுஸரித்து தசரதரும் அதற்கு ஸம்மதித்து மிதிலைக்கு வந்திருந்தபோதிலும், பெண்ணைக் கேட்க வேண்டியது மாப்பிள்ளை வீட்டுக்காரர்களுடைய கடமை என்பதை சாஸ்திரமும். உலக ஸம்ப்ரதாயமும் விதிக்கிறபடியால் அவ்விதம் வஸிஷ்டர் கேட்டார். தனுஸ்ஸை ஒடித்தவுடன் ராமருக்கு ஸீதையைக் கொடுப்பதாகச் சொன்னாரே தவிர, லக்ஷ்மணனுக்குத் தன் பெண் ஊர்மிளையைக் கொடுப்பதாகச் சொல்லவில்லை. இந்த விவாஹம் எப்பொழுது நிர்மானம் செய்யப்பட்டது என்பது ராமாயணத்தில் வ்யக்தமாகச் சொல்லவில்லை. ஆனாலும் மிதிலைக்கு தசரதர் வந்த பிற்பாடு அஸ்தமனத்திற்கு முன்பாகவே நிர்மானமாகி இருக்க வேண்டுமென்று தெரிகிறது ஏனென்றால் அன்றைய தினமே இரண்டு பெண்களுக்கும் செய்ய வேண்டிய பூர்வாங்க கிரியைகளை ஜனகர் செய்துவிட்டு, பிறகே இரவில் விச்ராந்தி எடுத்துக்கொண்டதாகத் தெரிகிறது.

जनकोऽपि महातेजाः क्रियां धर्मेण तत्त्ववित् ।

यज्ञस्य च सुताभ्यां च कृत्वा रात्रिमुवास ह ॥ பால. 69 (19)

வஸிஷ்டர் இந்த ஸூர்யவம்சத்தில் ஆதிமுதல் புரோஹிதராக இருந்து அக்குடும்ப வரலாற்றை தசரதரைவிட நன்கு அறிந்தவராக இருந்தபடியால், அதை எடுத்துச் சொல்லும்படி தசரதர் வஸிஷ்டரைக் கேட்டுக்கொண்டது மிகவும் உசிதமாகும்.

विदितं ते महाराज इक्ष्वाकुकुलदैवतम् ।।
वक्ता सर्वेषु कृत्येषु वसिष्ठो भगवानृषिः । பால. 70 (16,17)

ஜனகருக்கு அவ்விதம் எல்லாம் அறிந்த புரோஹிதராக யாரும் இல்லாததாலும், தசரத சக்ரவர்த்தியை உத்தேசித்துத் தன்னுடைய ஸ்தானம் கொஞ்சம் கீழ்பட்டதென்று நினைத்தும், தானே தன் குடும்ப வரலாற்றைச் சொல்லுகிறார். தன்னுடைய தம்பியான குசத்வஜர் ஸாங்காச்யம் என்ற நகரத்தில் அரசனாக இருப்பதால் அவரிடம் நடக்கப்போகும் கல்யாண விஷயமாகச் சொல்லி அவரை அழைத்துவரும்படி தூதர்களிடம் சொல்லி அனுப்பி அவரையும் காலையிலேயே வரவழைத்திருந்தார். "என் தகப்பனுருக்கு இரண்டு புத்ரர்கள்: நான் மூத்தவன்; ஸாங்காச்யராஜனாக இருக்கிற இவர் என் தம்பி: நான் வெகு ஸந்தோஷத்துடன் ஸீதையை ராமருக்கும், ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும் கொடுக்க ஸம்மதிக்கிறேன்; கொடுக்கிறேனென்று முமுறை சொல்லுகிறேன்; நீங்கள் கோதானம், சிராத்தம் இவைகளை முடித்துக்கொண்டு விவாஹத்தை நடத்திக் கொடுங்கள்; இன்று சந்திரன் மகா நக்ஷத்திரத்தில் இருக்கிறார்; இன்று முதல், மூன்றாவது நாள் உத்தர பங்குனியில் இருப்பார்; அன்று விவாஹத்தை நடத்திக் கொள்ளலாம" என்று சொல்லுகிறார்.

அதன் பிறகு விசுவாமித்ரர் வஸிஷ்டருடன் கலந்து கொண்டு அவர் குசத்வஜருடைய இரண்டு பெண்களையும் பரதன், சத்ருக்னன் இவர்களுக்காக வரிக்கிறார். இதைக்கேட்ட ஜனகருக்கு அடக்கமுடியாத ஸந்தோஷம் ஏற்பட்டது. தன்னுடைய பாக்யத்தை நினைத்து அவ்விரு முனிவர்களுக்கும் கைகூப்பி, தன்னுடைய கிருதக்ஞதையைத் தெரிவிக்கிறார். "முனிசிரேஷ்டர்களான நீங்கள் இருவர்களுமே இந்த உசிதமான ஸம்பந்தத்தை ஆக்ஞாபிப்பதினுல் என் குலம் மிகவும் தன்யமாக ஆகிவிட்டது.

அப்படியே குசத்வஜனுடைய பெண்களை பரத சத்ருக்னர்கள் இருவரும் பத்னிகளாக அடையட்டும். ஒரே நாளில் நான்கு ராஜபுத்ரிகளுடைய கைகளை நான்கு ராஜபுத்ரர்களும் கிரஹிக்கட்டும்".

कुलं धन्यमिदं मन्ये येषां नो
सदृशं कुलसंबन्धं यदाज्ञापयनः स्वयम् ॥
एवं भवतु भद्रं वः कुशध्वजसुते इमे ।
पत्न्यौ भजेतां सहितौ शत्रुघ्नभरतावुभौ ॥
एकाह्ना राजपुत्रीणां चतसृणां महामुने ।
पाणीन् गृह्णन्तु चत्वारो राजपुत्रा महाबलाः ॥ பால. 72 (10,12)

பிறகு ஜனகரிடம் சொல்லிக்கொண்டு தசரதர் தன் ஜாகைக்குப் போய் அன்றைய தினமே செய்யவேண்டிய சிராத்தங்களை முடித்துக்கொள்ளுகிருர். மறுநாள் காலையில் தம் புத்திரர்களுக்கு கோதானகர்மாவைச் செய்தார்.

இந்த ஸந்தர்ப்பத்தில் ஒரு ஸம்பவம்

அதை வெகு ஜாக்கிரதையாக வால்மீகி குறிப்பிட்டிருக்கிருர். அது கதையின் போக்குக்கு அதிக அவசியமில்லாமல் போனாலும் வால்மீகி அதைக் குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதால் அதிலிருந்து நாம் ஒரு உண்மையை அறிந்துகொள்ள வேண்டுமென்பதே அவருடைய அபிப்ராயம் என்று தோன்றுகிறது. கைகேயியின் தகப்பனுரான கேகய மஹாராஜன் தன்னுடைய புத்ரன் யுதாஜித்தை, அயோத்திக்குப் போய், தான் பார்க்க விரும்புவதாகச் சொல்லி பரதனை அழைத்து வரும்படி அனுப்புகிருர். அப்படியே யுதாஜித் அயோத்திக்குப் போன ஸமயம் தசரதர் தன் புத்ரர்கள் ஸஹிதம் விவாஹ

விஷயமாக மிதிலைக்குப் போயிருப்பதாகத் தெரிந்து கொள்ளுகிறார். அவருக்கு விவாஹ விஷயமாக முதலில் தகவல் கிடைத்தது அயோத்தியில்தான். தசரதர் அயோத்தியிலிருந்து புறப்படும்போது ராமருடைய விவாஹம்தான் பிரஸ்தாவத்தில் இருந்தது. யுதாஜித்தினுடைய சொந்த மருமானை பரதனுக்கு விவாஹம் என்ற பேச்சே இல்லை. எந்த விவாஹத்திற்கும் யுதாஜித்திற்கு அழைப்பு இல்லை. ஆனாலும் தனக்கு அழைப்பு இல்லை என்பதைக் கொஞ்சம்கூட பொருட்படுத்தாமல், ராமருடைய கல்யாணமாயிருந்தாலும் தான் போக வேண்டியது அவசியமென்று நினைத்து. அவரும் அவஸரமாக மிதிலைக்குப் போய் சேர்ந்தார். கைகேயி "ராமனிடமும் பரதனிடமும் ஒரு வித்யாஸத்தையும் நான் வைத்துக்கொள்ளவில்லை. பரதனைவிட ராமன் தான் என்றால் மதிக்கத்தக்கவன். அவன் கௌஸல்யையைவிட அதிகமாக எனக்கே சுச்ரூஷை செய்கிறான்" என்கிறாள்.

रामे वा भरते वऽहं विशेषं नोपलक्षये । அயோ. 7 (35)
यथा मे भरतो मान्यस्तथा भूयोऽपि राघवः ।
कौसल्यातोऽतिरिक्तं च स तु शुश्रूषते हि माम् ॥ ,, 8 (18)

அவருடைய பந்துக்களும் அப்படியே ராமனிடத்தில் அபிமானம் வைத்திருந்ததாகத் தெரிகிறது. யுதாஜித் தன் மருமானைப் பார்ப்பதுடன் ராமருடைய கல்யாணத்தையும் பார்க்கலாமென்று வேகமாக உடனே மிதிலைக்குப் போனார். அவர் தத்கால நாகரீகத்தில் ஈடுபட்டிருந்தால் அயோத்திக்குத் திரும்பி வரட்டும் என்று அயோத்தியிலேயே தங்கி இருக்கலாம். மிதிலைக்கு பரதன் போயிருக்கிறான் என்று தெரிந்தவுடன் தானும் அங்கே போகலாமென்று நினைத்தாலும், அங்கு நடக்கப்போகும் விவாஹத்திற்கு அழைப்பு இல்லையே என்ற காரணத்

தினால் போக மறுத்திருப்பார். அப்படிக்கன்னியில் அவர் தர்மத்திலேயே வளர்ந்து ஸாத்விக ஸ்வபாவத்துடன் இருந்துவந்ததால் இவ்விதமான எண்ணங்கள் அவருக்கு வரவே இல்லை. மேலும் இக்காலத்தில் ஒரு விவாஹத்திற்கு அழைப்பில்லாமல் யாரேனும் வந்தால் அவரிடம் உதாஸீனமாகவோ, அவமரியாதையுடனே நடந்து கொள்வது ஸஹஜமாயிருக்கிறது. அவ்விதமான வக்ரமான எண்ணங்கள் தசரதரிடத்தில் கிடையாததினால், அவர் யுதாஜித்தை வெகு பிரியமாக வரவேற்று அவருக்கு விசேஷமாக ஸத்காரம் செய்தார்.

अथ राजा दशरथः प्रियातिथिमुपस्थितम् ॥
दृष्ट्वा परमसत्कारैः पूजार्हं समपूजयत् ॥ பால. 73 6,7)

இதிலிருந்து யுதாஜித்துக்கும், தசரதர் குடும்பத்திற்கும் இருந்துவந்த பரஸ்பர அபிமானமானது நன்கு வெளியாகிறது. அந்தரங்கமான ப்ரீதி இருக்கும் விஷயத்தில் மற்ற விஷயங்களைப் பொருட்படுத்தத் தோன்றாது.

யுதாஜித்து வந்து சேர்ந்த தினத்திற்கு மறுநாள் காலையில் அதாவது விவாஹத்திற்குக் குறிப்பிட்ட தினத்தில், தசரத மஹாராஜன் அதிகாலையில் எழுந்திருந்து நித்யகர்மாக்களை முடித்துக்கொண்டு புத்ரர்களுக்கு விவாஹத்திற்குப் பூர்வாங்கமாகச் செய்ய வேண்டிய காரியங்களையும் செய்துவிட்டு அந்த சுப முஹூர்த்தத்திற்குத் தக்கபடி அவர்களுக்கு அலங்காரங்கள் செய்வித்து முனிவர்களை முன்னிட்டுக்கொண்டு ஜனக மஹாராஜனுடைய யக்ஞசாலைக்குப் போகிறார். முன்னமேயே ஜனகமஹாராஜா மிதிலைக்கும் தசரதரே பிரபுவென்றும், அயோத்தி மாதிரியே பாவிக்க வேண்டும், தானும் அம்முனிவர்களுக்கு சிஷ்யன்

தானென்றும், அவர்கள் எவ்விதம் செய்ய வேண்டுமோ அப்படியே நடத்திக்கொள்ளலாமென்றும் சொல்லி இருக்கிறார்.

यथा दशरथस्येयं तथायोध्या पुरी मम ।
प्रभुत्वे नास्ति संदेहो यथार्हं कर्तुमर्हथ ॥ பால. 72 (16)

அப்படியிருந்தும் தசரதர் தான் ஏதோ நன்கொடை வாங்குவதற்கு வந்திருக்கிறவர் போன்ற மனோபாவத்துடன் இருந்தபடியால், முன் தகவல் இல்லாமல் ஜனகருக்கு முன் தானும், தன்னைச் சேர்ந்தவர்களும் போவது உசிதமில்லை என்று எண்ணி, வாசல் பக்கத்திலேயே நின்றுவிட்டார். அவருக்கு முன்னால் போய்க்கொண்டிருந்த வஸிஷ்டர் தசரதருடைய நோக்கத்தை அறிந்து, தானே ஜனகரிடம் நேரில்போய் தசரதர் வந்திருப்பதைத் தெரிவிக்கிறார்.

वसिष्ठो भगवानेत्य वैदेहमिदमब्रवीत् ।
राजा दशरथो राजन् कृतकौतुकमङ्गलैः ॥
पुत्रैर्नरवरश्रेष्ठ दातारमभिकाङ्क्षते । பால. 73 (11,12)

இதைக்கேட்டுத் தன்னுடைய அனுமதியை எதிர்பார்த்து, தசரதர் நிற்கிறார் என்பதில் மிகவும் ஆச்சரியத்தை அடைந்தார் ஜனகர். ஏற்கனவே தாமதம் ஏற்படக்கூடாதென்று பெண்களுக்கு நடத்தவேண்டிய பூர்வாங்கங்களை எல்லாம் நடத்தி, அவர் தன் பெண்களையும் விவாஹ மேடைக்கு அழைத்து வந்திருந்தார். தன்னுடைய அனுமதியை தசரதர் எதிர்பார்க்கிறாரென்று தெரிந்தவுடன் ஆச்சர்யத்துடன்,

प्रत्युवाच महातेजा वाक्यं परमधर्मवित् ।
कः स्थितः प्रतिहारो मे कस्याज्ञा संप्रतीक्ष्यते ॥

स्वगृहे को विचारोऽस्ति यथा राज्यमिदं तव
कृतकौतुकसर्वस्वा वेदिमूलमुपागताः ॥
मम कन्या मुनिश्रेष्ठ दीप्ता वह्नेरिवार्चिषः ।
सज्जोऽहं त्वत्प्रतीक्षोऽस्मि वेद्यामस्यां प्रतिष्ठितः ॥
अविघ्नं क्रियतां सर्वं किमर्थं हि विलम्ब्यते । பால. 73 (14-17)

"யார் தடுக்கிறது? யாருடைய ஆக்ஞையை எதிர் பார்க்கவேண்டும்? தன் வீட்டில் என்ன யோஜனை? உங்கள் ராஜ்யம் மாதிரிதான் இந்த ராஜ்யமும்; என்னுடைய பெண்கள் எல்லா மங்கள காரியங்களையும் நடத்திக்கொண்டு விவாஹ மேடையின் ஸமீபத்தில் வந்து அக்னியின் ஜ்வாலைபோல் பிரகாசித்துக்கொண்டு இருக்கிறார்கள். ஹே! முனிசிரேஷ்டரே! நான் ஸஜ்ஜனாக இருக்கிறேன்; உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டு இந்த மண்டபத்தில் நிற்கிறேன். விக்னமில்லாமல் எல்லாக் காரியங்களும் நடக்கட்டும். எதற்காகத் தாமதம்" என்று சொல்கிறார். இதிலிருந்து அவ்விரு அரசர்களும் எவ்வளவு விநயத்துடனும், மரியாதையுடனும், அபிமானத்துடனும் நடந்துகொண்டார்கள் என்பது நன்கு தெரிகிறது. தன்னுடைய அந்தஸ்துக்கு மதிப்புக் கொடுக்காமல் தன்னுடைய கடமையே பிரதானமென்று உணர்ந்தார்கள். அவ்விதம் நடந்து கொள்ளுவதால் தன்னுடைய கௌரவத்திற்கு எவ்விதக் குறைவும் ஏற்படாது என்பதை உலகத்தில் பந்துக்களும், ஸிநேகிதர்களும் உணர்ந்து நடந்து வருவார்களேயானால் மனஸ்தாபத்திற்கு எவ்வித இடமும் ஏற்பட அவகாசமே இராது. அவ்வுணர்ச்சி மனப்பூர்வமாக இருக்கவேண்டுமே தவிர, வாயால் மாத்திரம் வெளியிட்டால் போதாது.

இவ்வரசர்களுக்கு அங்கு இருக்கும் முனிவர்களிடத்தில் எவ்வளவு மதிப்பு இருந்தது என்பதைப் பற்றியும் குறிப்பிடுவது அவசியம். ஏதேனும் ஸஹாயத்தை அபேக்ஷித்து முனிவர்கள் அரசர்களிடம் போகும்படி ஏற்பட்டாலும், ஒரு ஸமயத்திலாவது தங்களுடைய உத்தமமான நிலைக்கு பாதகம் வரும்படியாகத் தன்னுடைய தைன்யத்தைக் காட்டிக்கொள்வதே கிடையாது. முனிவர்களுடைய வேண்டுகோளின்படி உதவி செய்ய ஸம்மதிக்கும் அரசர்களும் தாங்கள் உதவி செய்கிறோம் என்கிற எண்ணத்தையே விட்டு, அம் முனிவர்களுடைய அபேக்ஷையை நிறைவேற்றிக் கொடுக்கும்படி ஏற்பட்டது தங்களுடைய பாக்யம் என்றே கருதினார்கள். அவர்களுடைய வேண்டுகோள்களை ஆக்ஞையாகவே பாவித்து ஸந்தோஷமாக நிறைவேற்றிக் கொடுத்தார்கள்.

மிதிலையில் முனிவர்கள் ஒருவருக்கொருவர் ஸந்தித்துக் கொண்ட ஸமயத்தில் வெகுஸந்தோஷத்துடன் இருந்து வந்தார்கள் என்பதையும் வால்மீகி எடுத்துக் காட்டி

இவ்வளவு பெரிய மஹரிஷிகள் கூடியிருக்கும் ஸந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக்கொள்ள ஜனகர் வஸிஷ்டரைப் பார்த்து "ஹே மஹரிஷே! இங்கு வந்திருக்கும் ரிஷிகளுடன் எல்லாக் காரியங்களையும் நடத்துங்கள்."

कारयस्व ऋषे सर्वं ऋषिभिः सह धार्मिक । பால. 73 (19)

என்று சொல்லுகிறார். வஸிஷ்டர் தசரதர் குடும்பத்திற்கு குல புரோஹிதராக இருந்ததுடன் மற்ற முனிவர்களை விட வயதிலும், யோக்யதையிலும் மிகப்பெரியவர். அவர் ஜனகரிடம் அப்படியே ஆகட்டுமென்று சொல்லும்

போது வஸிஷ்டர் பிரதானராக இருந்துகொண்டு மற்றவர்களை ஸஹாயத்திற்கு வைத்துக்கொண்டாரென்று நினைக்கக்கூடியது ஸஹஜம். அவ்விதம் நினைத்துவிடக் கூடாதென்றே வால்மீகி வர்ணிக்கும்போது தசரதர் பக்கத்தில் விசுவாமித்ரருக்கும், ஜனகர் பக்கத்தில் சதானந்தருக்கும் பிரதான்யம் கொடுத்து அவர்களை முன்னிட்டுக்கொண்டே வஸிஷ்டர் விவாஹத்தை நடத்திவைத்தார் என்று குறிப்பிடுகிறார்.

तथेत्युक्त्वा तु जनकं वसिष्ठो भगवानृषिः ।
विश्वामित्रं पुरस्कृत्य शतानन्दं च धार्मिकम् ॥ (20)

விவாஹத்திற்காகக் கட்டப்பட்டிருக்கும் மண்டபத்தின் மத்தியில் வேதி தயாரித்து வேண்டிய ஸாமக்ரிகளை எல்லாம் சேர்த்து வைத்துக்கொண்டு சாஸ்திரப்படி செய்யவேண்டிய காரியங்கள் எல்லாவற்றையும் வஸிஷ்டர் கிரமமாக நடத்தினபிறகு, ஜனக மஹாராஜன் ஸீதையை அழைத்துக்கொண்டு அக்னியின் ஸமீபத்திற்கு வந்து, ராமருக்கு முன்னால் நின்றுகொண்டு ஸீதையை ராமரிடம் ஒப்புவிக்கிறார். இதை உறுதிப்படுத்துவதற்காக மந்திர பரிசுத்தமான தீர்த்தத்தை ராமர் கையில் விடுகிறார். அப்பொழுது ஜனகர் சொன்னதாவது:

इयं सीता मम सुता सहधर्मचरी तव ।
प्रतीच्छ चैनां भद्रं ते पाणिं गृह्णीष्व पाणिना ॥

पतिव्रता महाभागा छायेवानुगता सदा ।
इत्युक्त्वा प्राक्षिपद् राजा मन्त्रपूतं जलं तदा ॥ பால. 73 (27,28)

வள் ஸீதை; என்னுடைய பெண்; உன்னுடைய
ஒப்புக்கொள்; உனக்கு

க்ஷேமம் உண்டாகட்டும்; இவள் கையை உன் கையால் பிடி; இவள் பதிவிரதை; மஹா பாக்யசாலி; சாயை போல் எப்பொழுதும் பின் தொடருபவள் ".

இந்த தான விஷயமாகச் சொன்ன இவருடைய வார்த்தைகளில் ஒவ்வொரு வார்த்தையும் மிகவும் அர்த்த புஷ்டியோடு கூடியது.

இவள் ஸீதை :

ஸீதை என்ற வார்த்தைக்கு கலப்பை என்று அர்த்தம். இதை உச்சரிக்கும்போதே, ஜனகருக்கு ஆறு வருஷங்களுக்கு முன் யாகத்திற்காக உழுதபோது கலப்பை நுனியில் கிடைத்தபடியால் அவளுக்கு இந்தப் பெயர் வைக்கப்பட்டது என்ற விஷயத்தையும், அந்தக் குழந்தையைப் புழுதியோடுகூட எடுக்கும்போது தனக்கு ஆச்சர்யமும் ஸந்தோஷமும் ஏற்பட்டதையும் ஜனகர் ஞாபகப்படுத்திக்கொள்ளுகிறார் என்பதில் ஸந்தேஹமில்லை.

अथ मे कृषतः क्षेत्रं लाङ्गलादुत्थिता मम॥
क्षेत्रं शोधयता लब्धा नाम्ना सीतेति विश्रुता। பால. 66 (13,14)

तस्य लाङ्गलहस्तस्य कृषतः क्षेत्रमण्डलम्।
अहं किलोत्थिता भित्वा जगतीं नृपतेः सुता॥

स मां दृष्ट्वा नरपतिर्मुष्टिविक्षेपतत्परः।
पांसुकुण्ठितसर्वाङ्गीं जनको विस्मितोऽभवत्॥ அயோ. 118 (28,29)

என் பெண் :

ஜனகருக்கு இக்குழந்தை அகப்படும்போது வேறு குழந்தை இல்லை; இக்குழந்தை அகப்பட்டவுடன்

தன்னை அறியாமல் அதனிடம் ஸ்னேஹம் ஏற்பட்டு, அக்குழந்தையைத் தானே மடியில் எடுத்து வைத்துக் கொண்டு "இது என் பெண்" என்று சொல்லிக்கொண்டு அவளிடத்தில் விசேஷமான அபிமானத்தைச் செலுத்த ஆரம்பித்தார். ஜனகருக்கு உலக விஷயங்களில் பற்றுதல் கிடையாது என்கிற விஷயம் யாவரும் அறிந்ததே. அப்படி இருந்தும் இவ்விடத்தில் மட்டும் "என்னுடையவள்" என்று சொல்லிக்கொள்ளுவதில் விசேஷ ஸ ஷத்தை அடைந்தார்.

अनपत्येन च स्नेहादङ्कमारोप्य च स्वयम् ।
ममेयं तनयेत्युक्त्वा स्नेहो मयि निपातितः ॥ ,, (30)

அவ்விதம் அக்குழந்தையை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு ஸ்னேஹத்துடன் இவள் என்னுடைய பெண் என்று சொல்லிக்கொள்ளும் ஸமயத்தில் ஆகாசத்தில் ஒரு அசரீர வாக்கு ஏற்பட்டது. "ஏ ராஜனே! நீர் நினைக்கிறபடி தான்; தர்மரீதியில் அவள் உம்முடைய பெண்தான்" என்று.

अन्तरिक्षे च वागुक्ता प्रति माऽमानुषी किल ।
एवमेतन्नरपते धर्मेण तनया तव ॥ (31)

இதைக்கேட்டு அந்த தர்மாத்மாவான மிதிலாதிபதி மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தார்.

ततः प्रहृष्टो धर्मात्मा पिता मे मिथिलाधिपः । (32)

பிறகு அக்குழந்தையை எடுத்துக்கொண்டு அப்புண்யவான் தனக்கு மிகவும் அபிமானத்திற்கு விஷயமானதான இக்குழந்தையைத் தன்னுடைய ஜ்யேஷ்ட பத்னியிடம் கொடுத்தார். அவளும் தாயார் என்ற அபிமானத்துடன் மிகவும் அன்புடன் இக்குழந்தையை

மதித்தாள். இவ்விதமாகக் கிடைத்த ஸமயத்திலேயே ஜனகருடைய மனதைக் கவர்ந்த இக்குழந்தை பின்னுல் அவளுடைய உத்தமமான குணங்களினுல் ஜனகருக்கு மிகவும் ப்ரீதிக்கு விஷயமாக இருந்துவந்தாள். அவளை எடுத்தது முதற்கொண்டு அவளிடத்தில் விசேஷமான அபிமானத்தைச் செலுத்தி வளர்த்து வந்திருக்கிற முறையில் அவளைத் தன் பெண் என்று சொல்லிக்கொள் ளுவதில் ஜனகருக்கு விசேஷமான ஸந்தோஷம் இருந்தது. ஸாதாரணமாக ஒன்றிலுமே பற்றில்லாத நான் இவளை என்னைச் சேர்ந்தவள் என்று சொல்லிக் கொள்ளுகிற படியால் இவள் எவ்வளவு உத்தமமான தன்மையோடு கூடினவள் என்பதை ராமருக்கும், அங்குள்ள மற்றவர் களுக்கும் எடுத்துச் சொல்லுகிற மாதிரி இவள் என் பெண் என்று மிகப் பெருமையுடன் சொல்லிக்கொள்ளு கிறார்.

**உன்னுடைய ஸஹதர்மசாரிணீ :**

சாஸ்திரங்களில் விவாஹமானது எட்டு விதமென் றும், ஆனுலும் அவைகளில் சில விதங்களே நியாய மானவை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. வரனை மரியாதையுடன் அழைத்து அவனுக்குப் பெண்ணைக் கொடுத்தால் அது பிராஹ்ம விவாஹமாகும்; ராமர் அழைக்கப்படாமல் அகஸ்மாத்தாக வந்ததாலும், அவருடைய பராக்ரமம் பரீக்ஷிக்கப்பட்டதினுலும் இவ் விவாஹம் பிராஹ்மம் ஆகாது. ஒரு யக்ஞத்தில் ரித்விக் காக இருக்கிறவருக்கு யக்ஞம் முடியும்போது பெண்ணைக் கொடுத்தால், அது தைவமாகும்; ராமர் க்ஷத்திரியரான படியால் யக்ஞத்தில் ரித்விக்காக இருக்கமுடியாது; ஆகையால் இது தைவ விவாஹமுமல்ல. வரனிடமிருந்து ஒரு கோவையோ இரண்டு கோக்களையோ வாங்கிக் கொண்டு பெண்ணைக் கொடுத்தால், அது ஆர்ஷம் என்பார்கள்; அம்மாதிரி இங்கு ஒன்றும் நடக்கவில்லை.

பெண்ணை அடைவதற்கு பிரதி பிரயோஜனமாகப் பெண்ணுக்கோ அவளைச் சேர்ந்தவர்களுக்கோ பணம் கொடுத்தால் அது ஆஸுரமாகும்; அதுவும் இங்கே பொருத்தமில்லை. வரனும் பெண்ணும் அன்யோன்யம் பிரீதியினால் விவாஹம் செய்துகொண்டால் அதை காந்தர்வம் என்பார்கள்; ஏற்கனவே எடுத்துச் சொன்னபடி ராமர் விஷயத்தில் பெண்ணை ஸ்வீகரித்துக்கொண்ட பிற்பாடே அவருக்கு ஸீதையிடம் ப்ரீதி ஏற்பட்டதே தவிர முன்னால் ஏற்படவில்லை; அதுவும் தவிர ஸீதைக்கு விவாஹத்திற்கு முன்னால் ராமரிடம் நோக்கம் இருந்ததாக வால்மீகியின் ராமாயணத்தில் எவ்வித வாக்யமும் கிடையாது; ஆகையால் இவ் விவாஹம் காந்தர்வமுமில்லை. பெண்ணை பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு போனால் ராக்ஷஸம் என்றும், ஏமாற்றிக் கொண்டுபோனால் பைசாசம் என்றும் சொல்லப்படுகிறது, அவ்விரண்டிற்கும் இங்கே கொஞ்சமேனும் இடமே இல்லை. இவ்விதமாக முன் சொன்ன எவ்வித வகையிலும் இந்த விவாஹம் சேராது என்பது தெளிவாகத் தெரிகிறது. இவை தவிர ப்ராஜாபத்யம் என்ற ஒரு முறை இருக்கிறது. அதைப்பற்றி மனு,

सहोभौ चरतां धर्ममिति वाचानुभाष्य च ।
कन्याप्रदानमभ्यर्च्य प्राजापत्यो विधिः स्मृतः ॥

'நீங்கள் இருவரும் சேர்ந்து தர்மத்தை அனுஷ்டியுங்கள் என்று வாக்கினால் சொல்லி வரனுக்கு மரியாதை செய்து கன்யையை கொடுக்கும் விதி ப்ராஜாபத்யம் என்று சொல்லப்படுகிறது" என்கிறார். ஆசுவலாயனரும்,

सह धर्मं चरत इति प्राजापत्यः ॥

என்று அதே லக்ஷணத்தைச் சொல்லுகிறார், கௌதமர் இதையே அதாவது 'தர்மத்தைச் சேர்ந்து அனுஷ்டி

யுங்கள்' என்பதை விவாஹ மந்த்ரம் என்றே சொல்லு கிறார்.

संयोगमन्त्रः प्राजापत्ये सह धर्मश्चर्यताम् ॥

போதாயனரும் அப்படியே விதிக்கிறார்.

आच्छाद्यालंकृत्यैषा सह धर्मश्चर्यतां इति प्राजापत्यः ॥

இவ்விதம் தர்ம சாஸ்திரங்கள் விதித்திருக்கிறபடி யால் பிராஜாபத்ய விவாஹத்திற்கு அவசியம் சொல்ல வேண்டிய வார்த்தைகளை ஜனகர் உச்சரிக்கவேண்டியது அவசியமாக ஏற்பட்டது. ஆனால் அவ்வார்த்தைகள் அங்கு கூடியிருக்கும் மஹரிஷிகளின் முன்னிலையிலும் ஸர்வஸாக்ஷியான அக்னிபகவானின் முன்னிலையிலும் ஜனகருடைய மனப்பூர்வமான எண்ணத்துடன் அவ ருடைய முகத்திலிருந்து வெளிவரும்போது அவைகளுக்கு விசேஷமான மதிப்பு உண்டு என்பதில் ஸந்தேகமில்லை.

சாஸ்திரங்களில் தம்பதிகளைப் பார்த்து "நீங்கள் சேர்ந்து தர்மத்தை அனுஷ்டானம் செய்யுங்கள்" என்று சொல்ல வேண்டுமென்று விதிக்கப்பட்டிருப்பதிலிருந்து விவாஹத்திற்குப் பிறகே அவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென்று ஏற்படும். விவாஹ ஸமயத்திலோ, அதற்கு முன்போ தம்பதிகள் சேர்ந்து தர்மத்தை அனுஷ் டித்தார்கள் என்றோ அனுஷ்டிக்க வேண்டுமென்றோ ஏற்படாது. ஜனகருடைய அபிப்பிராயத்தில், ஸீதா விவாஹத்தில், தான் சொல்லும் வார்த்தை வருங் காலத்தை மாத்திரம் குறிப்பிடக் கூடாதென்று நினைத்து, விவாஹ காலத்திலும், அதற்கு முன்னால் அநாதியான சென்ற காலத்திலும் ஸீதை ராமருக்கு ஸஹதர்மசாரிணி யாகவே இருந்திருக்கிறாள் என்பதைக் குறிப்பிட நினைத் தார் போலும். அவர் "ஸீதை உனக்கு ஸஹதர்மசாரிணீ

யாய் இருப்பாள்'' என்று சொல்லாமல் "இவள் உன்னுடைய ஸஹதர்மசாரிணி'' என்று மாத்திரம் சொல்லுகிறார். அதாவது ஜனகர் அவளை ராமருக்குக் கொடுத்ததினால் அவளுக்கு அந்த நிலைமை ஏற்படவில்லை. ஏற்கனவே அவள் அவருடைய ஸஹதர்மசாரிணியாக இருந்தபடியால்தான் அவளை ஜனகர் ராமருக்குக் கொடுக்க முடிந்தது.

நம்முடைய தேசத்தின் கொள்கைப்படி விவாஹம் என்பது புதிதாக ஏற்பட்டு இஷ்டப்படி ரத்து செய்து கொள்ளக்கூடிய ஸம்பந்தம் இல்லை. தம்பதிகள் அன்யோன்ய பாவத்துடன் இருந்துவந்தால், எவ்வளவு ஜன்மம் எடுத்தபோதிலும் அவ்விதமே தம்பதிகளாகப் பிறப்பார்கள். புருஷன் ஞானத்தை அடைந்து மோக்ஷ நிலையை அடைந்து மறுபடி சரீரம் எடுப்பதற்கு அவசியமில்லாமல் போய்விட்டால், அவனுடைய பார்யை அடுத்த ஜன்மத்தில் புருஷ ஜன்மத்தை அடைகிறாள் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் அவளுக்கு வேறொரு புருஷனை பர்த்தா என்று பாவிப்பதற்கு அவகாசமே ஏற்படாது. இப்படிக்கன்னியில் அன்யோன்யபாவமன்னியில், தம்பதிகள் நடந்துகொண்டால், அவர்கள் விஷயத்தில் இந்த நியாயம் செல்லாது. ராமர் மஹாவிஷ்ணுவின் அவதாரமாகவும், ஸீதை லக்ஷ்மியினுடைய அவதாரமாகவும் இருந்தபடியால் தான் ஜனகர் இவ்விதம் சொன்னார் என்று நினைத்துக் கொள்ள அவசியமில்லை. ஸீதையின் உத்தமமான குணத்தைப் பார்த்து, ஏற்கனவே முன் ஜன்மங்களில் பர்த்தாவாக இருந்தவரே இந்த ஜன்மத்தில் பர்த்தாவாக ஏற்படுவார் என்ற தீர்மானம் ஜனகருக்கு இருந்ததென்ற காரணத்தினால் அவ்விதம் அவர் சொன்னார் என்று வைத்துக்கொண்டால் போதும். அதாவது ராமருக்கு ஸீதையை இப்பொழுது புதிதாகக் கொடுக்கவில்லை; ஏற்கனவே அவருக்கு தர்மபத்னியாக இருக்

தவளைத் திருப்பிக் கொடுக்கிறார்; அவளைத் தன் பெண் என்று பாவிக்கும்படியான ஸந்தர்ப்பமும், அவளுக்கு ஏற்கனவே பதியாயிருந்துவந்து இப்பொழுது ராமராக வந்திருக்கிறவருக்குத் தன் கையால் பிடித்து தானம் செய்யும்படியான பாக்யமும் கிடைத்ததைக் கண்டு பகவானிடத்தில் மிகவும் கிருதக்ஞதையுடன் இருந்து வந்தார்.

அவளை ஒப்புக்கொள்:

முதலில் ஜனகர் வில்லினுடைய விருத்தாந்தைப் பற்றி விசுவாமித்ர முனிவரிடம் சொல்லும்போது 'வில்லை வளைத்தால் பெண்ணைத் தருகிறேன்',

सुतामयोनिजां सीतां दद्यां दाशरथेरहम् ॥ பால. 66 (27)

என்றும், தசரதருக்கு அவர் சொல்லி அனுப்பும்போதும் 'ஸீதையை நான் கொடுக்கிறேன்'

अस्मै देया मया सीता वीर्यशुल्का महात्मने ॥ பால. 68 (12)

என்றும், பிற்பாடு வஸிஷ்டர் பெண்களை வரித்தானவுடன் "நான் தருகிறேன், மும்முறை தருகிறேன். ஸம்சயம் இல்லை."

त्रिर्ददामि न संशयः । பால. 71 (22)

என்றும் சொல்லுகிறார். பிற்பாடு தானம் கொடுக்க வேண்டிய ஸமயத்தில் 'நான் கொடுக்கிறேன்' என்பதைச் சொல்லவில்லை. பிறருக்கு பாத்யப்பட்ட சொத்தைத் தன் கைவசம் வைத்துக்கொண்டிருக்கிற ஒருவர் ஸ்வாந்தாருக்குத் திருப்பிக்கொடுத்தால், அதை தானம் என்று எப்படிச் சொல்லமுடியும்? அதேமாதிரி ராமருக்கு

பாத்யப்பட்ட ஸீதையானவள் இவ்வளவு காலம் தன் அரண்மனையில் வளர்ந்து வந்ததைக்கொண்டு தனக்கு ஏதோ பாத்யதை ஏற்பட்டுவிட்டதாக நினைத்து அவளை தானம் செய்வதாகச் சொல்லுவது நியாயமில்லை என்பதை உணர்ந்தார் போலும். ஸாமான்ய தானங்களில்கூடச் சொல்லவேண்டிய வாக்யமான तुभ्यं अहं संप्रददे "உமக்கு நான் கொடுக்கிறேன்" என்பதைச் சொல்லாமலே ஜனகர் இருந்துவிட்டார். தான் தானம் கொடுப்பதற்கு அவசியமன்னியில் ஏற்கனவே ராமருக்கு பாத்யப்பட்டவளாயிருப்பதால் "இவளை ஒப்புக்கொள்" என்பதை மாத்திரம் சொன்னார். ஆனாலும் அவர் சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டவராக இருந்தபடியால் அவளை ஒப்புவிக்கும்போது தீர்த்தத்தை விட்டு தானம் கொடுப்பதுபோல் செய்தார்.

அவள் கையை உன் கையால் பிடி :

விவாஹத்தில் பெண்ணின் கையை வரன் பிடிப்பதாகிய பாணிக்ரஹணம் என்பது மிகவும் முக்யமான விஷயம். ஒரு பெண்ணின் கையை பர்த்தாவைத் தவிர வேறு ஒருவரும் பிடிப்பது சாஸ்திர ஸம்மதமாகாது. மேலும் பாணிக்ரஹணம் என்பது வதுவும் வரனும் ஒரே ஜாதியாயிருந்தால்தான் செய்யப்படலாமென்று சாஸ்திரம் விதிக்கிறது,

पाणिग्रहणसंस्कारः सवर्णासूपदिश्यते । மனு. 3 (43)

மூன்று யுகங்களில் பிற ஜாதிகளிலும் விவாஹம் செய்துகொள்வது சாஸ்திரங்களில் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அவ்வித விவாஹம் செய்துகொண்டால் அதில் பாணிக்ரஹணம் என்கிற ஸம்ஸ்காரம் கிடையாது. ஒரு பிராஹ்மணன் ஒரு க்ஷத்ரியப் பெண்ணை விவாஹம் செய்துகொள்ளுவதாயிருந்தால் இவன் தன் கையில்

ஒரு அம்பை வைத்துக்கொண்டு அவளை அதைப் பிடிக்கச் சொல்லவேண்டும். வைசிய கன்னிகையை கிரஹித்தால் ஒரு சவுக்கைப் பிடிக்கும்படி அவளைச் சொல்லவேண்டும் சூத்ர ஸதிரீயானால் தன்னுடைய வஸ்திரத்தின் நுனியைப் பிடிக்கச் சொல்லவேண்டும்.

असवर्णास्वयं ज्ञेयो विधिरुद्वाहकर्मणि ॥

शरः क्षत्रियया ग्राह्यः प्रतोदो वैश्यकन्यया।

वसनस्य दशा ग्राह्या शूद्रयोत्कृष्टवेदने ॥ மனு 3 (43,44)

இவ்விதமாக பாணிக்ரஹணம் என்பது ஸமான வர்ணத்தில் உள்ளவர்களுக்குத்தான் உண்டு என்று வ்யக்தமாகக் காணப்படுகிறது, ஸீதை அயோனிஜை யாக இருந்தபோதிலும், அசரீர வாக்கின்படி ஜனகா அவளைத் தன் பெண்ணாக எடுத்து வளர்த்து வந்தபடி யால், அவள் க்ஷத்ரியப்பெண்ணேயாகும், ராமரும ஸீதையும் இருவரும் ஸமான ஜாதியான க்ஷத்ரியர்களாக இருப்பதால் அவர்களுடைய விவாஹம பாணிக்ரஹண முறையிலேயே நடக்கவேண்டியது, அவ்விதமே நடந்தது என்று வால்மீகி வர்ணிக்கிறார்.

வரன் தன் கையினால் பெண்ணின் கையைப் பிடிக்க வேண்டுமென்பதில் ஒரு விசேஷம் இருக்கிறது. பெண்ணி னுடைய கட்டை விரல் உள்பட எல்லா விரல்களையும் சேர்த்துக் கை முழுவதையும் பிடிக்கவேண்டியது. அப்படியே வரனும் அவள் கையைத் தன் கை முழுவத னாலும் பிடிக்கவேண்டும். இவன் ஒரு விரலை நீட்டி அவளைப் பிடிக்கச் சொல்லுவதோ, அவளுடைய விரலை இவன் பிடிப்பதோ சாஸ்திர ஸம்மதமாகாது. ஆகையி னாலேயே ஜனகர் இவ்விதம் சொல்லி இருக்கிறார்.

**இவள் பதிவ்ரதை :**

ஒருவள் பதிவ்ரதையா என்பது அவள் விவாஹமாகி பர்த்தாவின் வீட்டிற்குப்போய் அவள் நடந்துகொள்ளுவதிலிருந்து தீர்மானிக்க வேண்டிய விஷயம். கல்யாண ஸமயத்தில், 'அவள் பதிவ்ரதையாக இருப்பாள்' என்று வேண்டுமானால் சொல்லலாம்; அப்படிச் சொல்லாமல் அவள் இப்பொழுதே பதிவ்ரதை என்று ஜனகர் சொன்னதின் தாத்பர்யம் முன்னமேயே எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

**மஹா பாக்கியசாலி :**

ராமரை பர்த்தாவாக அடைந்ததினாலேயே அவள் மஹா பாக்கியசாலி என்று ஏற்படவில்லையா! ஜனகருக்குப் பெண்ணாக வந்ததும் மஹாபாக்யமல்லவா! அப்படியே தசரதருக்கு மருமகளாக வந்ததும் மஹா பாக்யமல்லவா! ஸீதையை யாராவது "நீ யார்" என்று கேட்டால், அவள் தனக்குள்ள இந்த மூன்றுவித கௌரவத்தையும் உத்ஸாஹமாகச் சொல்லிக் கொள்வாள்.

दुहिता जनकस्याहं मैथिलस्य महात्मनः ।
सीता नाम्नाऽस्मि भद्रं ते रामस्य महिषी प्रिया ॥ அர. 47 (3)

स्नुषा दशरथस्याहं शत्रुसैन्यप्रमाथिनः ।
दुहिता जनकस्याहं वैदेहस्य महात्मनः ॥

सीता च नाम नाम्नाऽहं भार्या रामस्य धीमतः । ஸுந்த 33 (16,17)

சாயையைபோல் எப்பொழுதும் பின்தொடருபவள் :

சாயை என்பது ஸாதாரணமாக ஒன்றின் நிழலைக் குறிக்கும். ஒரு கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பமும் சாயைதான். நிழலுக்குக் காரணமாயிருக்கிற வெளிச்சத்தை நோக்கி நடந்துபோனால் நிழல் பின்னால் வரும். வெளிச்சத்திலிருந்து விலகிப்போனால் அப்பொழுது நிழல் முன்னால் போகும். பிரதிபிம்பம் பின்னால் வருகிறதுமில்லை. முன்னால் போவதுமில்லை. ஆகையால் இவ்விரண்டு அர்த்தங்களிலும் சாயை கூடவே வருகிறதென்று சொல்லமுடியாது. மேலும் நிழல் ஏற்பட வேண்டுமானால் மற்றொரு பக்கத்தில் வெளிச்சம் இருக்க வேண்டும். பிரதிபிம்பம் ஏற்பட வேண்டுமானால் கண்ணாடி அவசியம். இந்த ரீதியில் நிழலோ, பிரதிபிம்பமோ எப்பொழுதும் கூட வருகிறதென்று சொல்ல முடியாது. நிழலோ, பிரதிபிம்பமோ இல்லாமலே ஒரு வஸ்து இருக்கமுடியும், ஆகையால் எப்பொழுதும் கூட இருக்கிறது என்கிற லக்ஷணம் இவைகளில் இல்லாததினால் இவைகள் ராமருக்கும், ஸீதைக்கும் உள்ள ஸம்பந்தத்தை எடுத்துக்காட்டப் போதாது. ஆகையால் சாயை என்கிற சப்தத்திற்கு வேறு அர்த்தம் கிரஹித்துக் கொண்டாலொழியப் பொருத்தமாகாது. சாயை என்கிற ஸம்ஸ்கிருத பதத்திற்கு பிரபை என்றும் அர்த்தம் உண்டு. அதையே இந்த இடத்தில் ஸ்வீகரித்துக்கொள்வது உசிதமாகும். அவ்வர்த்தத்தை ஏற்றுக் கொண்டால் ஒரு பிரகாச வஸ்துவுக்கும், அதிலுள்ள பிரகாசத்திற்கும் என்ன ஸம்பந்தமோ அவ்வித ஸம்பந்தமே ராமர் ஸீதை இவர்களுக்கும் இருந்ததென்று நன்கு தெரியவரும். பிரகாசம்தான் பிரகாசமுள்ள வஸ்துவை விட்டு விலகி இராமல் எப்பொழுதும் கூடவே இருக்கும். ஸீதை பின்னால் ஒரு ஸந்தர்ப்பத்தில் தன்னைப்பற்றிச் சொல்லும்போது எப்படி பிரகாசமானது ஸூர்யனை விட்டு வேறல்லவோ அப்படியே நான் ராமரைவிட்டு வேறல்ல என்று சொல்லுகிறாள்,

अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा ॥ ஸுந். 21 (15)

ராமரும் ஸீதையைப்பற்றி அப்படியே சொல்லு கிறார் :

अनन्या हि मया सीता भास्करस्य प्रभा यथा ॥ யுத்த. 118 (9)

ஆகையால் சாயா சப்தத்தை இந்த அர்த்தத்துடன் தான் கிரஹிப்பது உசிதமாகும்.

இங்கேயும் ஜனகர் ஸீதை பின்தொடர்ந்து வருவாள் என்று வருங்காலத்தைக் குறிப்பிடாமல் பின் தொடருபவள் என்று சொல்லி இருக்கிறார் என்பதையும் கவனிக்கவேண்டும். அவர் உபயோகித்த 'அநுகதா' என்ற சப்தமானது சென்ற காலத்தைக் குறிப்பதால் கால நியமம் இல்லாமல் எப்பொழுதும் பின் தொடருபவள் என்று அர்த்தம் ஆகக் கூடியதானாலும், வ்யக்தமாகவே 'ஸதா-எப்பொழுதும்' என்கிற சப்தத்தை ஜனகர் உபயோகித்திருக்கிறார் என்பதையும் கவனிக்க வேண்டியது

ராமரிடம் ஸீதையை ஒப்புவித்ததில் ஜனகருக்கு ஏற்பட்ட ஸந்தோஷத்தை வால்மீகியே வர்ணிக்கமுடியாமல் "அவர் ஸந்தோஷத்தினால் நாலுபக்கமும் மேலும் கீழும் சூழப்பட்டு இருந்தார்" என்று சுருக்கமாக வர்ணித்துவிட்டார்,

एवं दत्वा सुतां सीतां मन्त्रोदकपुरस्कृताम् ।
अब्रवीज्जनको राजा हर्षेणाभिपरिप्लुतः ॥ பால. 73 (30)

அவருக்கு ஏற்பட்ட ஸந்தோஷத்தினால் மற்றப் பெண்களை அதிக தாமதமன்னியில் கொடுத்துவிட நினைத்து லக்ஷ்மணனைக் கூப்பிட்டுச் சொல்லுகிறார்.

लक्ष्मणागच्छ भद्रं ते ऊर्मिलामुद्यतां मया
प्रतीच्छ पाणिं गृह्णीष्व माभूत् कालस्य पर्ययः ॥ (31)

"லக்ஷ்மணா! இங்கே வா. உனக்கு க்ஷேமமுண்டாகட்டும்; நான் தயாராக வைத்துக்கொண்டிருக்கிற ஊர்மிளையை ஒப்புக்கொள்; கையைப்பிடி; தாமதம் வேண்டாம்;" இவ்விதமவர் சொல்லும்போது ஊர்மிளையை தன் பெண் என்று சொல்லவோ ஸீதையைக் கொடுக்கும்போது அவளுக்குக் கொடுத்த அடைமொழிகளை ஊர்மிளைக்கும் சொல்லவோ அவசியமில்லையென்று விட்டுவிட்டார் என்று தோன்றுகிறது. விவாஹ காரியத்தை சீக்கிரம் முடிக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் மாண்டவியை பரதனுக்குக் கொடுக்கும்போது அவர் "அவளை ஒப்புக்கொள்" என்பதையும் விட்டுவிட்டார். "மாண்டவியினுடைய கையைக் கையால் பிடி" என்று மாத்திரம் சொல்கிறார். அப்படியே சத்ருக்னனுக்கு சுருதகீர்த்தியைக் கொடுக்கும்பொழுதும் "அவளுடைய கையைக் கையால் பிடி" என்கிறார்.

पाणिं गृह्णीष्व माण्डव्याः पाणिना रघुनन्दन ॥ .. (32)
श्रुतकीर्त्या महाबाहो पाणिं गृह्णीष्व पाणिना ॥ ,, (33)

பிற்பாடு நான்கு ராஜபுத்ரர்களையும் பார்த்து "நீங்கள் எல்லாரும் ஸௌம்யமான ஸ்வபாவத்தோடு கூடினவர்கள். எல்லோரும் நன்கு வ்ரதானுஷ்டானம் பண்ணினவர்கள்; நீங்கள் அவரவர் பத்னிகளோடு இருங்கள்; காலதாமதம் வேண்டாம்".

सर्वे भवन्तः सौम्याश्च सर्वे सुचरितव्रताः ।
पत्नीभिः सन्तु काकुत्स्था माभूत् कालस्य पर्ययः ॥ ,, (24)

என்று சொல்லுகிறார். பிற்பாடு வஸிஷ்ட ம
தம்பதிகளை உட்காரச் சொல்லி அவசியமான ஆஹுதி

களைச் செய்து அக்னியை பிரதக்ஷிணம் வரும்படி செய்து சாஸ்திரத்தில் சொல்லியபடி எல்லாக் காரியங்களையும் செய்துவைத்தார். அவ்விரு அரசர்களும் பெரிய அந்தஸ்து உள்ளவர்களாக இருந்தபோதிலும், அம் மஹரிஷிகள் மிகவும் மஹான்களாக இருந்தபோதிலும், அவர்கள் இவ்விவாஹ விஷயத்தில் தங்கள் இஷ்டப்படி புதிதாக மந்திரங்களையோ, பிரயோகங்களையோ ஏற்படுத்திக்கொள்ளாமல், சாஸ்திரத்தில் எப்படிச் சொல்லி இருக்கிறதோ அப்படியே நடத்தினுர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. சாஸ்திரத்தில் சொல்லும் விதிகளை உதாஸீனமாக நினைக்கவோ, மாற்றுவதற்கோ அதிகாரமில்லை என்பதையும், சாஸ்திரத்தில் சொல்லியபடி செய்தால் தான் விவாஹம் ஒரு ஸம்ஸ்காரமாகுமென்பதையும், நன்கு உணர்ந்தவர்களானதினுல் விதிப்படி ஞர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

यथोक्तेन तदा चक्रुर्विवाहं विधिपूर्वकम् ॥ (37)

கன்னிகைகளை தானம் செய்தவுடன் ஜனகருடைய பொறுப்பு நீங்கிவிட்டது. பிற்பாடு தம்பதிகளுக்கு கிருஹஸ்தாசிரமம் ஸித்திக்கும்பொருட்டு சாஸ்திரப்படி செய்யவேண்டிய எல்லா க்ரியைகளையும் வஸிஷ்டர் ராஜ புத்ரர்கள் மூலம் செய்துகொடுத்தார். அப்பொழுது ஆகாசத்திலிருந்து புஷ்பவர்ஷம் ஏற்பட்டது; ஸங்கீத முழக்கம் ஏற்பட்டது; கந்தர்வர்கள் பாடினுர்கள். அப்ஸரஸுகள் கூட்டம் கூட்டமாக நர்த்தனம் செய்தார்கள்.

पुष्पवृष्टिर्महत्यासीदन्तरिक्षात् सुभास्वरा ।
दिव्यदुन्दुभिनिर्घोषैर्गीतवादित्रनिस्स्वनैः ॥
ननृतुश्चाप्सरस्सङ्घा गन्धर्वाश्च जगुः कलम् ।
विवाहे रघुमुख्यानां तदद्भुतमदृश्यत ॥ ,, (38,39)

இவ்விவாஹம் நடந்ததில் தேவர்களும் ஸந்தோஷத்தைக் காட்டினார்கள் என்று வால்மீகி விவாஹ வர்ணனத்தை சுருக்கமாக முடித்துவிடுகிறார். பிற்பாடு எல்லோரும் அயோத்திக்குப் புறப்படும்போது ஜனகர் இப்பெண்களுக்குக் கொடுத்த ஸ்திரீதன விமரிசையைப் பற்றியும், பிறகு அவர்கள் அயோத்திக்குப் போய்ச் சேர்ந்தவுடன் அந்நகரத்தில் அவர்களுக்கு ஏற்பட்ட விசேஷ வரவேற்பையும் வர்ணிக்காமல் விட்டுவிடவில்லை. வால்மீகி மஹரிஷி இவ்விவாஹ விஷயமாய்ச் சொல்லி இருக்கும் ரஸமான கதையை இங்கே எடுத்துச் சொல்லுவதில் உத்தேசமில்லை. அவருடைய இந்த விவாஹ வர்ணனையிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்களையும், நாம் நடந்துகொள்ள வேண்டிய ரீதிகளையும் மட்டும் கொஞ்சம் எடுத்துக்காட்டப்பட்டது. ஸ்ரீமத் ராமாயணத்தை வாசிப்பவர்கள் "இதிலிருந்து நாம் கற்றுக்கொள்ளவேண்டிய விஷயம் என்ன? நாம் நடந்துகொள்ளவேண்டிய ரீதி எப்படி?" என்று அறிய வேண்டிய நோக்கத்துடன் வாசித்தார்களேயானால் மஹத்தான லாபம் உண்டு; அதை வாசிப்பதினால் ஏற்படும் அதிருஷ்ட பலனை புண்யத்தை நான் இங்கு குறிப்பிடவில்லை; அதுவும் ஏற்படும் என்பதில் ஸந்தேஹமில்லை.

---

## அத்யாயம் 7

## தன் குற்றமறிதல்

ஸ்ரீமத் ராமாயணத்தில் வால்மீகி மஹரிஷி ஸ்ரீ ராமரைப்பற்றிச் சொல்லும்போதெல்லாம் அடைமொழிகள் கூருமல் இருப்பதில்லை. ஸ்ரீராமர் பகவானுடைய அவதாரம் என்கிற முறையில் அநேக கல்யாண குணங்களோடு கூடினவர் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆனல் ராமாயணம் ஆரம்பத்திலேயே வால்மீகி நாரதரைப் பார்த்துக் கேட்கும்போது,

को न्वस्मिन् सांप्रतं लोके गुणवान् कश्च वीर्यवान् । பால. 1 (2)
महर्षे त्वं समर्थोऽसि ज्ञातुमेवंविधं नरम् ॥ ,, ,, (5)

"இப்பொழுது இந்த லோகத்தில் குணவானுக வீர்யவானுக இருப்பது யார்? ஹே மஹர்ஷே! இந்தவிதமான மனுஷ்யனை நீர் அறிய சக்தியுள்ளவர்" என்று கேட்கிருர். அதற்கு நாரதர் பதில் சொல்லும்போது,

बहवो दुर्लभाश्चैव ये त्वया कीर्तिता गुणाः
मुने वक्ष्याम्यहं बुद्ध्वा तैर्युक्तः श्रूयतां नरः ,, (7)

"ஹே முனே! நான் ஆலோசித்துச் சொல்கிறேன்; நீர் சொல்லும் குணங்கள் பலவாகவும், துர்லபமாகவும் இருக்கின்றன; அவைகளோடு கூடிய மனிதனைப் பற்றிச் சொல்கிறேன், கேளும்" என்கிருர். இவ்விதமாக மனுஷ்யன் என்கிற முறையிலேயே ஸ்ரீமத் ராமாயணக் கதை வர்ணிக்கப்படுகிறது. ஸ்ரீராமருக்குக் கொடுக்கப்படும் ஒவ்வொரு விசேஷணத்தையும் எடுத்துக் கொண்டு அது அவருடைய

சரித்திரத்தில் எப்படிப்பொருந்துமென்று காட்டுகிறதா யிருந்தால் ஒவ்வொன்றுமே விஸ்தாரமாக எடுத்துச் சொல்லும்படி ஏற்படும். அவைகளில் ஒரு விசேஷணத்தை மாத்திரம் இங்கு குறிப்பிடுவதாக உத்தேசிக்கிறேன்.

அயோத்யா காண்டம் முதல் ஸர்க்கத்தில் வால்மீகி ராமருடைய குணங்களை விரிவாகக்கூறும்போது 24வது சுலோகத்தில் ஸ்வதோஷபரதோஷவித் அதாவது 'தன்னுடைய தோஷத்தையும் பிறருடையதோஷத்தையும் அறிந்தவர்' என்று சொல்லுகிறார் ஸாமான்யமாக உலகத்தில் மற்றவர்களிடம் இருக்கும் சிறு குறையைக்கூட ஸுலபமாக அறிந்து கொள்ளுவதும் தன்னிடத்திலுள்ள பெரும் குறையைக் கூட அறியாமல் இருந்துகொள்வதும் ஸஹஜமாக இருக்கிறது. தன்னுடைய தோஷங்களையும் அப்படியே பிறருடைய தோஷங்களையும் அறியாமலே இருந்துவிடுவது மனுஷ்யனுக்கு ஸாத்தியமில்லை. அப்படியிருக்க தன்னிடத்திலுள்ள தோஷங்களை மாத்திரம் தெரிந்துகொண்டு பிறருடைய தோஷங்கள் கண்ணில்படாமல் இருக்கவேண்டுமென்றால் அதுவும் ஸாத்தியமில்லை; ஆகையால் புத்திசாலியாய் விவேகத்தோடு கூடிய மனுஷ்யனாக இருந்தால் தன்னுடைய குறையும், பிறருடைய குறையும் நன்கு தென்படவேண்டியதே நியாயமாகும். ஸ்ரீராமரை உத்தம புருஷன் என்று வர்ணிக்கிற முறையில் அவருக்கு இந்த விசேஷணத்தை வால்மீகி கொடுத்திருக்கிறார்.

இந்த விசேஷணத்திலிருந்து உத்தம புருஷனாக, தர்மமே மூர்த்திகரித்தவராக இருந்த ஸ்ரீராமருக்கும் தோஷங்கள் இருந்ததாக ஒப்புக்கொள்ளவேண்டி இருக்கிறது அவ்விதம் அவரிடம் ஏதேனும் தோஷங்கள் இருந்தால், அவரை உத்தமமான மனுஷ்யராக எப்படி பாவிக்க முடியும்? அவரிடத்தில் தோஷமே இல்லையென்றால்,

வால்மீகி கொடுத்திருக்கும் விசேஷணத்திற்கு எப்படிப் போக்குவிடுகிறது? ஆகையால் கொஞ்சமாவது தோஷம் இருந்திருக்க வேண்டுமென்று சொல்லும்படி ஏற்படுகிறது. "தன் தோஷத்தை உணர்ந்தவர்" என்று சொன்னால் அவர் உணர்ந்து என்ன செய்தார் என்பதையும் சொல்ல வேண்டும். தன்னிடத்தில் தோஷமிருப்பதாகத்தெரிந்து கொண்டு அதை நிவர்த்தி செய்து கொள்ளுவதற்காக எவ்வித பிரவிருத்தியும் செய்யாமல் இருந்தால், அவர் உத்தம புருஷனாகமாட்டார். ஏதோ எதிர்பாராமல் தன்னிடத்தில் பிசகு ஏற்பட்டுவிட்டால், தாமதமன்னியில் உடனே அதற்குப் பரிஹாரம் தேடிக்கொள்ளுவதுதான் உத்தமமான ஸ்வபாவமாகும். அவ்விதமே ராமரிடத்தில் சில ஸந்தர்ப்பங்களில் உசிதமில்லாத எண்ணம் வெளிக்கிளம்பியபோது அதை உடனே நிக்ரஹம் செய்திருக்கிறாரென்று வால்மீகி எடுத்துக்காட்டியிருக்கிறார்

(1) ராமர் காட்டிற்குப் புறப்படும்படி ஏற்பட்ட ஸமயத்தில் அவருடைய மனோபாவம் முதல் நாள் பட்டாபிஷேகம் உண்டென்று சொல்லும்போது எப்படியிருந்ததோ அப்படியே இருந்ததென்று வால்மீகி கூறுமிடத்தில் ஸகல விதமான உலக வியவஹாரங்களையும் விட்ட ஜீவன்முக்தனுடைய நிலைபோல் ஒருவித சித்த விகாரமும் இல்லாமலிருந்தது என்று வர்ணிக்கிறார். தவிரவும் பிரகாசரூபமாக இருக்கிற சந்திரனுக்கு இருட்டு ரூபமான இரவு எவ்விதம் பாதகமாகாதோ, அவ்விரவே சந்திரன் பிரகாசத்தை அதிகமாகவே காட்டுமோ, அதேமாதிரி ராஜ்யத்தை இழந்து வனத்திற்குப்போகும் ராமருடைய சோபை, கொஞ்சமேனும் குறைய வில்லையென்று வர்ணித்திருக்கிறார்.

न वनं गन्तुकामस्य त्यजतश्च वसुन्धराम् ।
सर्वलोकातिगस्येव लक्ष्यते चित्तविक्रिया ॥ அயோ. 19 (33)

न चास्य महतीं लक्ष्मीं राज्यनाशोऽपकर्षति ।
लोककान्तस्य कान्तत्वात् शीतरश्मेरिव क्षपा ॥ யா. 19 (32)

नालक्षयत रामस्य किंचिदाकारमानने ॥ „ (36)
उचितं च महाबाहुर्न जहौ हर्षमात्मनः । „ (37)

அவ்விதம் நிர்விகாரமான சித்தத்தோடு கூடிய ராமர், வனம் போவதில் வருத்தப்படவில்லையென்பதுடன் அவர் மிகவும் உத்ஸாஹமாகக்கூட இருந்தார் என்று காட்டுவதற்காக வால்மீகி ஒரு ஸம்பவத்தை நடந்தபடி எடுத்துச் சொல்லுகிறார். ராமர் வீட்டை விட்டுப் புறப்படுவதற்கு முன்னால் தனக்கு தனித்துச் சொந்தமான திரவ்யத்தையும், ஆபரணாதிகளையும் பிராஹ்மணர்களுக்கும், தன்னுடைய வேலைக்காரர்களுக்கும், மற்றும் அநேகருக்கும் தாராளமாக எடுத்துக் கொடுக்கிறார். அந்த ஸமயத்தில் த்ரிஜடர் என்ற ஒரு எளிய பிராஹ்மணர் அங்கே வருகிறார். அவர் வயல்களிலும் காடுகளிலும் கீழே கிடக்கும் தான்யங்களைப் பொறுக்கி அதைக்கொண்டு பாகம் செய்து அவரும் அவர் பார்யை, குழந்தைகள் எல்லாரும் ஆஹாரம் பண்ணிக்கொண்டு ஜீவனம் செய்துவந்தார்கள். அவர் இது விஷயத்தில் கவலையற்றவராக இருந்தபோதிலும், தாரித்ரியத்தினால் ஏற்படும் சிரமத்தை நன்கு உணர்ந்த அவருடைய பத்நீ அவரைப் பார்த்து "ராமரிடத்தில் போங்கள்; அவர் தர்மம் அறிந்தவர்; ஏதேனும் உமக்குக் கிடைக்கும்" என்று சொன்னாள்.

तं वृद्धं तरुणी भार्या बालानादाय दारकान् ॥
अब्रवीद्ब्राह्मणं वाक्यं दारिद्र्येणातिपीडिता ।
रामं दर्शय धर्मज्ञ यदि किंचिदवाप्स्यसि । அயோ. 32 (30,32)

இந்த வசனத்தைக் கேட்டு தன்னுடைய கிழிந்த வஸ்த்திரத்தை ஒருவாறு சரிப்படுத்தி உடுத்திக்கொண்டு ராமரிடத்தில் வந்து சேர்ந்தார். "நான் தனமில்லாதவன்; குழந்தைகள் அதிகமாக உள்ளவன். நான் காட்டில் உஞ்சவிருத்தியினுல் நித்யம் காலக்ஷேபம் செய்து வருகிறேன், ஹே பெரும் புகழ்வாய்ந்த ராஜபுத்திரனே! என்னைக் கொஞ்சம் திரும்பிப்பாரும்."

निर्धनो बहुपुत्रोऽस्मि राजपुत्र महायशः ।
उञ्छवृत्तिर्वने नित्यं प्रत्यवेक्षस्व मामिति ॥ ,, (35)

என்று சொன்னுர். அவர் வயதானவர்; சரீரத்தில் சக்தியற்றவர்; ஆனாலும் பிரஹ்ம தேஜஸ்ஸினுல் பிருகு, அங்கிரஸ் இவர்களுக்கு ஸமானமானவர் என்று வால்மீகி சொல்லுகிருர் அவரைப் பார்த்ததும் ராமருக்குத் தனக்குத் தெரியாமலே பரிஹாஸம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டது; அவரைப் பார்த்து "இன்னும் ஒரு ஆயிரம் கோக்கள்கூட கொடுபடாமல் இருக்கிறது; நீர் உம்முடைய கையிலுள்ள தண்டத்தை எவ்வளவு தூரம் வீசி எறிகிறீரோ அதற்குள் அகப்பட்ட கோக்களை எடுத்துக்கொள்ளலாம்" என்று சொன்னுர்.

तमुवाच ततो रामः परिहाससमन्वितम् ।
गवां सहस्रमप्येकं न तु विश्राणितं मया ॥
परिक्षिपसि दण्डेन यावत् तावदवाप्स्यसि । ,, ,, (36,37)

அப்பொழுது அந்த பிராஹ்மணர் தன்னுடைய வஸ்திரத்தை வெகு பரபரப்புடன் இடுப்பில் இழுத்துக் கட்டிக்கொண்டு தண்டத்தை எடுத்து சுழற்றி தன்னுடைய பூர்ண பிராணபலத்தோடு வேகமாய் எறிந்தார்.

அவர் கையிலிருந்து விடப்பட்ட அந்த தண்டமானது ஸரயூ நதியைத் தாண்டி அக்கரையில் அனேகம் ஆயிரம் கோக்கள் உள்ள பசுமந்தையில் விருஷபங்கள் நிற்கு மிடத்தில் போய் விழுந்தது.

स शाटीं त्वरितः कट्यां संभ्रान्तः परिवेष्ट्य ताम् ॥

आविध्य दण्डं चिक्षेप सर्वप्राणेन वेगितः ।

स तीर्त्वा सरयूपारं दण्डस्तस्य कराच्च्युतः ॥

गोव्रजे बहुसाहस्रे पपातोक्षणसंनिधौ । ,, (37,39)

அவர் செய்ததைப் பார்த்து ராமருக்கு நாம் இவரிடம் பரிஹாஸமாக நடந்துகொண்டது உசித மில்லை என்று உடனே தோன்றிற்று. ராமர் தான் சொன்னபடி கோக்களை இடையர்கள் மூலமாக த்ரிஜட ருடைய ஆசிரமத்திற்கு அனுப்பிக்கொடுத்தார் என்பதுடன் நிற்காமல் அவரை ஆலிங்கனம் செய்துகொண்டு அவரை ஸமாதானப்படுத்தித் தான் செய்த தவறுக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறார். அதன்பின் அந்த த்ரிஜடரும் இவரை மனப்பூர்வமாக ஆசிர்வதிக்கிறார்.

तं परिष्वज्य धर्मात्मा आ तस्मात् सरयूतटात् ॥

आनयामास ता गोपैस्त्रिजटस्याश्रमं प्रति ।

उवाच च ततो रामस्तं गार्ग्यमभिसान्त्वयन् ॥

मन्युर्न खलु कर्तव्यः परिहासो ह्ययं मम ॥

इदं हि तेजस्तव यद्दुरत्ययं तदेव जिज्ञासितुमिच्छता मया ।
इमं भवानर्थमभिप्रचोदितो वृणीष्व किंचिदपरं व्यवस्यति ॥

ब्रवीमि सत्येन न तेऽस्ति यन्त्रणा धनं हि यद्यन्मम विप्रकारणात् ।
भवत्सु सम्यक् प्रतिपादनेन तन्मयार्जितं प्रीतियशस्करं भवेत् ॥

அயோ. 32 (39,42)

ராமர் அவரிடம் சொல்லும்போது "தாங்கள் என்னிடம் கோபித்துக் கொள்ளக்கூடாது. நான் ஏதோ விளையாட்டாகச் சொல்லிவிட்டேன்; உங்களுடைய தேஜஸ் எல்லையற்றது; அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றே நான் அவ்விதம் தங்களைப் பார்த்துச் சொன்னேன்; தங்களுக்கு வேறு ஏதேனும் வேண்டியிருந்தாலும் சொல்லுங்கள்; நான் தங்களை நிர்பந்தப் படுத்தவில்லை; ஸத்யமாகச் சொல்லுகிறேன்; என்னிடத்தில் என்ன என்ன தனமிருக்குமோ அவ்வளவையும் பிராஹ்மணர்களுக்காகவே வைத்துக்கொண்டிருக்கிறேன். நான் ஸம்பாதித்து வைத்திருப்பதைத் தங்களைப் போலுள்ள பெரியோர்களிடம் மனப்பூர்வமாய்க் கொடுத்தால் எனக்கு ஸந்தோஷமென்பதுடன், யசஸ்ஸும் ஏற்படும்" என்கிறார்.

இந்த விருத்தாந்தத்தை வாசிக்கும் ஸாதாரண மனிதர்களுக்கு ராமர் இந்த பிராஹ்மணரிடம் பரிஹாஸமாகச் சொன்னது தோஷமென்றே மனதில் படாது. ஆனால் உத்தமமான சுத்த ஸத்வஸ்வரூபமான ராமருடைய மனதில் இதுவும் உறுத்திக்கொண்டே இருக்கும்; அவர் ஏதோ உத்ஸாஹத்தில் அவ்விதம் சொல்லிவிட்டபோதிலும் அது நியாயமில்லை என்பதை உடனே உணர்ந்தார். "தான் தனவான், அவர் எளியவர்; தான் யுவா, அவர் விருத்தர்; தான் பலசாலி, அவர் சக்தியற்றவர்"

என்ற எண்ணம் வந்ததால் அல்லவா அவ்விதம் சொல்லும்படி ஏற்பட்டது? இதுவும் அஹம்பாவமல்லவா? அவர் பிராஹ்மணனாகவும், தபஸ்வியாகவும் உத்தமமான விருத்தியோடு கூடினவராகவும் இருக்கிறாரென்பதை மறந்து அவரிடம் விளையாடினது கொஞ்சமேனும் நியாயமில்லையென்று உடனே அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டபடியினாலேயே ராமருடைய பெருந்தன்மை வெளியாகிறது. ஆகையால் வால்மீகியின் அபிப்ராயத்தில் ஸ்வதோஷவித் என்ற விசேஷணம்கூட ராமருடைய உத்தமமான ஸ்வபாவத்தையே எடுத்துக் காட்டுவதாகும்.

(2) ஸ்ரீராமர் தண்டகாரண்யத்தில் பஞ்சவடியில் பர்ணசாலை நிர்மாணம் செய்துகொண்டு ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் இருந்து வருகையில் ராவணனுடைய தங்கையான சூர்பணகை என்ற ராக்ஷஸி அகஸ்மாத்தாக அவ்விடம் வந்து சேர்ந்தாள். அவளுக்கு, மன்மதன் போல் அதிஸுந்தரமான ராமசந்திரமூர்த்தியினுடைய தோற்றத்தைப் பார்த்து, அவர் விஷயமாகக் காமம் ஏற்பட்டது. இதை வால்மீகி வர்ணிக்கும்போது ராமருக்கும் சூர்பணகைக்கும் உள்ள வைலக்ஷண்யத்தை நன்கு எடுத்துக்காட்டுகிறார்.—

रामिन्दीवरश्यामं कन्दर्पसदृशप्रभम् ।
बभूवेन्द्रोपमं दृष्ट्वा राक्षसी काममोहिता ॥
सुमुखं दुर्मुखी रामं वृत्तमध्यं महोदरी ।
विशालाक्षं विरूपाक्षी सुकेशं ताम्रमूर्धजा ॥
प्रीतिरूपं विरूपा सा सुस्वरं भैरवस्वना ।
तरुणं दारुणा वृद्धा दक्षिणं वामभाषिणी ॥
न्यायवृत्तं सुदुर्वृत्ता प्रियमप्रियदर्शना । அர. 17 (9,12)

அவள் "நீர் ராக்ஷஸர்கள் இருக்கும் இவ்விடத்திற்கு வந்திருக்கிறீரே! உமக்கு இங்கே என்ன காரியம்? அதைச் சொல்லவும்."

आगतस्त्वमिमं देशं कथं राक्षससेवितम् ॥
किमागमनकृत्यं ते तत्त्वमाख्यातुमर्हसि । ,, (13,14)

என்று ராமரைக் கேட்டபோது அவர் எல்லாவற்றையும் சொல்ல ஆரம்பிக்கிறார். அதற்கு காரணமாக, ராமருக்கு எப்பொழுதும் ருஜுவான புத்தியே இருந்தபடியாலும், அவருக்கு ஒரு நாளும் பொய் சொல்லுவது ஸம்மதமாகாததினாலும், அதிலும் ஆசிரமத்தில் இருக்கிறபோதும் ஸ்திரீகளிடத்திலும் பொய் சொல்லுவது நியாயமில்லாததினாலும் ராமர் அவ்விதம் சொன்னாரென்று வால்மீகி கூறுகிறார்.

ऋजुबुद्धितया सर्वमाख्यातुमुपचक्रमे ।
अनृतं न हि रामस्य कदाचिदपि संमतम् ॥
विशेषेणाश्रमस्थस्य संनिधौ स्त्रीजनस्य च । ,, (15,16)

அவ்விதம் வால்மீகியே ராமருக்கும் சூர்பணகைக்குமுள்ள வைலக்ஷண்யத்தை வர்ணிக்கும்போது அந்த வைலக்ஷண்யம் ராமருடைய மனதில் படாமல் இருக்க முடியுமா? அதுவும் தவிர சூர்பணகையானவள் தனக்கு பர்த்தாவாக இருக்கவேண்டுமென்று ராமரைக் கேட்டுக்கொள்ளும்போது "நான்தான் உமக்கு அனுரூபையானவள். இந்த ஸீதையை வைத்துக்கொண்டு உமக்கு என்ன பிரயோஜனம்? விகாரமாக விரூபமாக இருக்கிற இவள் உமக்குத் தகுந்தவள் இல்லை. இவள் அழகு இல்லாமல் அழுங்கின வயிறோடு கூடினவளாயிருக்கிறாள்."

अहमेवानुरूपा ते भार्या रूपेण पश्य माम् ।
इमां विरूपामसतीं करालां निर्णतोदरीम् ॥ ,, ,, (28)

चिराय भव मे भर्ता सीतया किं करिष्यसि ।
विकृता च विरूपा च न चेयं सदृशी तव ॥ ,, ,, (27)

इत्येवमुक्तः काकुत्स्थः प्रहस्य मदिरेक्षणाम् ॥
इदं वचनमारेभे वक्तुं वाक्यविशारदः ॥ ,, ,, (30)

என்று ஸீதையைப்பற்றி அழகில்லை யென்றும், தானே அழகுள்ளவள்போலவும் சூர்பணகை சொன்னதைக் கேட்டு ராமருக்கு சிரிப்பு வருவது ஸஹஜமே. அப்பொழுது ஏற்பட்ட உத்ஸாஹத்தில் அவளுடன் கொஞ்சம் விளையாட்டாகப் பேசலாமென்ற புத்தி ஏற்பட்டது.

कृतदारोऽस्मि भवति भार्येयं दयिता मम ।
त्वद्विधानां तु नारीणां सुदुःखा ससपत्नता ॥

अनुजस्त्वेष मे भ्राता शीलवान् प्रियदर्शनः ।
श्रीमानकृतदारश्च लक्ष्मणो नाम वीर्यवान् ॥

अनुरूपश्च ते भर्ता रूपस्यास्य भविष्यति ॥ ,, 13 (5,4)

"எனக்கு தத்காலம் பார்யை இருக்கிறாள். உன்னைப் போலுள்ளவர்களோ சக்களத்திகளை ஸஹிக்கமாட்டார்கள். என் தம்பியோ பால்யம்; அழகாக இருக்கிறான்; இப்பொழுது பார்யையுமில்லை; அவன்தான் உனக்கு அனுரூபனான பர்த்தா" என்று சொன்னார். அதைக் கேட்டு அவளும் அதுவும் நியாயம்தான் என்று எண்ணி

லக்ஷ்மணனிடம் போய்க் கேட்கும்போது, அவனும் அதே உத்ஸாஹ புத்தியோடுகூட "நீ தாஸனுக்கு பார்யையாக வருவது உனக்கு இஷ்டமாக இருக்குமா? அண்ணா விற்கே இளையாளாக இருந்துவிடு; நீ சொல்லுகிறபடி அழகில்லாமல் விகாரமாய் ஒடுங்கின வயிறுடன் கூடிய இந்தக் கிழவியை விட்டுவிட்டு உன்னையே அங்கீகரிப்பார். உன்னுடைய உத்தமமான ரூபத்தை விட்டுவிட்டு மனுஷ்ய ஸ்திரீயினிடத்தில் யாராவது புத்திசாலி மனஸை வைப்பாரா?" என்று சொல்கிறான். சூர்ப ணகைக்கு இவர்கள் பரிஹாஸம் செய்கிறார்கள் என்பது தெரியவில்லை. லக்ஷ்மணன் சொன்னது ஸத்யம்தானே என்று நினைத்தாள்.

मन्यते तद्वचस्तथ्यं परिहासाविचक्षणा ॥ ,, ,, (13)

உடனே ராமரிடம் போய் "இந்த ஸீதை நப்பு
ளால்தானே என்னை மதிக்கமாட்டேனென்கிறீர்.
ளால் நான் இவளை நீர் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது இப்பொழுதே சாப்பிட்டுவிடுகிறேன், பிற்பாடு உம்முடன் தனித்து ஸுகமாக இருக்கலாம்" என்று சொல்லி வெகு கோபத்துடன் ஸீதையின்மேல் பாயப் போகிறாள். அதன் பிறகுதான் ராமருக்கு நாம் இவளிடம் விளையாடினது பிசகு என்று தெரிகிறது. உடனே லக்ஷ் மணனைப் பார்த்து "லக்ஷ்மணா! துஷ்டர்களுடன் பரிஹா ஸம் வைத்துக்கொள்ளவே கூடாது. ஸீதையை எப்படி யாவது காப்பாற்று."

क्रूरैरनार्यैः से त्रे परिहासः कथञ्चन
न कार्यः पश्य वैदेहीं कथञ्चित् सौम्य जीवतीम् ॥ (19)

என்று சொல்லுகிறார். இவ்விடத்திலும் தான் உத்ஸா ஹத்தில் செய்துவிட்ட காரியம் உசிதமில்லையென்பதை ராமர் உணர்ந்தாரென்று ஏற்படுவதால் ஸ்வதோஷவித் என்கிற விசேஷணமானது மிகவும் பொருத்தமேயாகும்.

இந்த இரண்டு ஸம்பவங்களிலிருந்தும், மனதில் எவ்வளவு உத்ஸாஹம் இருந்தபோதிலும், பரிஹாஸத்திற்கு உசிதமான ஸந்தர்ப்பம் எவ்வளவு ஏற்பட்டபோதிலும், ஸாத்விகர்களிடத்திலும் துஷ்டர்களிடத்திலும் பரிஹாஸம் வைத்துக்கொள்ளக் கூடாது என்பதை ராமருடைய நடத்தையிலிருந்தும் வார்த்தைகளிலிருந்தும் நாம் நிச்சயம் தெரிந்துகொள்ளலாம்.

(3) பஞ்சவடியிலிருந்து ஸீதையை ராவணன் எடுத்துக்கொண்டு போனபிற்பாடு, அவ்விஷயம் தெரிந்து ராமர் பலவிதமாகப் புலம்பி, அவளை எங்கெல்லாமோ தேடியும் அகப்படாமலிருந்தபோது மிகவும் சோகத்தினால் வருந்தி, அந்த சோகம் கோபமாகப் பரிணமித்து, கண் சிவந்து, உதடு துடிக்க "அந்த ஸீதையை தேவர்கள் எனக்குக் கொண்டுவந்து கொடுக்காமலிருந்தால் மூவுலகங்களையும், அதிலுள்ள சராசரங்கள் யாவற்றையும் உள்பட ஜகத் பூராவையும் நாசம் செய்துவிடுகிறேன்" என்று சொல்லி லக்ஷ்மணனிடமிருந்து தனுஸ்ஸை வாங்கிக்கொண்டு அதில் அம்பை வைத்து பிரயோகம் செய்யப்போனார். அப்பொழுது "தேவ—கந்தர்வ—மனுஷ்ய—பன்னகர்கள், பர்வதங்கள் உள்பட ஜகத் பூராவையும் கவிழ்த்துவிடுகிறேன்" என்றும் சொல்லுகிறார். அவர் சொல்லுவது வெறும் வார்த்தையல்ல. அவர் அஸ்திரங்களை கிரஹித்தது விசுவாமித்ரரிடம்; விசுவாமித்ரர் பரமசிவனை ஆராதித்து, அஸ்திர வித்யையை அறிந்துகொண்டவர். அவருக்குக் கோபம் வந்தபோது தக்ஷிண திக்கில் நக்ஷத்திரங்களை ஸ்ருஷ்டி பண்ணினவர். "இன்னொரு இந்திரனையும் ஸ்ருஷ்டி பண்ணிவிடுகிறேன்; அல்லது லோகத்தில் இந்திரனே வேண்டாம்" என்று சொல்லி தேவதைகளையே ஸ்ருஷ்டிக்க ஆரம்பித்தவர்.

அவருடைய சிஷ்யரான ராமருக்கும் அதே சக்தி இருக்கும் என்பதில் ஸந்தேஹிக்க இடமில்லை. மேலும் விவாஹமாகி அயோத்திக்குத் திரும்பி வரும்பொழுது பரசுராமர் எதிரில் வந்த ஸமயம் அவரிடமிருந்து வைஷ்ணவ தனுஸ்ஸை வாங்கிக்கொண்டு அவரைப் பார்த்து "நீர் பிராஹ்மணஞக இருக்கிறீர்; விசுவாமித்ரருடைய பந்து என்கிற முறையில் பூஜ்யராகவும் இருக்கிறீர் ஆகையால் உம்மைக் கொல்லுவதற்கு எனக்கு இஷ்டமில்லை. நீர் ஸஞ்சாரம் செய்துவரும் சக்தியை இந்த பாணத்திற்கு இரையாகக் கொடுக்கிறீரா? அல்லது நீர் எவ்வளவோ தபஸ் செய்து ஸம்பாதித்திருக்கும் உத்தமமான லோகங்களை நாசம் செய்யட்டுமா? உமக்கு எது இஷ்டம்?" என்று கேட்டதின்பேரில் பரசுராமர் "நான் தபஸ்ஸிஞல் ஸம்பாதித்திருக்கும் லோகங்களையே நாசம் செய்யும்" என்று சொன்னவுடன் ராமர் அம்பை பிரயோகிக்கிருர். அவர் விட்ட பாணத்திஞல் அந்த லோகங்கள் நாசமாக்கப்பட்டதை பரசுராமர் பார்த்துவிட்டு மஹேந்திர பர்வதத்திற்கு சீக்கிரமாகப் போய்விடுகிருர்.

ஆகையால் ராமருடைய பாணத்திஞல் கண்ணுக்கு முன்ஞல் துலங்குவதுதான் நாசமாகுமென்று சொல்வதற்கில்லை. எதையும் நாசம் செய்யும் சக்தி அதற்கு உண்டு. இவ்விதம் சோகத்திஞல் பீடிக்கப்பட்ட ராமர் நினைத்தால் எதையும் நடத்திவிடுவார் என்பதில் அவருடன் கூட இருந்த லக்ஷ்மணருக்கு ஸந்தேஹமே இல்லை. ஆஞல் இவ்வளவு கோபத்துடன் ராமரை இதற்கு முன்ஞல் பார்த்ததில்லை. இப்பொழுது பார்த்தவுடன் லக்ஷ்மணனே பயந்து வாடின முகத்துடன் அஞ்ஜலிபந்தம் செய்துகொண்டு ராமரைப் பார்த்து "தாங்கள் மிருதுவான ஸ்வபாவத்துடன் கூடினவர்; இந்திரிய நிக்ரஹமுள்ளவர்; ஸர்வ பூதங்களுடைய ஹிதத்திலேயே ஈடுபட்டவர்; இப்பொழுது தாங்கள் க்ரோதத்திற்கு வசமாகி தங்களுடைய ஸ்வபாவத்தை விட்டுவிடுவது

நியாயமில்லை. மேலும் யாரோ ஒருவன் செய்த அபராதத்திற்காக லோகங்களையே நாசம் செய்வது உசிதமில்லை. நாம் காடு, மலை, ஸமுத்திரம், நதிகள் எல்லா இடங்களையும் நன்கு தேடுவோம்; அப்படியும் ஸீதையை அபஹரித்தவன் யாரென்று தெரியாமல் போனாலும், தங்களுடைய பத்நியை தேவதைகள் ஸாத்விக முறையில் கொண்டு வந்து சேர்க்காமலிருந்தாலும், பிற்பாடு ஸமயம் வந்தபோது வேண்டியதுபோல் செய்யலாம்; இப்பொழுது தங்களுடைய நன்னடத்தையினாலும், ஸாமத்தினாலும், விநயத்தினாலும், நீதியினாலும், ஸீதை அகப்படாமல் போனால் பின்னால் தங்கள் அம்புகளை உபயோகப்படுத்தலாம்" என்று சொல்லுகிறான்.

अदृष्टपूर्वं संक्रुद्धं दृष्ट्वा रामं तु लक्ष्मणः ।
अब्रवीत् प्राञ्जलिर्वाक्यं मुखेन परिशुष्यता ॥　　அர. 65 (3)

पुरा भूत्वा मृदुर्दान्तः सर्वभूतहिते रतः ।
न क्रोधवशमापन्नः प्रकृतिं हातुमर्हसि ॥　　,,　,, (4)

एकस्य नापराधेन लोकान् हन्तुं त्वमर्हसि ।　　,,　,, (6)

பகவத் கீதையில், "ஒரு விஷயத்தில் அதிகமாகப் பற்றுதல் வைத்தால் அதில் ஆசை ஏற்படும். ஆசையிலிருந்து கோபம் ஏற்படும். கோபத்திலிருந்து மோஹம் ஏற்படும். மோஹத்திலிருந்து அறிவு பிசகும். அறிவு பிசகினால் புத்தி நாசத்தையடையும். புத்தி நாசத்தையடைந்தால் அவனுக்கே நாசம் ஏற்படும்".

ध्यायतो विषयान् पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात् संजायते कामः कामात् क्रोधोऽभिजायते ॥

क्रोधाद्भवति संमोहः संमोहात् स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद् बुद्धिनाशो बुद्धिनाशात् प्रणश्यति ॥ ,, ,, (62,63)

என்று சொல்லியிருக்கிறபடி ராமருக்கும், ஸீதை விசேஷ அபிமான பாத்திரமாயிருந்தபடியால், அவளிடத்தில் வைத்த ஆசையானது அவளைக் காணாதபோது கோபமாகப் பரிணமித்தது. கோபமானது தன்னிலையை மறக்கச் செய்து மோஹத்தில் கொண்டுவிட்டது. தன் நிலை மறந்தவுடன் தனக்கு முன் ஏற்பட்டிருந்த விவேகம், அதாவது எது செய்யலாம், எது செய்யக்கூடாது என்ற ஞானம், மங்கிற்று. அது மங்கினவுடன் புத்திக்கு நாசமானது ஏற்பட்டது. இதை வால்மீகி

तं तथा शोकसंतप्तं विलपन्तमनाथवत् ।
मोहेन महताऽऽविष्टं परिद्यूनचेतनम् ॥ அர. 66 (1)

"அவ்விதம் சோகத்தினால் தபித்து கதியற்றவர் போல் புலம்பிக்கொண்டு நன்கு மோஹத்தினால் பீடிக்கப் பட்டு மிகவும் சிரமத்தோடு புத்தியை இழந்தவராயிருக்கிற" என்று அந்த ஸமயத்தில் ராமரை வர்ணிக்கிறார். ராமர் ஜிதக்ரோதர் அதாவது கோபத்தை ஜயித்தவர் என்று ராமாயணம் ஆரம்பத்திலேயே சொல்லி இருந்தும் இப்பொழுது அவர் கோபத்திற்கு வசமானார் என்றால் அவருடைய ஸ்வபாவத்திலிருந்து மாறுதலடைந்தார் என்றே சொல்லவேண்டும். அந்த ஸமயத்தில் லக்ஷ்மணன் இதற்குமுன் எவ்வளவோ பெரியவர்கள் கஷ்டப்பட்டதையெல்லாம் எடுத்துச்சொல்லி

शोचितुं नार्हसे वीर यथाऽन्यः प्राकृतस्तथा ॥ ,, ,, (14)
त्वद्विधा न हि शोचन्ति सततं सत्यदर्शिनः ।
सुमहत्स्वपि कृच्छ्रेषु राम निर्विण्णदर्शनाः ॥ ,, ,, (15)

सत्त्वतो हि नरश्रेष्ठ बुद्ध्या समनुचिन्तय ।
बुद्ध्या युक्ता महाप्राज्ञा विजानन्ति शुभाशुभे ॥ ,, ,, (16)

त्वमेव हि पुरा राम मामेवं बहुशोऽन्वशाः ।
अनुशिष्याद्धि को नु त्वामपि साक्षाद्बृहस्पतिः ॥ ,, ,, (18)

बुद्धिश्च ते महाप्राज्ञ देवैरपि दुरन्वया ।
शोकेनाभिप्रसुप्तं ते ज्ञानं संबोधयाम्यहम् ॥ ,, ,, (19)

किं ते सर्वविनाशेन कृतेन पुरुषर्षभ ।
तमेव त्वं रिपुं पापं विज्ञायोद्धर्तुमर्हसि ॥ ,, ,, (21)

*"நீங்கள் ஸாமான்ய மனிதன் மாதிரி சோகத்தை அடையக்கூடாது. எவ்வளவு பெரிய கஷ்டம் வந்தாலும் கூட உண்மையை அறிந்தவர்கள் ஞானத்தை இழக்காமல் இருப்பார்கள். உங்களைப்போலுள்ளவர்கள் சோகத்தை அடையமாட்டார்கள். அவர்கள் தங்களுடைய புத்தியை நன்கு செலுத்தி எது நல்லது எது கெடுதல் என்று அறிவார்கள். நீங்களும் அப்படியே தங்கள் புத்தியினுல் உண்மையாக நன்ருக ஆலோசித்துப் பாரும். இவ்விதம் செய்யவேண்டுமென்று தாங்களே எனக்கு முன்னுல் பலதடவை சொல்லி இருக்கிறீர்கள்; தங்களுக்கு புத்தி சொல்வதற்கு ஸாக்ஷாத் பிருஹஸ்பதிக்குத்தான் முடியுமா? இப்பொழுது சோகத்தினுல் கொஞ்சம் தூங்கிக்கொண்டிருக்கிற தங்களுடைய ஞானத்தை நான் எழுப்பிவிடுகிறேன். தங்களுக்கு எல்லாரையும் நாசம் பண்ணுவதினுல் என்ன பிரயோஜனம்? எவன் சத்ருவோ அந்தப் பாபியைக் கண்டுபிடித்து அவனை நாசம் செய்வதுதான் நியாயமாகும்" என்று சொன்னுன். இவ்விதம் லக்ஷ்மணன் அழகாக எடுத்துச்சொன்ன உத்தரக்ஷணத்திலேயே அவன் சொல்லு*

வது நியாயம் என்று ராமர் ஒப்புக்கொண்டார். ஏனென்றால் அவர் இவன் சொன்ன வார்த்தைகளில் உள்ள ஸாரத்தை உடனே கிரஹித்துக்கொண்டார். தன்னுடைய கோபம் எவ்வளவு விருத்தியடைந்தபோதி லும் அதை உடனே நிக்ரஹம் செய்துகொண்டார்;

पूर्वजोऽप्युक्तमात्रस्तु लक्ष्मणेन सुभाषितम् ।

सारग्राही महासारं प्रतिजग्राह राघवः ॥ அர. 67 (1)

இதிலிருந்து ராமர் ஏதோ ஒரு நிமித்தத்தினால் தன் நிலையிலிருந்து நழுவ நேர்ந்து பக்கத்திலுள்ளவர் அவ ருடைய பிசகை எடுத்துக்காட்டும்போது அது வாஸ்த வம்தான் என்று ஒப்புக்கொண்டு தன்னைத் திருத்திக் கொள்ளக்கூடிய ஸ்வபாவமுள்ளவர் என்று தெரிகிறது. அதினாலேயே 'ஸ்வதோஷவித்' என்ற விசேஷணம் மிகவும் பொருந்தும்.

(4) ஸ்ரீராமர் வானர ஸைன்யத்துடன் லங்கையை உத்தேசித்துப் புறப்படுவதாகத் தீர்மானம் செய்த வுடன் ஸமுத்திரத்தை எப்படித் தாண்டி அக்கரைக்குப் போக முடியுமென்று கொஞ்சம் தயங்கினார். அப் பொழுது ஸுக்ரீவன் ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கை யைப் படையெடுத்து ராவணனைக் கொன்றுவிடுவதாக வெகு உத்ஸாஹத்துடன் சொல்லும்போது ஸமுத்ரத்தில் அணை கட்டினாலொழிய லங்கைக்குப் போகமுடியா தென்று சொன்னான். அந்த வார்த்தையைக் கேட்டு ராமர்.

तपसा सेतुबन्धेन सागरोच्छोषणेन वा ।

सर्वथाऽपि समर्थोऽस्मि सागरस्यास्य लङ्घने ॥ யுத்த. 3 (2)

"எப்படியாவது இந்த ஸமுத்ரத்தைத் தாண்டிவிட எனக்கு சக்தி உண்டு. தபஸ் செய்தோ, அணை கட்டியோ, ஸமுத்ரத்தை வற்றவைத்தோ போய்விடலாம்.' என்று சொல்கிறார். இதிலிருந்து ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்கு முதல் ஸாதனமாக தபஸ்ஸையே ராமர் குறிப்பிட்டிருப்பதால் அதையே பிரதானமாகக் கருதினார் என்பது நன்கு தெரிகிறது. பிற்பாடு விபீஷணர் வந்து சேர்ந்த பிறகு அவரிடம் ஆலோசனை கேட்ட ஸமயம் அவர்,

समुद्रं राघवो राजा शरणं गन्तुमर्हति । ,, ,, (31)

प्रकृत्या धर्मशीलस्य राघवस्याप्यरोचत ॥ ,, ,, (34)

ராமர் ஸமுத்ரராஜனை சரணமடைவதே நியாயம் என்று சொன்னார். அந்த யோஜனையானது ராமருக்கு மிகவும் பிடித்ததாக இருந்தது. இருந்தாலும் ராமர் ஸுக்ரீவனிடமும் லக்ஷ்மணனிடமும் யோஜனை கேட்டார். அவர்களும் விபீஷணன் சொல்லுவதே நியாயமென்று சொன்னார்கள். அதன்பேரில் குசங்களைப் பரப்பிக்கொண்டு ராமர் ஸமுத்ரக்கரையில் கிழக்கு முகமாக அஞ்ஜலிபந்தம் செய்துகொண்டு வலது கையில் தலையை வைத்துக் கொண்டு ப்ராயோபவேசம் செய்து, நியமத்தோடு கூட மூன்று அஹோராத்ரங்கள் ஸமுத்ரராஜனை வேண்டிக் கொண்டு படுத்திருந்தார். அப்படியிருந்தும் ஸமுத்ர ராஜன் தர்சனம் கொடுக்காமல் இருந்தபடியால் ராமர் மிகவும் கோபம் கொண்டு "நான் பொறுமையோடு இருப்பதால் என்னை சக்தியற்றவன் என்று நினைத்து இந்த ஸமுத்ரராஜன் எனக்கு தர்சனம் கொடுக்கவில்லை. இவரைப்போல் இருக்கிறவர்களிடத்தில் க்ஷமையும், சாந்தியும் நியாயமாகாது, ஆகையால் ஹே லக்ஷ்மணா! தனுஸ்ஸைக் கொண்டு வா. ஸர்ப்பம் மாதிரி இருக்கிற அம்புகளையும் கொண்டு வா! ஸமுத்ரத்தை வற்ற அடிக்க வானரங்கள் காலாலேயே நடந்து செல்லட்டும்"

क्षमया हि समायुक्तं मामयं मकरालयः ॥
असमर्थं विजानाति धिक् क्षमामीदृशे जने ।
न दर्शयति साम्ना मे सागरो रूपमात्मनः ॥

चापमानय सौमित्रे शरांश्चाशीविषोपमान् ।
समुद्रं शोषयिष्यामि पद्भ्यां यान्तु प्लवङ्गमाः ॥ 21 (20,22)

என்று சொல்லி தனுஸ்ஸை யெடுத்து பாணங்களைப் பூட்டி ஸமுத்ரத்தைக் கொந்தளிக்கும்படி செய்கிறார். அப்பொழுது லக்ஷ்மணன் எழுந்திருந்து 'வேண்டாம் வேண்டாம்' என்று சொல்லி தனுஸ்ஸைப் பிடித்துக் கொண்டு

भवद्विधाः कोपवशं न यान्ति
दीर्घं भवान् पश्यतु साधुवृत्तम् ॥ ,, ,, (34)

'தங்களைப்போலுள்ளவர்கள் கோபத்திற்கு வசமாக ஆகக்கூடாது. ஸாத்விக வழியில் தாங்கள் உபாயத்தைத் தேடவேண்டும்" என்று சொல்லியும் ராமர் கோபம் அடங்காமல் கையில் எடுத்த அம்பில் ப்ரஹ்மாஸ்திரத்தை அபிமந்த்ரணம் செய்தார். உடனே ஜகத்து பூராவும் ஒரு ஆட்டம் கொடுக்கையில் ஸமுத்ரராஜன் ரூபம் தரித்து ராமர் முன்னால் வந்து நின்று அஞ்ஜலி பந்தம் செய்துகொண்டு சொல்கிறார்.

पृथिवी वायुराकाशमापो ज्योतिश्च राघव ॥

स्वभावे सौम्य तिष्ठन्ति शाश्वतं मार्गमाश्रिताः ।
तत्स्वभावो ममाप्येष यदगाधोऽहमप्लवः ॥

विकारस्तु भवेद्राघ एतत्ते वेदयाम्यहम् ।
न कामान्न च लोभाद्वा न भयात् पार्थिवात्मज ॥
ग्राहनक्राकुलजलं स्तम्भयेयं कथंचन । „ „ (25,28)

"பிருதிவீ, வாயு, ஆகாசம், ஜலம், தேஜஸ் ஆகிய ஐந்து பூதங்களும் அவை அவைகளுக்கு ஏற்பட்ட ஸ்வபாவத்திலேயே நிற்கவேண்டியவைகள். அதுதான் அவைகளுக்கு ஏற்பட்ட சாசுவதமான மார்க்கம். அதேமாதிரி ஆழமாகவும், தாண்டமுடியாமலும் இருப்பது என்னுடைய ஸ்வபாவம்; நான் ஆழமில்லாமல் ஏற்பட்டுவிட்டால் என் ஸவபாவத்தையே மாற்றினதாக ஆகும். இதை உமக்கு ஞாபகப்படுத்துகிறேன். காமத்தினுலோ, லோபத்தினுலோ, பயத்தினுலோ நான் என்னுடைய ஜலத்தை அப்படியே ஸ்தம்பிக்கும்படி செய்யமாட்டேன்,"

विधास्ये येन गन्तासि विषहिष्ये ह्यहं तथा ॥ „ „ (28)
पिता दत्तवरः श्रीमान् प्रतिमो विश्वकर्मणा ।
एष सेतुं महोत्साहः करोतु मयि वानरः ॥
तमहं धारयिष्यामि तथा ह्येष यथा पिता । „ „ (45,46)

"எப்படி அக்கரைக்குப் போகலாம் என்று உபாயம் வேண்டுமானுல் சொல்லுகிறேன், இதோ விசுவகர்மாவினுடைய புத்ரனுன நளன் இருக்கிறுன், அவன் உத்ஸாஹத்துடன் அணையைக் கட்டட்டும். நான் அதைத் தாங்கிக்கொண்டு இருக்கிறேன்" என்று சொல்லி மறைந்தார். அவர் சொன்னபடியே நளனைக்கொண்டு அணை கட்டப்பட்டது. இந்த ஸம்பவத்திலிருந்து ராமர் தனக்கு ஏற்பட்ட கோபத்திலுல் ஸமுத்ரராஜனை அதட்டியும்கூட,

ஸமுத்ரராஜன் தன்னுடைய ஸவபாவத்திற்கு விரோத மாக நடந்துகொள்ள முடியாது என்ற நியாயத்தை எடுத்துச் சொன்னவுடன், அதை ராமர் ஒப்புக்கொண் டார் என்பது தெரிகிறது. தனக்கு வழிவிடத்தான் வேண்டுமென்று பிடிவாதம் செய்யாமல், ஸமுத்ரராஜன் சொன்ன உபாயத்தையே கைக்கொண்டார். இதிலிருந் தும் ஸமுத்ரராஜன் அவருடைய ஸ்வபாவத்திற்கு விரோதமாக இரண்டு பக்கமும் விலகிக்கொண்டு வழி விடவேண்டுமென்று வற்புறுத்துவது சரியில்லை யென் பதை உணர்ந்தார் என்று தெரிவதால் இதன் மூலமாக வும் ஸ்வதோஷவித் என்கிற அடைமொழி மிகவும் நியாயம் என்று தெளிவாகிறது. அதிகோபத்திலிருந்து அடுத்த க்ஷணத்திலேயே சாந்தமாகக்கூடிய தன்மை யானது உத்தம புருஷர்களுக்கு லக்ஷணம்.

முன் குறிப்பிட்ட இந்த நான்கு ஸம்பவங்களிலும் ராமரிடம் ஏதேனும் தோஷம் இருந்ததாகவே ஸாமான்ய ஜனங்கள் நினைக்கமாட்டார்கள். பரிஹாஸம் செய்தால் அது ஒரு தோஷமா? கோபம் வந்து பயமுறுத்தினல் அது ஒரு தோஷமா? என்றே நினைப்பார்கள். ராமர் மிகவும் ஸ்வச்சமான ஸ்வபாவத்துடன் கூடினவராத லால் அவருடைய தர்ம நிலையே வேறு. அவருடைய நிலை யிலிருந்து பார்க்கும்போது இவைகளும் தோஷமாகவே மனதில் படும். அவருடைய மனத்தூய்மையில் ஒரு ஸ்வல்ப அம்சமாவது நம்மிடத்தில் இருந்தால், நாமும் தர்மத்திலிருந்து விலகுவதற்கு அஞ்சுவோம். யாருமே தன்னல் கூடியமட்டும் அந்நிலையையடைந்து உத்தம மான ஸ்வபாவத்துடன் எவ்வித தோஷமுமன்னியில் வாழ்ந்து வந்து நித்யமான ஸுகத்தை அடைவதற்கு வழி காட்டியாக ராமசந்திரமூர்த்தியினுடைய திவ்யமான த்தை நமக்கு இவ்வளவு அழகாகவும் ஸூக்ஷ்ம

மாகவும் எடுத்துச் சொல்லி தர்மத்தில் நம்மை ஈடு படும்படி செய்திருக்கும் வால்மீகி மஹரிஷிக்கு நாம் என்றும் கடமைப்பட்டிருக்கிறோம். ஸ்ரீமத் ராமாயணம் வெறும் கதையென்று எண்ணக்கூடாது. நமக்கு மனதில் நன்றாகப் படியும்படி சரித்திர ரூபமாக ஏற்பட்ட தர்ம சாஸ்திரம் என்பதை மறந்துவிடக் கூடாது. ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசார்யாள் வால்மீகியைக் குறிக்கும் போது பகவான் என்றும், ராமாயணத்தை குறிக்கும் போது ஸ்மிருதி என்றுமே சொல்லுவது வழக்கம்.

## அத்யாயம் 8

## லக்ஷ்மணன் கூற்று

ஸ்ரீராமரிடத்திலேயே லக்ஷ்மணன் குற்றம் சாற்ற நினைத்த ஒரு ஸம்பவத்தை இங்கு குறிப்பிட நினைக்கிறேன்.

கைகேயினுடைய நிர்பந்தத்தின் பேரில் தசரத மஹாராஜன் தர்மத்திற்குக் கட்டுப்பட்டு ராமரைக் காட்டுக்குப்போகச்சொல்லும்படி ஏற்பட்டது. அப்பொழுது கூட இருந்த லக்ஷ்மணனுக்கு இது பெரிய அநியாயமாகத் தோன்றி, கோபம் ஏற்பட்டபோதிலும் அதை வெளிக்காட்டுவதற்கு இடமில்லாமலே போய்விட்டது. ராமர், தன்னை காட்டிற்குப் போகச் சொன்னதற்கு என்ன காரணம் என்று கூடக் கேட்காமல், இவ்விஷயத்தை தசரதர் நேரில் தன்னிடம் சொல்லாமல், கைகேயி மூலமாகச் சொன்னதற்குக் காரணம் என்ன என்பதையே கேட்டுக்கொண்டிருந்தார். அவர் காட்டிற்குப் போக எவ்வித ஆக்ஷேபணையும் சொல்லாமல் இருக்கும் போது தான் குறுக்கிடுவது நியாயமில்லையென்று கோபத்தை அடக்கிக்கொண்டு லக்ஷ்மணன் பேசாமல் இருக்கும்படி ஏற்பட்டது.

பிற்பாடு தாயார் கௌஸல்யையிடம் அநுமதி வாங்கிக் கொள்வதற்காக ராமர் போன ஸமயத்தில், ராமர் காட்டிற்குப் போகக்கூடாது என்று அவள் பலமாக மன்றாடிக்கொண்டிருந்தபோது லக்ஷ்மணனுக்குத் தன் கோபத்தைக் காட்டக் கொஞ்சம் அவகாசம் ஏற்பட்டது. ஆனால் ராமர் தன் தாயாரையும் தன்னுடைய தீர்மானத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்து விட்டபடியால், அங்கும் லக்ஷ்மணன் ஒன்றும் செய்வதற்கில்லை. எப்படியும் ஸீதையிடத்தில் போனால் அவள்

இந்த வனவாஸத்தை நிறுத்திவிடுவாள் என்று லக்ஷ்மணன் எதிர்பார்த்தான். அங்கேயும் ஸீதை, ராமர் காட்டிற்குப் போவது நியாயமா, இல்லையா என்பதைப் பற்றிக் கொஞ்சமேனும் கவனிக்காமல், ராமருடன் தானும் காட்டிற்கு வரவேண்டுமென்பதிலேயே குறிப்பாக நின்றுவிட்டாள். அதன்பேரில் ராமர் காட்டிற்குப் புறப்படுவதை நிறுத்தலாமென்ற ஆசை லக்ஷ்மணனுக்குப் போய்விட்டது.

லக்ஷ்மணன் பிறந்தது முதற்கொண்டு ராமர் கூடவே இருந்துவந்திருக்கிறான் என்பதை வால்மீகி சொல்லும்போது

वाल्यात्प्रभृति सुस्निग्धो लक्ष्मणो लक्ष्मिवर्धनः ।
रामस्य लोकरामस्य भ्रातुर्ज्येष्ठस्य नित्यशः ॥
सर्वप्रियकरस्तस्य रामस्यापि शरीरतः ।
लक्ष्मणो लक्ष्मिसंपन्नो बहिः प्राण इवापरः ॥
न च तेन विना निद्रां लभते पुरुषोत्तमः ।
मृष्टमन्नमुपानीतं अश्नाति न हि तं विना ॥
यदा हि हयमारूढो मृगयां याति राघवः ।
तदैनं पृष्ठतोऽभ्येति सधनुः परिपालयन् ॥ பால. 18 (27-30)

"ராமருக்கு லக்ஷ்மணன், சரீரத்தினால் எவ்வளவு ஸேவை செய்யவேண்டுமோ அவ்வளவையும் செய்து வந்தபடியால், பால்யம் முதல் எப்பொழுதும் ராமருக்கு வெளியிலுள்ள மற்றொரு பிராணன் மாதிரியே இருந்து வந்தான்; அவன் இல்லாமல் இவருக்கு தூக்கம் வராது; அவனில்லாமல் இவர் சாப்பிடவும் மாட்டார்; இவர்

ஏதேனும் வேட்டையாடுவதற்காகக் குதிரைமேல் ஏறிக் கொண்டு போனால் இவருக்குப் பின்னாலேயே தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு இவரை ரக்ஷித்துக்கொண்டு லக்ஷ்மணன் போவான்" என்று வர்ணித்திருக்கிறார். அப்படி இருந்துவந்ததால் ராமர் காட்டிற்குப் போவதானால் தனக்கும்தான் அது உண்டு என்ற தீர்மானம் லக்ஷ்மணனுக்கு இருந்தது. தவிரவும் ராமரிடம் ஸீதை வந்தது அவருடைய 13-வது வயதில். லக்ஷ்மணன் பிறந்ததுமுதல் கூடவே இருந்திருக்கிறான். காட்டிற்கு ஸீதையை அழைத்துக்கொண்டுபோக ஸம்மதித்தவர், தன்னை விட்டுவிட்டுப் போகக்கூடுமென்ற எண்ணமே அவனுக்கு உதிக்கவில்லை. அவர் எங்கே போனாலும் தானும் கூடவே உண்டு என்ற தீர்மானத்திலேயே இருந்தான். ஆனாலும் ஸீதையுடன் பேசி ஸீதையையும் அழைத்துக்கொண்டு காட்டிற்குப் போகத்தான் போகிறார் என்று தெரிந்தவுடன் ராமருடைய பாதத்தைப் பிடித்துக்கொண்டு,

यदि गन्तुं कृता बुद्धिर्वनं मृगगजायुतम् ।
अहं त्वाऽनुगमिष्यामि वनमग्रे धनुर्धरः ॥ அயோ. 13 (3)

"காட்டிற்குப் போகிறதென்று தீர்மானமாகிவிட்டால் நான் கூடவே தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு முன்னால் போகிறேன்" என்று சொன்னான். அவனை ராமர் பலவிதமாக ஸமாதானம் சொல்லி காட்டிற்கு வர வேண்டாமென்று தடுத்துப்பார்த்தார். அப்பொழுது லக்ஷ்மணன் ராமரைப் பார்த்து "தாங்கள் ஏற்கனவே எனக்கு அனுமதி கொடுத்திருக்கும்போது இப்பொழுது என்ன காரணத்தினால் என்னைத் தடுக்கிறீர்கள்? கூட வருவதற்கு ஆசைப்படுகிற என்னைத் தடுப்பதற்குக் காரணம் என்ன என்பதைத் தெரிய விரும்புகிறேன். குற்றமற்றவரே, எனக்கு இந்த ஸம்சயம் ஏற்பட்டிருக்கிறது" என்று சொல்லுகிறான்.

रामेण वचनैः सान्त्वैर्निषिद्धः पुनरब्रवीत् ॥

अनुज्ञातश्च भवता पूर्वमेव यदस्म्यहम् ।
किमिदानीं पुनरिदं क्रियते मे निवारणम् ॥

यदर्थं प्रतिषेधो मे क्रियते गन्तुमिच्छतः ।
एतदिच्छामि विज्ञातुं संशयोऽयं ममानघ ॥ ,, (6-8)

இவ்விதம் கேட்கும்போது ராமரை "தோஷமற்றவரே!" என்று ஸம்போதனம் செய்கிறான். அவர் ஏற்கனவே இவனுக்கு அனுமதி கொடுத்துவிட்டு இப்பொழுது தடுத்தாரேயானால் அவர் தோஷமற்றவர் என்று எப்படிச் சொல்லுகிறது? அவர் ஏற்கனவே ஸம்மதிக்கவில்லையென்றிருந்தால் லக்ஷ்மணன் வாக்கியத்திற்கு என்ன அர்த்தம்? அவன் பொய் சொல்லுகிறான் என்று ஏற்படாதா? இவ்விரண்டையும் ஸமரஸப் படுத்தினால் ஒழிய இவ்விருவர்களில் யாராவது ஒருவர் பிசகி இருக்கிறார் என்று ஏற்படும். அவ்விதம் ஸமரஸப் படுத்துவதற்கு வழி இருக்கிறதா என்று பார்ப்பது அவசியமாகும்.

லக்ஷ்மணன் வாய் திறந்து ராமருடன் காட்டிற்குப் போவதாக இப்பொழுதுதான் முதல் தடவையாகச் சொல்லுகிறான். இது விஷயமாக இதற்கு முன்னால் ஒரு ஸந்தர்ப்பமும் ஏற்படவில்லை. லக்ஷ்மணனை அழைத்துப் போகும் விஷயமாக எவ்வித பிரஸ்தாவமும் ஏற்படவில்லை. ராமரும் அவனை அழைத்துக்கொண்டு போவதாகச் சொல்லியிருப்பதும் கிடையாது. அப்படியிருந்தும் இப்பொழுது லக்ஷ்மணன் தனக்கு ஏற்கனவே அனுமதி இருப்பதாக ராமரிடமே நேரில் சொல்லுவது ஆதாரமற்ற பேச்சா? அப்படியானால் ராமர் "நான்

இதற்கு முன்னால் உனக்கு ஸம்மதம் கொடுத்திருப்பது கிடையாது" என்று சொல்ல வேண்டாமா? அவர் லக்ஷ்மணனுடைய வாக்யத்தை மறுக்காமல், வ்ருத்தர்களான பெற்றோர்களைப் பார்த்துக் கொள்வதற்காக அவன் ஊரில் தங்குவதுதான் நியாயம் என்று மாத்திரம் சொல்லுகிறார். லக்ஷ்மணனுடைய வார்த்தையை மறுக்காததனால், அவன் சொன்னது வாஸ்தவம் என்று ராமர் ஒப்புக்கொண்டதாக ஆகாதா? அப்படியானால் அவர் முன்னால் ஸம்மதம் கொடுத்துவிட்டுப் பின்னால் பின்வாங்குவது உசிதமாகுமா? ஆகையால் ராமர் ஸம்மதித்தார் என்றும், ராமர் ஸம்மதிக்கவில்லையென்றும் இரண்டையும் வைத்துக்கொள்ளும்படி ஏற்படுகிறது. அப்படி வைத்துக்கொள்வது பரஸ்பர விரோதமாகுமே தவிர இரண்டு வாக்யங்களையும் ஸமரஸப் படுத்தினதாக ஆகாது. ஆகையால் எவ்விதத்தில் இரண்டும் பொருந்தக்கூடியது என்பதைக் கவனிக்கவேண்டும். ராமர் வாயை விட்டு ஸம்மதம் என்று சொல்லாமலிருந்தபோதிலும், அவர் முன் சொன்ன வார்த்தைகளிலிருந்து அவருடைய ஸம்மதத்தை நன்கு ஊஹிக்க லக்ஷ்மணனுக்கு அவகாசம் இருந்ததென்றே வைத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. அப்படியானால், அவ்விதம் ராமர் என்ன வார்த்தைகளை உபயோகித்திருக்கிறார்? அவைகளில் ஸம்மதம் இருப்பதாக எப்படி லக்ஷ்மணன் நினைத்துக் கொண்டான்? என்று ஆராயவேண்டும். ஸ்ரீமத் ராமாயணத்தில் இவ்விஷயமாக நன்கு கவனிக்கும்போது கீழே குறிப்பிடும் ஸந்தர்ப்பங்களிலிருந்து லக்ஷ்மணனுக்கு ஆதாரம் உண்டு என்று தெரியவருகிறது.

1. கௌஸல்யை ராமரை விட்டுப் பிரிவதற்கு இஷ்டமில்லாமல் இருக்கிறாள் என்பதைத் தெரிந்து லக்ஷ்மணன், என்ன தடை ஏற்பட்டாலும், அவைகளை எதிர்த்து ராமருக்கு பட்டாபிஷேகத்தைத் தானே

நடத்தி விடுவதாக, வெகு தைர்யமாகச் சொல்லுகிறுன். அப்பொழுது அவனுக்கு ராமர் பதில் சொல்கிருர் :—

निगृह्य रोषं शोकं च धैर्यमाश्रित्य केवलम् ।
अवमानं निरस्येमं गृहीत्वा हर्षमुत्तमम् ॥

उपक्लृप्तं हि यत् किंचित् अभिषेकार्थमद्य वै ।
सर्वं विसर्जय क्षिप्रं कुरु कार्यं निरत्ययम्

सौमित्रे योऽभिषेकार्थे मम संभारसंभ्रमः ।
अभिषेकनिवृत्त्यर्थे सोऽस्तु संभारसंभ्रमः ॥ அயோ. 22 (3-5)

तस्मादपरितापः सन् त्वमप्यनुविधाय माम्
प्रतिसंहारय क्षिप्रमाभिषेचनिकीं क्रियाम् ॥ (26)

"உன் கோபத்தையும் சோகத்தையும் அடக்கிக் கொண்டு, தைர்யமாக இருந்து இதை ஒரு அவமானம் என்று நினைக்காமல் நன்கு ஸந்தோஷமாகவே இருந்து கொண்டு, இப்பொழுது அபிஷேகத்திற்காகத் தயாராக இருக்கும் எல்லாவற்றையும் தியாகம் செய்துவிடு ; செய்ய வேண்டியதை நன்கு தோஷமில்லாமல் செய் ; இந்த அபிஷேகத்தில் உனக்கு இருக்கும் பரபரப்பை அபிஷேகத்திலிருந்து விலகுவதில் வைத்துக்கொள்; ஆகையால் நீ தாபமன்னியில் நான் செய்கிறபடி செய்து அபிஷேக யத்னத்தை நிறுத்திக்கொள்."

பட்டாபிஷேகம் ராமனுக்கே தவிர லக்ஷ்மணனுக்கு இல்லை. லக்ஷ்மணனைப் பார்த்து ராமர், "நான் செய்கிற படி செய்" என்று சொன்னுல் "அபிஷேகத்திலுள்ள ஆசையை விட்டு விட்டு என்னுடன் நீயும் காட்டிற்கு

வா" என்று சொன்னதாக லக்ஷ்மணன் அர்த்தம் செய்து கொண்டால் நியாயம்தானே?

2. கௌஸல்யையை ஸமாதானப்படுத்தி, தான் காட்டுக்குப் போவதை அங்கீகாரம் செய்து ஆசீர்வாதம் செய்யவேண்டுமென்று ராமர் அவளைக் கேட்கும்போது "நான் காட்டிற்குப் போவதற்கு அனுமதி கொடு; ஹே, தேவி! எங்களுக்கு ஸ்வஸ்த்யயனங்களைச் செய்" என்று சொல்லுகிறார்.

सा माऽनुमन्यस्व वनं व्रजन्तं

कुरुष्व नः स्वस्त्ययनानि देवि । அயோ. 21 (62)

ஸம்ஸ்கிருதத்தில் ஏகவசனம், த்விவசனம், பஹுவசனம், என்று வசனங்கள் மூன்று உண்டு. த்விவசனம் என்று தனியாக இருப்பதால், பஹுவசனம் மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையைக் குறிக்கும். ஆகையால் ராமர் 'எங்களுக்கு' என்று பஹுவசனத்தை உபயோகித்தபோது, குறைந்தது மூன்று பேர்களாவது அவருடைய மனதில் இருந்திருக்க வேண்டும். பெரியோர்கள் தன்னைப்பற்றிச் சொல்லும் போதோ, பெரியோர்களைப் பற்றி மற்றவர்கள் சொல்லும்போதோ, பஹுவசனத்தை உபயோகிப்பது உண்டு. அவ்விதம் கௌரவத்தைக் காட்டக்கூடிய பஹுவசனத்தை ராமர் தனக்குத்தானே உபயோகப்படுத்திக் கொண்டாரென்றால் அவருடைய ஸ்வபாவஸித்தமான விநயத்திற்குப் பொருத்தமாகாது; தவிரவும், தன் தாயாரிடம் பேசிக்கொண்டிருக்கும்போது தன்னை பஹுவசனம் உபயோகித்து சொல்லிக் கொண்டாரென்றால் மிகவும் அநுசிதமாகும். ஆகையினால் அவர் உபயோகப் படுத்தின பஹுவசனம் குறைந்தது மூன்று பேர்களையாவது குறிக்கவேண்டும்.

ஸம்ஸ்கிருதத்திலுள்ள नः (ந:) என்கிற பஹுவசந சப்தமானது சில ஸமயங்களில் யாரைப் பார்த்து சொல்லப்படுகிறதோ அவரையும் சேர்த்துக் குறிக்கும். அதாவது தமிழில் "நான்" என்கிற சப்தத்திற்கு பஹுவசநமான "நாம்" என்ற சப்தம் சொல்லப்படுகிறவனையும் சேர்த்துக் குறிக்கிறதுபோல், ஸம்ஸ்கிருதத்திலும் உண்டு. ஆகையால் ராமர் சொன்ன பஹுவசந சப்தம் கௌஸல்யையையும் சேர்த்துக் குறிக்கலாம் என்று சொல்லலாம். ஆனால் கௌஸல்யையைக் காட்டிற்கு அழைத்துக்கொண்டு போக முடியாதென்று தீர்மானமான பிற்பாடே ராமர் இதைச் சொல்லியிருப்பதால் அவளையும் சேர்த்துக் கணக்கிட்டார் என்று சொல்லுவதற்கு இடமில்லை. ஸ்வஸ்த்யயனம் அவளுக்கும் சேர்த்து என்பது உசிதமுமாகாது. அங்கு நின்றவர்கள் ராமரும் லக்ஷ்மணனும்தான். அப்படியிருக்க ஸீதையையும் அழைத்துக்கொண்டு போகும்படி ஏற்படும் என்று நினைத்தே ராமர் பஹுவசநத்தை உபயோகப்படுத்தியிருக்கிறார் என்று நினைக்கவேண்டியிருக்கிறது.

தவிரவும் தான் காட்டிற்கும் போகும்படியாக இருக்கிறதென்று கௌஸல்யையிடம் சொல்லுவதற்கு முன்னால் முன்னுரையாக ராமர் சில வார்த்தைகள் சொல்லுகிறார் :—

देवि नूनं न जानीषे महद्भयमुपस्थितम् ।
इदं तव च दुःखाय वैदेह्या लक्ष्मणस्य च ॥ 20 (27)

"ஹே தேவி! ஒரு பெரிய பயமானது வந்திருக்கிறது என்பதை நீ அறியவில்லையென்று தெரிகிறது. இது உன்னை துக்கப்படுத்தும். அப்படியே ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் துக்கத்தை உண்டுபண்ணும்".

இதில் கண்ட மூவரில் கௌஸல்யையைக் காட்டிற்கு அழைத்துப்போக உத்தேசம் கொஞ்சமேனும் இருக்கக் கூடியதில்லையாகையாலும், ஸீதையையும் லக்ஷ்மணனையும் சேர்த்துச் சொல்லி இருப்பதினாலும், ராமரும் ஸீதையும் காட்டுக்குப்போவதாக இருந்தால் மூன்றுவது தான்தான் என்று லக்ஷ்மணன் தீர்மானம் செய்து கொண்டதில் ஆச்சர்யம் என்ன? ராமர் உபயோகப் படுத்தின பஹுவசனத்திற்கு அவ்வளவு தாத்பர்யம் உண்டென்று லக்ஷ்மணன் நினைத்தது நியாயம்தானே? முதலில் ராமர் "எனக்கு ஸ்வஸ்த்யயனம் செய்."

अनुमन्यस्व मां देवि गमिष्यन्तमितो वनम् ।
शापिताऽसि मम प्राणैः कुरु स्वस्त्ययनानि मे ॥ 21 (46)

*என்று சொன்னவர் தன்னை மாத்திரம் உத்தேசித்திருந்தாலும், பின்னால் கௌஸல்யை ஸ்வஸ்த்யயனம் செய்விக்கும்போது ராமரை மாத்திரம் உத்தேசித்து ஆசீர்வதித்து*

वाचयामास रामस्य वने स्वस्त्ययनक्रियाः ।

உபாத்யாயரைக் கொண்டு ஹோமாதிகளைச் செய்யச் சொல்லி இருந்தபோதிலும், மத்தியில் ராமர் உபயோகித்த பஹுவசநத்திற்கு பிராமாண்யம் கொடுத்து லக்ஷ்மணன் அவர் வார்த்தைக்கு அர்த்தம் செய்தால் என்ன பிசகு?

3. ராமருக்கு பட்டாபிஷேகம் செய்வதாய் தீர்மானமானவுடன் "அந்தப் பெருமை தனக்கு மாத்திரம் இல்லை, லக்ஷ்மணனையும் சேர்ந்தது" என்று ராமரே சொல்லுகிறார்.

लक्ष्मणेमां मया सार्धं प्रशाधि त्वं वसुन्धराम् ।
द्वितीयं मेऽन्तरात्मानं त्वामियं श्रीरुपस्थिता ॥

सौमित्रे भुङ्क्ष्व भोगांस्त्वमिष्टान् राज्यफलानि च
जीवितं च हि राज्यं च त्वदर्थमभिकाङ्क्षये ॥ 4 (43,44)

*இவ்விதம் ஸுகத்தில் பங்கு உண்டு என்று சொல்லிக் கொண்டிருக்கிற ராமர் துக்கத்தில் மாத்திரம் பங்கு இல்லை என்று சொன்னால் லக்ஷ்மணன் ஒப்புக்கொள்ள முடியுமா? ராமருடைய வெளியிலுள்ள பிராணன் என்று பாலகாண்டத்தில் (18-28) வர்ணித்திருக்கும்போது அப் பிராணனை விட்டு ராமர் போகமுடியுமா? ஆகையால் ராமர் காட்டிற்குப் போகவேண்டுமென்று ஏற்பட்ட கட்டளையில் தானும் உள்பட்டவன் என்றே லக்ஷ்மணன் நினைத்திருந்தபடியால், தன்னை காட்டிற்கு வரக்கூடா தென்று ராமர் சொல்வதின் தாத்பர்யம் அவனுக்குத் தெரியவில்லை. ராமர் தன்னைவிட்டுப் பிரியாமல் இருக்கும் ஸ்வபாவத்தை மாற்றிக்கொண்டு விட்டாரா, அல்லது தன்னிடத்தில் ஏதோ குற்றமிருந்து அதனால் ராமர் விலக்குகிறாரா, என்று அறியமுடியாததனால் ராமரையே ஸமாதானம் கேட்கிறான்.*

4. *இதற்கு முன்னால் லக்ஷ்மணன், ராமரிடம் தனக்குள்ள அபிமானத்தைப்பற்றிக் கௌஸல்யையிடம் சொல்லுகிறான் :—*

अनुरक्तोऽस्मि भावेन भ्रातरं देवि तत्त्वतः ।
सत्येन धनुषा चैव दत्तेनेष्टेन ते शपे ॥

दीप्तमग्निमरण्यं वा यदि रामः प्रवेक्ष्यति ।
प्रविष्टं तत्र मां देवि त्वं पूर्वमवधारय ॥ ,, 21 (16,17)

"நான் என் ஸத்யத்தின் பேரிலும், தானம், இஷ்டம் முதலிய ஸத்காரியங்கள் பேரிலும் ஆணையை வைத்துச் சொல்லுகிறேன். நான் அண்ணாவிடம் மிகவும் வாஸ்தவமாக அபிமானத்துடன் இருந்து வருகிறேன். அவர் எரிகிற நெருப்பில் நுழைந்தாலும், காட்டில் புகுந்தாலும் நான் அவருக்கு முன்னால் போயிருப்பேன் என்பதை நன்கு அறியவும்". அப்பொழுது கூடவேயிருந்தும் அவனுடைய வார்த்தைக்கு ராமர் ஒருவித மறுப்பும் சொல்லாமல்

तव लक्ष्मण जानामि मयि स्नेहमनुत्तमम् ।
विक्रमं चैव सत्त्वं च तेजश्च सुदुरासदम् ॥ (39)

"ஹே லக்ஷ்மணா! நீ என்னிடம் வைத்திருக்கும் உத்தமமான ஸ்நேஹத்தையும் உன்னுடைய விக்ரமத்தையும் பலத்தையும் இன்னொருவன் நெருங்கமுடியாத தேஜஸ்ஸையும் நன்கு அறிவேன்." என்று மாத்திரம் சொல்லுகிறார். இதிலிருந்து தான் காட்டுக்குப்போனால் லக்ஷ்மணன் கூடவே வருவான் என்பதில் ராமருக்கு ஸந்தேஹமில்லை. ஆகையினாலேயே அப்பொழுது லக்ஷ்மணனை "நான் காட்டிற்குப்போனால் நீ வரக்கூடாது" என்று உடனே தடுக்கவில்லை. தான் காட்டிற்கு அவருடன் வருவதாக வ்யக்தமாகச் சொல்லியும் அவர் கொஞ்சமேனும் ஆக்ஷேபிக்காமல் இருந்த நிலையில் ராமர் ஸம்மதித்தார் என்றே லக்ஷ்மணன் நினைத்துக் கொண்டது நியாயம் தானே?

5. இவ்விதம் ராமர் தன்னைக்காட்டிற்கு அழைத்துக் கொண்டு போவாரா என்பதில் கொஞ்சமேனும் ஸந்தேஹம் ஏற்படுவதற்கு இடமில்லாமல் இருந்தது டன் அழைத்துக் கொண்டே போவாரென்று லக்ஷ்மணன் திர்மானித்துக் கொள்ளப் போதுமான காரணங்கள் இருந்தன. அத்துடன் கௌஸல்யையினிடத்தில்

அனுமதி பெற்றுக்கொண்டு ஸீதையினிடம் வந்து தான் காட்டிற்குப் போகவேண்டியிருக்கிற விஷயத்தைப்பற்றி அவளிடம் சொல்லும்போது, தான் காட்டிற்குப் புறப்பட்டுப்போனபிறகு அவள் அயோத்தியில் இருந்துகொண்டு எவ்விதம் நடந்துகொள்ளவேண்டுமென்று விவரமாக ராமர் எடுத்துச்சொல்லுகிறார். "காலையில் எழுந்திருந்து விதிப்படி தேவதைகளைப் பூஜித்துவிட்டு என்னுடைய தகப்பனார் தசரதமஹாராஜனை நமஸ்காரம் செய்ய வேண்டும்; என் தாயார் கௌஸல்யை வயதானவளாகவும், ஸந்தாபத்தினால் பீடிக்கப்பட்டவளாகவும் இருக்கிறவள், தர்மத்தை முன்னிட்டு விசேஷமாக உன்னால் கௌரவிக்கத் தகுந்தவள். அப்படியே என்னுடைய மற்றத் தாயார்களும் நித்யம் உன்னால் நமஸ்கரிக்கப்பட வேண்டும். ஸ்நேஹத்திலேயோ, அபிமானத்திலேயோ போஷிப்பதிலேயோ எனக்கு எல்லாத்தாயார்களுமே ஸமம். விசேஷமாக பரதனும் சத்ருக்னனும் எனக்கு பிராணனைவிட பிரியமானவர்கள். ஆகையால் அவர்கள் இரண்டுபேரிடத்திலும் தமையன், புத்ரன் என்கிற பாவனையே உனக்கு இருக்கவேண்டியது அவசியம்"

कल्यमुत्थाय देवानां कृत्वा पूजां यथाविधि।
वन्दितव्यो दशरथः पिता मम नरेश्वरः॥

माता च मम कौसल्या वृद्धा संतापकर्शिता।
धर्ममेवाग्रतः कृत्वा त्वत्तः संमानमर्हति॥

वन्दितव्याश्च ते नित्यं याः शेषा मम मातरः।
स्नेहप्रणयसंभोगैः समा हि मम मातरः॥

भ्रातृपुत्रसमौ चापि द्रष्टव्यौ च विशेषतः।
त्वया भरतशत्रुघ्नौ प्राणैः प्रियतरौ मम॥ ,, 26 (30-3

இந்த இடத்தில் லக்ஷ்மணன் விஷயமாக ஸீதை எவ்விதம் நடந்துகொள்ளவேண்டுமென்று ராமர் குறிப்பிடவில்லை. ராமர் காட்டிற்கு புறப்பட்ட பிற்பாடு லக்ஷ்மணன் அயோத்தியில் தங்குவான் என்ற எண்ணம் ராமருக்குக் கொஞ்சமேனும் இருந்ததேயானால் ஸீதையிடம் சொல்லும்போது லக்ஷ்மணன் விஷயமாக இவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென்று சொல்லாமல் இருந்திருப்பாரா? அவனும் தன் கூடவே வருவான் என்கிற நிச்சயத்தில்தான் அவர் லக்ஷ்மணனை இந்த ஸந்தர்ப்பத்தில் குறிப்பிடவில்லையென்று தோன்றுகிறது. இவ்விதம் ராமர் சொன்னதிலிருந்தும் தானும் ராமருடன் காட்டிற்குப் போவதுதான் ராமருடைய தீர்மானம் என்பதை லக்ஷ்மணன் தெரிந்துகொண்டதில் ஆச்சர்யம் என்ன? ஆகையினாலேயே "முன்னால் ஸம்மதித்துவிட்டு இப்பொழுது ஏன் ஆக்ஷேபிக்கிறீர்?" என்று லக்ஷ்மணன் கேட்டதற்கு "நான் அவ்விதம் ஸம்மதிக்கவில்லை" என்று ராமர் மறுக்காமல், அவன் காட்டிற்கு வராமல் இருப்பதற்கு வேறு காரணங்களைச் சொல்லிப்பார்த்தார். அவைகளுக்கும் லக்ஷ்மணன் ஸமாதானம் சொல்லி, தான் கூடவே வருவேனென்று உறுதியாகச் சொல்லும்போது ராமர் ஸம்மதிக்கும்படி ஏற்பட்டது.

## அத்யாயம் 9

## வாலியின் கேள்விகள்

ஸ்ரீராமர் ஸுக்ரீவனிடம் ஸக்யம் செய்துகொண்டு வாலியை ஸம்ஹரித்த விஷயமாகச் சிலர் அவரிடம் தோஷம் கல்பிக்கத் துணிகிறார்கள். தர்ம ஸம்ஸ்தாபனத்திற்காகவே அவதாரம் செய்தவர் பகவான் என்பதை மறந்துவிட்டாலும், மனுஷ்யன் என்ற முறையிலேயே தர்மத்தை ரக்ஷிக்கிறவர் என்று நாரதரும், தர்மமே உருவெடுத்தவர் என்று மாரீசனும், இதேபோல் ஸகலரும் சொல்லுகிறார்களென்பதை புறக்கணிப்பது நியாயமாகாது. வாலி எதிர்பாராமல் அடிபட்டுக் கீழே விழுந்தவுடன் கோபத்தினாலும், வருத்தத்தினாலும் சொல்லுகிற வார்த்தைகளுக்கு மதிப்புக் கொடுத்தும், தன்னைக் கொன்றது நியாயம்தான் என்று பின்னால் அவனே ஒப்புக்கொள்கிற வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்காமலும் இருப்பது உசிதமாகுமாவென்பதை யாவது கவனிக்கவேண்டாமா?

வாலி ஸ்ரீராமரைப் பார்த்து "நீ தார்மிகனாக வேஷம் போட்டவனே தவிர, வாஸ்தவத்தில் தார்மிகன் இல்லை. இவ்விதம் தர்மத்தை மீறக்கூடிய புத்ரனாக மஹாத்மா தசரதருக்கு எப்படிப் பிறந்தாய்?" என்பது போலுள்ள வார்த்தைகள் வெறும் வசவு ஆகுமேயொழிய வியவஹாரமாகாது. வாலி சொல்லுவதிலிருந்து வியவஹார அம்சங்களை மாத்திரம் கவனித்துப் பொறுக்கி எடுத்தால் மூன்று கேள்விகள் தான் அகப்படும். அவையாவன :—

(1) நான் ஒருவித அபராதமும் செய்யாமலிருக்கும் போது என்னை அடிக்கலாமா? (2) அடித்தாலும் என் எதிரில் வராமல் மறைந்து அடிக்கலாமா? (3) நான் அடிக்கக்கூடிய மிருகமுமில்லையே?

இந்த ஒவ்வொரு அம்சத்தையும் அவன் நிர்வசனம் செய்கிற ரீதியாகவே கவனிப்போம்.

1. நிரபராதி

हत्वा बाणेन काकुत्स्थ मामिहानपराधिनम् ॥
किं वक्ष्यसि सतां मध्ये कृत्वा कर्म जुगुप्सितम् । கிஷ். 17 (33,34)

"குற்றமில்லாத என்னை அம்பால் அடித்ததன் மூலம் வெறுக்கத்தக்க காரியத்தைச் செய்துவிட்டாய். ஸாதுக்களின் மத்தியில் கேட்டால் என்ன பதில் சொல்லப் போகிறாய்?" இதிலிருந்தே அபராதியாயிருந்தால் அடிக்கலாம் என்றுதான் ஏற்படுகிறது. அதை வாலியே வியக்தமாகச் சொல்லுகிறான்.

पार्थिवानां गुणा राजन् दण्डश्चापि अपराधिषु ॥ (28)

அரசர்களிடம் இருக்கவேண்டிய குணங்களைக் கணக்கிடும்போது குற்றம் செய்தவர்களை தண்டிக்க வேண்டியது அவசியமென்பதை ஒருமுறைக்கு இருமுறை சொல்லுகிறான். ஆனால் அவ்விதம் தண்டிக்கவேண்டிய அதிகாரம் ராஜாவையே சேர்ந்தது. இவ்விடத்திலேயே ஸ்ரீராமரை 'ராஜன்' (राजन्) என்று ஸம்போதனம் செய்வதால் அவர் அவ்வித அதிகாரம் பெற்றவரென்பதை வாலி ஒப்புக்கொண்டே பேசுகிறான்.

विषये वा पुरे वा ते यदा नापकरोम्यहम् ।
न च त्वामवजानेऽहं कस्मान्मां हंस्यकिल्बिषम् ॥ ,, (22,23)

தான் அரசனாக இல்லாமல் போனாலும் தனக்கு ஒருவன் அபகாரம் செய்தால் அவனை அடிக்கலாம். "நான்

உன் தேசத்திலாவது ஊரிலாவது ஏதேனும் அபகாரம் செய்தேனோ? உன்னை ஏதேனும் நிந்தித்தேனோ? ஒரு தப்பும் செய்யாத என்னை ஏன் அடித்தீர்?" என்கிறான்.

"நான் உனக்கு கெடுதல் செய்யாமலிருந்தாலும், என்னிடம் ஏதேனும் பதார்த்தமிருந்து அதை நீ விரும்பி அடைவதற்காக அடித்தாயா? உலகத்தில் விரோதத்திற்குக் காரணம் பூமி அல்லது தங்கம், அல்லது வெள்ளி இவைகளுக்கு ஆசைப்பட்டு அடித்தாயா? அல்லது, காட்டில் கிழங்குகளையும் பழங்களையும் தின்றுகொண்டிருக்கிற மிருகங்களில் சேர்ந்தவன் நான், நீயோ மனுஷ்யன், காட்டில் என்வசமுள்ள பழங்களில் உனக்கு ஆசையேற்பட்டதா?"

वयं वनचरा राम मृगा मूलफलाशनाः ।
एषा प्रकृतिरस्माकं पुरुषस्त्वं नरेश्वरः ।
भूमिर्हिरण्यं रूप्यं च विग्रहे कारणानि च ॥
अत्र कस्ते वने लोभो मदीयेषु फलेषु वा ॥ ,, ,, (28,30)

ராமபாணத்தால் அடிபட்ட வாலி தனது முதல் கேள்வியில், தான் நிரபராதி எனபதைக் காட்டி அரசன் தண்டிக்கும்படியான குற்றம் நான் ஒன்றும் செய்யவில்லை. நான் உனக்கு எவ்விதக் கெடுதலும் செய்யவில்லை. என்னிடமுள்ள ஏதேனும் பதார்த்த ஸம்பந்தமாய் நமக்குள் விரோதமுமில்லை. அப்படியிருக்க ஏன் என்னை அடித்தாய்? என்று கேட்டான்.

2. பராங்முகவதம்

पराङ्मुखवधं कृत्वा को नु प्राप्तस्त्वया गुणः ।
यदहं युद्धसंरब्धः शरेणोरसि ताडितः ॥ ,, ,, (15)

"நான் பிறருடன் யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும்போது பராங்முகமாயிருந்த என்னை மார்பில் அம்பினால் அடித்தாயே? உனக்கு இதனால் என்ன சிறப்புக்கிடைத்தது" என்றும்,

न मामन्येन संरब्धं प्रमत्तं योद्धुमर्हति
इति मे बुद्धिरुत्पन्ना बभूवादर्शने तव ॥ ,, ,, (20)

"நான் வேறொருவனுடன் ஈடுபட்டுக்கொண்டு உன் விஷயத்தை கவனிக்காமலிருக்கும்போது நீ தாக்க மாட்டாயென்று, உன்னைப் பார்ப்பதற்கு முன்னால் நினைத்திருந்தேன்" என்றும்,

मामिहाप्रतियुध्यन्तं अन्येन च समागतम् ,, ,, (24)

"நான் இங்கே உன்னை எதிர்த்து யுத்தம் செய்யவில்லையென்பதுடன் இன்னொருவனுடன் யுத்தம் செய்துகொண்டிருந்தேன்" என்றும்,

उदासीनेषु योऽस्मासु विक्रमस्ते प्रकाशितः ,, ,, (44)

"உதாஸீனனாயிருந்த என்னிடத்தில் உன் பராக்ரமத்தைக் காட்டினாயே" என்றும்,

त्वयाऽदृश्येन तु रणे निहतोऽहं दुरासदः ॥
प्रसुप्तः पन्नगेनेव नरः पानवशं गतः । ,, (46,47)

"குடி மயக்கத்தில் தூங்கிக்கொண்டிருந்தவனைப் பாம்பு கடித்ததுபோல, நீ என் கண்ணுக்குத் தென்

படாமலிருந்து கொண்டு, எதிர்க்க முடியாத என்னை அடித்திருக்கிருய்" என்றும் சொல்லுகிருன்.

3. அடிக்கத்தகாத மிருகம்

अधार्यं चर्म मे सद्भिः रोमाणि अस्थि च वर्जितम् ॥

अभक्ष्याणि च मांसानि त्वद्विधैर्धर्मचारिभिः ।

पञ्च पञ्चनखा भक्ष्या ब्रह्मक्षत्रेण राघव ॥

शल्यकः श्वाविधो गोधा शशः कूर्मश्च पञ्चमः ।

चर्म चास्थि च मे राजन् न स्पृशन्ति मनीषिणः ॥

अभक्ष्याणि च मांसानि सोऽहं पञ्चनखो हतः । கிஷ். 17 (36-39)

"ஸாதுக்கள் என் தோலேயோ, உரோமங்களேயோ உபயோகப்படுத்தமாட்டார்கள். எலும்பு நிஷித்தம், உன்னைப் போல் தர்மானுஷ்டானமுள்ளவர்கள் என் மாம்ஸத்தையும் சாப்பிடமாட்டார்கள், பிராஹ்மண க்ஷத்திரியர்களால் சாப்பிடக்கூடிய ஐந்து நகங்களுள்ள மிருகங்கள் ஐந்துதான்: அதாவது சல்யகம், சுவாவிதம் என்ற இருவகை முள்ளம் பன்றி, முதலை (அல்லது உடும்பு), முயல், ஆமை. அறிவாளிகள் என் தோலேயோ, எலும்பையோ தொடவே மாட்டார்கள். மாம்ஸத்தை யும் சாப்பிடமாட்டாகள். அப்படியிருக்க ஐந்து நக பிராணியான என்னை அடித்திருக்கிருய்" என்று சொல்லு கிருன்.

ஸ்ரீராமர் பதில் சொல்லும்போதும் வாலி புத்திசாலி களான பெரியோர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளா மல் சிறுபிள்ளைத்தனமாகப் பேசுவதாகச் சொல்லு

தெல்லாம் வியவஹார ரீதியாய் பதிலாகாது. ஆகையால் அவ்வார்த்தைகளை விட்டு விட்டு வாலியின் வாதத்திற்கு எவ்விதம் பதில் சொன்னாரென்பதைமாத்திரம் பார்ப்போம்.

1. "உன்னை எந்தக்காரணத்தினால் அடித்தேனென்பதைத் தெரிந்துகொள்."

तदेतत् कारणं पश्य यदर्थं त्वं मया हतः। கிஷ். 18 (18)

என்று ஆரம்பித்து "நீ ஸநாதனமான தர்மத்தைப் புறக்கணித்து விட்டுத் தம்பியின் பார்யையை கிரஹித்துக் கொண்டிருக்கிறாய். இந்த ஸுக்ரீவன் உயிருடன் இருக்கும் போது நீ காமத்தினால் உனக்கு மாட்டுப்பெண்ணாகிய ருமையுடன் இருக்கிறாய். பாபத்தைச் செய்தவன் நீ. இவ்விதம் தர்மத்தை மீறிக் காமத்தினால் தம்பியின் பார்யையைத் தீண்டினதற்காக இந்தத் தண்டனை உனக்குக் கொடுக்கப்பட்டது" என்றார்.

भ्रातुर्वर्तसि भार्यायां त्यक्त्वा धर्मं सनातनम् ॥

अस्य त्वं धरमाणस्य सुग्रीवस्य महात्मनः ।
रुमायां वर्तसे कामात् स्नुषायां पापकर्मकृत् ॥

तद्व्यतीतस्य ते धर्मात् कामवृत्तस्य वानर ।
भ्रातृभार्याविमर्शेऽस्मिन् दण्डोऽयं प्रतिपादितः ॥ ,, (18-20)

இது பாபமாகவே இருக்கட்டும். இதற்கு வேறு விதமான தண்டனை கிடையாதா வென்றால் "தர்மத்திற்கு விரோதமாயும் உலக நடவடிக்கைக்கும் விரோதமாயும் நடக்கிறவனுக்கு தண்டனையைத் தவிர தடுப்பதற்கு வேறுயிருப்பதாக எனக்குத்தெரியவில்லை. மேலும், பெண், ஸகோதரி, தம்பியின் மனைவி இவர்

களிடத்தில் பிரவிருத்திக்கிறவனுக்குத் தர்ம சாஸ்திரத்தில் வதம் தான் தண்டனையாக விதிக்கப்பட்டிருக்கிறது" என்றார்.

न हि धर्मविरुद्धस्य लोकवृत्तादपेयुषः ।
दण्डादन्यत्र पश्यामि निग्रहं हरियूथप ॥
औरसीं भगिनीं वाऽपि भार्यां वाऽप्यनुजस्य यः ।
प्रचरेत नरः कामात् तस्य दण्डो वधः स्मृतः । ,, ,, (21-23)

அப்படியிருந்தாலும் "தண்டிக்க உனக்கு என்ன அதிகாரம்?" என்று கேட்கலாம். "நீ என்னை ராஜன் என்றும் நரேசுவரன் என்றும் சொன்னாய். அது அவ்வளவு சரியல்ல. இப்பொழுது அரசன் பரதனேயாவான். நான் நல்ல குலத்தில் பிறந்த க்ஷத்திரியன் என்ற முறையிலேயே பாபத்தை ஸஹிக்க முடியாது. பரதனுடைய ஆக்ஞைக்குள்பட்ட நாங்கள் எப்படி ஸஹிக்கமுடியும்?" என்றார்.

न हि ते मर्षये पापं क्षत्रियोऽहं कुलोद्भवः ।
भरतस्तु महीपालो वयं चादेशवर्तिनः॥
त्वं तु धर्मादतिक्रान्तः कथं शक्यमुपेक्षितुम्। ,, (22-24)

இதுதான் காரணமென்பது முன் ஸம்பவங்களை கவனித்தாலும் நன்கு துலங்கும். கபந்தன் சொல்லி யனுப்பியபடி ஸ்ரீராமர் ஸுக்ரீவனைத் தேடிவந்து அக்னி ஸாக்ஷிகமாய் ஸக்யம் செய்துகொண்டவுடன் ஸுக்ரீவன் ஸ்ரீராமரிடம் "பார்யையை இழந்து பயத்துடன் இந்தக் காட்டில் நெருங்கமுடியாத இடத்தில் வந்திருக்கிறேன்" என்றெல்லாம் சொல்லும்போது ஸ்ரீராமர் "உன்

பார்யையை அபஹரித்திருக்கும் வாலியை வதம் செய்கிறேன்" என்கிறார்.

वालिनं तं वधिष्यामि तव भार्यापहारिणम् ॥ ,, 5 (27)

பிற்பாடும் ஸுக்ரீவன் "என் தமையனால் விரட்டப்பட்டுப் பயத்தினால் பீடிக்கப்பட்டவனாகப் பார்யையை இழந்து மிகவும் துக்கத்துடன் இந்த ரிச்யமூக பர்வதத்தில் இருந்து வருகிறேன்".

अहं विनिकृतो भ्रात्रा चराम्येष भयार्दितः ।
ऋश्यमूकं गिरिवरं हृतभार्यः सुदुःखितः ॥ ,, 8 (17)

என்று சொன்னபோதும், ஸ்ரீராமர் "உன் பார்யையை அபஹரித்தவனை இப்பொழுதே கொன்று விடுகிறேன்".

अद्यैव तं हनिष्यामि तव भार्यापहारिणम् ॥ ,, ,, (21)

என்றார்.

ஸுக்ரீவன் ராமனிடம் "பிராணனைவிட மிகப் பிரியமான என் பார்யையை அவன் அபஹரித்துவிட்டான். அவனைக் கொன்றலொழிய என் துக்கம் நீங்காது. என்னுடைய ஸுகமும் உயிருமே அவனுடைய நாசத்தைப் பொருத்திருக்கிறது" என்றான்.

हृता भार्या च मे तेन प्राणेभ्योऽपि गरीयसी । ,, 8 (33)
तद्विनाशाद्धि मे दुःखं प्रनष्टं स्यादनन्तरम् ।

सुखं मे जीवितं चैव तद्विनाशनिबन्धनम् ॥ ,, ,, (39)

தனக்கும் வாலிக்கும் விரோதமேற்பட்டதற்குக் காரணத்தை எடுத்துச்சொன்ன பிறகும் ஸுக்ரீவன்

"அவன் என்னை விரட்டிவிட்டு என் பார்யையையும் அபஹரித்துக் கொண்டான். பார்யையை அபஹரித்த துக்கத்தினால் நான் ரிச்யமூக பர்வதத்திலிருக்கிறேன்" என்றான்.

तेनाहं अपविद्धश्च हृतदारश्च राघव।
ऋश्यमूकं गिरिवरं भार्याहरणदुःखितः ,, 10 (27,28)

அப்பொழுதும் ஸ்ரீராமர் "உன் பார்யையை அபஹரித்த அந்த பாபாத்மாவாய், ஒழுக்கம் கெட்டவனாயிருக்கும் வாலியை நான் நேரில் எதுவரை பார்க்கவில்லையோ அதுவரைதான் அவன் ஜீவித்திருப்பான்."

यावत् तं नाभिपश्यामि तव भार्यापहारिणम्।
तावत् स जीवेत् पापात्मा वाली चारित्रदूषकः॥ (33)

என்று ஒவ்வொரு ஸந்தர்ப்பத்திலும் ஸுக்ரீவனுடைய பார்யையை அபஹரித்ததற்காகக் கொல்லுகிறேன் என்று ஸ்ரீராமர் திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கிறபடியால் அதுதான் காரணமென்பதில் ஸந்தேகத்திற்கு இடமில்லை. அதையேதான் அவர் வாலியிடமும் சொல்லுகிறார்.

பிறகு வாலி அடிபட்டுக்கீழே விழுந்திருக்கும்போது தாரை வந்து பிரலாபம் செய்யும்போது "ஸுக்ரீவனுடைய பார்யையை அபஹரித்துக்கொண்டீர், அவனையும் விரட்டினீர், அதனுடைய பலன்தான் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது" என்கிறாள். அவள் இவ்விஷயத்தை நன்கு அறிந்திருக்கிறாளென்று தெரிகிறது.

सुग्रीवस्य त्वया भार्या हृता स च विवासितः।
यत् तु तस्य त्वया व्युष्टिः प्राप्तेयं प्लवगाधिप। 20 (11)

தவிரவும், "பாபம் செய்கிறவர்கள் அதற்கு விதிக்கப் பட்டிருக்கும் பிராயச்சித்தத்தைச் செய்தார்களேயானல் அந்த பாபம் நிவிருத்தியாகும். உனக்கு பிராயச்சித்தம் வதத்தைத் தவிர வேறு தர்ம சாஸ்திரத்தில் காணப்படாததினல் உனக்கு வதம் ஏற்பட்டது. நானக என்னிஷ்டப்படி ஏதோ செய்து விட்டேன் என்று நினைக்காதே. எனக்கு ஸ்வாதந்தர்யம் கிடையாது. விதிப்படி ஏற்பட்டதைச் செய்தே தீரவேண்டும். ஆகையால் மனஸில் தாபப்படாதே" என்றும் எடுத்துச் சொல்லுகிருர்,

अन्यैरपि कृतं पापं प्रमत्तैर्वसुधाधिपैः ।
प्रायश्चित्तं च कुर्वन्ति तेन तच्छाम्यते रजः ॥

तदलं परितापेन धर्मतः परिकल्पितः ।
वधो वानरशार्दूल न वयं स्ववशे स्थिताः ॥ ,, 18 (35,36)

"நான் பாபியாக இருந்துவிட்டுப்போகிறேன. அதற்குள்ள பலனைப் பரலோகத்தில் நான் அனுபவித்து விடுகிறேன். நீ என்னை எதற்காகத் தண்டிக்கவேண்டும்?" என்று கேட்கலாமல்லவா? அதற்கும் ஸ்ரீராமர் ஸமாதானம் சொல்கிருர். "பாபத்திற்கு ஏற்பட்ட தண்டனையை அரசன் மூலம் அனுபவித்துவிட்டால் அந்தப் பாபம் நிவர்த்தியாகி நிர்மலமாக ஆகிவிடுகிறபடியால், பரலோகத்தில் அந்த பாபம் தொடர இடமன்னியில் புண்ணியம் செய்கிற ஸாதுக்கள் போகக்கூடிய ஸ்வர்க்கம் போகலாம். அரசன் ஒருவனைக் குற்றவாளி என்று தெரிந்து அவனுக்கு சிக்ஷை விதித்தாலும் சரி அல்லது தன் இஷ்டப்படி சிக்ஷை விதிக்காமல் குற்றவாளியை விட்டு விட்டாலும் சரி, அந்தக் குற்றவாளியைப் பாபம் பின்தொடராது: அவன் நரகம் போகமாட்டான். ஆனல் குற்றவாளியை சிக்ஷித்தால் தான் அரசன், குற்ற

வாளி இருவருக்கும் பாபமில்லாமல் போகும். சிக்ஷிக்கா மல் குற்றவாளியை அரசன் விட்டுவிடுவானேயானுல், குற்றவாளிக்குப் பாபம் விலகிறுலும் அந்தப் பாபம் அரசனைத் தொடரும். இந்த நியாயப்படி குற்றவாளியான உன்னை சிக்ஷிக்காமல் விட்டுவிட்டேனேயானுல் உனக்குப் பாபம் விலகிறுலும் அந்தப்பாபம் தண்டிக்காத என்னைப் பிடித்துக்கொள்ளும். அதற்கு நான் இடம் கொடுக்க லாமா?'' என்கிருர்.

राजभिः धृतदण्डास्तु कृत्वा पापानि मानवाः ।
निर्मलाः स्वर्गमायान्ति सन्तः सुकृतिनो यथा ॥

शासनाद्वा विमोक्षाद्वा स्तेनः स्तेयाद्विमुच्यते ।
राजा त्वशासन् पापस्य तदवाप्नोति किल्बिषम् ॥ ,, ,, (32,33)

பின்னுலும் இதே விஷயத்தை "தண்டிக்கவேண்டிய வனை எவன் தண்டிக்கிருனே, தண்டனை யடைய வேண் டியவன் எவன் தண்டிக்கப்படுகிருனே, இருவர்களுமே கிருதார்த்தர்களாகிறபடியால் சிரமத்தை அடையமாட் டார்கள். ஆகையால் இப்பொழுது இவ்விதம் உனக்குத் தண்டனை ஏற்பட்டு விட்டபடியால், உன் ஸ்வபாவமான தார்மிகத் தன்மையை தர்ம சாஸ்திரத்தில் கண்டமுறை யிலே அடைந்து விட்டாய்" என்று தைர்யம் சொல்லு கிருர்.

दण्ड्ये यः पातयेत् दण्डं दण्ड्यो यश्चापि दण्ड्यते ॥
कार्यकारणसिद्धार्थौ उभौ तौ नावसीदतः ।

तद्भवान् दण्डसंयोगात् अस्मात् विगतकिल्बिषः ॥
गतः स्वां प्रकृतिं धर्म्यां धर्मदृष्टेन वर्त्मना ॥ , (62-64)

இவ்விதமாகத் தர்ம ரீதியாகவே ஸமாதானம் சொன்னதைக்கேட்டுத் தனக்கு இந்த தண்டனை ஏற்பட்டதினால் பாபம் நிவிருத்தியாகிவிட்டதென்று வாலிக்கு நிச்சயமேற்பட்டது. ஸ்ரீராமர் செய்தது நியாயம் தான், அவரிடத்தில் எவ்வித தோஷமுமில்லை என்பதை உணர்ந்தான்.

न दोषं राघवे दध्यौ धर्मेऽधिगतनिश्चयः ॥ ,, ,, (46)

வாலி தர்மத்தை மீறின விஷயத்தைப்பற்றி பிரஸ்தாவிக்காமலே "நான் உனக்கு என்ன அபகாரம் செய்தேன்?" என்று லௌகிக முறையில் கேட்டதற்கும் ஸமாதானம்சொல்ல வேண்டுமென்று ஸ்ரீராமர் சொல்லுகிறார். "நீ என்னுடைய பூமியையோ, வேறு சொத்தையோ எடுத்துக்கொள்ளவில்லை யென்பது வாஸ்தவம். நானும் உன்னிடமுள்ள எந்த பதார்த்தத்திற்கும் ஆசைப்படவில்லையென்பதும் வாஸ்தவம். ஆனால் தனக்கு நேரில் அபகாரம் செய்தவனை மாத்திரம்தான் கண்டிக்கிறதென்ற நியாயம் உலகத்தில் கிடையாது. தன் குழந்தைக்கோ, பார்யைக்கோ ஒருவன் கெடுதல் செய்தால், தன்னை ஒன்றும் செய்யவில்லையே என்று இருக்க முடியுமா? அதேமாதிரி என் ஸ்னேஹிதனுக்குச்செய்த அபகாரத்திற்கும் நான் பரிஹாரம் செய்துகொள்ள வேண்டியது என் கடமையல்லவா? என் தம்பி லக்ஷ்மணனிடம் எவ்வளவு ஸ்நேகம் வைத்திருக்கிறேனே அதே ஸ்நேகத்தை ஸுக்ரீவனிடமும் வைத்திருக்கிறேன். மனஸில் மாத்திரம் நினைத்துக் கொண்டிருக்கிறதென்பதில்லை. அக்னி ஸாக்ஷிகமாக அவனுக்கு ஸஹாயம் செய்வதாகப் பிரதிக்ஞையும் செய்திருக்கிறேன். அவ்வித பிரதிக்ஞையை என்னைப்போலுள்ளவர்கள் உதாஸீனம் செய்யமுடியுமா? அவனுடைய பார்யையையும் அபஹரித்துக்கொண்டு அவனை விரட்டியிருக்கிறாய், ஸ்நேஹிதனுக்கு உபகாரம் செய்யவேண்டியதும் தர்மமேயாகும்" என்

सुग्रीवेण च मे सख्यं लक्ष्मणेन यथा तथा ॥

प्रतिज्ञा च मया दत्ता तदा पावकसन्निधौ ॥

प्रतिज्ञाय कथं शक्यं मद्विधेनानवेक्षितुम् ।

वयस्यस्योपकर्तव्यं धर्ममेवानुपश्यता । ,, ,, (26-30)

மேலும் "நான் கூறியுள்ள தர்மத்தை யொட்டின காரணங்களைக்கொண்டு உன்னை தண்டித்தது நியாயம் என்று உணர்ந்துகொள். உன்னை நிக்ரஹம் செய்தது எவ்விதத்திலும் தர்மம்தான் என்று அறிந்துகொள்" என்றார்.

तदेभिः कारणैस्सर्वैः महद्भिः धर्मसंहितैः ॥

शासनं तव यद्युक्तं तद्भवान् अनुमन्यताम् ।

सर्वथा धर्म इत्येव द्रष्टव्यस्तव निग्रह : ॥ ,, (28,29)

இன்னொரு விஷயம், பாபத்திற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டுமானால் அந்தப்பாபத்தை மறை வில்லாமல் வெளியிட்டு அதற்கு பிராயசித்தம் என்ன வென்று பெரியோர்களிடம் தெரிந்துகொண்டு அனுஷ்டா னம் செய்யவேண்டுமென்பது சாஸ்திரமுறை, வாலி செய்த பாபத்திற்கு வதமே பிராயச்சித்தமாயிருப்பதால், அந்தப் பாபத்திற்காகத்தான் இந்த வதம் ஏற்பட்ட தென்று அவன் தெரிந்துகொள்ளாமல், தான் நிரபராதி யாயிருக்கையில், தன்னை அடித்தது பிசகு என்ற எண் ணத்துடன் இறந்துவிட்டால் இந்த வதம் பிராயச்சித்த மாகாது, ஆகையினாலேயே இது பிராயசித்தமாகவே தனக்கு விதிக்கப்பட்டதென்று அவன் உணரும்படி செய் தால்தான் பாபம் நிவிருத்தியாகும் என்ற கருணையுட னேயே ஸ்ரீராமர் அவனுக்கு எதிரில் போகிறார். அவர்

தூர இருந்து அடித்தவர் அங்கேயே நின்றிருக்கலாம். அவ்வித மிருந்துவிட்டால் வாலி மனஸ்தாபத்துடனேயே இறந்திருப்பான். தன்னை அடித்தவனையும் மனஸிற்குள் தூஷித்துக்கொண்டே இறந்திருப்பான். அவ்வித மனோ பாவனையுடன் இறந்தால் பாபம் போகாது, அப்படி விட்டுவிடக்கூடாது, அவனைத் உணரச் செய்து பாபமற்றவனைகச் செய்யவேண்டும், என்றே ஸ்ரீராமர் அவனிடம் கௌரவ புத்தி வைத்து ஸமீபம் போகிறார்.

बहुमान्य च तं वीरं वीक्षमाणं शनैरिव ॥ ,, 17 (9)

लक्ष्मणानुगतो रामो ददर्श उपससर्प च । ,, ,, (12)

அவன் திட்டினாலும் கேட்டுக்கொண்டு அவனுக்கு ஸமாதானம் சொல்லி அவனை ஒப்புக்கொள்ளச் செய்து பாபம் நீங்கினவனைகச் செய்யவேண்டுமென்பதே ஸ்ரீராம ரின அபிப்பிராயம். இவ்விதமில்லையானல் அவர் வாலி யின் ஸமீபம் போவதற்கே எவ்வித நியாயமும், அவசிய மும் கிடையாது. அவனும் கடைசியில், தான் தெரியாத் தனத்தினல் அப்ரியமாய், அயுக்தமாய்ச் சொல்லிவிட்ட தற்கு மன்னிக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறான்.

यद्युक्तं मया पूर्वं प्रमादात् उक्तं अप्रियम्

तत्रापि खलु मे दोषं कर्तुं नार्हसि राघव ॥ 18 (48)

பராங்முகவதம்

ஸ்ரீராமர் செய்தது பாபத்திற்கேற்பட்ட ராஜ தண்டனையென்று ஏற்பட்டுவிட்டால் மற்றக்கேள்வி களுக்கு அவகாசமே கிடையாது. ஒரு நியாயாதிபதி குற்றவாளியைத் தூக்குப்போடும்படி சட்டத்தையனு ஸரித்துத் தீர்ப்புச் சொன்னலும், அதற்கேற்பட்ட

அதிகாரி அவனைத் தூக்குப்போட்டாலும், குற்றவாளி இவர்களுக்கு என்ன அபகாரம் செய்தானென்பது பிரகிருதமேயில்லை. தூக்கிலிடும்போது அவன் அழுது கொண்டிருந்தான், வேறு பக்கம் திரும்பிக்கொண்டிருந்தான், எங்கேயோ வேறு ஞாபகமாய் இருந்தான், காலிலேயே விழுந்து கெஞ்சிக்கேட்டானென்றாலும் அவனைத் தூக்கிடாமலிருக்க அந்த அதிகாரியால் முடியுமா? அப்பொழுது மற்ற விஷயங்களையெல்லாம் தூரவைத்து விட்டுத் தண்டிக்க வேண்டியதுதான் அவன் தர்மமாகும். தசரதராஜனுடைய மந்திரிகளை ஸ்ரீமத் ராமாயணத்தில் வர்ணிக்கும்போது குற்றவாளிகள் தன் புத்ரர்களாயிருந்தாலும் தண்டித்தே தீருவார்கள் என்று வால்மீகி பகவான் சொல்லுகிறார்.

प्राप्तकालं यथा दण्डं धारयेयुः सुतेष्वपि । பால. 7 (11)

அதனால்தான் ஸ்ரீராமர் தண்டனையை நிறைவேற்றும் விஷயத்தில் தனக்கு ஸ்வாதந்தர்யம் கிடையாது என்று சொல்லுகிறார்.

இது தண்டனையில்லை, யுத்தமென்று வைத்துக் கொண்டால் ஒருக்கால் இன்னொருவனுடன் சண்டையிட்டுக்கொண்டிருக்கும்போது மூன்றாவது மனுஷ்யன் தலையிடக் கூடாது என்பது ஒருவிதமாய் நியாயமாகலாம். அந்த நியாயமும் எப்பொழுதும் கிடையாது. தன் பையனும் வேறொருவனும் சண்டையிட்டுக்கொண்டிருக்கும் போது தன் பையனின் ஸாமர்த்தியம் எவ்வளவு தூரமிருக்கிறதென்று தெரிந்துகொள்ள நினைத்துக்கொஞ்ச நாழிகை வேண்டுமானால் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கலாம். தானே தன் பையனைக் சண்டைக்குப் போகச்சொல்லிவிட்டு அவன் அடிபட்டுக்கொண்டு உதவியை அபேக்ஷித்துத் தகப்பனாரைத் திரும்பித் திரும்பிப்பார்க்கும்போதுகூடவா தலையிடக்கூடாது? ஸ்ரீராமர்

வாலியை அடிக்கிறபோது, ஸூர்ய புத்திரனும், மஹா வீரனுமிருந்த ஸுக்ரீவனே சோர்வு அடைந்து, சக்தி குறைந்து நான்கு பக்கங்களிலும் திரும்பித் திரும்பி ராமரைப் பார்த்தபோதுதான், அவன் சிரமப்படுவதைப் பார்த்தபோதுதான், அவன் சிரமப்படுவதைப் பார்த்து வாலியை ஸம்ஹரிப்பதற்காக பாணத்தை எடுத்தார்.

सूर्यपुत्रो महावीर्यः सुग्रीवः परिहीयते ।
वालिना भग्नदर्पस्तु सुग्रीवो मन्दविक्रमः ॥ ,, 16 (27)

हीयमानमथापश्यत् सुग्रीवं वानरेश्वरम् ।
प्रेक्षमाणं दिशश्चैव राघवं च मुहुर्मुहुः ॥

ततो रामो महातेजाः आर्तं दृष्ट्वा हरीश्वरम् ।
शरं च वीक्षते वीरो वालिनो वधकारणात् ॥ ,, ,, (31.32)

பின்னால் நடந்த யுத்தத்தில் ராவணன் விபீஷணன் பேரில் சக்தியாயுதத்தை விட்டெறிய எடுத்தபொழுது லக்ஷ்மணன் ராவணனை அடித்திருக்கிறான். இதுபோல ஸந்தர்ப்பங்கள் ஏற்படும்போது உதாஸீனமாயிருப்பது நியாயமாகாது.

ஸுக்ரீவன் திரும்பித் திரும்பிப் பார்த்தான் என்பதிலிருந்தும், அவர் போட்ட பாணம் வாலியின் மார்பில் விழுந்தது என்பதிலிருந்தும், ஸ்ரீராமர் ஒளிந்திருந்து அடித்தார் என்று சொல்வது உசிதமாகாது. ஒளிந்திருந்து அடித்தார் என்று வைத்துக்கொண்டு அதற்குச் சிலர் காரணம் கல்பிக்கிறார்கள். வாலியுடன் யாராவது நேரில் சண்டையிட்டால் அவருடைய பலத்தில் பாதியை வாலி அடைந்துவிடுவான் என்று வரம் பெற்றிருக்கிறதாகச் சிலர் சொல்லுகின்றனர், இதற்கு ராமாயணத்தில்

எவ்வித ஆதாரமும் கிடையாது. அல்லது, வாலி நேரில் வந்து சரணாகதி செய்துவிட்டால் என்ன செய்கிறதென்று நினைத்து ஸ்ரீ ராமர் மறைந்து நின்றுகொண்டார் என்கிறார்கள். ஒருவன் சரணாகதி செய்துவிடுவானேயென்று பயந்து ஒளிந்துகொள்ளும் பகவான், பகவானாவாரா? வாலியைக் கொல்லவேண்டுமென்பது முக்கியமில்லை. ஸுக்ரீவனுக்கு ருமையைத் திருப்பிக்கொடுத்து அவனை முன்போல் கௌரவமாய் வைத்துக்கொள்ள வேண்டியது தான் முக்யம். அப்படியே வாலி சரணமடைந்தால், ஸ்ரீ ராமர் அவனைப்பார்த்து, "ருமையை விட்டுவிடு. ராஜ்யத்தையே ஸுக்ரீவனுக்குக் கொடுத்துவிடு," என்று சொன்னால், வாலி அப்படியே செய்துதான் திரவேண்டும். ராவணனே சரணமடைந்தாலும் காப்பாற்றுவேன் என்று சொல்லக்கூடிய மஹாபாவத்தையுடைய ஸ்ரீராமர் வாலியின் சரணாகதிக்குப் பயந்தார் என்று கல்பிப்பது மிகவும் அபசாரமாகும். மேலும் தண்டனையை நிறைவேற்றுகிறவன் குற்றவாளியுடன் யுத்தம் செய்வதும் கிடையாது. அவன் பராங்முகமாயிருந்தாலும் தண்டிக்க வேண்டியதுதான் முறை, என்ற ரீதியில் வாலி வதம் எவ்விதத்திலும் ஆக்ஷேபிக்கக் கூடியதேயில்லை.

3 அடிக்கக்கூடிய மிருகம் இல்லை

ஸ்ரீராமர் வாலியை மிருகமென்று நினைத்து அடிக்கவேயில்லை. அவனும் தர்ம சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்ட ஜாதியைச் சேர்ந்தவன் என்றே நினைத்தார். அந்த ஜாதியில் சேர்ந்த ஹனுமாரை நன்றாக வேதங்களை அத்யயனம் செய்தவர், நன்கு வியாகரண சாஸ்திரமறிந்தவர், என்றெல்லாம் புகழ்ந்த ஸ்ரீராமர் அந்த ஜாதியை இழிவாக நினைத்திருப்பது கிடையாது. பின்னால் ஸுக்ரீவனுக்கு பட்டாபிஷேகம் நடக்கும்போது பிராஹ்மணர்களை அன்ன வஸ்திராதி தானங்களினால் திருப்தி செய்து வைத்து அக்னியில் ஹோமம் செய்து, மந்திரங்கள்

சொல்லி, அபிஷேகம் நடந்ததாக வால்மீகி வர்ணித்திருக்கிறதிலிருந்தும், அந்த ஜாதியார் ஸ்ரீராமரின் பட்டாபிஷேக ஸமயத்திலும், மற்றஸமயங்களிலும் இஷ்டப்பட்ட போது மற்ற மனுஷ்யர் போலவே இருந்தார்கள் என்பதிலிருந்தும் அவர்களை மிருக ஜாதியில் சேர்க்க எவ்வித நியாயமும் கிடையாது.

வாலியாகவே "என் தோல் மாம்ஸம் முதலானவை உபயோகப்படுத்தக்கூடியதில்லையே, அப்படியிருக்க என்னை ஏன் அடித்தீர்?" என்று வியவஹாரம் செய்தான். அதனால் மாத்திரமே ஸ்ரீராமர் பதில் சொல்கிறார். மிருகமென்று வைத்துக்கொண்டால் அதை வேட்டையாடும் போது அதை ஏமாற்றியடிக்கலாம்; ஒளிந்திருந்து அடிக்கலாம்; அதில் தோஷமே கிடையாது என்கிறார்.

प्रतिच्छन्नाश्च दृश्याश्च गृह्णन्ति सुबहून् मृगान् । ,, 18 (29)

विध्यन्ति विमुखांश्चापि न च दोषोऽत्र विद्यते ॥ ,, ,, (40)

अयुध्यन् प्रतियुध्यन् वा यस्मात् शाखामृगो ह्यसि । ,, ,, (42)

இவ்விதமாக வாலி சொன்ன தூஷணங்களுக்குப் பதில் சொன்ன பிறகு அவனே திருப்தியடைந்தானென்று வால்மீகி மஹரிஷி வர்ணித்தும்கூட இன்னம் சிலருக்கு ஸமாதானம் ஆகாமலிருப்பது அவர்களுடைய சித்ததோஷத்தினாலும், காலத்தின் கொடுமையினாலும் என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. ஆஸ்திகராயிருப்பவர்கள் ஸ்ரீராமருடைய சரித்திரத்தில் ஏதேனும் தர்மவிரோதமான ஸம்பவம் இருந்திருக்கக்கூடுமென்பதை மனஸினால்கூட ஸ்மரிக்க மாட்டார்கள். சில நாடகங்களிலும், காவ்யங்களிலும் ரஸபுஷ்டியை யுத்தேசித்து சில பாத்திரங்கள் ஸ்ரீராமரையோ, அவரைச் சேர்ந்தவரையோ எதிர்க்கும்போது உபயோகிக்கும்

வார்த்தைகளுக்குப் பிராமாண்யம் கொடுத்து ஸ்ரீராமர் தோஷமுள்ளவர்தான் என்று நினைப்பது மிகவும் அபசாரமேயாகும். அவ்வித எண்ணத்திற்கு இடம்கொடுப்பவர்கள் ஸ்ரீராமரிடத்தில் பக்தியுள்ளவர்களாகவாவது, ஸ்ரீமத் ராமாயணத்தில் பிராமாண்ய புத்தியுள்ளவர்களாகவாவது ஆகமாட்டார்கள். அவர்களுடைய அபசாரத்தைக் கருணாமூர்த்தியாயிருக்கிற ஸ்ரீராமசந்திர மூர்த்திதான் க்ஷமிக்கவேண்டும்.

இந்த வியவஹார ஸம்பந்தமாய் வேறொரு விஷயம் கவனிக்கவேண்டியதுண்டு. வாலி, ஸுக்ரீவன் பார்யையை கிரஹித்துக்கொண்டது பாபமானால், ஸுக்ரீவன் வாலியின் பார்யையை கிரஹித்தது பாபமாகாதா? அதற்கு ஸுக்ரீவனை ஸ்ரீராமர் தண்டிக்காமல் ஏன் விட்டார்? அவரே "தம்பி, புத்திரன், சிஷ்யன் இம் மூவர்களையும் புத்திரன் மாதிரிக் கருதவேண்டும்" என்கிற போதே "தமையன், தகப்பனார், குரு இம் மூவர்களையும் பிதாவாகப்பாவிக்கவேண்டும்" என்பதையும் சொல்லுகிறார்.

ज्येष्ठो भ्राता पिता चैव यश्च विद्यां प्रयच्छति ।
त्रयस्ते पितरो ज्ञेयाः धर्मे वर्त्मनि वर्तिनः ॥

यवीयान् आत्मनः पुत्रः शिष्यश्चापि गुणोदितः ॥
पुत्रवत् ते त्रयश्चिन्त्याः धर्मश्चेदत्र कारणम् ॥ ,, 18 (13,14)

அப்படியானால் வாலியின் பார்யை தாரை ஸுக்ரீவனுக்கு தாயார் ஸ்தானத்திலில்லையா? அவளை ஸுக்ரீவன் கிரஹித்தது சரியா?

இதற்கு ஸமாதானம் முன் காட்டின ஸ்ரீராமர் வாக்கியத்திலேயே இருக்கிறது.

अस्य त्वं धरमाणस्य सुग्रीवस्य महात्मनः ।
रुमायां वर्तसे कामात् स्नुषायां पापकर्मकृत् ॥ (19)

அதாவது ஸுக்ரீவன் உயிருடன் இருக்கும்போது வாலி கிரஹித்தது பாபம் என்கிறார். பர்த்தா இறந்த பிற்பாடு பர்த்தாவின் தம்பியோ, தமையனோ கிரஹித்துக்கொண்டால் பாதகமில்லையென்று வானர ஜாதியின் தர்மம் என்று தெரியவருகிறது. ஸுக்ரீவனை விரட்டியடித்துக் கடைசியில் அவன் ரிஷ்யமூகபர்வதத்தில் உயிருடன் இருக்கிறானென்ற விவரம் வாலிக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் அவன் செய்தது அவனுடைய ஜாதி தர்மப்படியும் பிசகேயாகும்.

வாலி இறந்த பிறகு ஸுக்ரீவன் தாரையை கிரஹித்தது பிசகாயிருந்தால் தாரை ஸம்மதித்திருப்பாளா? அவள் ஸம்மதித்தாலும் தன்னை ஸுக்ரீவன் கிரஹித்துக் கொண்டிருக்கிறானென்று லஜ்ஜையன்னியில் சொல்லுவாளா? அவள் லக்ஷ்மணனிடம் "ராமனுடைய பிரஸாதத்தினால்தான் ஸுக்ரீவன் கீர்த்தியையும், சாசுவதமான வானரராஜ்யத்தையும், ருமையையும், என்னையும் அடைந்திருக்கிறான்"

रामप्रसादात् कीर्तिं च कपिराज्यं च शाश्वतम् ।
प्राप्तवानिह सुग्रीवो रुमां मां च परंतप ॥ ,, 55 (3)

என்று சொல்லுவாளா? வாலியின் புத்ரன் அங்கதன் தான் ஸகித்துக்கொண்டிருப்பானா? பின்னால் ஸீதையைக் காணாமல் திரும்பிப்போனால் ஸுக்ரீவன் தன்னைக் கொன்றேவிடுவானென்று அங்கதன் சொல்லும்போது "தமையன் உயிருடனிருக்கும்போது அவன் பார்யையை, தர்மபடியாக தாயாராயிருப்பவளை, ஸ்விகரித்துக்கொண்டானை, அந்த வெறுக்கத் தகுந்தவன்" என்கிறான்.

भ्रातुर्ज्येष्ठस्य यो भार्यां जीवतो महिषीं प्रियाम्।
धर्मेण मातरं यस्तु स्वीकरोति जुगुप्सितः॥ ,, 55 (3)

வாலி இறந்தபிறகு ஸுக்ரீவன் தாரையை கிரஹித்துக்கொண்டதை அங்கதனும் தோஷமாகச் சொல்லவில்லை. எப்படியும் அவன் எடுத்துக்காட்டின தோஷம் ஸுக்ரீவனுக்கு உண்டல்லவா என்று தோன்றக்கூடியது ஸஹஜமே. அவன் குறிப்பிட்டகாலம் எப்பொழுது என்றால், வாலி மாயாவி என்ற அஸுரனைத் துரத்திக்கொண்டு ஒரு குகைக்குள் நுழைந்து ஒரு வருஷம் வரை குகையிலிருக்கும்போது மந்திரிகள் ஸுக்ரீவனுக்கு ராஜ்யத்தில் அபிஷேகம் செய்துவைத்து, அவன் ராஜ்யபாரம் நடத்தின காலமாகத்தான் இருக்க வேண்டும். அப்பொழுது அவன் தாரையையும் கிரஹித்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அந்த ஸமயம் வாலி இறந்துபோய் விட்டானென்றே ஸுக்ரீவன் நினைத்திருந்தபடியால் தோஷம் ஏற்படுவதற்கில்லை. வாலி உயிரோடு இருந்த விஷயம் ஸுக்ரீவனுக்கு அப்பொழுது தெரியாது என்று அம்சத்தை அங்கதன் காட்டாமல் ஏதோ தோஷம்போல் எடுத்துக்காட்டியிருக்கிறான். அவனுக்கு அந்த ஸமயம் இருந்த மனச்சோர்விஞலும் ஸுக்ரீவனிடமிருந்த பயத்தினுலுமே அவன் சொல்லியிருக்கிருனென்று தெரிகிறது. ஆகையால் ஸுக்ரீவன் வானரஜாதி தர்மத்திற்கு விரோதமாய் நடந்துகொள்ளாததிஞல் ஸ்ரீராமர் தண்டிக்க அவசியமேற்படவில்லை. இந்தக்காலத்திலும்கூட சில மனுஷ்ய ஜாதிக்குள் ஸகோதரனின் பார்யையை கிரஹித்துக்கொள்ளுவது அனுஷ்டானத்திலிருப்பதாகத் தெரிகிறது. ஸ்ரீராமர் தன்னுடைய தர்மத்தை எப்படிக் காப்பாற்றி வந்தாரோ அப்படியே தன்னைச் சேர்ந்தவர்களுடைய தர்மத்தையும் பரிபாலித்து வந்தபடியால் வானரஜாதி தர்மத்தையும் கௌரவிக்கவேண்டியிருந்தது.

रक्षिता स्वस्य धर्मस्य स्वजनस्य च रक्षिता । பால. 1 (14)

चातुर्वर्ण्यं च लोकेऽस्मिन् स्वे स्वे धर्मे नियोक्ष्यति ॥ பால. 96 (1)

मर्यादानां च लोकस्य कर्ता कारयिता च सः ॥ ஸுந். 35 (11)

"சாதுர்வர்ண்யம்" என்ற சப்தம் எல்லா ஜாதிக்கும் உபலக்ஷணம்.

மேலேகண்ட விஷயங்களைப் பக்ஷபாதமில்லாமல் வாசகர்கள் கவனிப்பார்களேயானால்

न दोषं राघवे दध्यौ धर्मेऽधिगतनिश्चयः । கிஷ். 18 (46)

என்று வாலியைப்பற்றி வால்மீகி மஹரிஷி சொன்னது போல், அவர்களுக்கும் தர்மத்தில் நிச்சய புத்தி ஏற்பட்டு ஸ்ரீராமரிடத்தில் எவ்வித தோஷமும் கிடையாது என்பதை உணருவார்கள். அவ்வித நிச்சயபுத்தியைக் கொடுக்க வேண்டுமென்று அந்த ராகவரையே பிரார்த்திப்போம்.

# அத்யாயம் 10

## அஸத்யம் தர்மாகுமா?

ஸ்ரீமத் ராமாயணத்தை நன்கு ஆழ்ந்து கவனித்து வாசிக்காதவர்களுக்கு தர்மத்தை உலகத்தில் அனுஷ்டித்துக் காட்டி ஸம்ஸ்தாபனம் செய்வதற்காக அவதாரம் செய்த ஸ்ரீராம சந்திர மூர்த்தியும் ஸ்ரீ ஸீதா தேவியுமே தர்மத்திலிருந்து கொஞ்சம் நழுவினார்களோவென்று நினைக்கவிடம் கொடுப்பதாக இரண்டு ஸம்பவங்கள் இருக்கின்றன -

1. ஸ்ரீராமர் வனவாஸத்திற்காகப் புறப்பட்டு ரதத்தில் போய்க் கொண்டிருக்கையில் தசரத மஹாராஜா துக்கம் தாங்கமாட்டாமல் நடுவீதியில் வந்து ரதத்தை ஓட்டிக் கொண்டிருந்த ஸுமந்திரனை "நிறுத்து, நிறுத்து" என்று கதறுகிறார். ஸ்ரீராமரோ ஸுமந்திரனை "போ, போ" என்கிறார். ஒன்றுக்கொன்று நேர்விரோதமாயிருக்கிற இந்த இரண்டு கட்டளைகளையும் ஸுமந்திரன் எப்படி நிறைவேற்றமுடியுமென்று கலங்கும்போது, அவனுடைய மனம் இரண்டு சக்கிரங்களின் இடுக்கில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கும் பிராணி போலிருந்ததென்று வால்மீகி மகர்ஷி வர்ணிக்கிறார்.

> तिष्ठेति राजा चुक्रोश याहि याहीति राघवः।
> सुमन्त्रस्य बभूवात्मा चक्रयोरिव चान्तरा॥ அயோ. 40 (46)

என்ன செய்வதென்று ஸுமந்திரன் இவ்விதம் தயங்கும் போது, ஸ்ரீராமர் அவனைப் பார்த்து தான் சொன்னபடி ஓட்டினால் தசரதர் தான் சொன்னபடி ஏன் நிறுத்தவில்லை யென்று ஸுமந்திரனைக் கோபித்துக் கொண்டால் என்ன ஸமாதானம் சொல்கிறது என்பதை அவனுக்கு

எடுத்துக் கொடுக்கிறார் "தாங்கள் சொன்னது என் காதில் விழவில்லை என்று சொல்லிவிடு" என்கிறார்.

नाश्रौषमिति राजानं उपालब्धोऽपि वक्ष्यसि (47)

காதில் விழவில்லையென்றால் பொய்யேயாகும். இவ்விதம் பொய் சொல்லும்படி ஸ்ரீராமர் ஸுமந்திரனுக்கு ஆலோசனை சொன்னது நியாயமா? ஸ்ரீ ராமர் எது சொன்னாலும் எது செய்தாலும் தர்மத்தைத் தழுவியே யிருக்குமென்று யாரும் நம்பிக் கொண்டிருக்கையில், அவரே இதுமாதிரி பொய்யான யோசனை சொல்லிக் கொடுத்தது தர்மமாகுமா? அப்பொழுதிருந்த ஸந்தர்ப் பத்தில் ஸ்ரீ ராமருக்கும் கூட கொஞ்சம் தர்மத்திலிருந்து நழுவுதல் ஏற்பட்டு விட்டதென்றே தோன்றுகிற தல்லவா? என்ற ஸந்தேஹம் ஏற்படுவது ஸஹஜம்.

2 ஸ்ரீ ஸீதாதேவியுடன் ஹனுமார் பேசிக் கொண் டிருந்துவிட்டு பின்னால் அசோகவனத்தை அழிக்கவாரம் பிக்கையில், அங்கிருந்த ராக்ஷஸிகள் ஸ்ரீ ஸீதையிடம் "உன்னிடம் பேசிக் கொண்டிருந்த வானரன் யார்? யாரைச் சேர்ந்தவன்? எங்கிருந்து வருகிறான்? இங்கே எதற்காக வந்திருக்கிறான்? அவன் உன்னிடம் எப்படிப் பேசினான்? என்ன பேசினான்? விசாலமான கண்களை யுடையவளே, மஹா பாக்கியசாலியே, கருத்த கடைக் கண்ணுள்ளவளே, பயப்படாமல் நடந்ததைச் சொல்லு" என்று கேட்கிறார்கள். அவளுக்கு இத்தனை அடைமொழி கள் போட்டதற்குக் காரணம் கொஞ்ச நேரத்திற்கு முன்னால் இவர்களே அவளை பலவிதமாய் பயமுறுத்தி யதையெல்லாம் மறந்து இப்பொழுது பதில் சொல்ல வேண்டுமென்பதற்காக வென்று தோன்றுகிறது.

कोऽयं कस्य कुतो वाऽयं किंनिमित्तं इहागतः ।
कथं त्वया सहानेन संवादः कृतः इत्युत ॥

आचक्ष्व नो विशालाक्षि मा भूत्ते सुभगे भयम् ।
संवादं असितापाङ्गि त्वया किं कृतवानयम् ॥ ஸுந்தர. 42 (6,7)

இவ்வளவு கேட்டும்கூட ஸ்ரீ ஸீதை ஒரேயடியாய் தனக்கு ஒன்றும் தெரியாதென்று சொல்லிவிடுகிறார். போதாதற்கு "உங்களுக்குத் தான் தெரிந்திருக்கும். இஷ்டப்படி ரூபம்தரிக்கக் கூடிய ராக்ஷஸர்களைப் பற்றி யறிய என்றால் எப்படி முடியும்? பாம்பின் கால்கள் பாம்புக்குத்தான் தெரியும். எனக்கும் இவனைக் கண்டால் மிகவும் பயமாகத்தான் இருக்கிறது. இவன் யாரென்று எனக்குத் தெரியவே தெரியாது. இங்கே வந்திருப்பவன் வேண்டும் ரூபத்தைத் தரிக்கக் கூடிய ராக்ஷஸன் என்றுதான் நான் நினைக்கிறேன்" என்றும் பதில் சொல்லுகிறாள்.

अथाब्रवीत् तदा सीता साध्वी सर्वाङ्गसुन्दरी ।
रक्षसां कामरूपाणाम् विज्ञाने का गतिर्मम ॥

यूयमेवास्य जानीत योऽयं यद्वा करिष्यति ।
अहिरेव ह्यहेः पादान् विजानाति न संशयः ॥

अहमप्यतिभीताऽस्मि नैव जानामि को न्वयं ।
वेद्मि राक्षसमेवैनं कामरूपिणमागतम् ॥ ஸுந்தர. 42(8-10)

இது பூராவும் பொய்யே அல்லவா? ஸீதை அவ்விதம் பொய் சொல்லலாமா? இந்தப்படி அவள் பொய் சொல்லும் ஸமயத்தில் வால்மீகி மஹர்ஷி அவளுக்கு "ஸாத்வீ" (வெகு நல்லவள், ஒழுங்காயிருப்பவள்) என்று அடைமொழி வேறு கொடுக்கிறார். இவ்விதம் ஸத்யத்தை மறைத்து நேர்மாறாகச் சொல்கிறவள் எப்படி ஸாத்வீ யாவாள்? என்ற ஸந்தேஹமும் ஏற்படக்கூடியதே.

ஸ்ரீமத் ராமாயணம் முதல் அத்யாயத்திலேயே வால்மீகி நாரதரிடம் உத்தமமான புருஷன் இப்பொழுது யார் இருக்கிறாரென்று கேட்கையில் அப் புருஷனுடைய லக்ஷணங்களைக் குறிப்பிடும்போது "எவருடைய பேச்சு எப்பொழுதும் ஸத்யமாயிருக்குமோ" सत्यवाक्य: என்பதைக் கண்டிருக்கிறார். நாரதர் அவ்வுத்தமமான புருஷர் ஸ்ரீ ராமர்தான் என்று எடுத்துச் சொல்லும் போதும் ஸத்யத்தையே குறிக்கோளாயுள்ளவர் सत्यसन्ध: என்று சொல்கிறார். ஸ்ரீ ஸீதை ஒரு ஸமயம் ஸ்ரீராமரிடத்திலேயே "பொய் வார்த்தை தங்களுக்கு எப்பொழுதும் ஏற்பட்டிருப்பது கிடையாது இனி ஏற்படப் போவதும் கிடையாது" என்கிறாள்.

मिथ्या वाक्यं न ते भूतं न भविष्यति राघव। அரண்ய. 9 (4)

இவ்விதம் ஸ்ரீ ஸீதை சொன்னது எல்லாரும் தண்டகாரண்யத்தில் பிரவேசிக்கும் ஸமயம். ஸ்ரீராமர் ஸுமந்த்ரனிடம் சொல்லும் போது ஸ்ரீ ஸீதையும் அதே ரதத்திலிருக்கிறாள். அவர் சொன்னதை பிசகென்று ஸ்ரீ ஸீதை எடுத்துக் கொள்ளவில்லையென்று தெரிகிறது. அதே ரதத்தில் லக்ஷ்மணனும் இருந்திருக்கிறான். அவனும் ஸ்ரீ ராமர் சொன்னதை தர்மத்திற்கு விரோதமென்று கருதவில்லை. மேலும் பின்னால் அவன் இந்திரஜித்துடன் யுத்தம் செய்து கடைசியில் ஸ்ரீ ராமர் பேரில் ஆணையிட்டு பாணம் பிரயோகம் செயயும் போது அவரை தர்மாத்மாவென்றும் ஸத்ய ஸந்தனென்றும் குறிப்பிடுகிறான்.

धर्मात्मा सत्यसन्धश्च रामो दाशरथिर्यदि।
पौरुषे चाप्रतिद्वन्द्व: शरैनं जहि रावणिम्॥ யுத்த. 90 (69)

"தசரத குமாரரான ராமர் தர்மாத்மாகவும், ஸத்ய ஸந்தராகவும், பௌருஷத்தில் சிறந்தவராகவும், இருப் பதினால், ஏ அம்பே, இந்த ராவணனுடைய குமாரனை அடி (கொல்லு)"

இந்த பாணமே அவனை கீழே சாய்த்தது என்பதினு லும் ஸ்ரீ ராமருடைய தர்மநிஷ்டையிலோ, ஸத்ய நிஷ்டை யிலோ, ஸந்தேஹத்திற்கு எவ்வித இடமுமில்லை.

அப்படியே ஸீதா தேவியும் ஸ்ரீ ராமருக்கு எவ்விதத் திலும் பொருத்தமான தர்மபத்னியென்று வர்ணிக்கப்பட் டிருக்கிறாள். விவாஹ ஸமயத்திலேயே ஜனக மஹா ராஜர் அவளை ஸ்ரீ ராமருக்குக் கொடுக்கும்போது "உன் னுடன் ஒத்து தர்மத்தை அனுஷ்டிப்பவள்" सहधर्मचरी तव என்று சொல்லுகிறார். அப்படியே அவளும் நடந்து வந் திருக்கிறாள் என்பதை ஸ்ரீராமரே பின்னால் சொல்கிறார்.

सधर्मचारिणी मे त्वं प्राणेभ्योऽपि गरीयसी ॥ அரண்ய. 10 (21)

ஆக ஸ்ரீராமரோ ஸ்ரீ ஸீதையோ பொய் சொல்லியிருந் தால், அந்த ஸந்தர்ப்பத்தில் பொய் சொல்லுவதுதான் தர்மமாயிருக்கும், இல்லையானால் அவர்கள் பொய் சொல்லியிருக்க மாட்டார்கள் என்ற திடமான நம்பிக்கை வேண்டும்.

ஸ்ரீ ராமர் வாலியிடம் சொல்லும்போது ஸாதுக்க ளுடைய தர்மம் மிகவும் ஸூக்ஷ்மம், அதை அறிந்து கொள்வது மிகவும் சிரமம் என்பதைக் குறிப்பிடுகிறார்.

सूक्ष्मः परमदुर्ज्ञेयः सतां धर्मः प्लवङ्गम । கிஷ். 18 (15)

இதனாலேயும் ஸ்ரீ ராமர் ஸீதையைப் போலுள்ளவர் களுடைய நடத்தை விஷயமாய் நாம் ஸந்தேஹப்படு

வதோ, ஆக்ஷேபிப்பதோ கொஞ்சமேனும் உசிதமாகாது. ஆனால் அவர்கள் செய்வதெல்லாம் தர்மமாயிருக்குமென்று உறுதியேற்பட வேண்டுமானால் அவர்களிடத்தில் அசைக்கமுடியாத நம்பிக்கையிருக்கவேண்டும்- இவ்வித நம்பிக்கை வேண்டுமென்பதினாலேயே அவர்களுடைய நடத்தை யுக்திக்கு ஒத்துவராது என்று சொன்னதாக ஸாதாரண ஜனங்களுக்கு அபிப்பிராயம் ஏற்பட்டுவிடும். அதை உத்தேசித்து மேலே கண்ட இரண்டு ஸம்பவங்களிலுள்ள நியாயத்தைப் பற்றி கொஞ்சம் விசாரிப்போம்.

1. ஸ்ரீராமர் ஸுமந்திரனிடம் சொல்லும்போது தான் சொல்வதற்குள்ள நியாயத்தையும் சொல்கிறார். தசரதர் [illegible] ராமர் காட்டுக்குப் போகும்படியேற்பட்டதிலேயே தாங்க முடியாத துக்கத்தையடைந்து சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஸ்ரீராமரை விட்டுப் பிரிய மனமில்லாமல் நடுத்தெருவிற்கு ஓடிவந்து அலறுகிறார். ரதத்தை அவர் சொல்[illegible] ஸுமந்திரன் நிறுத்தினால் அதனால் தசரத[illegible] [illegible] துக்கம்தான் [illegible] அதிகப் [illegible] வதோ, [illegible] [illegible] கொடிய பாப[illegible]. ஆனால் அவர் சொன்னாரென்று நிறுத்திவிடாதே. சீக்கிரமாகவே ரதத்தை ஓட்டு என்று ராமர் சொல்கிறார்.

चिरं दुःख[illegible] रामः [illegible] ॥ அயோ. 40 (47)

அந்த துக்கத்தை நீடிக்கவொட்டாமல் செய்ய வேண்டுமானால், சீக்கிரம் அவருடைய பார்வைக்கு அப்பால் போவதுதான் உபாயம். ஆனால் ஸுமந்திரன் தசரதருடைய ஸேவகன் என்பதை ஸ்ரீராமர் மறந்துவிடவில்லை. தான் சொன்னதற்காக அவன் வேகமாய் ஓட்டினாலும், அவனுடைய யஜமானனுடைய கட்டளையை

மீறினதாகத்தானே ஆகும். பின்னால் தசரதர் "ஏன் என் கட்டளையை மீறினாய்?" என்று கேட்கக் கூடியதே என்பதை ஸ்ரீராமர் நினைத்து, அவர் அவ்விதம் கேட்டால் என்ன ஸமாதானம் சொல்கிறது, என்பதையும் ஸுமந்திரனுக்குச் சொல்கிறார், "என் காதில் படவில்லையென்று சொல்லு" என்று. வேறு எவ்வித ஸமாதானம் சொன்னாலும் அதர்மமேயாகும்.

ஸுமந்திரன் தசரதரிடம் "தாங்கள் சொன்னது என் காதில் விழுந்தது. ஆனால் நான் தான் மனப்பூர்வமாக மீறி நடந்தேன்" என்றாவது, "தாங்கள் சொன்னது என் காதில் விழுந்தது. ஆனால் தங்கள் குமாரர் வேறு விதமாக கட்டளையிட்டார். ஆகையால் தங்கள் கட்டளையை மீறி அவருடைய கட்டளைப்படி நடந்தேன்" என்றாவது, சொன்னால்தான் ஸத்யமாயிருக்கும். ஆனால் ஸேவகனுக்குப் பவன் இது மாதிரி சொன்னால் ஸமாதானமாகுமா? "மீறினேன்" என்பது "ஏன் மீறினாய்?" என்பதற்கு எப்படி ஸமாதானமாகும்? யஜமானனுடைய கட்டளையை மாற்றி கட்டளையிட அவர் குமாரருக்கு என்ன அதிகாரம்? அப்படியே அந்த குமாரர் ஆக்ஞை செய்தாலும் அதற்கு மதிப்புக் கொடுத்து நேர் யஜமானனுடைய ஆக்ஞையை உல்லங்கனம் செய்வது எப்படி நியாயமாகும்? ஆகையால் இந்த ஸந்தர்ப்பத்தில் ஸத்யத்தைச் சொல்வது உசிதமேயாகாது. "என் காதில் விழவில்லை" என்பதுதான் தசரதர் ஒப்புக் கொள்ளக்கூடிய ஸமாதானம். அதையேதான் ஸ்ரீராமர் குறிப்பிட்டார்.

தசரதர் கோபித்துக் கொண்டால், ஸுமந்திரன் இவ்விதம் பொய்யான ஸமாதானம் சொல்வதற்கு பதிலாக ஒன்றுமே சொல்லாமல் இருந்துவிடலாமே? என்று நினைக்கலாம். ஒரு யஜமானன் ஒரு ஸேவகனைப் பார்த்து "ஏன் அவ்விதம் செய்தாய்?" என்று கேட்கும்போது அவன் பதில் சொல்லாமலேயிருப்பது

ஸமாதானம் ஏதேனும் சொல்ல வேண்டும், அல்லது பிசகுதான் என்று ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும். தலையைக் குனிந்து கொண்டு சும்மா விருப்பது நியாயமில்லை. அப்படியிருந்துவிட்டால் "நான் செய்ததற்கு ஸமாதானமில்லைதான்" என்று ஒப்புக் கொண்டதாக ஆகும். அல்லது "தங்கள் ஆக்ஞை நியாய விரோதமாயிருந்தபடியால் நான் மீறி நடந்தேன். ஆனல் நான் ஸேவகன் என்ற முறையில் தங்கள் ஆக்ஞை நியாய மற்றதென்று தங்களிடம் நேரில் சொல்வது உசிதமில்லா ததினுல் வாயை மூடிக் கொண்டிருக்கிறேன்" என்ருவது சொன்னதாக ஆகும்.

"தங்கள் ஆக்ஞையை மீறினது பிசகுதான். என்னை மன்னிக்க வேண்டும்" என்று அவன் சொல்வதானுல், அதுவும் உசிதமாகாது. தான் செய்ததுதான் சரியென்று நினைத்துக் கொண்டு செய்த ஸுமந்திரன் "நான் செய்தது பிசகு" என்று சொன்னுனேயானுல் அதுவும் பொய்யேயாகும். தான் எவ்விதப் பிசகும் செய்யவில்லை யென்று உணர்ந்து கொண்டே அதற்கு மன்னிப்புக் கேட்பது நல்ல பொய் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால், ஸுமந்திரன் பதில் சொல்லாமலிருக்கவும் முடியாது; ஸத்யத்தைச் சொல்லவும் முடியாது; மன்னிப் புக்கேட்கவும் முடியாது. என்று ஏற்படுவதால் "என் காதில் விழவில்லை" என்று சொல்வதுதான் நியாயமாகும்.

தவிரவும், பொதுவாக புண்ணியம், பாபம் இவை யிரண்டிற்கும் லக்ஷணம் சொல்லும்போது, பிறருக்கு உபகாரம் செய்வது புண்ணியம், பிறருக்கு துன்பம் செய்வது பாபம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

परोपकारः पुण्याय पापाय परपीडनम् ॥

தசரதருக்குள்ள துக்கத்தை அதிகப்படுத்துவது தர்மமா? யாருக்கும் கெடுதலில்லாத சிறிய பொய் சொல்வது

தர்மமா? அவ்விதம் பொய் சொல்லுவது பரோபகாரம் ஆகாத போதிலும் யாரையும் துன்பப்படுத்தவில்லை யென்பதினால் பாபமும் ஆகாது. அந்த முறையில் அப்பொழுதுள்ள ஸந்தர்ப்பத்தில் பொய் சொல்வது உசிதமாயிருந்தாலும் அதினால் புண்ணியம் ஏற்படாத போதிலும் அதுவும் தர்மமேயாகும். தவிரவும், ஸுமந்திரன். தசரதரிடம் ஸத்யத்தை, அதாவது "என் காதில் விழுந்தது; ராமர் ஓட்டச் சொன்னார். அதினால் தங்கள் ஆக்ஞையை மீறி அவர் சொன்னபடி கேட்டேன்" என்று சொல்வதானால் தசரதருக்கு ஸுமந்திரன், ஸ்ரீராமர், இருவரிடத்திலும் அதிருப்தியேற்படுவதுடன் தன் ஆக்ஞை மீறக்கூடியவர்களாக ஸேவகனும், புத்திரனும் இருக்கிறார்களே யென்று வருத்தம், துக்கம், கோபம், எல்லாம் ஏற்பட ஹேதுவாகும். அவ்விதம் அவருடைய மனஸைக் கலக்கி விடுவது அவரை ஹிம்ஸித்ததாகவே யாகும். ஆகையால் அந்த ஸந்தர்ப்பத்தில் அவரிடத்தில் ஸத்யத்தைச் சொல்வது பாபமாகவே யேற்படும். பகவத் கீதையில் ஸத்யத்தைப் பற்றி சொல்லும்போது அது இன்னொருவருடைய மனஸின் சாந்தியைக் கெடுத்து உத்வேகம் அதாவது துக்கம், கோபம் முதலிய கலக்கம் ஏற்படும்படிச் செய்வது உசிதமில்லையென்று குறிப்பிடப் பட்டிருக்கிறது.

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।

ஆகையால் நடந்ததை அப்படியே சொல்வது அதர்மமே யாகும்.

ஸுமந்திரன் உத்தமமான ஸேவகனாயிருந்தபடியால் தன் யஜமானனுக்கு எவ்வித துன்பத்தையும் ஏற்படுத்த நினைக்கவே மாட்டான். அவனுடைய உத்தமமான இவ்வித ஸ்வபாவம் பின்னால் ஒரு ஸந்தர்ப்பத்தில் நன்றாகத் தெரிகிறது. ஸ்ரீராமர் முதலானவர்கள் கங்கையைத்

தாண்டி போனபிறகு ஸுமந்திரன் அயோத்யைக்குத் திரும்பி வந்து தசரதரிடமும் கௌஸல்யையிடமும் நடந்த விருத்தாந்தங்களை சொல்லிக் கொண்டிருக்கும் போது கௌஸல்யை ஸுமந்திரனிடம் "என்னையும் காட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் அவர்களுடன் சேர்த்து விட்டுவிடு" என்கிருள். அவளுடைய துக்கத்தைக் கண்டு ஸஹிக்காமல் இவன் கண்களில் நீர்ததும்ப நாக்கு தழு தழுக்க அவளுக்கு ஆறுதல் சொல்கிருன்.

बाष्पवेगोपहतया स वाचा सज्जमानया ।
इदं आश्वासयन् देवीं सूतः प्राञ्जलिरब्रवीत् ॥ அயோ. 60 (4)

அவர்கள் வெகு உத்ஸாஹமாகவே காட்டிலிருப்பதாகவும், அவர்களைப்பற்றி கவலைப்பட அவசியமில்லையென்பதாகவும் சொல்லி வருகையில் ஸீதையைப் பற்றி அவளும் உத்யான வனத்திலிருக்கிற மாதிரியே ஸந்தோஷமாயிருந்து வருகிருள் என்றும் கைகேயி விஷயமாய் ஒரு வார்த்தை மாத்திரம் அவள் சொன்னது ஞாபகத்திற்கு வருகிறதென்றும் சொன்னான். ஆனால் அவள் சொன்னதை கௌஸல்யையிடம் சொன்னால் ஸீதைக்கு மனதில் தாபமிருக்கிறதென்று தெரிந்து அவள் அதிகமாய் துக்கப்படுவாள் என்பதையும், ஏற்கனவே அவளுக்கு கைகேயியிடமுள்ள கோபம் அதிகமாகும் என்பதையும், உடனே உணர்ந்து கொண்டான். அப்படி அவளுடைய மனதிற்கு க்ஷோபம் ஏற்படுப்படிச் செய்வது உசிதமில்லையென்று உணர்ந்து, தான் ஆரம்பித்ததை அப்படியே நிறுத்திவிட்டு "ஸீதை சொன்னது இப்பொழுது ஞாபகத்திற்கு வரவில்லை" என்று சொல்லி மறைத்துவிட்டு அவளுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய வார்த்தையே மேலால் சொல்கிருன். முந்தின க்ஷணத்தில் "ஞாபகத்திற்கு வருகிறது" என்று சொல்லிவிட்டு அடுத்த க்ஷணத்தில் "மறந்து விட்டது" என்ருல் ஸந்தேஹமில்லாமல் போய்தான். ஆனால் ஸீதை சொன்

னதைச் சொல்வது கௌஸல்யையை துன்பப்படுத்துமாதலால் அதை சொல்லாமலிருந்ததுதான் தர்மம். "அது என்ன, அது என்ன?" என்று கௌஸல்யை மேலால் கேட்பதற்கு இடமன்னியில் "மறந்து விட்டது" என்ற பொய்யும் தர்மமேயாகும்.

इदमेव स्मराम्यस्याः सहसैवोपजल्पितम् ।
कैकेयीसंश्रितं जल्पं नेदानीं प्रतिभाति माम् ॥

ध्वंसयित्वा तु तद्वाक्यं प्रमादात् पर्युपस्थितम् ।
ह्लादनं वचनं सूतो देव्या वचनमब्रवीत् ॥ ,, ,, (14,15)

இவ்விதம் கௌஸல்யைக்கு வருத்தம் ஏற்படக்கூடாதென்று நினைக்கும் ஸ்வபாவமுள்ள ஸுமந்திரன் தசரதருக்கு வருத்தம் ஏற்படும்படி செய்வது நியாயமாகுமா? பொய் சொன்னாலும் பாதகமில்லை, அவருக்கு துன்பம் ஏற்படுத்தக்கூடாது என்பதுதான் நியாயம். அந்த முறையில்தான் ஸ்ரீராமர் சொன்னதும்.

மேலும் அத்யந்தமான ஸத்யமோ, அத்யந்தமான அஹிம்ஸையோ கிருஹஸ்தனுக்கு ஸாத்தியமில்லை. உலகமத்தியிலுள்ள ஸன்னியாஸிக்குக்கூட ஸாத்தியமில்லை. ஒரு தகப்பனார் ஏதோ கார்யமாகப் புறப்படும்போது அவர் குழந்தை "நீங்கள் திரும்பி வரும்போது ஒரு யானைக்குட்டி வாங்கிக்கொண்டு வாருங்கள்" என்று சொன்னால், "ஆகட்டும்" என்றுதான் பதில் சொல்லவேண்டும். "மாட்டேன்" என்று சொல்வதோ, குழந்தையை "அசடே" என்று வைவதோ தர்மமாகாது. திரும்பி வந்தவுடன் "யானைக்குட்டி எங்கே" என்று கேட்டால், "சொல்லிவிட்டு வந்திருக்கிறேன், நாளை வரும்" என்றுதான் பதில் சொல்லவேண்டும். "வராது" என்று ஸத்யத்தைச் சொன்னால், அது துக்கப்பட்டு அழு

வதற்கு ஆரம்பிக்கும். அதை அழவிடுவது தர்மமாகாது. இதுமாதிரி பொய்கள் பாபமில்லை யென்பதுடன் தர்மமே யாகும்.

ஸ்ரீராமர் வனவாஸம் புறப்பட்டுப் போகும்போது அயோத்தியாபுரவாஸிகள் அவருடனேயே போய் அன்றிரவு தமஸா நதிக்கரையில் படுத்துத் தூங்கி விட்டார்கள். ஸூர்யோதயத்திற்கு வெகுநேரம் முன்னாலேயே ஸ்ரீராமர் இவ்விதம் தன்னிடத்திலுள்ள அபிமானத்தினால் கூடவே வந்திருக்கும் இந்த ஜனங்களுக்கு இனியும் துக்கமேற்படுத்துவது நியாயமில்லை யென்று லக்ஷ்மணனிடம் சொல்லிவிட்டு, அவர்கள் தூங்கிக் கொண்டிருக்கையிலேயே அவர்களை விட்டு விட்டு புறப் பட்டு விடுகிறார்.

न नु खल्वात्मना योज्या दुःखेन पुरवासिनः ।

पौरा ह्यात्मकृतात् दुःखात् विप्रमोच्या नृपात्मजैः ॥

அயோ. 46 (23)

அத்துடன் நிறுத்தாமல், தான் புறப்படுவதற்கு முன் ஸுமந்திரனைக் கூப்பிட்டு ரதத்தை கொஞ்சதூரம் வடக்கே கொண்டுபோய் விட்டு திருப்பிக்கொண்டு வரச் சொல்கிறார், ஸ்ரீராமர் அயோத்யைக்கே திரும்பிவிட்டாரென்று ஜனங்கள் நினைத்துக்கொள்ளட்டும் என்பதற்காக இந்த யோசனை.

मोहनार्थं तु पौराणाम् सूतं रामोऽब्रवीत् वचः । ,, ,, (30)

இது ஏமாற்றுதல் இல்லையா? ஸ்ரீராமர் ஏமாற்றத்தலைப் படலாமா? என்றால் பிரஜைகளுடைய ஹிதத்தையுத்தேசித்து அவ்விதம் செய்யவேண்டியிருப்பதால் அதுவும் தர்மமேயாகும்.

ஆகையால் யாருக்கும் கெடுதல்செய்யாத பொய்யோ, ஏமாற்றமோ அதர்மமாகாது. அதுவே வேறொருவருக்கு துன்பத்தை விலக்கிக் கொடுக்கக்கூடியதாயிருந்தால் தர்மமும் ஆகும்.

தசரதர் கோபித்துக் கொண்டால் ஸுமந்திரன் ஸத்யத்தையோ, பொய்யையோ சொல்லிக்கொள்ளட்டும், ஸ்ரீராமர் ஏதற்காக அவனை பொய் சொல்லும்படி சொல்கிறார்? இவர் சும்மாவிருக்கலாமே? என்றும் தோன்றலாம். வேகமாக ரதத்தை ஓட்டிக்கொண்டு போவதுதான் நியாயமென்று ஸ்ரீராமரும், ஸுமந்திரனும் உணர்ந்தாலும்கூட, அவ்விதம் செய்வதற்கு ஸாரதியான ஸுமந்திரனுக்கு அவன் யஜமானனுடைய கட்டளை குறுக்கே நிற்கிறது. அதை எப்படி மீறுவது என்று அவன் தயங்குகிறான். மீறினால் யஜமானனுடைய அதிருப்தியை ஸம்பாதித்ததாகுமேயென்று நினைக்கிறான். அதிருப்தியேற்படாமல் மீறுவதற்கு வழிசொல்லிக் கொடுத்தாகவேண்டிய பொருப்பு ஸ்ரீராமருக்கு ஏற்பட்டது. பின்னால் தசரதர் கோபித்துக்கொள்ளும் போது இவன் "ராமர் ஓட்டச்சொன்னார்" என்ற மாதிரி ஏதேனும் ஸமாதானத்தைச் சொல்லி தசரதருக்கு மேலாலும் துக்கமேற்படக் கூடாதென்ற அக்கரை ஸ்ரீராமருக்கு இருப்பது ஸஹஜமல்லவா? ஆகையினாலேயே அவரே ஸமாதானத்தைச் சொல்லிக் கொடுக்க ஏற்பட்டது.

ஸ்ரீராமருடைய வார்த்தைகளுக்கு "வைதாலும் நான் (ராமர்) கெட்கவில்லையென்று மஹாராஜரிடம் சொல்லு" என்று அர்த்தம் செய்யலாமென்று சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள். அப்படியானாலும், தகப்பனாருடைய ஆக்ஞையை மாற்ற ஸ்ரீ ராமருக்கு அதிகாரம் கிடையாது. அப்படி மாற்றுவதை ஏற்றுக் கொண்டு யஜமானனுடைய ஆக்ஞையை மீறி நடப்பது ஸுமந்திரனுக்கும் தர்மமாகாது, என்ற அம்சங்கள் மிஞ்சுவதினால் அவ்வித

அர்த்தம் பொருந்தாது. ராமர் மீறச் சொன்னார் என்று தசரதரிடம் ஸுமந்திரன் சொல்லுவதும் உசிதமில்லை, இது ஒரு ஸமாதானமுமாகாது. இதைக் கேட்டு தசரதனுக்கு ஸுமந்திரனிடமுள்ள அதிருப்தியுடன் ஸ்ரீ ராமரிடத்திலும் அதிருப்தி யேற்படும். அவருடைய துக்கம் தான் அதிகப்படும்.

2. மேலே கண்ட காரணங்களினாலேயே ஸீதையின் நடத்தையும் தர்மமேயாகும். ராக்ஷஸிகள் கேட்டதற்கு ஹனுமார் இன்னார் என்று ஸீதை பதில் சொல்லியிருந்தால் மற்ற கேள்விகளுக்கும், அதாவது "யாரைச் சேர்ந்தவன்? எங்கிருந்து வருகிறான்? என்ன காரியமாக இங்கே வந்திருக்கிறான்? நீ எப்படி அவனுடன் பேசினாய்? என்ன பேசிக் கொண்டீர்கள்?" என்பதற்கெல்லாம் ஸத்யமாக பதில் சொல்லவேண்டும். அது நியாயமாகுமா? ஹனுமாரைக் காட்டிக் கொடுத்ததாக ஆகாதா? தனக்கு பரமோபகாரம் செய்திருக்கிறவனைக் காட்டிக் கொடுப்பது கொடிய பாபம் அல்லவா? அவனை ராக்ஷஸர்கள் உடனே ஹிம்ஸிக்க ஆரம்பிப்பதற்கு ஸீதையே காரணமாகுவாளல்லவா? அவருக்கு கெடுதல் வரக்கூடாதென்று அறிந்தும் ஒன்றுமே தெரியாது என்று ஒரு சிறிய பொய் சொல்லி மேலே கேள்விகளுக்கு இடமில்லாமல் செய்வது தானே தர்மம்? இந்த "பொய்" யாரையும் பாதிக்காததினால் பாபமில்லை யென்பதுடன் ஹனுமாரை ரக்ஷிக்கக் கருதி சொன்னதால் தர்மமுமாகும்.

இந்தப் பொய்யினால் ராக்ஷஸிகள்கூட ஏமாந்துவிடவில்லை. அவர்கள் ராவணனிடம் போய் "நாங்கள் எவ்வளவு கேட்டும் அந்த வானரன் யாரென்று ஸீதை சொல்லமாட்டேனென்கிறாள்" என்றே சொல்கிறார்கள்.

न च तं जानकी सीता हरिं हरिणलोचना ।
अस्माभिः बहुधा पृष्टा निवेदयितुमिच्छति ॥ ஸர்க. 42 (14)

சிலர் சிரமப்பட்டு ஸீதையின் வார்த்தைகள் பொய் இல்லையென்று காட்டுவதற்காக வேறு விதமாய் அர்த்தம் செய்கிறார்கள். ஆனால் அந்த வேறுவித அர்த்தம் ஸீதை யின் மனஸிற்குள் இருந்திருக்கலாமே தவிர, நேர் முறை யில்தான் ராக்ஷஸிகள் அர்த்தம் செய்து கொண்டு ராவணனிடம் சொல்கிறார்கள். ஸீதை மனஸில் ஒரு அர்த் தத்தை வைத்துக் கொண்டு வேறுவிதமாக அர்த்தமா கும்படி வார்த்தைகளை உபயோகித்தாள் என்றால் அவ ளுடைய பெருமையையே மிகவும் குறைத்ததாக ஆகும். இரண்டு அர்த்தமுள்ள முறையில் பேசினாள் என்றால் ஏமாற்றக்கூடியவள், ருஜுஸ்வபாவ மற்றவள் என்றெல் லாம் ஏற்படும். அதினால் வேறுவிதமாய் அர்த்தம் செய் வது உசிதமாகாது.

பொதுவாகவே ஸத்யமாயும் பிரியமாயும் இருப் பதையே சொல்லவேண்டும், ஸத்யமாயிருந்தாலும் அப்ரி யமாயிருந்தால் சொல்லக்கூடாது என்று ஒரு நியாய முண்டு.

सत्यं ब्रूयात् प्रियं ब्रूयात् न ब्रूयात् सत्यमप्रियम् ।

அதே முறையில், பிரியமாயிருக்கிறதென்று பொய்யைச் சொல்வதும் நியாயமாகாது.

प्रियं चानृतं ब्रूयात्

என்றிருப்பதால் ஸ்ரீ ராமரும் ஸீதையும் சொன்னது உசிதமில்லையேயென்று தோன்றலாம். அவர்கள் சொன் னதில் பிரியம், அப்பிரியம் என்ற அம்சம் வரவில்லை. எது ஹிம்ஸையை உண்டுபண்ணும், எது ஹிம்ஸையை உண்டு பண்ணாது என்ற விஷயமே இங்கே பிரகிருதம். ஹிம்ஸையை உண்டு பண்ணுகிற ஸத்தியம் தர்மமா? ஹிம்ஸையேற்படாமல் தடுக்கிற பொய் தர்மமா?

என்பதுதான் இங்கே பிரக்ருதம். ஹிம்ஸையை தவிர்க்கக்கூடியது கொஞ்சம் பொய்யாயிருந்தாலும் பாதகமில்லை, அதுவே தர்மம் என்பதுதான் சரியான தீர்மானம். அந்த முறையையே ஸ்ரீ ராமரும் ஸீதையும் அநுஷ்டித்துக் காட்டியிருக்கிறார்கள். உலகத்திற்கே தர்மத்திற்கு வழிகாட்டிகளாக அவதரித்திருக்கும் அவர்களுடைய நடத்தையில் ஏதோ தோஷமிருக்கலாமென்று நாம் ஸந்தேஹிப்பதற்கே காரணம் நம் மனஸிலுள்ள அழுக்குதான் என்று நிச்சயமாய் அறிந்து கொள்ள வேண்டும். அவ்வித ஸந்தேஹம் நம் மனஸிலிருந்து விலகாமல் தோன்றிக் கொண்டேயிருந்தால் நம் மனஸ் இன்னம் பரிசுத்தமாகவில்லையென்று தீர்மானித்துக் கொண்டு அவ்வித சுத்தியேற்படுவதற்குள்ள ஸாதனங்களைக் கையாள வேண்டும்.

ஸ்ரீ ராமரும் ஸீதையும் எவ்வித தோஷமுமற்ற நிர்மலமான ஸ்வபாவமுள்ளவர்கள் என்பதில் நமக்கு திடமான நம்பிக்கை [illegible]த்து, நம்மை நல்வழியில் அழைத்துச் செ[illegible] பரம புருஷார்த்தம் கைகூடும்படி அவர்களை அநுஸரிக்க வேண்டுமென்று பிரார்த்திப்போமாக!

## பெற்றோர் தர்ம ரக்ஷணம்

ஸ்ரீராமரைப்பற்றி வால்மீகி மஹரிஷி வர்ணிக்கும் போது स्वदोषपरदोषवित् (ஸ்வதோஷபரதோஷவித்) என்ற விசேஷணம் போட்டிருப்பதில் स्वदोषवित् (ஸ்வதோஷவித்) என்கிற அம்சத்தைப்பற்றி கொஞ்சம் எடுத்துச் சொன்னோம். அதிலும் தன் தோஷத்தை அறிந்து அதை உடனுக்குடன் திருத்திக் கொண்டார் என்பதையும் காட்டினோம். அப்படியே "பிறருடைய தோஷத்தையும் அறிகிறவர்" என்று சொல்லும்போது அவருக்குப் பிறரிடம் ஏதேனும் தர்மத்தில் குறைவு தென்பட்டதேயானால் அதை உடனே திருத்திக் கொடுத்து அப்பிறர் தர்ம நிலையிலிருந்து நழுவாமல் இருக்கும்படி செய்வார் என்பதையும் ராமாயணத்தில் பலவிடங்களில் காணலாம். பிறரிடம் தோஷம் தென்பட்டால், அவர்களை நிந்திக்கும் ஸ்வபாவம் ராமரிடம் கிடையாது. அவர்களையும் திருத்தவே பிரயத்தனப்படுவார். தான் தர்ம விஷயமாக ஸந்தேஹமன்னியில் நடந்து கொள்ளக்கூடிய நிலையில் இருந்து வந்தபடியால். மற்றவர்களையும் அவசியம்போல் திருத்துவதற்கு முடிந்தது. தன்னிடத்தில் தர்ம நிச்சயமில்லாமலோ, தார்மிக அனுஷ்டானம் இல்லாமலோ, பிறரைத் திருத்த ஆரம்பித்தால் கொஞ்சமேனும் பிரயோஜனப்படாது. ஆகையினாலேயே ராமரைப்பற்றி வால்மீகி "தன்னுடைய தர்மத்தை ரக்ஷித்து வருபவர்; தன்னுடன் சேர்ந்த ஜனங்களுடைய தர்மத்தையும் ரக்ஷித்து வருபவர்" என்று சொல்கிறார்.

रक्षिता स्वस्य धर्मस्य स्वजनस्य च रक्षिता । பால. 1 (14)

रक्षिता स्वस्य वृत्तस्य स्वजनस्यापि रक्षिता । ஸுந். 31 (7)

என்று சொல்கிறார்.

ஸ்ரீ ராமர் தன்னுடைய தர்மத்தை எப்படிப் பரிபாலனம் செய்து வந்தாரென்று எடுத்துச் சொல்லுவதானல் ராமாயணத்திலுள்ள ஒவ்வொரு ஸந்தர்ப்பத்தையும் விஸ்தரிக்க நேரிடும். இப்பொழுது ஸ்வஜனங்களுடைய தர்மத்தை எவ்விதம் ரக்ஷித்துக் கொடுத்தார் என்பதை மாத்திரம் இங்கு குறிப்பிட நினைக்கிறோம்.

ஸ்வஜனம் என்பது ஒரு பொதுவான பதம். தனக்கு யாரெல்லாம் ஸம்பந்தப்பட்டவர்களோ அவர்கள் யாவரையும் குறிக்கும். அவர்கள் தன்னைவிட உயர்ந்த பதவியில் இருக்கலாம்; அல்லது தனக்கு ஸமானமான கோஷ்டியில் ஆப்தர்களாக இருக்கலாம்; இந்த இரண்டு பிரிவுகளில் முதல் பிரிவான உயர்ந்தவர் என்கிறவர்களுக்குள் தகப்பனர், தாயார், ஆசார்யர் முதலானவர்கள் சேருவார்கள். ஆப்த கோஷ்டி இரண்டாவது பிரிவில் ஸஹோதரர்கள், பார்யை, ஸிநேஹிதர்கள் முதலானவர்கள் சேருவார்கள். ஸ்ரீ ராமருக்கு (1) தகப்பனர் தசரதர் (2) தாயார் கௌஸல்யை (3) கைகேயி என்ற மாற்றான் தாயார் (4) ஆசார்யரான வஸிஷ்டர் (5) தகப்பனருடைய மந்திரி ஸபையில் சேர்ந்த ஜாபாலி (6) தகப்பனருடைய மந்திரி ஸபையில் சேர்ந்த ஸுமந்திரர்—இவர்கள் முதல் பிரிவில் சேருவார்கள். இரண்டாவது பிரிவில் (1) ஸஹோதரன் லக்ஷ்மணன் (2) ஸஹோதரன் பரதன் (3) ஸஹோதரன் சத்ருக்னன் (4) பார்யை ஸீதை (5) ஸிநேஹிதர் ஸுக்ரீவன் (6) ஸிநேஹிதர் விபீஷணன் இவர்கள் சேருவார்கள்.

இவர்கள் தவிர சிலர் தர்ம மார்க்கத்திலிருந்து தவறி திருத்த முடியாமல் இருந்துவிட்டபடியால், அவர்களை நிக்ரஹம் செய்து அவர்களுக்கு அந்த நிக்ரஹத்தினல் பாபக்ஷயத்தை ஏற்படுத்திக் கொடுத்து அவர்களையும் தோஷமற்றவர்களாகச் செய்யும்படி ஏற்பட்டது. மஹாவிஷ்ணு பூமியில் அவதாரம் பண்ணுவதாக பிரஹ்மாதி

தேவதைகளுக்கு வாக்குக் கொடுக்கும்போது "நீங்களும் உங்கள் அம்சமாக பூமியில் பிறந்து ஸஹாயம் செய்யுங்கள்" என்று ப்ரஹ்மா செய்த ஆக்ஞையை யனுஸரித்து, தேவர்களுக்கெல்லாம் அரசனுன இந்திரன் வாலியை உண்டு பண்ணினுன். அப்படியே ஸூர்யபகவான் ஸுக்ரீவனை உண்டுபண்ணினுர். இவ்விருவரும் தேவாம்சமாக இருந்தபோதிலும், தங்களுக்குள் விரோதத்தை ஏற்படுத்திக்கொண்டு சண்டையிட்டதுடன், ராமர் ராவணனைக் கொல்லுவதற்காகவே அவதாரம் செய்திருக்கையில், அந்த ராவணனுடன் வாலி ஸ்நேஹம் செய்துகொண்டான். ஸுக்ரீவனுடைய பார்யை ருமையை அபஹரித்துக்கொண்டான். அவனும் தேவாம்சம் என்கிற முறையில் ராமருக்கு ஸ்வஜனமேயாகும். அவன் தன்னுடைய நிலையை மறந்து ராவணனுடன் ஸக்யம் ஏற்படுத்திக்கொண்டதற்கும், தர்ம விருத்தமாக ஸுக்ரீவனுடைய பார்யையை நிரஹித்துக்கொண்டதற்காகவும், இஹலோகத்திலேயே அவனுக்குத் தண்டனை செய்தாலொழிய, அவன் பாபத்திலிருந்து விடுதலையடையமாட்டான் என்று நினைத்து, அவனை நிக்ரஹம் செய்து, அவனை நிர்தோஷமாகச் செய்து கொடுத்தார். அப்படியே, ராவணன் மஹாவிஷ்ணுவின் த்வாரபாலகனுன ஜயன் என்பவனுடைய அம்சமாயிருப்பதால் அவனும் ராமனுக்கு ஸ்வஜனமேயாகும். அவனுக்கும் இஹலோகத்தில் செய்த உத்கடமான பாபத்திற்குத் தண்டனை கொடுத்து, அவனையும் நிர்தோஷமாகச் செய்யும்படி ஏற்பட்டது. ஆகையால் சத்ருக்களாயிருந்தவர்களைக்கூட ஸ்வஜனம் என்று பாவித்து அவர்களுக்குத்தண்டனையை அவர்களையும் பாபத்திலிருந்து விடுதலைசெய் அவர்களுடைய தர்மத்தையும் ரக்ஷித்துக் கொடுத்து அநுக்ரஹித்திருக்கிறுர். இங்கு வாலியைப் பற்றி கொஞ்சம் சொன்னேம், ராவணனைப்பற்றி

விஸ்தரிக்க உத்தேசமில்லை. முன் சொன்ன மற்றவர்களைப் பற்றி ஒவ்வொருவராகக் கவனிப்போம்.

## 1. தசரதர்.

தசரத மஹாராஜனைப்பற்றி முதலில் பிரஸ்தாவம் செய்யும்போதே "யாகம் செய்தவர்; தர்மத்திலேயே ஈடுபட்டவர்; இந்திரியங்களை அடக்கினவர்; மஹரிஷிக்கு ஸமமானவர்; ராஜரிஷி" (பால. 6—2) என்று சொல்லப் பட்டதிலிருந்தே அவருடைய மேன்மை தெரியவரும். மஹாவிஷ்ணுவானவர் தான் அவதாரம் செய்வதற்கு ஆலோசனைசெய்து தசரதரையே பிதாவாக அடைய வேண்டுமென்று ஆசைப்பட்டாரென்றால அவருடைய பெருமையைச் சொல்லவும் வேண்டுமா?

அவரிடத்தில் எவ்வித தோஷமும் இருப்பதற்கு காரணமே கிடையாது. அப்படியிருந்தும், ராமரிடத்தில் அவர் வைத்திருந்த விசேஷமான அபிமானத்தினால் கொஞ்சம் தவறுவதற்கு அவகாசம் ஏற்பட்டது. கைகேயிக்குக் கொடுப்பதாய்ச் சொல்லியிருந்த வரத்திற்கு கட்டுப்பட்டு, தசரதருடைய வாக்கைப் பரிபாலனம் பண்ண வேண்டுமென்பதற்காக ராமர் காட்டுக்குப் புறப்படுவதற்கு ஸித்தமாகி, தசரதமஹாராஜனிடம் உத்தரவு பெற்றுக் கொள்வதற்காகப் போகிறார். அந்த ஸமயத்தில் தசரதரை வால்மீகி வர்ணிக்கும்போது. 'அவர் ஸத்யவாதி; தர்மாத்மா; காம்பீர்யத்தில் ஸமுத்ரத்திற்கு ஸமமானவர்; ஆகாசம் போல் நிர்மலமானவர்' என்று சொல்லியிருப்பதால், அவர் தர்மத்திலிருந்து ஒருநாளும் விலகக்கூடியவர் இல்லை. அப்படியிருந்தும் ராமர் காட்டிற்குப் புறப்படுகிறார் என்பதைப் பார்த்து ஸஹிக்கமுடியாமல் "கைகேயிக்குக் கொடுத்த வரத்தினால் நான் மோஹத்தை

யடைந்துவிட்டேன். ஆகையால் நீயே என்னை நிக்ரஹம் செய்துவிட்டு அயோத்யைக்கு அரசனுக இருந்துவா”

अहं राघव कैकेय्या वरदानेन मोहितः ।
अयोध्यायास्त्वमेवाद्य भव राजा निगृह्य माम् ॥ அயோ. 34 (26)

என்று சொன்ஞர். இதற்கு முன்ஞல் காட்டிற்குப் போகும்படி ஏற்பட்டதும் தகப்பஞருடைய வாக்யத்தை யனுஸரித்துத்தான். இப்பொழுது அதே தகப்பஞர் தன்னை நிக்ரஹம்செய்து அரசனுக இரு என்று சொல்லுகிருர். இரண்டும் தகப்பஞருடைய வாக்யம் தானே? முதலில் சொன்னதை அவரே மாற்றி வேறுவிதமாகச் சொல்லும்போது, பின்ஞல் சொன்ன வாக்யத்தைக் கேட்டால் அதுவும் பித்ருவாக்ய பரிபாலனமாகாதா? முதல் வாக்யத்திற்கும் இரண்டாவது வாக்யத்திற்கும் பித்ரு வாக்யம் என்ற முறையில் என்ன வித்தியாஸம்? ராமர் இவ்விதம் நினைக்காமல் முதல் வாக்யத்திற்கே ப்ராமாண்யம் கொடுத்தாரே? அது என்ன நியாயம்? இதற்கு பதில் வால்மீகியே சொல்லுகிருர்.

இரண்டாவது வாக்யம் தசரதர் சொல்லும்போது மனஸிலிருந்த துக்கத்திஞல் சொன்னது. அதற்கு முன்ஞல் கைகேயிக்கு வரம் கொடுக்கும்போது மனப்பூர்வமாகச் சொன்ன வார்த்தை. ஆகையிஞலேயே ஒன்று அபிமானத்திஞலேயும், மற்ருென்று தர்மத்திற்குக் கட்டுப்பட்டும் சொல்லப்பட்டிருக்கின்றபடியால் தர்மத்தை அனுஸரித்த வார்த்தையே ப்ரமாணமாகும். இதை தசரதரும் நன்கு உணர்ந்தவர். ஆகையிஞல்தான் தசரதர் சொல்லும்போது “நீ காட்டிற்குப் போக வேண்டாம். நான் முன் சொன்னபடி நீ பட்டாபிஷேகம் செய்துக்கொள்” என்று சொல்லவில்லை. “என்னை நிக்ரஹம் செய்துவிட்டு நீ அரசனுக இருந்து வா” என்று

சொன்னதிலிருந்து தசரதர் நிக்ரஹம் செய்யப்படாமல் ஸ்வதந்திரராக இருக்கும் பக்ஷத்தில் ராமர் பட்டாபிஷேகம் செய்துகொள்ள ஸம்மதிக்க மாட்டார் என்பது வ்யக்தமாகத் தெரிகிறது. தான் உயிரோடு இருக்கும் வரை தானாகத் தன்னுடைய வார்த்தையை மீறி நடக்க தசரதருக்கு எண்ணமே வராது. ஆகையினாலேயே அவர் 'என்னை நிக்ரஹம் செய்து விட்டு ராஜாவாக இரு' என்று சொல்லியிருக்கிறார்.

தசரதருடைய வேற்றுமைப்பட்ட இவ்விரண்டு வாக்யங்களில் இரண்டாவதான 'காட்டிற்குப் போகாதே' என்ற வாக்யத்தை ராமர் கேட்டிருந்தாரேயானால் தசரதருக்கும் மிகப்பிரியமாக இருந்திருக்கும். தசரதர் ராமரிடம் சொல்லும்போது "என்னுடைய பிரியத்தை உத்தேசித்து நீ காட்டுக்குப் புறப்படுகிறாய். அது எனக்குப் பிரியமே இல்லை என்று பிரமாணமாய்ச் சொல்லுகிறேன்".

मत्प्रियार्थं प्रियांस्त्यक्त्वा यद्यासि विजनं वनम् ॥
न चैतन्मे प्रियं पुत्र शपे सत्येन राघव । ,, 34 (35,36)

என்று வ்யக்தமாய்ச்சொல்கிறார். இரண்டாவது வாக்யப்படி ராமர் நடந்துகொண்டால் பித்ருவாக்ய பரிபாலனமுமாகும், தசரதருக்கும் திருப்தியாக இருக்கும். அதை விட்டு ராமர் முதல் வாக்யத்திற்கே ப்ராமாண்யம் கொடுத்து தசரதருக்கு ப்ராணஹானியே ஏற்படும்படியான துக்கத்தை ஏன் கொடுத்தார்? என்று கவனித்தோமேயானால் ராமருடைய நிலை நன்கு தெரியவரும். காட்டிற்குப் போகாமல் இருந்து விட்டால் தற்காலத்தில் தசரதருக்கு ப்ரீதி ஏற்பட்டாலும், அவருக்கு தர்மத்திற்கு விரோதமாக நடந்து கொண்டோமே என்ற எண்ணம் [illegible] காண்டே இருக்கும். தவிரவும் ப

பொழுது அவருக்கு திருப்தியிருந்த போதிலும், வரன் கொடுத்துப் பிறகு அதை மறுத்ததிஞல் பொய் சொன்ன தோஷமானது ஏற்பட்டு தசரதர் ஸத்கதி அடைவதற்கு பிரதிபந்தமாக இருக்கும். அதற்குக் கொஞ்சமேனும் இடம் வைக்கக்கூடாதென்றே ராமர் தசரதரைப் பார்த்து,

त्वामहं सत्यमिच्छामि नानृतं पुरुषर्षभ (48)

"நீங்கள் ஸத்ய நிலையில் இருப்பதையே நான் விரும்புகிறேன்; நீங்கள் பொய்யன் என்று பெயர் வாங்க நான் இஷ்டப்படவில்லை" என்று வ்யக்தமாகவே சொல்லுவதிஞல், தசரதருக்கு தர்ம விஷயமாய் ஒருவித குறையும் ஏற்படக் கூடாதென்பதில் ராமர் விசேஷ அக்கரையோடு இருந்து வந்தாரென்பது நன்கு தெரிகிறது. ராமர் அவ்விதம் நடந்து கொண்டதிஞல்தான் தசரதருக்குத் தடையன்னியில் இந்திரலோகம் கிடைத்தது. ராவணவதமாகி தேவதைகள் அங்கு வந்திருக்கும் ஸமயம் மஹாதேவர் ராமரைப்பார்த்து "இதோ விமானத்தில் இருக்கிறவர் மனுஷ்யலோகத்தில் உனக்குப் பிதாவாக இருந்த தசரத மஹாராஜன், அவர் பூஜ்யர். மஹா யசஸ்வீ; உன்ஞல் கரையேற்றப்பட்டுத்தான் அவர் இந்திரலோகம் சென்று விளங்குகிருர்" என்று சொல்லியிருக்கிருர்.

एष राजा विमानस्थः पिता दशरथस्तव ।
काकुत्स्थ मानुषे लोके गुरुस्तव महायशाः ॥
इन्द्रलोकं गतः श्रीमान् त्वया पुत्रेण तारितः । யுத்த. 122 (7,8)

அப்படியே தசரதரும் ராமரிடம் சொல்லும்போது "நல்ல புத்ரஞகவும் மஹாத்மாவாகவும் இருக்கிற உன்ஞல் நான் கரையேற்றப்பட்டிருக்கிறேன்"

नाश्निोऽहं त्वया पुत्र सुपुत्रेण महात्मना। ,, ,, (16)

என்று சொல்லுகிறார். இதிலிருந்தும் தசரதர் சோகத்தினால் தர்மத்திலிருந்து கொஞ்சம் நழுவும்படி ஏற்பட்ட ஸமயத்தில் ராமரே தைர்யமாக இருந்து அவரை ரக்ஷித்திருக்கிறார் என்பது நன்கு தெரிகிறது.

ஸ்ரீராமர் காட்டிற்குப் போவதாகத் தீர்மானமானதும், தன்னிடம் சொல்லிக் கொள்வதற்காக வந்த ஸ்ரீராமரிடம் தசரதர் "இன்றைக்கே நீ காட்டிற்குப் போவதென்று வைத்துக்கொள்ளாதே; ஒரு நாளாவது நான் உன்னைப் பார்த்துக் கொண்டு இருக்கிறேன்; இன்று ராத்திரி மாத்திரமாவது என்னையும் உன் தாயாரையும் பார்த்துக்கொண்டு இங்கே இருந்துவிடு, நாளை காலையில் போகலாம்".

अद्य त्विदानीं रजनीं पुत्र मा गच्छ सर्वथा ।
एकाहं दर्शनेनापि साधु तावच्चराम्यहम् ॥
मातरं मां च संपश्यन् वसेमामद्य शर्वरीम् ।
तर्पितः सर्वकामैस्त्वं श्वः काले साधयिष्यसि ॥ அயோ. 34 (33,34)

என்று சொல்லுகிறார். இந்த வாக்யத்தையும் ராமர் கேட்காமல் உடனே புறப்படவேண்டியதுதான் நியாயம் என்று தீர்மானித்தார். முன்னால் ராமர் கைகேயியிடம் சொல்லும்போது "இன்றைக்கே ராஜாவினுடைய ஆக்ஞையின்பேரில் பரதனைக் கூட்டி வருவதற்கு அம்மான் வீட்டிற்கு வேகமாகப் போகக்கூடிய குதிரைகளுடன் தூதர்கள் போகட்டும்; நான் இங்கிருந்தே சீக்கிரம் தண்டகாரண்யத்திற்குப் புறப்படுகிறேன்".

गच्छन्तु चैवानयितुं दूताः शीघ्रजवैर्हयैः ।
भरतं मातुलकुलादद्यैव नृपशासनात् ॥

दण्डकारण्यमेषोऽहमितो गच्छामि सत्वरः । அயோ. 19 (10,11)

என்று சொல்லுகிருர். அப்பொழுது கைகேயி

एवं भवतु यास्यन्ति दूताः शीघ्रजवैर्हयैः ।
भरतं मातुलकुलादुपावर्तयितुं नराः ॥ ,, ,, (13)

तव त्वहं क्षमं मन्ये नोत्सुकस्य विलम्बनम् ।
राम तस्मादितः शीघ्रं वनं त्वं गन्तुमर्हसि ॥ ,, ,, (14)

यावत्त्वं न वनं यातः पुरादस्मादभित्वरन् ।
पिता तावन्न ते राम स्नास्यते भोक्ष्यतेऽपि वा ॥,, (16)

"பரதனுக்குத் தூதர்களை அனுப்புவோம். அதற்காக நீ தாமதிக்கவேண்டாம்; நீ இங்கிருந்து சீக்கிரமாகப் புறப்படு; நீ காட்டிற்குப் புறப்படாமல் இருக்கும் வரையில் உன் தகப்பனுர் ஸ்நானம் செய்யமாட்டார்; போஜனம் செய்யமாட்டார்" என்று சொன்னதின் பேரில் ராமர்

यावन्मातरमापृच्छे सीतां चानुनयाम्यहम् ।
ततोऽद्यैव गमिष्यामि दण्डकानां महद्वनम् ॥ ,, ,, (25)

"தாயாரிடம் சொல்லிக் கொண்டு ஸீதைக்கு ஸமாதானம் சொல்லிவிட்டுப் போகும்வரைதான் தாமதம். அதன்பிறகு இன்றைக்கே தண்டகாரண்யம் புறப்பட்டு விடுகிறேன்" என்று சொல்லுகிருர். அப்பொழுது தசரதர் ஒன்றும் சொல்லவில்லை. ஆகையினுல் அன்

றைக்கே புறப்படுவதுதான் நியாயமாகும். பிற்பாடு அபி மானத்தினால் 'ஒருநாள் ராத்திரி தங்கிவிட்டுப்போ' என்று தசரதர் சொன்ன வாக்யமானது கொஞ்சம் தர்மத்திலிருந்து நழுவினதேயாகும். ஆகையினால் அதன் படி நடந்தால் தசரதருக்கு தர்மஹானி ஏற்படுமென்று ராமர் நன்கு உணர்ந்தபடியால், அவர் உடனே புறப் படுவதுதான் நியாயம் என்று அவ்விதமே செய்தார்.

தசரத மஹாராஜன் கைகேயியிடம் வாதாடிக் கொண்டிருக்கும்போது "ராமர் காட்டிற்குப் போவது பரதனுக்குப் பிரியமாக இருக்குமேயானால் நான் இறந்த பிறகு என்னுடைய பிரேத கிருத்யங்களை பரதன் செய்ய வேண்டாம்"

प्रियं चेद्भरतस्यैतद्रामप्रव्राजनं भवेत् ॥

मा स्म मे भरतः कार्षीत् प्रेतकृत्यं गतायुषः । அயோ. 12 (92,93)

என்று சொன்னார். பிற்பாடு ராமர் காட்டிற்குப் புறப் பட்ட ஸமயம் நடுவீதியில் தசரதர் கீழே விழும்போது கௌஸல்யை வலது கையையும், கைகேயி இடது கையை யும் பிடித்துத் தூக்க வந்ததும்,

कैकेयि मा ममाङ्गानि स्प्राक्षीस्त्वं दुष्टचारिणि ।

नहि त्वां द्रष्टुमिच्छामि न भार्या न च बान्धवी ॥ அயோ. 42 (6)

अगृह्णां यच्च ते पाणिमग्निं पर्यणयं च यत् ।

अनुजानामि तत्सर्वमस्मिन् लोके परत्र च ॥ ,, (8)

भरतश्चेत् प्रतीतः स्याद्राज्यं प्राप्येदमव्ययम् ।

यन्मे स दद्यात् पित्रर्थं मां मा तद्दत्तमागमत् ॥ (9)

'கைகேயீ! துஷ்டை நீ, என்னுடைய அங்கங்களைத் தொடாதே; எனக்கு உன்னைப் பார்க்கவே பிடிக்கவில்லை; நீ எனக்கு பார்யையுமில்லை, பந்துவும் இல்லை. உன் கையை பிடித்துக் கொண்டு, அக்னியைச் சுற்றி வந்தேனே, அதையும் விட்டுவிட்டேன். இந்த லோகத்திலோ பரலோகத்திலோ இனி ஸம்பந்தம் கிடையாது. பரதன் இந்த ராஜ்யத்தை விருப்பத்துடன் ஒப்புக் கொண்டானேயானால், அவன் என்னை உத்தேசித்துச் செய்யும் பித்ரு கர்மாவானது என்னை வந்து சேரவேண்டாம்' என்றும் சொல்லுகிறார். இவ்விதம் சொல்லும் போதும், ராமர் காட்டுக்குப் போனது பரதனுக்கு இஷ்டமாயிருந்தால் என்று கூறியிருந்த போதிலும் பரதன் தன்னுடைய அபரக்ரியையைச் செய்வதற்கு அனர்ஹன் என்று சொன்னதாக ஆகிறது. தவிரவும் கைகேயியை அக்னி புரஸ்ஸரமாக விவாஹம் செய்து கொண்டு விட்டு, அவள் இப்பொழுது புத்ர வாத்ஸல்யத்தினுல், ராஜ்யம் வேண்டுமென்று கேட்டதன் நிமித்தமாக வெகு துக்கத்துடன் அவளையே பரித்யாகம் பண்ணிவிட்டதாகச் சொல்லியிருக்கிறார். இவ்விதம் சொன்னது வருத்தத்துடன் சொன்ன போதிலும் பரம தார்மிகராக இருக்கிற தசரதர் அவ்விதம் சொல்லி இருக்கக் கூடாது என்பதுதான் நியாயமாகும். தவிரவும் தசரதர் கைகேயியிடம் ஒரு ஸமயம் "அக்னியின் முன்னல் மந்திரத்தோடுகூட உன் கையைப் பிடித்தேனே! ஹே பாபீ! அதை இப்பொழுது தியாகம் செய்து விடுகிறேன். உன்னோடு சேர்த்து உன்னுடைய புத்ரனையும் தியாகம் செய்து விடுகிறேன்"

यस्ते मन्त्रकृतः पाणिरग्नौ पापे मया धृतः ।

तं त्यजामि स्वयं चैव तव पुत्रं सह त्वया ॥ அயோ. 14 (14)

என்று சொல்லும் போது 'பரதனுக்கு இவ்விஷயம் திருப்தியாக இருக்குமேயாஞல்' என்பதைச் சொல்ல விட்டு

விட்டார். தவிரவும் "ராமருடைய அபிஷேகத்தை நீ கெடுப்பதால் புத்ரனோடு சேர்ந்து என்னுடைய உத்தர க்ரியையை செய்யக் கூடாது" என்று மறுபடியும் சொல்கிறார்.

त्वया सपुत्रया नैव कर्तव्या सलिलक्रिया ।
व्याहन्तास्यशुभाचारे यदि रामाभिषेचनम् ॥ ,, (17)

இவ்விரண்டு வாக்கியங்களிலும் கைகேயியிடத்தில் ஏற்பட்டுள்ள கோபத்தினால், பரதனுடைய மனோபாவம் எப்படி இருக்கும் என்பதைக்கூட கவனியாமல், பரதனையும் சேர்த்துச் சொல்லிவிட்டார். பரதனுடைய மனோபாவத்தைத் தெரிந்து சொல்லுவதற்கு இடமில்லாமல் தசரதர் காலமாகி விட்டார். தேவலோகத்திற்கு போன பிறகுதான், தேவ ஸங்கல்பங்கள் எல்லாம் ராவணவதம் ... தேவர்கள் நடத்திவைத்தார்கள் என்பதை அறிந்தார்.

इदानीं तु विजानामि यथा सौम्य सुरेश्वरैः ।
वधार्थं रावणस्येह विहितं पुरुषोत्तम ॥ யுத்த. 122 (17)

தேவலோகத்திலிருந்து இங்கு நடப்பதை கவனிக்கும் போதுதான் இந்த விஷயம் அவருக்குத் தெரிய வந்தது. அப்பொழுதுதான், பரதன் விஷயமாக, தான் நினைத்த ஸந்தேஹத்திற்கே இடமில்லை யென்பதை உணர்ந்தார். ஆகையால் யுத்தம் முடிந்தவுடன் தசரதர் ராமரைப்பார்த்து "நீ சீக்கிரம் பரதனைப் பார்த்துச் சேர்ந்திருப்பதை நான் பார்க்க வேண்டுமென்று ஆசைப் படுகிறேன். அவன் மிகவும் அனுராகத்தோடு கூடினவன்; பலிஷ்டன்; சுத்தமானவன்; தர்மாசரணங்களிலேயே ஈடுபட்டவன்"

अनुरक्तेन बलिना शुचिना धर्मचारिणा ।
इच्छामि त्वामहं द्रष्टुं भरतेन समागतम् ॥ ,, (20)

என்று சொல்லுகிறார். இவ்வளவு அவர் சொல்லியும் கூட, தான் கைகேயி விஷயமாகவும், பரதன் விஷயமாகவும் சொன்ன வார்த்தை தவறு என்றாவது, அவர்களைத் தோஷ மற்றவர்கள் என்று பாவித்து ஏதேனும் வார்த்தையாவது, சொல்லவில்லை. அவ்விதம் சொல்லாமலிருக்கும்வரை தசரதருடைய உத்தமமான ஸ்வபாவத்திற்குக் கொஞ்சம் இழுக்கு ஏற்படுமென்றே ராமர் கருதினார். ராமர் உடனே அஞ்ஜலி பந்தம் செய்துகொண்டு,

कुरु प्रसादं धर्मज्ञ कैकेय्या भरतस्य च ॥
सपुत्रां त्वां त्यजामीति यदुक्ता कैकेयी त्वया ।
स शापः कैकेयीं घोरः सपुत्रां न स्पृशेत् प्रभो ॥ (24,25)

"தர்மமறிந்தவரே, கைகேயி விஷயத்திலும், பரதன் விஷயத்திலும் பிரஸாதம் செய்ய வேண்டும்; புத்ரனோடு சேர்த்து உன்னை பரித்யாகம் செய்கிறேன் என்று கைகேயியைப்பார்த்துத் தாங்கள் சொன்ன வார்த்தை கோரமான சாபமாக ஏற்பட்டு அவளையும், அவளுடைய புத்ரனையும் பாதிக்கக்கூடாது" என்று பிரார்த்தித்துக் கேட்கும்போது மஹாராஜாவானவர் அதற்கு ஸம்மதிக்கிறார். இதிலிருந்து முன் சொன்ன வார்த்தை கோபத்தினாலோ, துக்கத்தினாலோ சொல்லப்பட்டிருந்த போதிலும், உசிதமில்லாத வார்த்தையா யிருந்தபடியால் அவை மாற்றி விடாத வரையில் தசரதருக்கு தோஷம் உண்டென்றே ராமருடைய நிச்சயமான அபிப்ராயம் என்று தெரிகிறது. அந்த தோஷம் தன் தகப்பனாரிடம் மிஞ்சக்கூடாது என்ற எண்ணத்துடனேயே இவ்விதம் தசரதரிடம் உறுதி கேட்டு வாங்கிக் கொள்ளுகிறார்.

இவ்விதமாக தகப்பனாராகவும், பரம தார்மிகராகவும் இருந்துவந்த தசரதரிடத்தில்கூட ஏதோ நிமித்தத்தினால் தர்மத்திலிருந்து நழுவும்படி ஸந்தர்ப்பம் ஏற்படும்போது அதற்குப் பரிஹாரம் தேடி அந்த தோஷத்தை விலக்கிக்கொடுத்திருப்பதால் தன் ஜனங்களுடைய ஸம்மதத்தையும் ரக்ஷிப்பவர் என்கிற அடைமொழி ராமருக்கு நன்கு பொருந்தும் என்பதில் ஸந்தேஹமில்லை.

2. கௌஸல்யை.

ராமர் காட்டிற்குப் போவதாகத் தகப்பனாரிடம் சொல்லிவிட்டு கௌஸல்யையிடத்தில் அனுமதி வாங்கிக்கொள்ளப் போன ஸமயத்தில் அவள் துக்கப்படுவதைக்கண்டு லக்ஷ்மணன், தன்னுடைய பராக்ரமத்தினால் தசரதரையோ நிக்ரஹம் செய்து பரதனையோ அவனைச் சேர்ந்தவர்களையோ தடுத்து, ராஜ்யத்தை ராமருக்குக் கொடுப்பதாகச் சொல்லுகிறான். அவ்விதம் செய்துவிட்டால் கௌஸல்யைக்கு திருப்தியாகவே இருக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனாலும் அவ்விதம் செய்வது நியாயமில்லையென்பதும் அவளுக்குத் தோன்றுவதால், அப்படியே செய்யென்று லக்ஷ்மணனிடமாவது ராமரிடமாவது சொல்லாமல் "ராமா! உன் தம்பி லக்ஷ்மணன் சொல்லுவதைக் கேட்டாயே! அது உனக்குப் பிடித்தேயானால் மேல் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்."

आनुस्ते वदतः पुत्र लक्ष्मणस्य श्रुतं त्वया ।
यदत्रानन्तरं कार्यं कुरुष्व यदि रोचते ॥ அயோ. 21 (21)

என்று மாத்திரம் சொல்லுகிறாள். இதிலிருந்து தனக்கு பிரியமாயிருந்தாலும் தர்மத்திற்கு விரோதமாக நடந்து கொள்ளக்கூடிய ஸ்வபாவம் அவளிடத்தில் கிடையாது என்பது நன்கு தெரிகிறது. தவிரவும் ராமரிடத்தில்

பேசும் போது, தனக்குத் திருப்தியாயிருக்குமென்று மாத்திரம் சொன்னால் போதாதென்று நினைத்து, ராமரிடம் தர்மத்தையே எடுத்துச்சொல்லி, தர்மரீதியாவே காட்டிற்குப் போவது நியாயமில்லை என்பதை எடுத்துச் சொல்லுகிறாள். அவள் சொல்லுவதில், வேதத்தில் मातृदेवो भव என்று சொன்னபிறகுதான் पितृदेवो भव என்று சொல்லப்பட்டிருப்பதால், தகப்பனாருடைய வாக்கியத்தைவிடத் தாயாருடைய வாக்கியத்திற்கே பிராமாண்யம் அதிகம் என்றிருக்கையில், ஸமானமான பிராமாண்யமாவது கொடுக்க வேண்டாமா என்றும், அப்படியானால் நீ காட்டிற்குப் போவதை நான் அனுமதிக்கவில்லை. நீ காட்டிற்குப் போகக்கூடாது என்றும் சொல்லி ராமரைத் தடுக்கிறாள். "வீட்டில் இருந்துகொண்டு தாயாருக்கு சுச்ருஷை செய்து கொண்டிருப்பதே மேலான தர்மம்; வேறு தர்மமறிந்தவனே! நீ தார்மிக சிரேஷ்டனாக இருப்பதனால் இந்த தர்மத்தை அநுஷ்டித்துவா" என்று சொல்லுகிறாள்.

यथैव राजा पूज्यस्ते गौरवेण तथा ह्यहम् ।
त्वां नाहमनुजानामि न गन्तव्यमितो वनम् ॥ அயோ. 21 (25)

धर्मज्ञ यदि धर्मिष्ठो धर्मं चरितुमिच्छसि ।
शुश्रूष मामिहस्थस्त्वं चर धर्ममनुत्तमम् ,, ,, (28)

இவ்விதம் அவள் சொன்ன வார்த்தையானது தன்னுடைய பர்த்தாவினுடைய வாக்கியத்தை உல்லங்கனம் செய்ததாக ஆகும். அவள் ராமரிடத்தில் வைத்திருந்த அபிமானத்தினால் இவ்விதம் சொன்னாளே தவிர அவள் தர்மம் தெரியாதவள் அல்ல. தர்மம் தெரிந்தும் கூட அந்த அபிமானம் அவளுடைய ஞானத்தைை மறைத்து விட்டது. ஆகையினால் அவள் இவ்விதம் சொல்லும்படி

ஏற்பட்டது. அவளுக்குச் சரியான தர்மநிலையை எடுத்துச்சொல்ல வேண்டிய பொறுப்பு ராமருக்கு ஏற்பட்டது. அப்பொழுது அவர் தாயாருக்கு ஏற்பட்ட கௌரவத்தைக் கொஞ்சம்கூட குறைக்காமல் பதில் சொல்ல வேண்டியது அவசியமாயிற்று. அவளும் தசரதருடைய ஆளுகைக்குக் கட்டுப்பட்டவளான படியால் அவருடைய கட்டளையை அநுஸரிக்க வேண்டியது அவளுடைய கடமையாகும், பர்த்தாவினுடைய ஆக்ஞைக்கு விரோதமாக ஆக்ஞை செய்வதற்கு அதிகாரம் இல்லையென்பதை எடுத்துச் சொல்லும் படி ஏற்பட்டது. அதை வெகு அழகாக,

त्वया मया च वैदेह्या लक्ष्मणेन सुमित्रया ।
पितुर्नियोगे स्थातव्यं एष धर्मः सनातनः ॥ (49)

'நீயும் நானும் ஸீதையும் லக்ஷ்மணனும் ஸுமித்ரையும் பிதாவினுடைய கட்டளைப்படி நடக்க வேண்டியவர்கள்; இதுதான் ஸநாதனமான தர்மம்' என்று ஸமாதானம் சொல்லியிருக்கிறார். அந்த ஸமயத்தில் ராமர் சொன்ன வாக்கியத்தை சிலாகித்து வால்மீகி சொல்லுவதாவது:—

धर्मे स्थितो धर्म्यमुवाच वाक्यं
यथा स एवार्हति तत्र वक्तुम् ॥ (55)

"தர்மத்தில் நிலைபெற்று தர்மத்திலிருந்து விலகாமலிருக்கும் வாக்யத்தை ராமர் சொன்னார்; அந்த ஸந்தர்பத்தில் அவர்தான் அவ்விதம் சொல்லமுடியும்". லக்ஷ்மணனையும் பார்த்து "தகப்பனாருடைய பிரதிக்ஞையை அப்படியே பூராவையும் நடத்தாமலிருக்க எனக்கு சக்தியில்லை; நம் இருவரையும் ஏவுவதற்கு அதிகாரமுள்ள பெரியவர் அவர்; நம் தாயாருக்கும் அவர் பர்த்தா;

அவரே கதி; அவரே தர்மம்" என்று எடுத்துக் காட்டுகிருர்.

स वै न शक्नोमि पितुः प्रतिज्ञां इमामकर्तुं सकलां यथावत् ।
स ह्यावयोस्तात गुरुर्नियोगे देव्याश्च भर्ता स गतिः स धर्मः ॥
,, ,, (60)

இவ்விதம் பர்த்தாவினுடைய வாக்கியத்திற்கு மாருகச் சொன்ஞல் தோஷம் ஏற்படக்கூடுமாதலால் அவ்விதம் சொல்லுவது தர்மமாகாது என்பதை ராமர் எடுத்துக் காட்டினர்.

கௌஸல்யை ராமரைவிட்டுப் பிரிந்திருக்க மனமில்லாமல் தானும் கூடவருவேனென்று சொல்லுகிருள்.

अनुव्रजिष्यामि वनं त्वयैव........॥ ,, 20 (54)
अहं त्वाऽनुगमिष्यामि पुत्र यत्र गमिष्यसि ॥ ,, ,, (9)

"ராமா, நீ ஊரிலிருக்கும்போதே என்னை லக்ஷ்யம்பண்ணவில்லை; நீயும் புறப்பட்டுப் போய்விட்டால் கேட்கவும் வேண்டுமோ? அவசியம் எனக்கு மரணமே ஏற்படும்."

त्वयि संनिहितेऽप्येवं अहमासं निराकृता ।
किं पुनः प्रोषिते तात ध्रुवं मरणमेव मे ॥ ,, ,, (41)

என்றும், இதுபோன்ற அநேகம் வாக்யங்களையும் சொல்லி பிரலாபம் செய்கிருள். தன்னுடைய பர்த்தாவை விட்டு விட்டு புத்ரன் கூடப் போகிறேன் என்று சொல்லுவது கொஞ்சமேனும் நியாயமில்லையென்பதை ராமர் எடுத்துச் சொல்லும்படி ஏற்பட்டது. "பர்த்தாவை இழந்த ஸ்திரீ வேண்டுமாஞல் புத்ரன் கூடப் போய் இருக்கலாம். பர்த்தா இருக்கும் போது எப்படி

அவரை விடுவது நியாயமாகும்? தவிரவும் பர்த்தா தார்மிகனாக இருக்கும் போது எப்படி விட முடியும்? அதிலும் தார்மிக சிரேஷ்டராக இருந்து தன் நிலையில் இருந்து கொண்டு தர்மத்தை அனுஷ்டித்து வருகிற பர்த்தாவை எப்படி விட்டு விட்டு வரமுடியும்?"

तस्मिन् पुनर्जीवति धर्मराजे विशेषतः स्वे पथि वर्तमाने।
देवी मया सार्धं इतोऽपगच्छेत् कथंस्विदन्या विधवेव नारी॥
அயோ. 21 (61)

மேலும், "பர்த்தாவை பரித்யாகம் செய்வது ஸ்திரீகளுக்கு மிகவும் தோஷம். அவ்விதம் நிந்திக்கக்கூடிய காரியத்தை உங்களைப் போலுள்ளவர்கள் மனவிலுல் கூட நினைக்கக்கூடாது. என்னுடைய தகப்பனார் மஹாராஜா இருக்கும் வரையில் அவருடைய சுச்ரூஷையைச் செய்து கொண்டிருப்பதுதான் சாசுவதமான தர்மமாகும்." என்று சொல்லுகிறார்.

भर्तुः किल परित्यागो नृशंसः केवलं स्त्रियाः
स भवत्या न कर्तव्यो मनसाऽपि विगर्हितः॥

यावज्जीवति काकुत्स्थः पिता मे जगतीपतिः।
शुश्रूषा क्रियतां तावत् स हि धर्मः सनातनः॥ ,, 24 (12,13

கௌஸல்யை ஸ்வபாத்தில் நல்ல விவேகமும் ஞானமும் உள்ளவளான படியால் ராமர் சொன்னது தனக்கு பிரிய மில்லாமலிருந்த போதிலும், தர்மத்தை யொட்டின வார்த்தை என்பதில் மிகவும் திருப்தியடைந்து அப்படியே ஆகட்டும் என்று பதில் சொன்னாள்.

एवमुक्ता तु कौसल्या रामेण शुभदर्शना।
तथेत्युवाच सुप्रीता राममक्लिष्टकारिणम्॥ ,, ,, (14)

அதன் பிறகு ராமர் மறுபடியும் "என் தகப்பனுடைய வார்த்தைப்படி நானும் நடக்கவேண்டும்; நீயும் நடக்க வேண்டும்; அவர் நமக்கெல்லாம் ராஜா; போஷணை செய்பவர்; பூஜிக்கத் தகுந்தவர்; மிகவும் மேன்மை பொருந்தியவர்; எல்லோரையும் ஆளுபவர்; எல்லோருக்கும் பிரபு" என்று வற்புறுத்துகிருர்.

मया चैव भवत्या च कर्तव्यं वचनं पितुः ।
राजा भर्ता गुरुः श्रेष्ठः सर्वेषामीश्वरः प्रभुः ॥ ,, (16)

அவ்விதமே ஆகட்டுமென்று கௌஸல்யை சொன்ன போதிலும் புத்ர வாத்ஸல்யத்திஞல் கண்ணீர்விட்டுக் கொண்டு

आसां राम सपत्नीनां वस्तुं मध्ये न मे क्षमम् ।
नय मामपि काकुत्स्थ वनं वन्यां मृगीं यथा ॥ ,, ,, (19)
यदि ते गमने बुद्धिः कृता पितुरपेक्षया ॥ ,, ,, (20)

"தகப்பஞர் சொன்னதற்காக நீ காட்டுக்குப் போகிறது என்று தீர்மானமான எண்ணத்துடனிருந்தால், நான் இந்த ஸபத்னீகளின் மத்தியில் இருப்பது ஸாத்யமில்லை; ஆகையால் என்னையும் காட்டிற்கு அழைத்துக்கொண்டு போ" என்று மறுபடியும் சொன்னவுடன் ராமர் மறுபடியும் "உயிருடன் இருக்கும் வரையில் ஸ்திரீக்குப் பர்த்தாதான் தெய்வம்; அவர்தான் பிரபு; உனக்கும் எனக்கும் கட்டளை யிடுவதற்கு அதிகாரமுள்ள பிரபுவாக அவரே இருக்கிருர்; யாராவது ஒரு ஸ்திரீ பர்த்தாவையனுஸரித்து நடக்காமல் இருந்தால் அவளுக்குத் துர்கதிதான் ஏற்படும்; பர்த்தாவுக்கு சுச்ரூஷை செய்துகொண்டிருந்தால் உத்தமமான ஸ்வர்க்கத்தையடையலாம்; அவள் வேறு யாரையும் நமஸ்காரம் செய்யாமலிருந்தாலும் தேவபூஜை செய்யாமல் இருந்தாலும்,

பர்த்தாவினுடைய பிரியத்திலும் ஹிதத்திலுமே நோக்கத்துடன் சுச்ரூஷை மாத்திரம் செய்து வரவேண்டியது; இதுதான் முன்னோர்கள் கண்ட தர்மம்; உலகரீதியாகவும் அதுதான் தர்மம்; வேதத்தில் சொல்லியிருக்கும் தர்மமும் அதுதான்; ஸ்மிருதிகளில் சொல்லியிருப்பதும் இந்த தர்மம்தான்" என்று எடுத்துச் சொல்லுகிறார்.

जीवन्त्या हि स्त्रिया भर्ता दैवतं प्रभुरेव च ।
भवत्या मम चैवाद्य राजा प्रभवति प्रभुः ॥ ,, ,, 25 (21)

भर्तारं नानुवर्तेत सा तु पापगतिर्भवेत् ॥

भर्तुः शुश्रूषया नारी लभते स्वर्गमुत्तमम् ।
अपि या निर्नमस्कारा निवृत्ता देवपूजनात् ॥

शुश्रूषामेव कुर्वीत भर्तुः प्रियहिते रता ।
एष धर्मः पुरा दृष्टो लोके वेदे श्रुतः स्मृतः ॥ ,, ,, (25-27)

இவ்விதம் ராமர் எடுத்துச் சொன்னதின் பேரில் கௌஸல்யை ஒருவாறு ஸமாதானம் செய்துகொண்டு அவருக்கு விடை கொடுத்து அனுப்பும் போது பலவிதமாக ஆசீர்வதிக்கிறாள். அந்த ஆசீர்வாதங்களுள் முக்யமானது.

यं पालयसि धर्मं त्वं धृत्या च नियमेन च ।
स वै राघवशार्दूल धर्मस्त्वामभिरक्षतु ॥ ,, ,, (3)

"எந்த தர்மத்தை உறுதியுடனும் நியமத்துடனும் நீ பரிபாலித்து வருகிறாயோ அந்த தர்மம் எப்பொழுதும் உன்னைக் காத்து ரக்ஷிக்கட்டும்." இதனால் ராமர் காட்

டிற்குப் போவது தர்மம்தான் என்பதை கௌஸல்யை நன்கு உணர்ந்தாள் என்பது நன்கு தெரிகிறது. தவிரவும்,

प्रत्यागते महाभागे कृतार्थे चरितव्रते ।
पितुरानृण्यतां प्राप्ते त्वयि लप्स्ये परं सुखम् ॥ ,, ,, 24 (34)

"நீ எடுத்துக்கொண்ட வ்ரதத்தை நடத்திவிட்டு கிருதார்த்தனுக, மஹாபாக்யசாலியாக, பிதா விஷயத்தில் கடனில்லாதவனுக, ஆகி நீ திரும்பிவரும்போது நான் உத்தமமான ஸுகத்தை அடைவேன்" என்று சொல்லுவதிலிருந்து ராமர் காட்டுக்குப் போகாமலிருந்தால் அவருக்கு பிதாவின் கடன் செலுத்தினதாக ஆகாது என்பதை அவளும் உணர்ந்ததாகத் தெரிகிறது. எவ்வளவு உத்தமஸ்வபாவத்தோடு கௌஸல்யை இருந்த போதிலும் புத்ரவாத்ஸல்யம் பாதிக்கும் போது தர்மத்திலிருந்து கொஞ்சம் நழுவலாமா என்கிற எண்ணமானது ஏற்படும் போது அதற்கு இடம் கொடுக்கக் கூடாது என்பதை உத்தேசித்து ராமர் அவளுக்கு தர்மத்தினுடைய வாஸ்தவமான நிலையை எடுத்துச் சொல்லி அவளை அவ்விதம் நழுவாமல் காப்பாற்றிக் கொடுத்திருக்கிருர் என்பது நன்கு விளங்குகிறது.

3. கைகேயீ.

கைகேயிக்கு ராமரிடத்தில் எவ்வளவு அபிமானம் இருந்ததென்பது அவளுடைய வாக்யத்திலிருந்தே மிகத் தெளிவாகத் தெரிகிறது. ராமருக்குப் பட்டாபிஷேகமென்று மந்தரையிடமிருந்து கேள்விப்பட்டவுடன் மிக ஸந்தோஷமாக அவளுக்கு ஒரு ஆபரணத்தை எடுத்துக் கொடுத்து விட்டு "எனக்கு மிகப் பிரியமான இந்த ஸமாசாரத்தைச் சொல்லுகிருய்; இந்தப் பிரியத்தை என்னிடம் சொன்ன உனக்கு இன்னும் என்ன பரிசு வேண்டும்?

சொல்லு; ராமருக்கும் பரதனுக்கும் வித்யாஸமுள்ளதாக நான் நினைக்கவில்லை. ராமருக்கு ராஜா ராஜ்யாபிஷேகம் செய்து வைக்கிறார் என்பதைக் கேட்டு ஸந்தோஷிக்கிறேன்" என்று சொல்லுகிறாள்.

इदं तु मन्थरे मह्यं आख्यासि परमं प्रियम्
एतन्मे प्रियमाख्यातं भूयः किं वा करोमि ते ॥

रामे वा भरते वाऽहं विशेषं नोपलक्षये ।
तस्मात् तुष्टाऽस्मि यद्राजा रामं राज्येऽभिषेक्ष्यति ॥
அயோ. 7 (34,35)

மந்தரை கலக்கிப் பார்த்தும் கைகேயி ராமருடைய குணங்களையே எடுத்துச் சொன்னாள்,

धर्मज्ञो गुणवान् दान्तः कृतज्ञः सत्यवाक् शुचिः ।
रामो राज्ञः सुतो ज्येष्ठो यौवराज्यमतोऽर्हति ॥ ,, 8 (14)

यथा वै भरतो मान्यस्तथा भूयोऽपि राघवः ।
कौसल्यातोऽतिरिक्तं च मम शुश्रूषते हि माम् ,, ,, (18)

"ராமர் தர்மமறிந்தவர், குணவான்; அடக்கமுள்ளவர்; நன்றி அறிபவர், ஸத்யத்தையே பேசுபவர், அதிசுத்தர்; ராஜாவினுடைய ஜ்யேஷ்ட புத்திரர். ஆகையால் அவரே யௌவராஜ்யத்திற்கு அர்ஹர்; கௌஸல்யையை விட அதிகமாகவே அவர் எனக்குச் சுச்ரூஷை செய்கிறார்" என்று சொல்லுகிறாள்.

ராமரும் கைகேயியைப்பற்றி லக்ஷ்மணனிடத்தில் சொல்லும் போது "எனக்குத் தாயார்களுக்குள் வித்யாஸம் கிடையாது என்பது உனக்கு நன்றாகத்தெரியும்;

அவளுக்கும் என்னிடத்திலும் தன் குமாரனிடத்திலும் வித்யாஸம் இதற்குமுன் ஏற்பட்டதில்லை யென்பதும் உனக்கு நன்ருகத் தெரியும்; எனக்குக் கெடுதல் செய்ய வேண்டும் என்ற எண்ணம் கைகேயிக்கு ஏற்படுமா? உத்தம ஸ்வபாவத்துடன் கூடிய ராஜபுத்ரியான உத்தம குணத்துடன் கூடின அவள் ஸாமான்ய ஸ்திரீ மாதிரி எனக்குக் கெடுதல் உண்டாக்கக்கூடிய வார்த்தையைப் பேசுவாளா? அதுவும் தன் பர்த்தாவினுடைய ஸன்னிதியிலேயே? இதிலிருந்து எல்லாவற்றிற்கும் மேலாகத் தைவம் என்று ஒன்று உண்டு என்பது நன்கு தெரிகிறது" என்று எடுத்துக்காட்டுகிருர்.

जानासि हि यथा सौम्य न मातृषु ममान्तरम् ।
भूतपूर्वो विशेषो वा तस्या मयि सुतेऽपि वा ॥ ,, 22 (17)

कथं प्रकृतिसंपन्ना राजपुत्री तथागुणा ।
ब्रूयात् सा प्राकृतेव स्त्री मत्पीडां भर्तृसंनिधौ ॥ ,, ,, (18)

यदचिन्त्यं तु तद्दैवं भूतेष्वपि न हन्यते ।
व्यक्तं मयि च तस्यां च पतितो हि विपर्ययः ॥ ,, ,, (20)

இவ்விதம் கைகேயி ராமரைக் காட்டிற்குப் போகும்படி தைவத்திஞல் ஏவப்பட்டே செய்தாள் என்று ராமர் எடுத்துச் சொல்லியிருக்கும் போது, அவள் செய்தது அதர்மமென்று சொல்லுவதற்கு நமக்கு அதிகாரமில்லை. தவிரவும் அவள் செய்தது அதர்மமாயிருந்தால் தசரதர் கொஞ்சமேனும் இடம் கொடுத்திருக்கமாட்டார். மேலும் ராமரே அவளைக் கண்டித்து அவள் செய்த அதர்மத்தை எடுத்துக்காட்டி அவளைத் திருத்த முயலுவார். அவ்விதம் யாதொன்றும் நடக்கவில்லை. காட்டிற்குப் போகவேண்டுமென்று கைகேயி சொன்னவுடன் எதற்காக என்றுகூட

ராமர் கேட்காமல் "காட்டிற்குப் போய் ப
வருஷம் இருக்க வேண்டுமென்று தகப்பனர் சொல்லா
மலே நீயே சொல்லியிருந்தாலும் நான் போயிருப்பேனே?
அப்படியிருக்க என்னிடத்தில் விசேஷ அதிகாரமுள்ள நீ
ராஜாவிடம் இது விஷயமாய் கேட்கப் போனதிலிருந்து
என்னிடத்தில் கொஞ்சமேனும் குணங்கள் கிடையாது
என்றே நீ நினைக்கிருய் என்று தெரிகிறது"

अनुक्तोऽप्यत्रभवता भवत्या वचनादहम् ।
वनें वत्स्यामि विजने वर्षाणीह चतुर्दश ॥

न नूनं मयि कैकेयि किंचिदाशंससे गुणम् ।
यद्राजानमवोचस्त्वं ममेश्वरतरा सती॥ ,, 19 (23,24)

என்று மாத்திரம் சொல்லுகிருர். ஆகையால் இது விஷயமாக அவளிடத்தில் ஏதேனும் தோஷத்தைக் கல்பிப்பது நியாயமாகாது. அவளுக்கிருந்த புத்ர வாத்ஸல்யத்தினால் இவ்விதம் செய்தாள் என்று வைத்துக் கொண்டாலும், அதுவும் தோஷமாகாது. தசரதர் காலமான பிற்பாடு பரதன் அயோத்திக்கு வந்து ராஜ்யத்தை ஒப்புக்கொள்ள மறுத்ததின் பின்தான் கைகேயிக்கு தான் செய்த பிரயத்னம் வீண் என்பது வ்யக்தமாகத் தெரிந்தது. தவிரவும், ராமரைக் காட்டிலிருந்து திரும்ப அழைத்துக்கொண்டு வந்து பட்டாபிஷேகம் செய்து வைத்தாலொழிய பரதனுக்கு மனஸ் சாந்தி ஏற்படாதென்பதையும் நன்கு உணர்ந்தாள். தான் தசரதரிடம் வரம் கேட்டு அதையனுஸரித்து ராமர் காட்டிற்குப் போயிருப்பதால் அவர் திரும்பி வரவேண்டுமானல், தான் கேட்ட வரம் வேண்டியதில்லையென்று, தன் வாயாலேயே சொன்னுலொழிய ராமர் ஸம்மதிக்கமாட்டாரென்று நினைத்துத் தானும் பரதனுடன் சித்ரகூட பர்வதத்திற்குச் சென்ருள். அங்கு போன பிற்பாடு ஒரு இரவு

சென்று மறுநாள் பரதன் ராமரிடம் அயோத்திக்குத் திரும்பி வரவேண்டுமென்று பிரார்த்தித்துக் கேட்கும் போது முதலாவதாகச் சொல்லுவது என்னவென்ருல் "என் தாயாரை ஸமாதானப்படுத்திவிட்டேன். நீங்கள் இந்த ராஜ்யத்தை எனக்குக் கொடுத்தீர்கள். அதை உங்களுக்கே நான் கொடுக்கிறேன். ஒருவிதத் தொந்தரவும் இல்லாமல் ராஜ்யத்தை ஆளும்" என்பது.

सान्त्विता मामिका माता दत्तं राज्यमिदं मम।

तद्दामि तवैवाहं भुङ्क्ष्व राज्यमकण्टकम्॥ ,, 105 (4)

இவ்விதம் பரதன் சொல்லுவதிலிருந்து ராமர் திரும்பி வரவேண்டுமென்று கைகேயியும் கேட்டுக்கொள்கிருள் என்பது நன்கு தெரிகிறது. அதாவது மத்தியில் வந்த மனோபாவம் மாறி முன்போலவே ராமரிடத்தில் அபிமானத்துடன் இருந்தாள் என்பது தெரிகிறது.

அதற்கு முன்னுல் கைகேயி எவ்வளவு அபிமானத்துடன் இருந்தாள் என்பதற்கு தசரதரையும் ஒரு ஸாக்ஷியாகப் போடலாம். அவர் கைகேயியினிடம் மன்ருடும் போது "தர்மத்தில் சிரேஷ்டனையும் ஸ்ரீமானையுமிருக்கிற ராமர் எனக்கு மூத்த பிள்ளை என்று நீயே என்னிடம் சொல்லியிருக்கிருயே ; அது அப்படியே இருக்கட்டும். நீ இதுவரைக்கும் என்னிடம் உசிதமில்லாமலோ, அப்பிரியமாகவோ ஒன்றும் செய்தது கிடையாது ; ஆகையால் இப்பொழுது நீ சொல்லுவதை நம்பமுடியவில்லை ; நீயே 'ராமர் எனக்கு பரதனுக்கு ஸமானம்' என்று அடிக்கடி சொல்லியிருக்கிருயே. ராமன் பரதனைவிட உனக்கு எப்பொழுதும் அதிகமாக சுச்ருஷை செய்கிருன் ; ராமரை விட பரதனிடத்தில் விசேஷ அபிமானமிருப்பதாக நான் காணவில்லை. இவ்விதம் உனக்கு சுச்ருஷை செய்து

கொண்டிருக்கிற ராமனை விரட்டுவது என்ன காரணத்தினல் இப்பொழுது உனக்கு ருசிக்கிறது?" என்று கேட்கிருர். (அயோ. அத். 12)

பிற்பாடு பரதனுடைய மனேபாவத்தைத் தெரிந்து கொண்டு தனக்கு மத்தியில் ஏற்பட்ட மோஹத்தை விட்டு, முன்னுள்ள ஸ்திதிக்கே வந்துவிட்டாளெனத் தெரிகிறது. இப்பொழுது பரதனுக்கு க்ஷேமம் ஏற்பட வேண்டுமேயானல் தானும் கூடப்போய் ராமனைத் திருப்பி அழைத்துக்கொண்டு வருவது மிகவும் அவசியம் என்பதைத் தெரிந்திருந்தாள். அவள் கூடவந்தது ராமனிடம் வைத்திருந்த அபிமானத்தினலும், பரதனிடம் வைத்திருந்த அபிமானத்தினலும் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனல், அவள் வரம் கேட்டது தசரதரிடம்; வரனைக் கொடுத்தது தசரதர். அதில் ராமருக்காவது பரதனுக்காவது ஸம்பந்தமில்லை. கேட்ட வரனை வேண்டாமென்று கைகேயி சொல்வதற்கும் தசரதர் வேண்டும். கொடுத்தவரான கைகேயியின் இப்பொழுது உள்ள வேண்டுகோளின்படி திருப்பி வாங்கிக்கொள்ளவும் தசரதர் வேண்டும். அவர் வரனைக் கொடுத்து விட்டு, ராமரைக் காட்டிற்கு அனுப்பிவிட்டு, தானும் பரலோகம் போய்விட்டார். இந்த ஸ்திதியில் கொடுத்த வரனை ரத்து செய்வதற்கு கைகேயிக்காவது, பரதனுக்காவது, ராமருக்காவது அதிகாரம் கிடையாது. அப்படியிருக்கையில் ராமரைத் திருப்பி அழைத்துக் கொண்டுவரலாமென்று கைகேயியோ, பரதனே நினைத்திருந்தால் அது பிசகே ஆகும். தசரதர் தான் கொடுத்த வரனை அநுஸரித்து ராமரைக் காட்டிற்கு அனுப்பியிருக்கையில் அதற்கு விரோதமாக அயோத்திக்குத் திரும்பி வரவேண்டுமென்று கைகேயி அபேக்ஷித்தால், பர்த்தாவினுடைய வாக்கியத்தை மீறின தோஷம் அவளுக்கு ஏற்படும்; தசரதர்சொன்ன வாக்கியத்திற்கு பிராமாண்யம் கொடுக்காத தோஷமும் ஏற்படும். ராமரும் கைகேயியினுடைய

இப்பொழுதுள்ள அபிப்ராயத்திற்கு இசைந்து ஊருக்குத் திரும்ப ஸம்மதித்திருந்தாரேயானால், அவருக்கும் பிதாவின் வாக்யத்தை உல்லங்கனம் செய்த தோஷம் ஏற்படும். ஆகையால் கைகேயி ராமரை திருப்பி அழைத்துப் போகவேண்டுமென்று வந்தது, தசரதரிடம் பிரதிக்ஞைக்கு விரோதமாக நடக்கும்படி ஏற்பட்ட தோஷத்தையும், ராமரிடம் பிதிருவாக்ய உல்லங்கனம் என்ற தோஷத்தையும் ஏற்படுத்துவதாகவே ஆகும். இவ்விதம் அவள் உத்தேசித்திருந்தால், தனக்கு பதிவாக்ய உல்லங்கன தோஷத்துடன், தசரதரையும், ராமரையும் ஸத்ய ஸந்தர்கள் இல்லையென்று செய்த தோஷமும் ஏற்படும். ராமர் ஊருக்குவர மறுத்துவிட்டதன் மூலம் கைகேயிக்கு எவ்வித தோஷமும் ஏற்படாமல் காப்பாற்றிக்கொடுத்தார்.

–o–

## அத்யாயம் 12

## உறவினர் தர்ம ரக்ஷணம்

### 1. லக்ஷ்மணன்

லக்ஷ்மணன் ராமருடைய வெளி ப்ராணன் என்றும் இரண்டாவது ஆத்மா என்றும் முன் ஒரு ஸந்தர்ப்பத்தில் சொல்லப்பட்டது. ராமருக்குப் பட்டாபிஷேகம் தீர்மானமானவுடன் லக்ஷ்மணனைப்பார்த்து

“ஹே லக்ஷ்மணா! நீ என்னுடன் சேர்ந்து இந்த பூமியை ஆண்டுவா”, என்பதினால் ராமருக்கு லக்ஷ்மணனிடத்திலிருந்த அபிமானம் நன்கு துலங்குகிறது. இதனால் லக்ஷ்மணனுக்கு ராஜ்யஸுகத்தில் ஆசை இருந்ததாக நினைத்துவிடக்கூடாது பின்னால் ராமர் காட்டிற்கு போகவேண்டியதுதான் என்று தீர்மானமான போது கௌஸல்யைக்குப் பக்கபலமாக இருந்து லக்ஷ்மணன் சில வார்த்தைகள் சொல்லுகிறான்.

“அம்மா! ராமர் ஒரு ஸ்திரீயினுடைய வார்த்தைக் கட்டுப்பட்டு ராஜ்ய லக்ஷ்மியை விட்டு விட்டுக் காட்டிற்குப் போவது எனக்கும் பிடிக்கவில்லை” என்று லக்ஷ்மணன் சொன்னதை வால்மீகி வர்ணிக்கும்போது “துக்கப்பட்டுக் கொண்டிருந்த ராமருடைய தாயாரான கௌஸல்யையைப் பார்த்து மிகவும் தைன்யத்துடன் லக்ஷ்மணன் அந்த ஸமயத்திற்குத் தக்கபடி வார்த்தை சொன்னான்” என்று சொல்லி இருக்கிறபடியால், அவனுக்கு ராமர் காட்டிற்குப் போவதில் இஷ்டமில்லையென்பது மாத்திரம் ஏற்படுமே தவிர, தனக்கு ராஜ்யஸுகம் போய்விட்டதே என்று அவன் நினைத்ததாக எண்ணுவதற்குக் கொஞ்சமேனும் இடமில்லை.

அப்படியே பின்னும் லக்ஷ்மணன் வனவாஸ விஷயமாகக் கோபத்துடன் பேசும்போது ராமர் காட்டிற்குப் போவதிலுள்ள வருத்தத்தினுல் பேசினுனே தவிர, அதனுல் தனக்கு ஏதேனும் நஷ்டமென்று நினைத்ததாக இல்லவே இல்லை. தவிரவும் ராமர் காட்டிற்குப் போவதில் அவர் தாயார் கௌஸல்யை வருத்தப்பட்டாளே தவிர, லக்ஷ்மணன் காட்டிற்குப் போவதில் அவனுடைய தாயார் ஸுமித்ரைக்கு கொஞ்சம் துக்கமிருந்தபோதிலும் அவன் போவது மிகவும் தர்மம் என்பதையே அவள் எடுத்துச்சொல்லுகிருள். அவனுக்கு ராஜ்யஸுகம் போய்விட்டதே என்று கொஞ்சமேனும் அவள் வருத்தப்படவில்லை.

"ராமர் விஷயத்தில் அஜாக்ரதையாக இருந்து விடாதே. அவர் துக்கப்பட்டாலும் ஸந்தோஷமாயிருந்தாலும் அவரே உனக்கு கதி; தமையனுக்குக் கட்டுப்பட்டு இருப்பதே ஸாதுக்களுடைய தர்மம்; இந்த குலத்திற்கும் உசிதமான சாசுவதமான தர்மமும் அதுவே" என்று சொல்லுகிருள். ஆனுலும் புத்ரன் தன்னைவிட்டுப் பிரிந்து காட்டிற்குப் போகிருனே என்பதில் புத்ரவாத்ஸல்யத்தினுல் ஏற்படக்கூடிய துக்கத்துடனேயே அழுது கொண்டு லக்ஷ்மணனை உச்சிமுகர்ந்து பார்த்து அவனுடைய ஹிதத்திலேயே எண்ணம் கொண்டவளாக இவ்விதம் சொல்லுகிருள். "ராமரை தசரதராக பாவித்துக் கொள் ; ஸீதையை நாளுக பாவித்துக்கொள் ; காட்டை அயோத்தியாக பாவித்துக்கொள்; ஸௌக்யமாகப் போய்விட்டுவா" என்கிருள்.

रामे प्रमादं माकार्षीः पुत्र भ्रातरि गच्छति ॥

व्यसनी वा समृद्धो वा गतिरेष तवानघ ।
एष लोके सतां धर्मो यज्ज्येष्ठवशगो भवेत् ॥

इदं हि वृत्तमुचितं कुलस्यास्य सनातनम्। அயோ. 40 (5-7)

तं वन्दमानं रुदती माता सौमित्रिमब्रवीत्।
हितकामा महाबाहुं मूर्ध्न्युपाघ्राय लक्ष्मणम्। „ „ (4)

रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम्॥
अयोध्यां अटवीं विद्धि गच्छ तात यथासुखम्॥ „ „ (9)

இவ்விதம் லக்ஷ்மணனுடைய மனோபாவமானது இருந்தது என்கிற விஷயம் ராமருக்கு நன்கு தெரியும். அப்படியிருந்தும் பிற்பாடு சித்ரகூடம் போனபிறகு ராமரைத் தேடிக்கொண்டு பரதன் வரும்போது அவனுடைய த்வஜத்தையும் ஸேனையையும் பார்த்து லக்ஷ்மணனுக்கு வெகு கோபம் வந்து பரதனையே கொன்றுவிடுவதாகச் சொல்லும் ஸமயத்தில் அவனை ஸமாதானம் செய்யும்போது ராமர் “தர்மம், அர்த்தம், காமம், பூமி இவைகள் நான் ஆசைப்படுவது உங்களுக்காகத்தான் என்று பிரதிக்ஞை செய்கிறேன்; ஸஹோதரர்களுடன் சேர்ந்து இருப்பதற்காகவும் ஸஹோதரர்களுடைய ஸுகத்தை உத்தேசித்துமே எனக்கு ராஜ்யத்தில் விருப்பம். இது என்னுடைய ஆயுதத்தின் பேரில் ஆணையாகச் சொல்லுகிறேன். பந்துக்களுக்கோ, ஸ்நேகிதர்களுக்கோ கெடுதல் செய்துகொண்டு ஒரு திரவ்யம் கிடைக்குமேயானால் நான் அதை கிரஹிக்கமாட்டேன்; அது விஷம் கலந்த ஆஹாரம் போல் ஆகும்; நீ இவ்விதம் சொன்னது உனக்கு ராஜ்யம் போய்விட்டதே என்று கோபத்துடன் சொல்லி இருந்தால், பரதன் வரட்டும், அவனிடம் ராஜ்யத்தை இவனுக்குக்கொடு என்று நான் சொல்லிவிடுகிறேன்; நான் அப்படிச் சொன்னவுடன் பரதன் உடனே அப்படியே ஆகட்டுமென்று சொல்லுவான்” என்று பரதனுடைய உத்தம ஸ்வபாவத்தை எடுத்துச்சொல்லு-

கிறார். தவிரவும் "அவன் நமக்கு எவ்வித அஹிதத்தையும் ஒருநாளும் மனஸினால்கூட நினைக்கமாட்டான்; இதற்கு முன்னால் உனக்கு எப்பொழுதாவது பரதன் ஏதாவது அப்ரியமான காரியம் செய்திருக்கிறானா? பரதனிடம் உனக்கு இவ்விதம் ஸந்தேஹம் வரும்படியாக பயத்திற்குக்காரணம் என்ன? பரதன் விஷயமாக நீ ஒருவிதமான நிஷ்டுர வாக்யமோ அப்ரியமான வார்த்தையோ சொல்லக்கூடாது. அவனைப்பற்றி ஏதேனும் அப்ரியமான வார்த்தை சொன்னால் அவ்வார்த்தை என்னைப்பார்த்தே அப்ரியமாகச் சொன்னதாக ஆகும்" என்கிறார்.

இவ்விதம் பரதனுடைய உத்தம ஸ்வபாவத்தை ராமர் எடுத்துச் சொன்னதின் பேரில் லக்ஷ்மணன் லஜ்ஜையினால் தலைகுனிந்தான்.

பஞ்சவடியில் இருக்கும்போது ஒருநாள் காலையில் கோதாவரியில் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பும்போது லக்ஷ்மணன் "உங்களிடமுள்ள பக்தியினால் ஊரில் ராஜ்யத்தையும், கௌரவத்தையும், பலவிதமான போகங்களையும் விட்டுவிட்டு ஆஹார நியமத்துடன் தபஸ் செய்துகொண்டு குளிர்ந்த தரையில் படுத்துக்கொண்டு இருந்துவரும் பரதன் இதே ஸமயத்தில் பிரஜைகளுடன் கூட ஸ்நானம் செய்வதற்காக ஸரயூ நதியில் இறங்குவான். தங்கள் ஸஹோதரராகிய மஹாத்மா பரதன் காட்டிலிருக்கிற தங்களை அனுஸரித்து தபஸ் செய்து ஸ்வர்க்கத்தை ஜயித்திருக்கிறான். எவனுக்கு இவ்வளவு ஸாதுவான பரதன் புத்ரனோ, எவனுக்கு தசரத மஹாராஜன் பர்த்தாவோ, அந்தக் கைகேயிக்கு அவ்வளவு க்ரூரமான எண்ணம் எப்படி வந்தது?" என்று சொன்னான். இதைக் கேட்டவுடன் ராமர் கைகேயியைப் பற்றிச் சொன்ன வார்த்தையை ஸஹிக்காமல் "நீ நம் தாயாரை ஒருவிதத்திலும் நிந்திக்கக்கூடாது, பரதனுடைய மேன்மையைப் பற்றிச் சொல்லிக் கொண்டு இருந்தாயே, அதையே சொல்லு" என்று கண்டித்து விடுகிறார்.

परिवादं जनन्यास्तं असहन् राघवोऽब्रवीत् ॥

न तेऽम्बा मध्यमा तात गर्हितव्या कथंचन ।

तामेवेक्ष्वाकुनाथस्य भरतस्य कथां कुरु ॥ ,, 16 (36,37)

ராமர் மாரீசனை விரட்டிக் கொண்டு புறப்படும் ஸமயத்தில் லக்ஷ்மணனைப் பார்த்து "நீ இங்கே ஆசிரமத்தில் ஸீதையோடு கூட வெகு ஜாக்ரதையாக இருக்க வேண்டும்; ஸீதையை ரக்ஷித்துக் கொண்டு வெகு ஜாக்ரதையாக இருந்துவா; பிரதி க்ஷணமும் நாலாபக்கங்களிலிருந்தும் ஆபத்து வரக்கூடியது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு இருந்துவா" என்று கட்டளையிட்டு விட்டுப் புறப்படுகிறார்.

अप्रमत्तेन ते भाव्यमाश्रमस्थेन सीतया ॥ அர. 43 (48)

भवाप्रमत्तः परिगृह्य मैथिलीं

प्रतिक्रियां सर्वत एव शङ्किनः ॥ (50)

இவ்விதம் வ்யக்தமாக ராமர் சொல்லி இருந்தும்கூட ஸீதையினுடைய பருஷமான வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மணன் கோபமடைந்து அவளைவிட்டு ராமரைத் தேடிக் கொண்டு போகிறான். அவன் கோபித்துக் கொள்ளுவதற்குப் போதுமான காரணங்கள் இருப்பதாக லக்ஷ்மணன் நினைத்தாலும், நாம் நினைத்தாலும், ராமருடைய வாக்யத்தை லக்ஷ்மணன் மீறினான் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால் ராமர் லக்ஷ்மணனைப் பார்த்து "ஹே லக்ஷ்மணா! நீ செய்த காரியம் மிகவும் நிந்திக்கத் தக்கது; நீ அவளை விட்டு வந்தது பிசகு" என்கிறார்.

अहो लक्ष्मण गर्ह्यं ते यस्त्वं विहाय ताम् ॥ „ 57 (18)

லக்ஷ்மணன் ஸீதையினுடைய க்ரூரமான வாக்யத்தினல் கோபம் வந்து அங்கிருந்து புறப்பட்டதாகச் சொன்னதைக் கேட்டும் ராமர் மறுபடியும் "கோபத்திற்கு வசமாகி என்னுடைய கட்டளையை மீறினது தவறுதலேயாகும்" என்று வற்புறுத்திச் சொல்லுகிறார். மேலும் ஸீதையினிடத்தில் லக்ஷ்மணன் சொல்லும் போது "ராமர் ஒரு நாளும் ஜயிக்கப்படமாட்டார். தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று ஒரு நாளும் சொல்ல மாட்டார்" என்று சொன்னதை ராமரிடம் லக்ஷ்மணனே சொல்லுகிறான். "அவ்விதம் ராக்ஷஸர்களை எதிர்ப்பதில் நான் சக்தியுள்ளவனென்று தெரிந்திருந்தும் நீ புறப்பட்டு வந்தது தவறுதலே ஆகும்" என்று ராமர் சொல்லுகிறார். இதிலிருந்து ராமருக்கு வாஸ்தவமாக ஏதேனும் ஆபத்து ஏற்பட்டிருக்குமென்று லக்ஷ்மணன் நம்பி வந்திருந்தானேயானல் ஒரு விதமாக ஸமாதானம் செய்துகொள்ள இடமிருக்கலாம். ராமருக்கு எவ்விதமான கெடுதலும் ஏற்படாது என்ற நிச்சய புத்தி இருக்கும்போது லக்ஷ்மணன் புறப்பட்டு வந்தது கோபத்தினல்தான் என்பது நன்கு தெரிகிறது. கோபத்திற்கு வசமாகி தமயனுருடைய வாக்யத்தை உல்லங்கனம் செய்தது தவறுதல் என்பதை ராமர் எடுத்துக் காட்டுகிறார்.

जानन्नपि समर्थं मां रक्षसां विनिवारणे ।
अनेन क्रोधवाक्येन मैथिल्या निःसृतो भवान् ॥

न हि ते परितुष्यामि त्यक्त्वा यदसि मैथिलीम् ।
क्रुद्धायाः परुषं वाक्यं श्रुत्वा यत् त्वमिहागतः ॥

सर्वथा ह्यपनीतं ते सीतया यत् प्रचोदितः ।
क्रोधस्य वशपापन्नो नाकरोः शासनं मम ॥ ,, 59 (22-24)

யுத்தமத்தியில் இந்திரஜித் மாயையை உபயோகித்து ரதத்தோடு ஆகாசத்தில் மறைந்து நின்று வானர ஸைன்யத்திலுள்ள பிரமுகர்களையெல்லாம் அடித்து விட்டு ராமர் லக்ஷ்மணர் பேரிலும் ஏராளமாக பாணம் போட்டபோது லக்ஷ்மணனுக்குத் தாங்கமுடியாத கோபம் வந்தது. அந்த ஸமயத்தில் ஜகத்தில் ஒரு ராக்ஷஸனும்கூட இல்லாமல் செய்துவிடுவதாக லக்ஷ்மணன் உத்தேசித்து பிரஹ்மாஸ்திரத்தைப் பிரயோகிக்க நினைத்தான். அந்த ஸமயம் ராமர் அவனுடைய வேகத்தைத் தடுத்து "ஒருவன் அபராதம் செய்ததற்காக பூமியிலுள்ள எல்லா ராக்ஷஸர்களையும் கொல்லுவது நியாயமில்லை. தவிரவும் யுத்தத்தில் நம்முடன் சண்டை செய்யாதவனையும், ஒளிந்திருப்பவனையும், அஞ்ஜலிபந்தம் செய்தவனையும், சரணமடைந்தவனையும், ஓடுபவனையும், கவனமில்லாமலிருப்பவனையும், கொல்லுவது நியாயமாகாது. (இப்பொழுது இந்திரஜித் ஒளிந்திருப்பவனேயாவான்) ஆகையால் நாமிருவரும் இவனையே கொல்லுவதில் பிரயத்னம் செய்வோம்" என்று ராமர் சொல்கிறார். இதிலிருந்து எந்த எந்த ஸமயத்தில் சத்ருவைக்கூடக் கொல்லக்கூடாது என்ற தர்மத்தை ராமர் வெளியிட்டிருக்கிறார். அத்துடன் அபராதியான ஒருவனை நிமித்தமாக வைத்துக்கொண்டு நிரபராதிகளைக் கொல்லுவது நியாயமில்லையென்றும் எடுத்துக்காட்டுகிறார். தவிரவும் ஸாமான்ய ஜனங்களிடத்தில் பிரஹ்மாஸ்திரத்தை உபயோகப்படுத்துவது நியாயமில்லை யென்பதையும் காட்டுகிறார். இவ்விதமாக பலவித நியாயங்களை எடுத்துக்காட்டி கோபத்தினால் அதர்மம் செய்துவிட ஸித்தமாயிருந்த லக்ஷ்மணனைத் தடுத்து அவனுக்கு தோஷமேற்படாமல் ரக்ஷித்துக் கொடுக்கிறார்.

लक्ष्मणस्तु सुसंक्रुद्धो भ्रातरं वाक्यमब्रवीत् ।
ब्राह्ममस्त्रं प्रयोक्ष्यामि वधार्थं सर्वरक्षसाम् ।

तमुवाच ततो रामो लक्ष्मणं शुभलक्षणम् ।
नैकस्य हेतो रक्षांसि पृथिव्यां हन्तुमर्हसि ॥

अयुध्यमानं प्रच्छन्नं प्राञ्जलिं शरणागतम् ।
पलायन्तं प्रमत्तं वा न त्वं हन्तुमिहार्हसि ॥

अस्यैव तु वधे यत्नं करिष्यावो महाबल । யுத்த. 80 (37-40)

ரகூட பாவதத்தில் லக்ஷ்மணனிடம் “பரதன் வந்தால் ராஜ்பத்தை உனக்கே கொடுக்கச் சொல்லுகிறேன்” என்றும் அப்படியே “என்னுடன் சேர்ந்து ராஜ போகங்களை அனுபவி” என்றும் ராமர் சொன்னார் என்பது முன் சொல்லப்பட்டது. பின்னால் ராவண வதமாகி, அயோத்திக்குத் திரும்பி வந்து ராமருக்கு பட்டாபிஷேகமாகி, ஸுக்ரீவன் விபீஷணன் முதலானவர்கள் தங்கள் தங்கள் ஊருக்குத் திரும்பிப்போன பிற்பாடு, ராமர் லக்ஷ்மணனைப் பார்த்து “நீ என்னுடன் சேர்ந்து இந்த ராஜ்யத்தை ஆண்டுகொண்டு எனக்கு ஸமானமாக இருந்து கொண்டு யுவ ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளு” என்று சொல்லுகிறார். பரதன் ஏற்கனவே பதினான்கு வருஷங்கள் ராஜ்ய நிர்வாஹம் செய்திருந்ததுடன், பரதனே ராமருக்கு அடுத்த தம்பியான முறையில் யுவ ராஜ்யத்திற்கு அர்ஹனாயிருக்கும்போது, லக்ஷ்மணனைப் பார்த்து யுவராஜ்ய பதவியை ஏற்றுக்கொள் என்று சொன்னது நியாயமாகுமா என்று ஸந்தேஹம் தோன்றலாம். சித்ரகூட பர்வதத்தில், தான் சொன்னது வாஸ்தவம்தான் என்பதை எடுத்துக் காட்டுவதற்கும், பரதனுக்கு ராஜ்யத்தில் ஆசையிருக்கலாம் என்று லக்ஷ்மணன்

நினைத்தது பிசகு என்பதை நன்கு எடுத்துக்காட்டுவதற்கும், பரதன் விஷயமாய் லக்ஷ்மணன் கோபம் கொண்டது கொஞ்சம்கூட நியாயமில்லையென்பதை எடுத்துக் காட்டுவதற்குமே, இப்பொழுது பரதனிருக்கும்போது லக்ஷ்மணனுக்கு யுவராஜ்யம் கொடுப்பதாக ராமர் சொன்னார். ஆனாலும் லக்ஷ்மணனுக்குத் தனக்கு ராஜ்யம் வேண்டும் என்ற எண்ணம் ஒருநாளும் இல்லாததுடன், அவனுக்கு வந்த கோபம் ராமருக்கு ராஜ்யமில்லாமல் போனதினால்தான் ஏற்பட்டது என்பதினாலும், அவன் தன்னை எப்பொழுதுமே ராமருடைய தாஸனாகவே பாவித்து வந்தபடியினாலும், ராமர் எவ்வளவு சொல்லியும் யுவராஜ்யத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டான். அதன் பேரில் பரதனை யுவராஜனாக ராமர் ஏற்படுத்தினார்.

आतिष्ठ धर्मज्ञ मया सहेमां गां पूर्वराजाध्युषितां बलेन ।
तुल्यं मया त्वं पितृभिर्धृता या यौवराज्ये धुरमुद्वहस्व ॥

सर्वात्मना पर्यनुनीयमानो यदा न सौमित्रिरुपैति योगम् ।
नियुज्यमानोऽपि च यौवराज्ये ततोऽभ्यषिञ्चद् भरतं महात्मा ॥

யுத்த. 131 (92,93)

ராஜ்யம் கிடைத்து ராமர் பரிபாலனம் செய்யும் ஸமயம் அவருக்கு லக்ஷ்மணன் எப்பொழுதும்போல் கைங்கர்யம் செய்துகொண்டே இருந்துவந்தான் என்பதை வால்மீகி குறிப்பிடுகிறார்.

लक्ष्मणानुचरो रामः पृथिवीमन्वपालयत् (96)

இவ்விதமாக ராமரிடம் லக்ஷ்மணன் வைத்திருந்த விசேஷ அபிமானத்தினால் மற்றவர்களிடம் கோபித்துக் கொள்ளும்படி அவனுக்கு ஸந்தர்ப்பம் ஏற்படும்போ

தெல்லாம் ராமர் அவனை ஸாத்விக முறையில் கண்டித்து அவனுக்கு தோஷம் ஏற்படாமல் காப்பாற்றி வந்திருக்

2. பரதன்

வால்மீகி இயற்றிய ஸ்ரீமத்ராமாயணம் என்ற மஹா காவ்யத்தில் உபநாயகனாக விளங்குபவன் பரதன். ராமர் பித்ருவாக்ய பரிபாலனத்தை உத்தேசித்துக் காட்டிற்குப் போனபோதிலும் அவருடன் சுச்ரூஷைக்கு ஸீதையும், லக்ஷ்மணனும் இருந்து வந்தார்கள். அவர்கள் காட்டில் இருந்து வந்த காலத்தில் பெரும்பாகம் மஹரிஷிக ளுடைய ஆசிரமங்களுக்குச் சென்று அவர்களுடைய விசேஷமான ஆதித்யத்தையும், வெகுமானத்தையும் பெற்றுவந்தார்கள். இந்த ஸ்திதியில் ராவணன் ஸீதாபஹரணம் செய்யும் வரையில் ராமருக்கு எவ்வித அஸௌகர்யமும் இருந்ததாக எண்ணுவதற்கு இல்லை. பரதன் ஜடாதாரியாய் மரவுரி தரித்து ராஜ்யபோகங் களைவிட்டு அயோத்திக்கு வெளியில் இருந்து கொண்டு வானப்ரஸ்ததர்மத்தை அனுஷ்டிக்க எவ்வித அவசியமும் கிடையாது. அப்படியிருந்தும் அந்த நியமங்களோடுகூட, ராமருக்கு பிரதிநிதியாக அவருடைய பாதுகைகளை ஸேவித்துக்கொண்டு ராஜ்ய நிர்வாஹப் பொறுப்பை யும் நன்கு வஹித்து வந்தான் என்றால் அவனுடைய தர்மநிஷ்டை, ராமருடைய நிஷ்டைக்குமேல் போன தாகவே நினைக்கும்படி தோன்றுகிறது. அவனிடத்தில் ஒரு தோஷம் இருந்து அதை ராமர் திருத்தினார் என்றால் நம்பக்கூடியதாகத் தோன்றாது.

பரதன் பிறக்கும்போதே அவனைப்பற்றி வால்மீகி சொல்லும்போது ஸத்ய பராக்ரமன்; எல்லா குணங்க ளுடனும் கூடினவன்; மிகவும் தெளிவான புத்தியுடன் கூடினவன் என்று வால்மீகி வர்ணிக்கிறார்.

भरतो नाम कैकेय्यां जज्ञे सत्यपराक्रमः ॥

साक्षाद्विष्णोश्चतुर्भागः सर्वैः समुदितो गुणैः ।

पुष्ये जातस्तु भरतो मीनलग्ने प्रसन्नधीः ॥ *பால.* 18 (12-13)

*அவனைப்பற்றி ராமர் எவ்வளவு மேன்மையாக நினைத்துக்கொண்டிருந்தார் என்பது முன்னாலேயே கொஞ்சம் காட்டப்பட்டிருக்கிறது. தசரதர் கைகேயியிடம் சொல்லும்போது "பரதன் ராஜ்யத்தில் இருக்க வேண்டும், ராமர் காட்டிற்குப் போகவேண்டும் என்று விபரீதமாக நீ எண்ணுகிறாய். உன் பர்த்தாவிற்கு பிரியம் செய்ய வேண்டுமென்று நினைத்தாலும், உலகத்திற்கு பிரியம் செய்யவேண்டுமென்று நினைத்தாலும், பரதனுக்கு பிரியம் செய்ய வேண்டுமென்று நினைத்தாலும், அந்த எண்ணத்தை விட்டுவிடு; ராமன் இல்லாமல் ஒரு நாளும் பரதன் ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளமாட்டான்; என்னுடைய அபிப்ராயத்தில் பரதன் ராமனைவிட தர்ம விஷயத்தில் உறுதியுள்ளவன்." என்கிறார்.*

राष्ट्रे भरतमासीनं वृणीषे राघवं वने ।

विरमैतेन भावेन त्वमेतेनानृतेन वा ॥

यदि भर्तुः प्रियं कार्यं लोकस्य भरतस्य च ।

न कथञ्चिदृते रामाद् भरतो राज्यमावसेत् ॥

रामादपि हि तं मन्ये धर्मतो बलवत्तरम् । *அயோ.* 12 (59-62)

*வஸிஷ்டரும் பரதனைப்பற்றி "ராமர் காட்டிற்குப் போய் அங்கு வஸித்தால் அண்ணாவை யனுஸரித்து சத்ருக்னனோடு பரதனும் மரவுரி தரித்துக் காட்டிலேயே இருப்பான்; நீ பூமியிலிருந்து ஆகாசத்தில் பறந்தாலும் கூட, பித்ருவம்ச வரலாறைத் தெரிந்த பரதன் வேறு*

விதமாகச் செய்யமாட்டான். நீ பிள்ளை என்ற ஆசையினால் அவனுக்கு வாஸ்தவமாக அப்ரியத்தையே செய்திருக்கிறாய்" என்று கைகேயியிடம் சொல்லுகிறார்.

भरतश्च सशत्रुघ्नः चीरवासा वनेचरः ।
वने वसन्तं काकुत्स्थं अनुवत्स्यति पूर्वजम् ॥ ,, 37 (29)

यद्यपि त्वं क्षितितलात् गगनं चोत्पतिष्यसि ।
पितृवंशचरित्रज्ञः सोऽन्यथा न करिष्यति ॥ ,, ,, (31)

तत् त्वया पुत्रगर्धिन्या पुत्रस्य कृतमप्रियम् । ,, ,, (32)

பரத்வாஜ மஹரிஷி பரதனைப் பார்த்தபோது ராமனுக்கு ஏதேனும் கெடுதல் செய்வதற்காக வருகிறாயா என்று கேட்டபோதிலும், பரதன் தன்னுடைய வாஸ்தவமான மனோபாவத்தைத் தெரியப்படுத்தினவுடன் அம்மஹரிஷி "உன்னுடைய மனஸில் இருப்பது எனக்குத் தெரியும்; அதை உறுதிப்படுத்தவே கேட்டேன்; உன்னுடைய கீர்த்தியானது மிகவும் விருத்தியடையவேண்டுமென்றே அவ்விதம் கேட்டேன்" என்று சொல்லுகிறார்.

जाने चैतन्मनःस्थं ते दृढीकरणमस्त्विति ।
अपृच्छं त्वां तथाऽत्यर्थं कीर्तिं समभिवर्धयन् ॥ ,, 90 (21)

இவ்விதம் பெரியோர்களெல்லாம் பரதனுடைய அதிபரிசுத்தமான மனோபாவத்தை எடுத்துச் சொல்லி இருப்பதால், அவனிடத்தில் எவ்வித தோஷமும் கண்டுபிடிப்பது அஸாத்யமே ஆகும். பரதனுடைய மஹிமையைப்பற்றி விஸ்தரிப்பதானாலும், பரதனுக்கும் ராமனுக்கும் சித்ர கூடத்தில் நடந்த ஸம்பாஷணையை விவரமாக எடுத்துச் சொல்லுவதானாலும், வெகு விரிவாக ஆகுமாதலினால் இங்கு அந்த அம்சங்களைப்பற்றிச்

சொல்ல உத்தேசமில்லை. பரதன் எவ்வளவு தர்மிஷ்டனாக இருந்தபோதிலும் ராமரிடம் வைத்திருந்த விசேஷமான அபிமானத்தினால் தன்னுடைய தாயாரையும் அவளுடைய வார்த்தையைக் கேட்டதற்காகத் தகப்பனாரையும் நிந்திக்க ஆரம்பித்தான். அது அவனுடைய உத்தம ஸ்வபாவத்திற்குக் கொஞ்சமேனும் பொருத்தமில்லாததினால் ராமர் அவனைக் கொஞ்சம் கண்டிக்கும்படி ஏற்பட்டது. "உன்னிடத்தில் கொஞ்சமேனும் தோஷம் கிடையாது; உன் தாயாரை நீ பால்ய ஸ்வபாவத்தினால் நிந்திப்பது நியாயமில்லை" என்று சொல்லுகிறார்.

न दोषं त्वयि पश्यामि सूक्ष्ममप्यरिसूदन।
न चापि जननीं बाल्यात् त्वं विगर्हितुमर्हसि ॥ 104 (17)

பிறகு பரதன் தன் தாயார் தகப்பனார்களை அதிகமாக நிந்திப்பதை நிறுத்திக் கொண்டு ராமர் ஊருக்குத்திரும்பி வரவேண்டியதற்குப் பலவித நியாயங்களைச் சொல்லுகிறான். அதற்குத் தகுந்தபடி ராமர் ஸமாதானம் சொல்லிக்கொண்டு வருகையில் வேறுவிதமாக வாதம் செய்வதற்கு வழி இல்லாமல், அவர் முன்னால் குசத்தைப் பரப்பிக்கொண்டு அவர் ஊருக்குத் திரும்பிவர ஸம்மதிக்கும்வரை ப்ராயோபவேசம் செய்து அவருடைய பர்ண சாலைக்கு முன்னால் படுத்துக் கொண்டு விடுகிறது என்ற தீர்மானத்துடன் குசங்களைப் பரப்பும்படி ஸுமந்த்ரரைப் பார்த்துச் சொல்லுகிறான். ஸுமந்த்ரரும் என்ன செய்வது என்று தெரியாமல் ராமரை நிமிர்ந்து பார்க்கிறார். ராமருடைய அனுமதி இல்லாமல் ஸுமந்த்ரர் குசங்களைப் பரப்பமாட்டாரென்று தெரிந்தபடியால் தானே குசங்களைப் பரப்பிக்கொண்டு பூமியில் உட்கார்ந்துவிடுகிறான். அப்பொழுதும் ராமர் தன்னுடைய நிலையிலிருந்து கொஞ்சமேனும் அசைந்து கொடுக்காமல் அவனை எழுந்திருக்கும்படி சொல்லுகிறார். ப்ராயோபவேசம் என்பது பலமில்லாத பிராஹ்மணர்

களுக்கே ஏற்பட்டதென்றும் ஒருவன் அதர்மத்திலிறங்கினால் அதைச் செய்யாமல் இருப்பதற்காக பிராயோபவேசம் செய்யலாமே தவிர தர்மத்தை அனுஷ்டிப்பவர்களை அனுஷ்டிக்காமல் செய்வதற்கு ப்ராயோபவேசம் கொஞ்சமேனும் நியாயமில்லை என்பதையும் ராமர் எடுத்துக்காட்டுகிறார்.

स तु राममवेक्षन्तं सुमन्त्रं प्रेक्ष्य दुर्मनाः ।
कुशोत्तरमुपस्थाप्य भूमावेवास्थितः स्वयम् ॥
किं मां भरत कुर्वाणं तात प्रत्युपवेक्ष्यसि ॥
ब्राह्मणो ह्येकपार्श्वेन नरान् रोद्धुमिहार्हति ।
न तु मूर्धाभिषिक्तानां विधिः प्रत्युपवेशने ॥
उत्तिष्ठ नरशार्दूल हित्वैतद्दारुणं व्रतम् । அயோ. 111 (15-18)

இந்த ஹடாத்கார வழிக்கும் ராமர் இடம் கொடுக்காததினால் பரதன் எழுந்திருக்காமலே, கூட வந்திருக்கும் ஜனங்களைப் பார்த்து "நீங்கள் ஏன் அண்ணாவிற்குச் சொல்லக்கூடாது?" என்று கேட்கிறான். அதற்கு அவர்கள் ராமர் சொல்லுவது நியாயமாயிருப்பதால் நாங்கள் பதில் சொல்ல முடியவில்லை என்று சொல்லுகிறார்கள். அதன் பேரில் ப்ராயோபவேச ஸங்கல்பத்தை பரதன் விட்டு விடும்படி ஏற்பட்டது. தான் ஒரு விதமாக ஸங்கல்பம் செய்து அதை விட்டுவிடும்படி ஏற்பட்டதால் ஸங்கல்பபரித்யாகம் என்கிற, அதாவது பொய் சொன்னதென்கிற, தோஷம் பரதனுக்கு ஏற்படும். அந்த தோஷம் பரதனுக்கு வராமல் இருக்கவேண்டுமேயானால் யாரை உத்தேசித்து ப்ராயோபவேசம் செய்ய ஆரம்பித்தானோ அவரைத் தொட்டு ஜலத்தையும் தொட்டால் அந்த தோஷம் நிவர்த்தியாகுமென்று ராமர் சொன்னதையனுஸரித்து அப்படியே பரதன் செய்கிறான்.

उत्तिष्ठ त्वं महाबाहो मां च स्पृश तथोदकम् ॥
अथोत्थाय जलं स्पृष्ट्वा भरतो वाक्यमब्रवीत् । ,, ,, (23,24)

பரதன் ராமரிடம் வந்தவுடனேயே 'सान्त्विता मामिका माता' (105-4) என்று தாயாரை ஸமாதானப்படுத்தி விட்டதாகச் சொன்ன போதிலும் அவனுக்குத் தாயாரிடமிருந்த கோபம் அடங்கவில்லை என்றே தெரிந்தபடியால் கடைசியாக வஸிஷ்டருடைய வார்த்தையையனுஸரித்து ராமர் பாதுகைகளை பரதனிடம் கொடுத்து அனுப்பும் போதும் "தாயார் கைகேயியை ரக்ஷித்துவா; அவளிடத்தில் கோபம் வைத்துக் கொள்ளாதே; இதை என் பேரிலும் ஸீதையின் பேரிலும் ஆணையாக வைத்துக் கொள்ளு" என்று சொல்லி அனுப்புகிறார்.

मातरं रक्ष कैकेयीं मा रोषं कुरु तां प्रति ॥
त्वया च सीतया चैव शप्तोऽसि रघुसत्तम । ,, 112 (27,28)

இவ்விதம் கடைசி ஆக்ஞையாக ராமர் செய்த கட்டளையை சிரஸால் வஹித்து பரதன் தாயாரை மிக மரியாதையாக ரக்ஷித்து வந்தான். ராவணவதமாகி ராமர் ஊருக்குத் திரும்பி வந்தவுடன் ராஜ்யத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்பதற்கு முன்னால்,

पूजिता मामिका माता दत्तं राज्यमिदं मम ।
तद्ददामि पुनस्तुभ्यं यथा त्वमददा मम ॥ யுத்த. 131 (2)

"நான் என் தாயாரைப் பூஜித்து வந்திருக்கிறேன்; நீங்கள் எனக்குக் கொடுத்த ராஜ்யத்தை உங்களுக்குத்

திருப்பிக் கொடுக்கிறேன்" என்று சொல்லுகிறான். இதி லிருந்து தாயாரைப் பூஜிக்காமலிருந்தால் ராமர் ராஜ் யத்தை மறுபடியும் ஒப்புக்கொள்ளமாட்டார் என்ற பயம் பரதனுக்கு இருந்ததாக நன்கு தெரிகிறது. இவ் விதமாக உத்தம புருஷனாயிருந்த பரதனுக்கும் ராமரிடத் திலிருந்த ப்ரீதி விசேஷத்தினால் கொஞ்சம் தர்மத்தி லிருந்து நழுவக்கூடிய ஸந்தர்ப்பங்கள் ஏற்படக்கூடிய போதெல்லாம் அவ்விதம் நழுவவிடாமல் ராமர் காப் பாற்றி வந்திருக்கிறார் என்பது நன்கு தெரிகிறது.

### 3. சத்ருக்னன்

லக்ஷ்மணன் ராமரிடத்தில் எவ்வளவு ஈடுபட்டிருந் தானே அவ்வளவு, சத்ருக்னன் பரதனிடம் ஈடுபட்டிருந்த தாக ஆரம்பத்திலேயே வால்மீகி சொல்லுகிறார். கேகய ராஜாவின் புத்ரன் தன்னுடைய மருமானை பரதனைத் தன்னுடன் அழைத்துப்போக வந்ததாகயிருந்தும் பரதன் கேகய ராஜ்யத்திற்குப் போகும்போது சத்ருக் னனையும் அழைத்துக்கொண்டே போனதாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இதிலிருந்தும் அவ்விருவர்களுக்குள் உள்ள அன்யோன்யபாவம் நன்கு தெரியவருகிறது. கேகய ராஜ்யத்திலிருந்து திரும்பி வந்தபிற்பாடு தகப்ப னார் காலமான விவரம் தெரிந்து வஸிஷ்டருடைய ஆக் ஞைக்குக் கட்டுப்பட்டு அபரக்ரியைகள் எல்லாம் செய்த பிற்பாடு அரண்மனைக்குத் திரும்பி வருகிறார்கள். அப் பொழுது மிகவும் சோகத்தினால் வருந்துகிற பரதனைப் பார்த்து சத்ருக்னன் சொல்லும்போது "லக்ஷ்மணன் என்று ஒருவன் இருக்கிறானே! அவன் பலவானும்! வீர்யத்தோடு கூடினவனும்! அவன் பிதாவை நிக்ரஹம் செய்து ஏன் ராமரை விடுவிக்கவில்லை? நீதி அநீதி இவை களை நன்கு ஆலோசித்து, ஒரு ஸ்திரீயின் வசமாயிருந்து தவறுதலான வழியில் போகிற ராஜாவை முதலிலேயே நிக்ரஹம் செய்ய வேண்டாமா?"

बलवान् वीर्यसंपन्नो लक्ष्मणो नाम योऽप्यसौ ।
किं न मोचयते रामं कृत्वाऽपि पितृनिग्रहम् ॥

पूर्वमेव हि निग्राह्यः समवेक्ष्य नयानयौ ॥
उत्पथं यः समारूढो नार्या राजा वशं गतः ॥ அயோ. 78 (3,4)

என்று கேட்கிறான். லக்ஷ்மணன் இவ்விதமே செய்வதாகச் சொல்லி, ராமர் அதற்கு இடம் கொடுக்காத விஷயம் சத்ருக்னனுக்குத் தெரியாது. ராமருக்குக் கிடைத்த ராஜ்யம் இல்லாமல் போய்விட்டதே என்பதில் லக்ஷ்மணனுக்குக் கோபம் வந்தது. லக்ஷ்மணன் ராமரிடத்தில் வைத்திருந்த ப்ரீதியைப் போலவே சத்ருக்னனுக்கு பரதனிடத்தில் ப்ரீதி இருக்கையில், பரதனுக்கு அகஸ்மாத்தாகக் கிடைத்த ராஜ்யத்தை பரதன் வேண்டாமென்று சொல்லுகிறானே என்று சத்ருக்னனுக்கு வருத்தம் ஏற்படவேண்டியதல்லவா நியாயம் என்று தோன்றலாம். சத்ருக்னனைப்பற்றி வால்மீகி சொல்லும்போது அநேக இடங்களில் 'நித்யசத்ருக்ன:' (नित्यशत्रुघ्न) அதாவது எப்பொழுதும் கூடவே இருந்து சத்ருவாக இருந்துவரும் காமக்ரோதாதிகளை ஜயித்தவன் என்று வர்ணித்திருக்கிறபடியால் அவனுக்கு தர்ம நிஷ்டையிலிருந்து தவறக்கூடிய ஸ்வபாவமே கிடையாது என்பது ஸ்பஷ்டமாகிறது. ஆகையினால் ராமருக்கு ஏற்பட்ட ராஜ்யம் பரதனுக்கு அகஸ்மாத்தாகக் கிடைத்தபோதிலும் அதை பரதன் ஒப்புக்கொள்ளுவது நியாயமில்லையென்றே சத்ருக்னன் நினைத்தானென்பது நன்கு தெரிகிறது.

இவ்விதம் காமக்ரோதாதிகளை ஜயித்திருந்த சத்ருக்னனுக்குக்கூட, இவ்வளவு துக்கத்திற்கும் காரணமாயிருந்த கூனியைப் பார்த்தவுடன் கோபம் ஏற்பட்டு

அவளை பலாத்காரமாகப் பிடித்தான். அவளை பூமியில் போட்டு இழுத்தான். கைகேயியை நிந்தித்தான். சத்ருக்னனிடத்திலிருந்து பயத்தையடைந்த கைகேயி பரதனை சரணமடைந்தாள். அப்பொழுது பரதன் சத்ருக்னனைப் பார்த்து "ஸ்திரீகளைக் கொல்லக்கூடாது பொறுத்துக்கொள்" என்று சொல்லுகிறான். அவ்விதம் தான் சொல்லுவதற்குக் காரணத்தையும் தானே சொல்லுகிறான். "இந்தக் கொடுமை செய்த பாபியான கைகேயியை நானே கொன்றுவிடுவேன். தார்மிகரான ராமர் தாயாரைக் கொன்றவன் என்று என்னை வெறுப்பாரே என்று நினைக்கிறேன். இந்தக் கூனியும் நம்மால் அடிபட்டாளென்று ராமர் அறிந்தாரேயானால் அந்த தர்மாத்மா இனி உன்னிடமாவது என்னிடமாவது பேச மாட்டார் என்பது நிச்சயம்."

अवध्याः सर्वभूतानां प्रमदाः क्षम्यतामिति ॥

हन्यामहमिमां पापां कैकेयीं दुष्टचारिणीम् ।
यदि मां धार्मिको रामो नासूयेन्मातृघातकम् ॥

इमामपि हतां कुब्जां यदि जानाति राघवः ।
त्वां च मां च हि धर्मात्मा नाभिभाषिष्यते ध्रुवम् ॥

भरतस्य वचः श्रुत्वा शत्रुघ्नो लक्ष्मणानुजः ।
न्यवर्तत ततो रोषात् तां मुमोच च मन्थराम् ॥ ,, ,, (21-24)

இந்த வார்த்தையைக்கேட்டு சத்ருக்னன் கோபத்தை நிறுத்திக்கொண்டு மந்தரையை விட்டுவிட்டான்.

மற்றவர்கள் விஷயத்தில் ராமர் வ்யக்தமாகவே அவர்களுடைய தவறுதல்களை எடுத்துச்சொல்லித் திருத்த வேண்டிய அவசியமிருந்தது. சத்ருக்னன் விஷயத்தில்

ராமர் நேரில் சொல்லாமல் போனாலும், அவருக்கு அதிருப்தி ஏற்படுமென்று தெரிந்தவுடனேயே சத்ருக்னன் கோபத்தை அடக்கிக்கொண்டானென்றால் சத்ருக்னனுடைய பக்தியும் ராமருடைய பெருமையும் நன்கு வெளியாகிறது. ராமருடைய அனுஸ்மரணமே தர்ம நிஷ்டையைக் காப்பாற்றிக் கொடுப்பதற்குப் போதுமானது என்பது சத்ருக்னனுடைய நடத்தையினால் நன்கு தெரிகிறது.

ராமரைத் தேடிப் போகும்போது பரதன் குஹனைக் கண்டு கங்கைக் கரையில் குஹனுடன் அன்று இரவு பூராவும் பேசிக்கொண்டிருந்துவிட்டு அதிகாலையில் எழுந்து சத்ருக்னனைப் பார்த்து "ஹே சத்ருக்னா! எழுந்திரு; ஏன் படுத்துக்கொண்டிருக்கிறாய்; சீக்கிரமாக குஹனை அழைத்துவா; ஸைன்யத்தை அவன் அக்கரைக்குத் தாண்டிவைக்க வேண்டும்." என்று சொல்கிறான்.

शत्रुघ्नोत्तिष्ठ किं शेषे निषादाधिपतिं गुहम् ।
शीघ्रमानय भद्रं ते तारयिष्यति वाहिनीम् ॥ ,, 89 (2)

இதைக்கேட்ட சத்ருக்னன் உடனே "நான் விழித்துக்கொண்டுதான் இருக்கிறேன்; நான் தூங்கவில்லை; அண்ணாவையே நினைத்துக்கொண்டிருந்தேன்" என்று பதில் சொல்லுகிறான்.

जागर्मि नाहं स्वपिमि तमेवार्यं विचिन्तयन् ।
इत्येवमब्रवीद् भ्राता शत्रुघ्नोऽपि प्रचोदितः ॥ ,, ,, (3)

இதிலிருந்தும் சத்ருக்னன் அதிகமாகப் பேசாமல் இருந்தபோதிலும், அவனைப்பற்றித் தனித்து அதிகமாக ராமாயணத்தில் பிரஸ்தாவம் இல்லாமல் போனாலும், ராமரிடம் அவன் வைத்திருந்த விசேஷ பக்தி நன்கு வெளியாகிறது.

4. ஸீதை

ஸ்ரீமத் ராமாயணம் என்பதே ஸீதையின் சரித்திரம் என்று வால்மீகியே சொல்லுகிறார். ஸ்ரீராமராவது கௌஸல்யையின் கர்ப்பத்திலிருந்து ஆவிர்பாவமடைந்தவர். ஸீதையோ கர்ப்ப வாஸமேயில்லாமல் அதிபவித்ரமான யக்ஞ பூமியில் அயோனிஜையாக அவதரித்தவள். அக்னிக்கு ஸமானமான தேஜஸ் உடையவள்.

ராவணனுடைய தேஜஸ்ஸைக் கண்டு மஹா தேஜஸ்வியான ஹனுமாரே திடுக்கிட்டதாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

ராவணன் ஸீதையைத் தூக்கும்போது அவனுடைய தேஜஸ்ஸைவிட ஸீதையின் பாதிவ்ரத்யாக்னி தேஜஸ் அதிகமாயிருந்தால் அவனை ஏன் அப்பொழுதே சாம்பலாக்கவில்லையென்று கேட்கலாம். அதற்கு ஸீதையே பதில் சொல்லுகிறாள். "என்னை ரக்ஷிக்க ராமர் இருக்கையில் நானே என்னை ரக்ஷித்துக்கொண்டால், அவருக்கு கௌரவக் குறைவேயாகும். என்னை நானே ரக்ஷித்துக் கொள்ளலாமென்று அவர் சொல்லவுமில்லை. இதற்காக என் தபஸை செலவழிக்க அவசியமுமில்லை. அதினால் தான் உன்னை நான் சாம்பலாக்கவில்லை." என்று ராவணனிடம் சொல்கிறாள். அவள் அப்பொழுதே ஸங்கல்பித்திருந்தால் ராவணன் உடனே சாம்பலாயிருப்பானென்று நன்கு தெரிகிறது.

असंदेशात्तु रामस्य तपसश्चानुपालनात् ।
न त्वां कुर्मि दशग्रीव भस्म भस्मार्हतेजसा ॥ ஸு. 22 (20)

ஹனுமாருடைய வாலில் தீ வைத்து ஜ்வலிக்கும் போது அது குளுமையாக இருந்தது ஸீதையினுடைய

பிரபாவத்தினால் என்பதை ஹனுமார் உணர்ந்தார். அப்படியிருந்தும் லங்கையைக் கொளுத்தின பிற்பாடு அதில் ஸீதையும் நசித்துப்போய்விட்டாளோ என்று ஸந்தேஹம் ஏற்பட்டது. உடனே அவர் ஸமாதானம் செய்துகொள்கிறார். "அவள் தன்னுடைய தேஜஸ்ஸினாலேயே ரக்ஷிக்கப்பட்டிருப்பாள்; நாசத்தை அடைய மாட்டாள்; தர்மாத்மாவான எல்லையற்ற தேஜஸ்ஸோடு கூடின ராமருடைய பத்னீ; தன்னுடைய நடத்தையினால் ரக்ஷிக்கப்பட்டவள்; அவளை அக்னி தொட முடியுமா? எல்லாவற்றிலும் சக்தியைச் செலுத்தி எரிக்கக்கூடிய அக்னி என்னுடைய வாலை தஹிக்கவில்லை; அவளை எப்படி தஹிக்க முடியும்? அக்னி அக்னியை தஹிக்குமா? அவள் வேண்டுமானால் அக்னியை தஹிப்பாள்; அவளை ஒருநாளும் அக்னி தஹிக்கமுடியாது" என்று தீர்மானம் செய்துகொள்கிறார்.

अथवा चारुसर्वाङ्गी रक्षिता स्वेन तेजसा ।
न नशिष्यति कल्याणी नाग्निरग्नौ प्रवर्तते ॥ ,, 55 (23)

यद्वा दहनकर्माऽयं सर्वत्र प्रभुरव्ययः ।
न मे दहति लाङ्गूलं कथमार्यां प्रधक्ष्यति ॥ ,, ,, (27)

अपि सा निर्दहेदग्निं न तामग्निः प्रधक्ष्यति ॥ ,, ,, (46)

இவ்விதம் சிலாகிக்கப்பட்ட ஸீதையினிடத்தில் தோஷம் இருக்கக்கூடியதே ஸம்பவமில்லை. ஆனால் அவளுக்கும் ஒரு ஸமயம் ராமர் செய்யும் காரியம் சரியா என்று ஸந்தேஹம் ஏற்பட்டது. ஸாமான்ய ஸ்திரீகளாயிருந்தால் பர்த்தா என்னமோ செய்கிறார் என்று உதாஸீனமாக இருந்துவிடுவார்கள். ஸீதை அப்படிப்பட்டவள் அல்ல. தர்ம விஷயமாகத் தனக்கு ஸந்தேஹம்

வரும்போது பர்த்தாவைக்கேட்டுத் தெரிந்துகொள்ளுவதே நியாயம் என்பதை நன்கு உணர்ந்தவள். பர்த்தா செய்வது தவறுதல்தான் என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டிருப்பதே தோஷமாகும். தனக்கு ஸந்தேஹமிருந்ததேயானால் பர்த்தாவை நேரில் கேட்டு ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்துகொள்வதே உத்தம ஸ்திரீகளின் தர்மம் என்பதை ஸீதை தன் நடத்தையினால் காட்டுகிறாள். "காட்டில் நமக்கு இடைஞ்சல் செய்யாத ராக்ஷஸர்களைக் கொல்வது நியாயமா? நாம் காட்டிற்கு வந்திருக்கும் ஸமயம் கையில் ஆயுதம் வைத்துக் கொண்டிருந்தால் ஹிம்ஸை செய்யத் தோன்றும். இது விஷயமாக என்மனது கலங்குகிறது. நான் சொல்வது ஸ்நேஹத்தினாலேயும் பஹுமானத்தினாலேயும் ஞாபகப் படுத்துகிறேனே தவிர, தங்களை நான் கண்டிக்கவில்லை. ஸ்திரீ சாபல்யத்தினால் நான் சொன்னேன். தங்களுக்கு தர்மம் எடுத்துச்சொல்ல யாரால் முடியும்? தாங்களும் புத்தியினால் நன்கு ஆலோசித்துக்கொண்டு தம்பியோடு கலந்துகொண்டு, எது செய்யலாமென்று தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள்"

तृतीयं यदिदं रौद्रं परप्राणाभिहिंसनम् ।
निर्वैरं क्रियते मोहात् तच्च ते समुपस्थितम् ॥ அர. 9 (9)

प्रस्थितस्त्वं सह भ्रात्रा धृतबाणशरासनः ॥,, ,, (11)

ततस्त्वां प्रस्थितं दृष्ट्वा मम चिन्ताकुलं मनः । ,, ,, (12)

स्नेहाच्च बहुमानाच्च स्मारये त्वां न शिक्षये ।
न कथंचन सा कार्या गृहीतधनुषा त्वया ॥ ,, ,, (24)

स्त्रीचापलादेतदुदाहृतं मे
धर्मं च वक्तुं तव कः समर्थः
विचार्य बुद्ध्या तु सहानुजेन
यद्रोचते तत्कुरु माचिरेण ॥ (33)

என்று சொல்லுகிறாள். அவளுடைய மனோபாவத்தை நன்கு அறிந்த ராமர் அவளை மிகவும் சிலாகித்து முனிகளுக்குத் தான் செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்ற வேண்டிய அவசியத்தை எடுத்துச் சொல்லுகிறார். "ரிஷிகளைப் பரிபாலிக்க வேண்டியது அவர்கள் சொல்லாமலே நான் அவசியம் செய்யவேண்டிய காரியம். போதாததற்கு நானும் அவர்களிடம் பிரதிக்ஞை செய்திருக்கிறேன்; நீ என்னிடம் வைத்த ஸினேஹத்தினாலும் ஸௌஹார்த்தத்தினாலும் இவ்விதம் சொல்லுகிறாய்; ஹே பாபமற்ற ஸீதையே, நான் மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தேன். ப்ரீதி இல்லாதவர்களிடத்தில் நியாயம் எடுத்துச் சொல்லுவது முடியாது; நீ சொன்னது உன்னுடைய குலத்திற்கும் உனக்கும் ஒத்ததாகவும் தகுந்ததாகவும் இருந்தது; நீ என்னுடன் சேர்ந்து தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டியவள்; என் பிராணனைவிட மதிப்புள்ளவள்" என்று அவளிடத்தில் தன் திருப்தியைக் காட்டுகிறார்.

तदवश्यं मया कार्यमृषीणां परिपालनम् ।
अनुक्तेनापि वैदेहि प्रतिज्ञाय तु किं पुनः ॥

मम स्नेहाच्च सौहार्दादिदमुक्तं त्वयाऽनघे ।
परितुष्टोऽस्म्यहं सीते न ह्यनिष्टोऽनुशिष्यते ॥

सदृशं चानुरूपं च कुलस्य तव चात्मनः ।
सधर्मचारिणी मे त्वं प्राणेभ्योऽपि गरीयसी ॥ அர. 10 (20-22)

இவ்விதம் அவளிடத்தில் தன் ப்ரீதியைக் காட்டும் போதே தன்னுடைய பிரதிக்ஞையினுடைய மதிப்பை எடுத்துச் சொல்லுகிறார். "ஹே ஸீதை! நான் என்னுடைய உயிரைவிட்டாலும் விடுவேன்; உன்னை விட்டாலும் விடுவேன்; லக்ஷ்மணனை விட்டாலும் விடுவேன்; என் பிரதிக்ஞையை விடமாட்டேன். அதிலும் விசேஷமாக பிராஹ்மணர்களிடத்தில் கொடுத்த வாக்கை மீற மாட்டேன்"

अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम् ।

न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः ॥ ,, ,, (19)

என்று சொல்லுகிறார்.

தம்பதிகள் தங்களுக்குள் தோன்றக்கூடிய ஸந்தேஹங்களை உடனுக்குடன் நேரில் கேட்டுக்கொண்டு தெளிவு பெற்றுக் கொண்டால், பரஸ்பரம் உள்ள ப்ரீதி விருத்தியேயாகும் என்பதை இந்த ஸம்பவம் காட்டுகிறது. ஸீதை பர்த்தா செய்வது நியாயம்தானா என்று ஸந்தேஹப்பட்டுக்கொண்டே இருந்தால் அன்யோன்ய பாவம் குறையும். அதற்கு இடமன்னியில் அவள் வாயைத் திறந்து கேட்டாள். அவளுடைய ஸந்தேஹத்தையும் ராமர் நிவர்த்தி செய்து கொடுத்தார். ராமரிடத்தில் தர்மலோபம் ஏற்படக்கூடாதென்பதில் ஸீதை மிகவும் அக்கரை கொண்டாள் என்பதும் இதன் மூலமாக நன்கு தெரிகிறது. தர்மலோபம் இல்லை என்பதை ராமர் நன்கு எடுத்துக் காட்டினார்.

---

# அத்யாயம் 13

## மற்றவர் தர்ம ரக்ஷணம்

### 1. வஸிஷ்டர்.

வஸிஷ்ட மஹரிஷி பிரஹ்மபுத்ரராகவும், பிரஹ்மவித்தாகவும், ஸ்மிருதி கர்த்தாவாகவும், குல புரோஹிதராகவும் இருக்கிற முறையில் அவர் தர்ம நிஷ்டையிலிருந்து நழுவுவாரென்று யாராலேயும் எதிர்பார்க்கமுடியாது. ஆனாலும் சில ஸமயங்களில் தர்மத்திலிருந்து கொஞ்சம் நழுவினதுபோல் தோன்றும்படி ஸம்பவங்கள் ஏற்படும். ராமர், லக்ஷ்மணன், ஸீதை மூவரும் காட்டிற்குப் போவதற்காக தசரதரிடம் சொல்லிக்கொள்வதற்கு வந்த ஸமயம், கைகேயி ராமருக்கும் லக்ஷ்மணனுக்கும் மரவுரி கொண்டு வந்து கொடுத்ததுடன் ஸீதைக்கும் ஒன்று கொண்டுவந்து கொடுத்தாள். அதை எப்படி உடுத்திக் கொள்வதென்று அவள் திகைத்துநிற்கும்போது ராமரே அவள் உடுத்தியிருந்த பட்டுக்குமேல் இதைக்கட்டி விட்டார். அதைப் பார்த்து ஸஹிக்காதவராக வஸிஷ்டர் மிகவும் கோபம் கொண்டு "ஸீதை வனத்திற்குப் போக வேண்டியதில்லை; ராமருக்கு இப்பொழுது பிரகிருதமாயுள்ள ஸிம்ஹாஸனத்தில் ஸீதையே உட்காருவாள். கிருஹஸ்தாசிரமத்திலிருக்கிற எல்லோருக்குமே பார்யை என்பது ஆத்மாவேயாகும்; அம்முறையில் ராமருடைய ஆத்மா இவள் என்ற நியாயப்படி அவளே பூமி ஆளுவாள்' என்று சொன்னார்.

न गन्तव्यं वनं देव्या सीतया शीलवर्जिते ।

अनुशास्यति रामस्य सीता प्रकृतमासनम् ॥

आत्मा हि दाराः सर्वेषां दारसंग्रहवर्तिनाम् ।
आत्मेयमिति रामस्य पालयिष्यति मेदिनीम् ॥

அயோ. 37 (23,24)

இவ்விதம் சொல்லிவருகையில் ராமர் காட்டிற்குப் புறப்பட்டுப்போகும்போது ஸீதை அயோத்தியில் தங்கினாலல்லவா அவளை ஸிம்ஹாஸனத்தில் உட்கார்த்திவைக்க முடியும் என்ற ஞாபகம் வந்தது. உடனே "ராமரோடு கூட ஸீதையும் காட்டிற்குப் போவதாயிருந்தால் நாங்களும் கூடவே போவோம். இந்த ஊரே போகும்" என்று சொன்னார்.

अथ यास्यति वैदेही वनं रामेण संगता ।
वयमप्यनुयास्यामः पुरं चेदं गमिष्यति ॥ „ (25)

அப்படியே எல்லோரும் போனாலும் பரதனும் சத்ருக்னனும் இருப்பார்கள் அல்லவா என்று கைகேயி நினைப்பதற்கு இடமன்னியில் மேலும் சொல்லுகிறார்—

भरतश्च सशत्रुघ्नः चीरवासा वनेचरः ।
वने वसन्तं काकुत्स्थं अनुवत्स्यति पूर्वजम् ॥

ततः शून्यां गतजनां वसुधां पादपैः सह ।
त्वमेका शाधि दुर्वृत्ता प्रजानामहिते रता ॥ (27,28)

கூட பரதனும் மரவுரி தரித்துக் காட்டில் வஸித்துக் கொண்டிருக்கிற அண்ணனையனுஸரித்து காட்டிலேயே இருப்பான்; ஜனங்களெல்லாம் போய் சூன்யமாக இருக்கிற இவ்வூரை நீ தனித்திருந்து மரங்களை வைத்துக் கொண்டு ஆளவேண்டியிருக்கும்" என்று பலவிதமாகச் சொல்லுகிறார்.

இவ்வளவு சொன்னதின் உத்தேசம் ஸீதைக்கு மரவுரி கொடுத்தது நியாயமில்லை, அவளுடைய வஸ்திராபரணங்கள் கூடவே போகட்டும் என்பதுதான். அதை வ்யக்தமாக வஸிஷ்டரே சொல்லுகிறார். "ஹே தேவி, மரவுரியை எடுத்துவிட்டு மருமகளுக்கு உத்தமமான ஆபரணங்களைக் கொடு; அவளுக்கு மரவுரி ஏற்றதல்ல" என்று கைகேயி கொண்டுவந்த மரவுரியை தடுத்தார்.

अथोत्तमान्याभरणानि देवि
देहि स्नुषायै व्यपनीय चीरम् ।
न चीरमस्याः प्रविधीयतेति
न्यवारयत्तद्वसनं वसिष्ठः ॥ ,, ,, (34)

இவ்விதம் ஸீதைக்கே பட்டாபிஷேகம் செய்துவிடுவோம் என்று சொன்னது அர்த்தவாதமே ஆகுமாதலால் இவ்விடத்தில் அவருக்கு தர்மஹானி ஏற்பட்டிருக்குமோ என்று நினைக்கக்கூட அவகாசமில்லை.

பின்னால் தசரதர் காலமான பிற்பாடு வஸிஷ்டர் ஆலோசிக்கலானார். "ராமர், லக்ஷ்மணன் இருவரும் காட்டிற்குப் போய்விட்டார்கள். அவர்களைத் திரும்பி அழைத்துக்கொண்டு வந்து தசரதருடைய மேற்காரியங்களைச் செய்விப்பது நடக்காது. ஆகையால் பரதன் சத்ருக்னன் இவ்விருவர்களையும்தான் உடனே அழைத்துக்கொண்டு வரவேண்டும். ஆனால் ராமர் காட்டிற்குப்போனது பரதனுக்கு ஸம்மதமாயிருக்குமேயானால் அவன் தன் கர்மத்தைச் செய்யக்கூடாது என்று தசரதர் சொல்லிவிட்டு போயிருக்கிறார். பரதனுடைய மனோபாவம் எப்படி இருக்கிறது என்று தெரிந்து கொள்ளாமல் அவனைக் கொண்டு கர்மம் செய்விப்பது நியாயமாகாது. ஆகையால் அவனை வரவழைக்கவும் வேண்டும், அவனிடம் ராமர்

காட்டிற்குப் போயிருக்கிறார் என்றாவது பிதா இறந்து விட்டார் என்றாவது சொல்லாமலே அவனை அழைத்துவர வேண்டும். ஏதோ அவசரமான காரியம். நீ வந்து செய்யவேண்டியிருக்கிறது என்று மாத்திரம் அவனிடம் சொல்லும்படி சொல்லி அனுப்பினால் போதும்'' என்று வஸிஷ்டர் தீர்மானித்திருந்தார்.

அவ்விதமே அவனிடம் சொல்லி அழைத்து வருகிறார்கள். அவன் வந்து கைகேயியைப் பலவிதமாக நிந்திக்கிறதிலிருந்து அவனுடைய மனோபாவத்தை நன்கு அறிந்து கொண்ட வஸிஷ்டர் அவனைப் பார்த்து பிதாவினுடைய உத்தரக்ரியைகளைச் செய்யும்படி சொல்லுகிறார். அவ்விதமே செய்துமுடிந்த பிற்பாடு வஸிஷ்டர் ஒரு ஸபை கூட்டுகிறார். எல்லா ஜனங்களுக்கும் பரதனுடைய அபிப்ராயம் நன்கு தெரியவேண்டும் என்பதற்காகவே பரதனைப் பார்த்து ''உன்னுடைய தகப்பனாரும் தமையனும் உனக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்திருக்கிறார்கள். சீக்கிரமாகவே அபிஷேகம் செய்துகொள்'' என்று சொல்லுகிறார்.

पित्रा भ्रात्रा च ते दत्तं राज्यं निहतकण्टकम् ।
तद्भुङ्क्ष्व मुदितामात्यः क्षिप्रमेवाभिषेचय ॥ ,, 82 (7)

இவ்விதம் வஸிஷ்டர் சொன்னது பரதனுடைய மனோபாவம் தனக்குத் தெரியாததுபோல் சொன்னதாக மேற்பார்வைக்குத் தோன்றுகிறது. ஆனால் பரதனுடைய ஸ்வபாவத்தை வஸிஷ்டர் நன்கு அறிந்தவர் என்பது வஸிஷ்டருடைய வாக்கியத்தாலேயே தெரிகிறது. அவர் முன்னமேயே கைகேயியிடம் சொல்லுகிறபோது ''நீ இங்கிருந்து ஆகாசத்தில் துள்ளினாலும்கூட பரதன் பித்ரு வம்சத்தினுடைய போக்கை நன்கு அறிந்தவனாதலால் அவன் வேறுவிதமாகச் செய்யமாட்டான்.'' என்கிறார்

यद्यपि त्वं क्षितितलाद्गगनं चोत्पतिष्यसि ।
पितृवंशचरित्रज्ञः सोऽन्यथा न करिष्यति ॥ ,, 37 (31)

இவ்விதம் தெரிந்திருந்தும் வஸிஷ்டர் கேட்டது நியாயமா? என்று நினைக்கலாம். அவர் கேட்டது நியாயம் இல்லை என்பதை பரதனே எடுத்துச் சொல்லுகிறான். அவன் சொல்லுவதை வால்மீகி வசவு என்றே கண்டிருக்கிறார். "இவர் குல புரோஹிதராக இருக்கும்போது, தர்மத்தை எடுத்துச் சொல்லவேண்டியவராக இருக்கும் போது தன்னை ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி சொல்லுகிறாரே! தசரதருக்குப் பிறந்து ராமருடைய ராஜ்யத்தைத் தான் அபஹரிக்கக் கூடுமென்று அவர் எப்படி நினைத்தார்" என்று கேட்கிறான்.

कथं दशरथाज्जातो भवेद्राज्यापहारकः । ,, (12)

பரதனுக்குச் சொல்லியனுப்பும்போது இங்கு நடந்ததை பரதனிடம் சொல்லவேண்டாமென்று சொல்லியனுப்பினதும், பரதனுடைய மனோபாவம் நன்கு தெரிந்தும் அவனை ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி சொன்னதும், வஸிஷ்டரிடத்தில் ஸத்யநிலையிலிருந்து கொஞ்சம் நழுவுதல் என்ற தோஷம் ஏற்படாதா என்று தோன்றலாம். வஸிஷ்டர் ராஜ புரோஹிதராக இருந்ததுடன் பிரதானமந்திரியாகவும் இருந்தபடியால் அவர் ராஜநீதிக்கும் கட்டுப்பட்டே நடக்க வேண்டியவராக இருந்தார். தவிரவும் பரதனுடைய மனோபாவம் தனக்குத்தெரியுமென்று இருந்தால் மாத்திரம் போதாது. அவன் வாயினாலேயே எல்லோரும் அறிய ஸபா மத்தியில் வெளிப்படவேண்டுமென்று அவர் உத்தேசித்தது மிகவும் நியாயமே ஆகும். ஆகையினால் இந்த இரண்டு ஸந்தர்ப்பங்களிலும் வஸிஷ்டர் பிசகினார் என்று சொல்லுவதற்கு இடமில்லை.

பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனம் செய்வதற்காக ராமர் காட்டிற்குப் போயிருக்கும் போது அவரைத் திரும்ப அழைத்துக்கொண்டு வருவதற்காகச் சென்ற பரதனுடன் கைகேயியும் கூடப்போனது சரியில்லை என்று முன்னால் சொல்லப்பட்டது. அதே நியாயம் வஸிஷ்டருக்கும் கிடையாதாவென்று தோன்றலாம். வஸிஷ்டர் குல குருவாயிருப்பதால் தசரதர் பட்டாபிஷேகத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று சொன்னபோது அப்படியே ஏற்பாடு செய்தார். தசரதருக்குப் புத்ரர்கள் பிறப்பதற்கு முன்னாலேயே அவருக்கு நான்கு பிள்ளைகள் பிறப்பார்களென்று சொன்ன வஸிஷ்டருக்கு இப்பொழுது பட்டாபிஷேகம் நடக்காது என்று தெரியாமலா இருந்திருக்கும்? தெரிந்திருந்தால் அவர் ஏற்பாடுசெய்யலாமா? என்று கேட்கத் தோன்றும். தசரதருக்கு நான்கு பிள்ளைகள் உண்டு என்று தெரிந்த வஸிஷ்டர், தசரதர் புத்திரனில்லையே என்று கவலைப்பட்டுக்கொண்டிருக்கும் பொழுது அவருக்கு ஸமாதானம் சொல்லவில்லை. தசரதராக அசுவமேதயாகம் செய்யலாமென்று நினைப்பதாகச் சொன்ன ஸமயத்தில் தான், வஸிஷ்டர் ஆமோதிக்கிறார். அசுவமேதயாகம் செய்தால் புத்திரர்கள் ஏற்படுவார்கள் என்பதை அவர் முன்னால் சொல்லவேயில்லை. இதிலிருந்து புரோஹிதருடைய தர்மத்தில் கிருஹஸ்தனுக்கு எடுத்துச் சொல்லவேண்டிய பொறுப்பு சேர்ந்ததில்லை யென்று நன்கு தெரிகிறது. அவ்விதமே பின்னால் என்ன நடக்கப் போகிறது என்கிறவிவரம் அவருக்கு நன்கு தெரிந்திருந்த போதிலும், பரதன் ராமரைத் திருப்பி அழைத்துக் கொண்டுவர உத்தேசிக்கும் போது அது நடக்காது என்றாவது, தான் பரதனுடன் வரவில்லை என்றாவது சொல்வதற்கு எவ்வித அவசியமும் கிடையாது. அவர் பிரஹ்மவித் என்கிற முறையில் எல்லாவற்றையும் ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டே இருந்தார். ஆனதினால் அவரிடத்தில் எவ்விததோஷமும் சொல்லுவதற்கில்லை.

அப்படியிருந்தும், ராமருடைய தர்ம நிஷ்டையை எல்லோருக்கும் எடுத்துக்காட்டும் உத்தேசத்துடன் அவரும் சித்ரகூட பர்வதத்தில் ராமருடன் வியவஹாரம் செய்கிறார். "இக்ஷ்வாகு வம்சத்தில் மூத்தவனுக்குத்தான் ராஜ்யம்; மூத்தவன் இருக்கும்போது இளையவனுக்கு அபிஷேகம் கிடையாது; ஆகையினால் இது உன் ராஜ்யமே ஆகும்; நீ பெற்றுக்கொள்; ரகு குலத்திற்கு ஏற்பட்ட இந்தக்குலதர்மத்தை நீ கெடுத்துவிடாதே." என்று குலதர்மத்தை பிரமாணமாகச் சொல்லுகிறார்.

इक्ष्वाकूणां हि सर्वेषां राजा भवति पूर्वजः ।
पूर्वजे नावरः पुत्रो ज्येष्ठो राज्येऽभिषिच्यते ॥ ,, 11 (35)

स राघवाणां कुलधर्ममात्मनः
सनातनं नाद्य विहन्तुमर्हसि । ,, (36)

அத்துடன் நிற்காமல் "ஒருவனுக்கு ஆசார்யன், பிதா, மாதா என்று மூன்று குருக்கள் உண்டு பிதா என்பவர் அவனை உண்டுபண்ணுகிறாரே தவிர ஆசார்யர்தான் ஞானத்தைக் கொடுக்கிறார்; ஆகையினால்தான் குரு என்கிற சப்தம் அவரிடத்தில் நன்கு பொருந்துகிறது; உன் பிதாவிற்கும நான் ஆசார்யன்; உனக்கும் நான் ஆசார்யன்; ஆகையால் நீ என்னுடைய வார்த்தையின்படி நடந்தால் ஸாதுக்களின் மார்க்கத்திலிருந்து விலகினவனாக ஆகமாட்டாய்; தவிரவும் இங்கு கூடியிருக்கும் ஸபையோர்கள், கூட்டம், பிராஹ்மணர்கள், இவர்களுடைய அபிப்ராயப்படி நடந்தாயேயானல் ஸாதுக்களின் மார்க்கத்திலிருந்து விலகினவனாக ஆகமாட்டாய்; வயதுசென்றவளாகவும், தர்மசீலையாகவும் இருக்கிற உன் தாயாரின் வார்த்தையை நீ மீறுவது நியாயமில்லை. அவளுடைய வார்த்தைப்படி நீ நடந்தால் ஸாதுக்களின்

மார்க்கத்திலிருந்து நீ விலகினவனுக ஆகமாட்டாய்; ஸத்யத்திலும் தர்மத்திலும் பராக்ரமத்தோடு கூடின ஹே ராகவா! இவ்வளவு கெஞ்சிக் கேட்கிற பரதனுடைய வார்த்தையைக் கேட்டாயேயாஞல் உன் நிலையிலிருந்து தவறினவனுக ஆகமாட்டாய்'' என்று சொல்லுகிருர்.

पुरुषस्येह जातस्य भवन्ति गुरवस्त्रयः ।
आचार्यश्चैव काकुत्स्थ पिता माता च राघव ॥

पिता ह्येनं जनयति पुरुषं पुरुषर्षभ ।
प्रज्ञां ददाति चाचार्यः तस्मात् स गुरुरुच्यते ॥

सोऽहं ते पितुराचार्यः तव चैव परंतप ।
मम त्वं वचनं कुर्वन् नातिवर्तेः सतां गतिम् ॥

इमा हि ते परिषदः श्रेणयश्च द्विजातयः ।
एषु तात चरन् धर्मं नातिवर्तेः सतां गतिम् ॥

वृद्धाया धर्मशीलाया मातुर्नार्हस्यवर्तितुम् ।
अस्यास्तु वचनं कुर्वन् नातिवर्तेः सतां गतिम् ॥

भरतस्य वचः कुर्वन् याचमानस्य राघव
आत्मानं नातिवर्तेस्त्वं सत्यधर्मपराक्रम ॥ ,, 111 (2-7)

இவ்விதம் வஸிஷ்டர் எடுத்துச்சொன்னது கொஞ்சம் அதிகமே ஆகும். இவர் சொன்னதில் தசரதருடைய வாக்கியத்தைப் பிரமாணமாக வைத்துக் கொண்டு காட்டுக்குப் போகவேண்டாமென்று வியக்தமாகச் சொல்லாமல்போனுலும், இப்பொழுதே ராஜ்யத்தை ஒப்புக்

கொள்ளவேண்டும் என்று சொன்னதாக ஏற்படுகிறது. அதாவது பிதாவின் வாக்கியத்திற்குப் பிராமாண்யம் கொடுக்கவேண்டாமென்றே த்வனிக்கிறது. ராமரிடமுள்ள விசேஷ அபிமானத்தினால் இவர் ஆசார்ய ஸ்தானத்தை வஹித்துக்கொண்டு தன் அதிகாரத்தைச் செலுத்தப்பார்த்த போதிலும், இவர் வார்த்தையில் பித்ரு வாக்யத்தை உல்லங்கனம் பண்ணினால் பாதகமில்லை என்று சொன்னமாதிரியே ஆகிறபடியால், இந்த ஸந்தர்ப்பத்தில் வஸிஷ்டரும் தர்மநிலையிலிருந்து நழுவினார் என்றே நினைக்க இடம் கொடுக்கிறது. ராமருடைய உத்தமமான தர்மநிலையை ஜனங்களுக்குக் காண்பிக்கவேண்டுமென்று இவ்விதம் சொன்னார் என்று வைத்துக்கொண்டால் அவர் எண்ணத்தில் தோஷமில்லை என்று ஏற்படலாமே தவிர, அவருடைய வார்த்தையில் தோஷமில்லை என்று சொல்ல முடியாது. இவ்விதம் வஸிஷ்டர் எடுத்துச்சொல்லியும் ராமர் அதற்குக் கொஞ்சமேனும் இசையாமல் இருந்ததுடன் வஸிஷ்டருடைய வாக்கியம் அதர்மம் என்று வாயைவிட்டுச் சொல்லாமல் பதில் சொல்லுகிறார். "தாயார் தகப்பனார்கள் குழந்தைக்குச் செய்திருப்பதற்கு ஒருநாளும் பதில் செய்யமுடியாது; என்னைப்பெற்ற பிதா எனக்கு ஒரு ஆக்ஞை செய்திருக்க அதைப் பொய்யாக்க என்னால் முடியாது"

यन्मातापितरौ वृत्तं तनये कुरुतः सदा ।
न सुप्रतिकरं तत् तु मात्रा पित्रा च यत्कृतम् ॥
स हि राजा जनयिता पिता दशरथो मम ।
आज्ञातं यन्मया तस्य न तन्मिथ्या भविष्यति ॥ ,, ,, (9,11)

என்று மாத்திரம் பதில் சொல்லுகிறார், அவருடைய தாத்பர்யத்தில், மாதா பிதாக்கள் குழந்தையைப் பெற்று

அபிமானத்துடன் வளர்த்துவந்து பெரியவனாக்கிவிட்டால் பிற்பாடல்லவா ஆசார்யருக்கு அவகாசம் ஏற்படுகிறது? ஆகையால் மாதா பிதாக்களுடைய வாக்கியத்திற்குத் தான் முதலில் பிராமாண்யம் கொடுத்து அதன்படி நடப்பதே முதல் தர்மம் என்று தெரிகிறது. வஸிஷ்டர் வார்த்தையைத் தப்பு என்று சொல்லாமல் ராமர் அவருடைய வாக்கியத்தை அழகாக நிராகரித்திருப்பது குறிப்பிடத்தக்கது.

2. ஜாபாலி

தசரதருடைய ராஜ்ய நிர்வாஹத்தை வர்ணிக்கும் போது எட்டு அமாத்யர்கள் இருந்ததாகவும், இரண்டு ரித்விக்குகள் இருந்ததாகவும், இவர்களைத்தவிர மந்திரிகள் இருந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த மந்திரி வர்க்கத்தில் ஸுயக்ஞர், ஜாபாலி, காச்யபர், கௌதமர், மார்க்கண்டேயர், காத்யாயனர் ஆகிய இவர்கள் இருந்ததாகவும், அவர்கள் பிரஹ்ம ரிஷிகளென்றும் சொல்லப்படுகிறது (பாலகாண்டம் 7 வது ஸர்க்கம்' சுலோகம் 1 முதல் 5). சித்ரகூட பர்வதத்தில் பரதன் எவ்வளவு சொல்லியும் ராமர் கேட்காமல் இருந்த ஸமயத்தில், ஜாபாலி நாஸ்திக மதத்தை எடுத்து விரிவாக "பரலோகம் கிடையாது; தசரதருக்கும் உனக்கும் என்ன ஸம்பந்தம்? இப்பொழுது பரதன் கேட்டுக்கொள்கிறபடி ராஜ்யத்தைப் பெற்றுக் கொள்" என்று சொல்லுகிறார்.

ஜாபாலியை ஆரம்பத்திலேயே பிரஹ்மரிஷி என்று சொல்லிவிட்டு அவர் நாஸ்திகவாதம் சொன்னார் என்றால் நம்பமுடியுமா என்கிற கேள்விக்கு வால்மீகியே பதில் சொல்லுகிறார். "அந்த பிராஹ்மணோத்தமரான ஜாபாலி பரதனுக்கு ஆச்வாசம் செய்யவேண்டியதற்காக தர்மம் அறிந்த ராமரைப்பார்த்து தர்மவிருத்தமான இந்த வார்த்தையைச் சொன்னார்."

आश्वासयन्तं भरतं जाबालिर्ब्राह्मणोत्तमः ।
उवाच रामं धर्मज्ञं धर्मापेतमिदं वचः ॥ ,, ,, (1)

என்று முதலிலேயே வால்மீகி கண்டிருக்கிறார். அதாவது அவருடைய வார்த்தை அவருடைய மனப்பூர்வமான அபிப்ராயமென்று வாசகர்கள் நினைத்துவிடக்கூடாதென்பதற்காக வால்மீகி ஜாக்ரதைப்படுத்திக் கொடுத்திருக்கிறார். தவிரவும், ஜாபாலி நாஸ்திக வேஷம் போட்டுச் சொன்னாரே தவிர, அவருடைய வார்த்தைகளிலிருந்தே அவர் நல்ல ஆஸ்திகர் என்பது நன்கு தெரியவருகிறது. ராமரைப்பார்த்து "ஹே ராஜகுமாரனே! வெகு மதிப்புள்ள ராஜபோகங்களை அனுபவித்துக்கொண்டு அயோத்தியில் உத்ஸாகமாக இரு" என்று சொல்லும்போது தான் நாஸ்திகவாதம் செய்து பரலோகம் இல்லை என்று சொல்லுகிறோமே என்பதை மறந்து "எவ்விதம் ஸ்வர்க்கலோகத்தில் இந்திரன் உத்ஸாகமாக இருந்து வருகிறானோ அதேமாதிரி நீயும் இருந்துவா" என்று சொல்லுகிறார். அவருக்கு ஸ்வர்க்கத்தில் நம்பிக்கை இல்லையானால் இந்த த்ருஷ்டாந்தம் எப்படிச் சொல்ல முடியும்?

राजभोगाननुभवन् महार्हान् पार्थिवात्मज ।
विहर त्वं अयोध्यायां यथा शक्रस्त्रिविष्टपे ॥ ,, (9)

இவர் இப்படி நாஸ்திக வாதம் செய்தும், ராமர் தன்னுடைய புத்தியைக் கொஞ்சமேனும் தளரவிடாமல் "தாங்கள் எனக்குப் பிரியத்தைச் செய்யவேண்டுமென்பதற்காக இவ்விதம் சொன்னீர்கள்; செய்யக்கூடாத காரியத்தைச் செய்யவேண்டியது போலவும், அபத்யமாயிருப்பதை பத்யம் போலவும் சொன்னீர்கள்; வனவாஸம் செய்கிறேனென்று தகப்பனாரிடம் பிரதிக்ஞை செய்து

விட்டு இப்பொழுது தகப்பனுருடைய வார்த்தையை தள்ளிவிட்டு பரதன் சொல்லுகிறதை எப்படிக் கேட்க முடியும்?" என்று பலவிதமாக தர்மத்தினுடைய ஸ்வரூபத்தையும், ஸத்யத்தின் மேன்மையையும் விஸ்தாரமாக எடுத்துச் சொல்லுகிறார்:—

भवान् मे प्रियकामार्थं वचनं यदिहोक्तवान् ।
अकार्यं कार्यसंकाशं अपथ्यं पथ्यसंमितम् ॥ ,, 109 (2)

कथं ह्यहं प्रतिज्ञाय वनवासमिमं गुरौ ।
भरतस्य करिष्यामि वचो हित्वा गुरोर्वचः ,, ,, (24)

அவ்விதம் சொல்லும்போது தன்னிடத்தில் எவ்வளவு பிரியம் வைத்திருந்தாலும் இந்தப் பெரியவர் நாஸ்திக வாதம் செய்யலாமா என்று அவரைக் கண்டிப்பதற்குப் பதிலாக "இவ்விதம் விஷமமான புத்தியோடு கூடி தர்ம மார்க்கத்திலிருந்து விலகி நாஸ்திகனாக நடந்துகொள்ளும் தங்களை என் பிதா மந்திரி ஸபையில் வைத்துக்கொண்டு இருக்கிறாரே என்று அவரைத்தான் நிந்திக்கவேண்டும்" என்று சொல்லுகிறார்:—

निन्दाम्यहं कर्म पितुः कृतं तद्
यस्त्वामगृह्णाद्विषमस्थबुद्धिम् । (33)

அதைக்கேட்டு ஜாபாலியே "ஹேராமா! உன்னைத் திருப்பி அழைத்துக்கொண்டு போகவேண்டும், உன்னை எப்படியாவது ஸமாதானப் படுத்தவேண்டும் என்பதற்காகத்தான் நான் இவ்விதம் சொன்னேன்" என்கிறார்.

निवर्तनार्थं तव राम कारणात्
प्रसादनार्थं च मयैनदीरितम् (39)

ஜாபாலியினுடைய மனோபாவம் இவ்விதம்தான் என்பதை வஸிஷ்டரும் உறுதிப்படுத்துகிறார்—"ஜாபாலிக்கும் இந்த லோகத்தினுடைய போக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் உன்னைத் திருப்புவதற்காக இவ்விதம் சொன்னார்."

जाबालिरपि जानीते लोकस्यास्य गतागतिम् ॥
निवर्तयितुकामस्तु त्वामेतद्वाक्यमुक्तवान् ,, 110 (1,2)

பரதன் சித்ரகூட பர்வதத்திற்கு வந்த உடனேயே அவனிடம் குசல ப்ரச்னம் கேட்கிற வியாஜத்தில் ராமர் ராஜதர்மம் பூராவையும் எடுத்துச் சொல்லி இருக்கிறார்; அதில் "நீ நாஸ்திக வாதம் செய்யும் பிராஹ்மணர்களுக்கு இடம் கொடுக்காமல் இருக்கிறாயா? அவர்கள் விஷயம் தெரியாமலே பண்டிதர்கள் என்று நினைத்துக்கொண்டு அனர்த்தத்தையே செய்யக் கூடியவர்கள்; நாம் நடந்து கொள்ள வேண்டியதை போதிப்பதற்கு முக்கியமான தர்ம சாஸ்திரங்கள் இருக்கும்போது வெறும் யுக்தியில் புத்தியைச் செலுத்தி அர்த்தமில்லாத பேச்சையே பேசுவார்கள்" என்று சொல்லியிருக்கிறார்:—

कच्चिन्न लौकायतिकान् ब्राह्मणांस्तात सेवसे ।
अनर्थकुशला ह्येते बालाः पण्डितमानिनः ॥

धर्मशास्त्रेषु मुख्येषु विद्यमानेषु दुर्बुधाः ।
बुद्धिमान्वीक्षिकीं प्राप्य निरर्थं प्रवदन्ति ते ॥ ,, 100 (38,39)

இந்த கோஷ்டியில் ஜாபாலியும் சேர்ந்துவிட்டாரோ வென்று ராமர் கண்டிக்க ஏற்பட்டது. தவிரவும் ஜாபாலி நன்கு தர்மத்தை அறிந்திருந்தும் கூட ஸமயத்திற்குத்

தக்கவாறு யுக்தி வாதத்தை எடுத்துச் சொன்னது உசித மில்லை யென்பதினாலேயே ராமருக்குக் கோபம் ஏற்பட்டு வஸிஷ்டர் ஸமாதானம் செய்யவேண்டியிருந்தது. தைத்திரீய உபநிஷத்தில் தர்ம விஷயமாக அபிப்பிராயம் சொல்ல வேண்டியவர்கள் தர்ம காமர்களாக, அதாவது தர்மத்திலேயே ஈடுபட்டவர்களாக, இருக்கவேண்டு மென்று சொல்லியிருக்கையில் தர்மம் எடுத்துச்சொல்ல வேண்டிய ஸந்தர்ப்பத்தில் தன்னுடையவோ கேட்கிறவர்களுடையவோ திருப்தியை உத்தேசித்துச் சொல்லுவதானால், அது கொஞ்சமேனும் நியாயமில்லையென்பதை ராமர் எடுத்துக் காட்டியிருக்கிறார். சொல்லுகிறவர் எவ்வளவு பெரியவராக இருந்தபோதிலும், தர்மத்திற்கு விருத்தமாயிருந்ததேயானால் அதைக் கண்டிக்கவேண்டியது நியாயம் என்பதையும் தன் வார்த்தையினாலும், நடத்தையினாலும் ராமர் நன்கு காட்டுகிறார்.

3. ஸுமந்திரர்.

தசரதருடைய ராஜ்ய நிர்வாஹ ஸபையில் ரித்விக்குகளாகச் சிலரும் ஆலோசனை சொல்லக்கூடிய மந்திரிகளாகச் சிலரும் மஹாராஜருக்கு ஸமீபத்தில் இருந்து எப்பொழுதும் ராஜகார்யத்திலேயே ஈடுபட்டவர்களாக எட்டு அமாத்யர்களும் இருந்ததாகச் சொல்லப்பட்டிருப்பதில் ஸுமந்திரர் அந்த அமாத்ய கோஷ்டியில் சேர்ந்தவர். இந்தஸ்தானம் தவிர அரசனுடைய மஹிமையை எடுத்துச்சொல்லக்கூடிய ஸ்துதி பாடகராகவும் இருந்து வந்தபடியால் அவருக்கு ஸூதர் என்ற ஸ்தானமும் உண்டு. இதுவும் தவிர மஹாராஜனுடைய ரதத்தை ஓட்டும் ஸாரதியாகவும் இருந்து வந்தார். மற்ற மந்திரிகளைவிட இவருக்கு அரண்மனையில் அதிகமான ஸ்வாதந்திரியம் உண்டு. அதனால் மற்றவர்கள் போவதற்கு ஸங்கோசப்படக்கூடிய அந்தபுரத்திற்கும் இவர் ஸ்வாதீனமாய்ப் போய்வருவார். தவிரவும் அரசனிடம் விசேஷமான

அபிமானத்தோடு கூடினவர். அவர் தான் ரிச்யசிருங்கரை அழைத்துக்கொண்டுவந்து புத்திர காமேஷ்டி செய்ய வேண்டுமென்று ஆலோசனை சொன்னவர்.

ராமருக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதாகத் தீர்மானமானவுடன் தசரதர் ஸுமந்திரரையே அனுப்பி ராமரை அழைத்துவரச் சொல்லுகிறார். பிற்பாடு பட்டாபிஷேகத்திற்கு உத்தேசித்த தினத்தில் காலையில் அவரையே போய்ராமரை அழைத்துவருமபடி சொல்லுகிறார். அதன் பிற்பாடு ராமர் காட்டிற்குப் போவதென்று தீர்மானமானபிறகும் தசரதர் ஸுமந்திரரைக் கூப்பிட்டு ரதத்தை எடுத்துக்கொண்டு ராமரை ராஜ்யத்திற்கு வெளியில் கொண்டுபோய் விடும்படி சொல்லுகிறார். அவ்விதம் ஸுமந்திரர் ரதத்தை ஓட்டிக் கொண்டு போகும்போது நடு வீதியில் தசரதர் வந்து நின்றுகொண்டு 'நிறுத்து, நிறுத்து' என்று சொல்லுகிறார். போ, போவென்று ராமர் சொல்லுகிறார். அப்பொழுது ஸுமந்திரருடைய மனம் ஒரு ரதத்தின் முன் சக்கரத்திற்கும் பின் சக்கரத்திற்கும் இடையில் அகப்பட்டுக் கொண்ட ஒரு பிராணியைப்போல் ஸங்கடப்பட்டது.

तिष्ठेति राजा चुक्रोश याहि याहीति राघवः ।
सुमन्त्रश्च बभूवात्मा चक्रयोरिव चान्तरा ॥ அயோ. 40 (41)

அப்பொழுது எந்த யஜமானர் ராமரை அழைத்துப் போ என்று சொன்னாரோ அதே யஜமானர் இப்பொழுது போகாதே என்று சொல்லும்போது அதைக் கேட்க வேண்டிய கடமை ஸுமந்திரருக்கு இல்லையா? ராமர் எப்படியும் தசரதருடைய ஆளுகைக்குக் கட்டுப்பட்டிருக்கிறபடியால், தசரதருடைய ஆக்ஞைக்கு விரோதமாக ஆக்ஞை செய்ய ராமருக்கு அதிகாரமுண்டா? ராமர் ஆக்ஞை செய்தாலும், தன் எஜமானருடைய வாக்கியத்

திற்கு விரோதமாக ராமர் சொல்வதைக் கேட்கவேண்டிய கடமை ஸுமந்திரருக்கு உண்டா? அந்த ஸமயத்தில் ராமருடைய வாக்கியத்திற்கே மதிப்புக் கொடுத்துக் கூடவந்த ஜனங்களை நிறுத்திவிட்டு ஏற்கனவே போய்க் கொண்டிருக்கிற குதிரைகளை வேகமாகப் போகும்படி செய்தார்.

रामस्य स वचः कुर्वन् अनुज्ञाप्य च तं जनम् ।
व्रजतोऽपि हयान् शीघ्रं चोदयामास सारथिः ॥ (48)

ராமரைக் காட்டிற்கு அழைத்துப்போகும்படி தசரதர் சொன்னது தனக்கு இஷ்டமில்லாமல்போனாலும் தர்மத்திற்குக் கட்டுப்பட்டுச் சொன்ன வார்த்தை; பிற்பாடு ரதத்தை நிறுத்து என்று சொன்னது சோகத்துடன் சொன்னபடியால் அது ஆக்ஞை ஆகாது. அதை மீறி நடந்தால் ஸுமந்திரருக்கோ, ராமருக்கே எவ்வித தோஷமும் ஏற்படக்கூடியதில்லை; ஆகையினால் ராமர் அவரைப் பார்த்து ரதத்தை ஓட்டு என்று சொன்னதைக் கேட்டுக் கொண்டு ஓட்டினது தர்ம விருத்தமாகாது.

ஆனால் தசரதர் யஜமானன் என்கிற முறையில் 'நான் நிறுத்து' என்று சொல்லியும் நீ ஏன் ஓட்டிக்கொண்டு போனாய் என்று ஸுமந்திரரிடம் கோபித்துக்கொள்ளலாம். அவ்விதம் கோபித்துக்கொண்டால் என்ன ஸமாதானம் சொல்லுவது என்று தீர்மானிக்க முடியாமல் ஸுமந்திரர் இருக்கும்போது ராமர் அதற்கு வழி சொல்லிக்கொடுக்கிறார். "ராஜா உம்மை வைதாலும் நீங்கள் சொன்னது என் காதில் விழவில்லையென்று பதில் சொல்லி விடலாம்" என்கிறார்.

இந்த ஸம்பவத்திலிருந்து ராமரே ஸுமந்திரரைப் பொய் சொல்லும்படி சொன்னதாக ஏற்படவில்லையா என்ற ஸந்தேஹம் ஏற்படக்கூடியது. ராமர் தான் ஏன் அப்படிச் சொன்னார் என்பதற்கும் ஸமாதானம் வேண்டும். ஸத்ய ஸந்தனென்று பிரஸித்தியடைந்த ராமர் இவ்விதம் பொய் சொல்லும்படி சொல்லிக் கொடுக்கலாமா? அவர் பொய் சொல்லிக் கொடுத்தாலும் அதை ஏற்றுக்கொண்டு ஸுமந்திரர் ரதத்தை ஓட்டலாமா? என்று இவ்வாறு பல ஸந்தேகங்கள் ஏற்படக்கூடியது தான். நாம் தர்மஸூக்ஷ்மத்தை அறியாமல் இருக்கும் வரை இவ்வித ஸந்தேஹங்கள் வரக்கூடியது ஸஹஜமே. ராமர் தருமத்தைப்பற்றி பின்னால் ஒரு ஸந்தர்ப்பத்தில் சொல்லும் போது 'ஸத்துக்களுடைய தர்மமானது வெகு ஸூக்ஷ்மம்; அறிவதற்கு மிகவும் சிரமம்; ஸர்வபிராணி களுக்கும் ஹ்ருதயத்தில் இருந்துவரும் ஆத்மாவானவர் எது சுபம் எது அசுபம் என்பதை அறிவார்."

सूक्ष्मः परमदुर्ज्ञेयः सतां धर्मः प्लवङ्गम ।

हृदिस्थः सर्वभूतानां आत्मा वेद शुभाशुभम् ॥ கிஷ். 18 (15)

என்று எடுத்துக்காட்டுகிறார். ராமர் காட்டிற்குப் புறப் பட்டுப் போகவேண்டியதுதான் என்று தீர்மானமாகிப் புறப்பட்டபிற்பாடு தசரதர் நில் என்று சொன்னபடி ராமரும் ஸுமந்திரரும் ரதத்தை நிறுத்தி விட்டால் அதனால் தசரதருக்கு ஏதேனும் ஸுகம் ஏற்படக்கூடியதா என்பதை கவனித்துப் பார்த்தால் தசரதருக்கு துக்கம் தான் மேல் மேல் ஏற்படும் என்பது நன்கு விளங்கும் அவராக மனப்பூர்வமாக புறப்பட்டுப் போகலாமென்று சொல்லப்போவதில்லை. ஆகையால் தாமதிக்கத் தாம திக்க அவருடைய துக்கத்தையே விருத்தி பண்ணினதாக ஆகும். புண்ணியம், பாபம், வை இரண்டின் ஸாமான் யமான லக்ஷணமே,

परोपकारः पुण्याय पापाय परपीडनम् ॥

"பிறருக்கு உபகாரம் செய்வதே புண்யம். பிறருக்கு ஹிம்ஸை உண்டு பண்ணுவதே பாபம்" என்றிருப்பதால் ஏற்கனவே தசரதருக்கு ஏற்பட்ட துக்கத்தை நீடிக்கச் செய்து விருத்தி பண்ணினால் அது மிகவும் பாபமாகும். அவ்வித பாபத்தைச் செய்வது தர்மமா? நீங்கள் சொன்னது காதில் விழ வில்லையென்று சொல்லுவது பிசகா? என்று ஆலோசிக்கும் பொழுது தசரதருக்கு அதிக துக்கத்தை உண்டு பண்ணமல் இருப்பதே நியாயம் என்று ராமர் தீர்மானித்து,

चिरं दुःखस्य पापिष्ठं इति रामस्तमब्रवीत् ॥ அயோ. 40 (47)

"துக்கத்தை நீடிக்கச் செய்வது மிகவும் பாபம்" என்பதை ஸுமந்திரருக்கு எடுத்துச் சொல்லுகிறார்.

ராமர் முதலானவர்களை கங்காதீரத்தில் கொண்டு போய்விட்ட ஸமயத்தில் குஹன் வந்து பலவிதமான பக்ஷ்ய போஜ்யாதிகளை ராமருக்கு அர்ப்பணம் செய்தான். அப்பொழுது அவனைப்பார்த்து "நீ ப்ரீதியோடுகூட இவ்வளவு கொண்டுவந்தது உன்னிடமே இருக்கட்டும்; நான் பிரதிக்ரஹம் வாங்கும் நிலையில் இல்லை; இக்குதிரைகளுக்கு மாத்திரம் ஏதேனும் தீனி கொடுத்தால்போதும்; வேறு ஒன்றும் வேண்டாம்; இவ்வளவினலேயே நான் பூஜிக்கப் பட்டவனுக ஆவேன்; இக்குதிரைகள் என் தகப்பனர் தசரத மஹாராஜனுக்கு மிகவும் பிரியமானவை; அவைகளுக்கு வேண்டியதைச் செய்துகொடுத்தால் நான் அர்ச்சிக்கப்பட்டவனுக ஆவேன்" என்று சொல்லுகிறார். குதிரைகளிடத்திலேயே இவ்வளவு அபிமானம் வைத்திருந்த ராமருக்கு ஸுமந்த்ரரிடம் விசேஷமான அபிமானம் இருந்திருப்பது ஆச்சர்யமில்லை. அப்படியே அக் குதிரைகளும் ராமரிடத்தில் அபிமானத்துடன் இருந்தவைகள் என்பதை ஸுமந்திரர் எடுத்துச் சொல்லுகிறார். "என்னுடைய ஆளுகைக்குள் இருந்தபோதிலும் உங்க

னுடைய பந்து ஜனங்களையே சுமந்து பழக்கமுள்ள இந்த உத்தமமான குதிரைகள் நீங்கள் இல்லாத ரதத்தை எப்படி அயோத்திக்கு இழுத்துக்கொண்டு போகும்?" என்கிறார்.

मम तावन्नियोगस्थाः त्वद्बन्धुजनवाहिनः ।
कथं रथं त्वया हीनं प्रवक्ष्यन्ति हयोत्तमाः ॥ ,, 52 (47)

இப்படியிருக்க ராமரை விட்டு விட்டு ஸுமந்திரர் திரும்பிப்போக மனமில்லாமல் சோகத்தினால் பீடிக்கப் ராமருடன் தானும் காட்டுக்கு வருவதாகச் சொல்லி பட்டு அநுமதி கேட்கிறார். "நான் இவ்விதம் கெஞ்சியும் என்னை விட்டுவிட்டே போவதாயிருந்தால் அந்த க்ஷணத்திலேயே ரதத்தோடுகூட நெருப்பில் விழுந்துவிடுவேன். உங்களுக்குக் காட்டில் தபஸ் செய்வதற்கு விக்னம் செய்ய கூடிய பிராணிகளை ரதத்தைக்கொண்டு விரட்டுகிறேன்; உங்களை விட்டுப் பிரியாமல் காட்டிலேயே இருக்க ஆசைப் படுகிறேன்; தபஸ் செய்யவேண்டும்; இக்குதிரைகளும் காட்டில் இருக்கும் உங்களுக்கு ஸேவை செய்யுமே யானால் உத்தமமான கதியை அடையும்; உங்களுடைய சுச்ரூஷையை காட்டிலிருந்து கொண்டு தலையால்தாங்கி செய்து வருகிறேன்; எனக்கு அயோத்தியும் வேண்டாம்; தேவலோகமும் வேண்டாம். எனக்கு ஒரே மனோரதம் தான்; வனவாஸம் முடிந்த பிற்பாடு இந்த ரதத்தில் மறுபடியும் தங்களை ஏற்றிக்கொண்டு அயோத்தியாபுரிக்குத் திரும்ப வேண்டும்; நான் என் யஜமானனுடைய புத்ரன் நடக்கும் மார்க்கத்தில் இருந்துவருகிறேன்; தாங்கள் ஸேவகர்களிடத்தில் வாத்ஸல்யமுள்ளவர்; நான் உங்களிடத்தில் பக்தியோடு கூடியவன்; ஸேவகன் நிலையிலிருப்பவன்; ஆகையால் என்னைப்பரித்யாகம் செய்யக்கூடாது' என்று பலவிதமாகக் கெஞ்சுகிறார்.

ஸுமந்த்ரர் ராமரிடத்தில் வைத்திருந்த ப்ரீதியினால் இவ்வளவு தூரம் சொன்ன போதிலும் ராமர் அதற்கு

இடம் கொடுக்கவில்லை. ஸுமந்த்ரர் தசரதருக்கேஸேவகர், அவர் 'ராமரைக்காட்டில் கொண்டுபோய் விட்டுவா' என்று மாத்திரம் சொல்லியிருக்கும்போது அவர் ராமருடனேயே காட்டில் இருந்துவிட்டால் தன்னுடைய தர்மத்திலிருந்து விலகினவனாக ஆவான், அவருடைய வேண்டுகோளின்படி ராமர் ஸம்மதித்திருந்தால். அவர் தர்மத்திலிருந்து விலகுவதற்கு ராமர் அனுமதி கொடுத்ததாக ஆகும். இவ்விரண்டு வித தோஷத்திற்கும் இடமில்லாமல் அவரை ஸமாதானப் படுத்தி ஊருக்குப் போகும்படியே செய்துவிடுகிறார். ராமருக்கு ஸேவகர்களிடம் தயை இருந்தபடியினாலேயே ஸேவகர் தன்னுடைய கடமையிலிருந்து தவறக்கூடாது என்று அவர் எண்ணினார். தன்னிடத்தில் ஸுமந்த்ரருக்குள்ள அபிமானத்தையும் ஒப்புக்கொண்டு, ஆனால் அவர் எஜமானருக்குக் கட்டுப் பட்டவர் என்பதையும் எடுத்துக் காட்டி "என்னுடைய பிரியத்தை உத்தேசித்தும். மஹா ராஜாவினுடைய பிரியத்தை உத்தேசித்தும் நீ ரதத்துடன் அயோத்யா பட்டணத்திற்குத் திரும்பிப்போ" என்று சொல்லுகிறார்.

मम प्रियार्थं राज्ञश्च सरथस्त्वं पुरीं व्रज ॥ (24)

ஆனால் நீ என்னுடன் வந்தால் உனக்கு தோஷமுண்டு என்பதை எடுத்துக்காட்டாமல் "நீ திரும்பிப் போனால் தான் நான் காட்டிற்குப் போய்விட்டேனென்று கைகேயிக்கு நம்பிக்கை வரும். தார்மிகரான மஹாராஜாவிடம் அவள் ஸந்தேஹப்படாமல் இருப்பாள்" என்று காரணம் கூறுகிறார்-

இவ்விதம் சொன்னபோதிலும் தன்னுடைய முக்ய அபிப்ராயம் அவர் யஜமானருடைய கட்டளைக்கு விரோதமாக நடக்கக்கூடாது என்பதுதான் என்று நன்கு தெளிவாகிறது.

4. ஸுக்ரீவன்

ஸுக்ரீவனைப்பற்றிராமர் முதலில் தெரிந்துகொண்டது கபந்தனிடமிருந்து. அவன் ஸுக்ரீவனைப்பற்றிச் சொல்லும்போது "ஸத்யஸந்தன்; விநயத்தோடு கூடினவன்; தைர்யசாலி; புத்திசாலி; பெருந்தன்மையுள்ளவன்; ஸாமர்த்தியமுள்ளவன்; காம்பீர்யத்தோடு கூடியவன்; காந்தியோடு கூடினவன்; விசேஷமாக பலத்துடனும் பராக்ரமத்துடனும் கூடினவன்" என்று சொல்லுகிறான்.

सत्यसन्धो विनीतश्च धृतिमान् मतिमान् महान् ॥
दक्षः प्रगल्भो द्युतिमान् महाबलपराक्रमः । அர. 72 (13,14)

அவனைத்தேடிப்போகும்போதும் ராமர் "ஸமீபத்தில் ரிச்யமூககிரி விளங்குகிறது; அங்குதான் தர்மாத்மாவான ஸூர்யபுத்ரன் ஸுக்ரீவன் வஸிக்கிறான்".

ऋश्यमूको गिरिर्यत्र नातिदूरे प्रकाशते ।
यस्मिन् वसति धर्मात्मा सुग्रीवोऽंशुमतः सुतः। ,, 75 (7)

என்று சொல்லுகிறார். இவ்விதம் ஸுக்ரீவனைப்பற்றி சிலாக்யமான எண்ணத்துடனேயே ராமர் ஸுக்ரீவனைத் தேடிப்போகிறார். ஆனால், ஸுக்ரீவனுக்கு வாலியினிடத்தி லிருந்த பயத்தினாலும், வாலியினுடைய பராக்ரமத்தை நன்கு அறிந்தவனானதினாலும், ராமருடைய சக்தியைப் பற்றி, பரீக்ஷிக்கவேண்டுமென்று தோன்றிற்று. ராமர் வாலியை ஸம்ஹாரம் செய்த பிற்பாடு ஸுக்ரீவனை ராஜ்யாபிஷேகம் செய்துகொள்ள கிஷ்கிந்தாபுரிக்குப் போகும்படி சொல்லுகிறார். அப்போழுது "மழைகாலமாக நான்கு மாதங்கள் இருக்கும்; அது ப்ரவிருத்தி செய்வதற்குத் தகுந்த ஸமயம் அல்ல; உனது ஊருக்குள் நீ

போ; கார்த்திகம் வந்தவுடன் ராவணனைக் கொல்லு வதற்கு யத்னம் செய்" (கிஷ். அத். 26) என்று சொல்லி அனுப்புகிறார். அப்படியே ஸுக்ரீவன் பட்டாபிஷேகம் செய்துகொண்டு ராஜபோகங்களை அனுபவித்து வருகை யில், ராமர் குறிப்பிட்ட காலம் தவறிப் போகுமே என்று நினைத்து ஸுக்ரீவனைப் பார்த்து ஹநுமார் அவனுடைய கடமையை ஞாபகப்படுத்துகிறார். உடனே ஸுக்ரீவன் தன்னுடைய ஸேனாதிபதி நீலனைக் கூப்பிட்டுப் பல திக்கு களிலுமுள்ள தன்னுடைய ஸைன்யத்தைச் சேர்ந்த எல்லாரும் பதினைந்து நாட்களுக்குள் வந்து சேரவேண்டு மென்று கண்டிப்பாக ஆக்ஞை செய்கிறான்.

(கிஷ். அத். 29)

இவ்விஷயம் ராமர் அறியாததினால்; ஸுக்ரீவன் விஷய ஸுகத்தில் ஈடுபட்டு ஸத்யத்திலிருந்து தவறிவிட் டான் என்று நினைத்து லக்ஷ்மணனை ஸுக்ரீவனிடம் அனுப்புகிறார். லக்ஷ்மணனிடம் "ஸுக்ரீவனிடம் போய் என்னுடைய கோபத்தின் ஸ்வரூபத்தை எடுத்துச்சொல். மேலும், வாலி அடிபட்டுப்போன மார்க்கம் மூடப்பட வில்லை; நீ வாலியை அனுஸரிக்காதே; உன் பிரதிக்ஞை யைக் காப்பாற்று. என்னுடைய அம்பினால் வாலி ஒரு வனையே கொன்றேன்: ஸத்யத்திலிருந்து தவறின உன்னை பந்துக்களோடு சேர்த்துக் கொன்று விடுவேன்; என்று அவனிடம் சொல்; இதுதான் நான் உனக்குக் கொடுக்கும் காரியம்; அதை ஸாதிப்பதற்கு இன்னும் என்னவெல் லாம் சொல்ல வேண்டுமோ அதையெல்லாம் சொல் என்று சொல்லுகிறார். (கிஷ். அத். 30)

இதைக்கேட்ட லக்ஷ்மணன் தன்னை இவ்விதம் சொல்லச்சொல்லி இருக்கிறார் என்பதை மறந்து வெகு கோபத்துடன் ஸுக்ரீவனை இப்பொழுதே கொன்று விடுவதாகவே சொன்னான்.

அதைக்கேட்டு ராமர் அவனை ஸமாதானப்படுத்தி "உன்னைப்போல் இருக்கிறவர்கள் இவ்விதம் பாபம் செய்யக் கூடாது; கோபம் வந்தாலும் அதைப் பெருந் தன்மையினால் அடக்குகிறவனே புருஷ சிரேஷ்டனான வீரனாக ஆவான்; நீ ஸுக்ரீவனிடம் காலம் கடந்துவிட்ட தென்பதை மிகவும் சாந்தமான வார்த்தைகளினாலேயே சொல். பருஷமான வார்த்தைகளை உபயோகிக்காதே" என்று சொல்லுகிறார். (கிஷ். அத். 31)

*அவ்விதம் சொல்லி அனுப்பியும்கூட லக்ஷ்மணன் கோபம் அடங்காமலே ஸுக்ரீவனிடம் போகிறான். ஸுக்ரீவன் பயந்து நிற்கும் ஸமயம் தாரையே முன் வந்து ஸமாதானம் சொல்லுகிறாள். "ஸுக்ரீவன் நன்றி மறந்தவனுமல்ல; அயோக்யனுமல்ல; க்ரூரனுமல்ல; பொய் சொல்லுகிறவனுமல்ல; ஏமாற்றுகிறவனுமல்ல; ராமர் செய்த உபகாரத்தை மறந்தவனுமல்ல".

"உங்களுக்கு ஸஹாயம் செய்வதற்காக யுத்தத்தை உத்தேசித்து அநேகம் வானர சிரேஷ்டர்களை அழைத்து வரும்படி போயிருக்கிறார்கள். அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதால் ஸுக்ரீவன் வெளியில் வரவில்லை; இன்று அவர்கள் வந்து சேரவேண்டும்; ஆகையால் கோபத்தை விட்டுவிடும்." என்று தாரை சொல்லுகிறாள். இவ்விதம் மிக அடக்கத்துடன் தர்மத்தைவிட்டு விலகாமல் தாரை சொன்ன வார்த்தையைக் கேட்டு ஸ்வபாவத்திலேயே மிருதுவான மனேஸாடு கூடிய லக்ஷ்மணன் அவ்வார்த்தையை அப்படியே கிரஹித்துக் கொண்டான்.

इत्युक्तस्तारया वाक्यं प्रश्रितं धर्मसंहितम् ।

मृदुस्वभावः सौमित्रिः प्रतिजग्राह तद्वच : ॥ கிஷ். 36 (!)

அதன் பிறகுதான் ஸுக்ரீவன் பயம் நீங்கிப் பேச ஆரம்பிக்கிறான், "நான் ஏதேனும் ஸ்வாதீனமாகவோ அபிமானத்தினாலேயோ தவறி இருக்கும் விஷயத்தில் ஸேவகனான என் தவறுதலை மன்னிக்கவேண்டும்; உலகத்தில் தவறு செய்யாத மனுஷர்களே கிடையாது."

यदि किंचिदतिक्रान्तं विश्वासात् प्रणयेन वा
प्रेष्यस्य क्षमितव्यं मे न कश्चिन्नापराध्यति ॥ (11)

என்று மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறான். ஸுக்ரீவன் காமத்திற்கு வசமாயிருக்கும்பொழுதே ராமருடைய காரியத்தை நிறைவேற்றவேண்டுமென்று முன்னாலேயே ஏற்பாடு செய்திருக்கிறான் என்ற விஷயத்தைத் தாரை மூலமாக லக்ஷ்மணன் தெரிந்துகொண்டான்.

ஆகையினால் ஸுக்ரீவன் தர்மமறிந்தவன், நன்றியுள்ளவன் என்பதை லக்ஷ்மணன் நன்கு உணர்ந்து, தான் பருஷமாகச் சொன்னதற்குத் தன்னை மன்னிக்க வேண்டும் மென்று கேட்டுக்கொள்கிறான்.

मया त्वं परुषाण्युक्तः तच्च त्वं क्षन्तुमर्हसि ॥ ,, ,, (20)

இவ்விதம் ஸுக்ரீவன் ப்ரதிக்ஞையிலிருந்து தவறினதாக ராமர் நினைத்த ஸமயத்தில் சொல்லி அனுப்பியதிலிருந்து தன்னுடைய நண்பனுக்கு தோஷம் ஏற்படக் கூடாதென்பதில் அவருக்கு எவ்வளவு அக்கறையிருந்தது என்பது வெளியாகிறது.

பின்னால் லங்கைக்குப்போய் ஸுவேல பர்வதத்தில் ஏறி ஸுக்ரீவனும் ராமனும் அங்கிருந்து த்ரிகூட மலையின் உச்சியிலுள்ள லங்கையில் ஒரு கோபுரத்தின் மேல் இருந்த ராவணனைப் பார்த்தவுடன் ஸுக்ரீவன் ராமரிடத்திலாவது மற்றவர்களிடத்திலாவது ஒன்றும்

சொல்லாமல் திடீரென்று தாவிக்குதித்து ராவணனுடன் த்வந்த்வயுத்தம் செய்கிறான். பிறகு ராவணன் மாயா பலத்தைக்காட்ட ஆரம்பிக்கிறான் என்று தெரிந்தவுடன் ராவணனை ஏமாற்றிவிட்டு ராமர் இருக்குமிடம் வந்துவிடுகிறான். அப்பொழுது ராமர் அவனை ஆலிங்கனம் செய்துகொண்டு "என்னுடன் ஆலோசனை செய்யாமல் நீ இதுமாதிரி ஸாஹஸம் செய்தாய்; அரசர்களாயிருப்பவர்கள் இவ்விதம் செய்யக்கூடாது; என்னையும் ஸைன்யத்தையும் விபீஷணனையும் கவலைப்படும்படி செய்து விட்டாய்; இது மாதிரி ஆலோசிக்காமல் இனி இவ்வித காரியம் செய்யாதே" என்று எடுத்துச்சொல்கிறார்.

असंमन्त्र्य मया सार्धं तदिदं साहसं कृतम् ।
एवं साहसकर्माणि न कुर्वन्ति जनेश्वराः ॥

संशये स्थाप्य मां चेदं बलं च सविभीषणम् ।
इदानीं मा कृथा वीर एवंविधमचिन्तितम् । யுத்த. 14 (2-4)

இவ்விதம் ஸுக்ரீவன் செய்தது தர்ம சாஸ்திரத்திற்கு விரோதமென்று சொல்லுவதற்கு இடமில்லாமல் போனாலும், ராஜதர்மத்திற்கு விரோதம் என்பதை ராமர் எடுத்துக் காட்டுகிறார்.

5. விபீஷணர்.

விபீஷணரைப்பற்றி முதலாவதாக ராமர் கேள்விப்பட்டது சூர்பணகை மூலமாக. அவள் "விபீஷணனோ என்றால் தர்மாத்மா; அவனிடத்தில் ராக்ஷஸ நடத்தைகள் கிடையாது"

विभीषणस्तु धर्मात्मा न तु राक्षसचेष्टितः ॥ அர. 17 (24)

என்கிறாள். பிற்பாடு அவருடைய ஸ்வபாத்தை ஹநுமார் நேரில் பார்த்திருக்கிறார். விபீஷணர் ராமரிடம் வந்து சரண மடையும் ஸமயம் அவரைச் சேர்த்துக்கொள்ளவேண்டியது தான் என்று ஹநுமார் சொல்கிறார். ஸுக்ரீவன் "விபீஷணன் துஷ்டனாக இருந்தாலும், துஷ்டனாக இல்லா விட்டாலும் இந்த ஸமயத்தில் தமயனை விட்டு விட்டு வந்தவனை நாம் எப்படி நம்புகிறது" என்று சொல்லுகிறான்.

सुदुष्टो वाऽप्यदुष्टो वा किमेष रजनीचरः ।
ईदृशं व्यसनं प्राप्तं भ्रातरं यः परित्यजेत् ॥ யுத்த. 18 (5)

அப்பொழுதுதான் ராமர் சரணாகத ரக்ஷணத்தின் மஹிமையைப் பற்றி எடுத்துச்சொல்லி விபீஷணரைச் சேர்த்துக்கொள்ள வெண்டியதுதான் என்று சொல்லுகிறார். விபீஷணர் ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டு சரணாகதி பண்ணினாரா? அல்லது எவ்வித ஆசையுமன்னியிலேயே ராமரிடம் வந்தாரா? என்கிற விஷயத்தைப்பற்றி விசாரிப்பது இங்கே பிரகிருதமில்லை. அவர் வந்த பிற்பாடு லங்கையிலுள்ள ஸ்திதியைப்பற்றி ராமருக்கு எடுத்துச் சொல்லியும், ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு உபாயம் சொல்லியும் ராவணனுடைய ஸைன்யத்திலுள்ள வீரர்களை ஜயிப்பதற்கு வேண்டிய ஸஹாயம் செய்ததுடன், தானே ஆயுதமெடுத்து யுத்தம் செய்தும், முக்யமாக லக்ஷ்மணன் ஜயிப்பதற்கு வேண்டிய ஸகலவித உதவிகளையும் செய்தும், தான் ராமரிடத்தில் மிகவும் ஈடுபட்டு உழைத்தார் என்பதில் ஸந்தேஹமில்லை ராவணன் செய்த காரியம் நியாயமில்லையென்று தனக்குத் தோன்றினபடியால் அவர் பலவிதமாக ராவணனுக்கு எடுத்துச்சொல்லியும் பிரயோஜனமில்லாமல் போய் விட்டதுடன் ராவணன் இவரை மிகவும் துச்சமாகவும்

பேசிவிட்டான். அதிலிருந்து அதர்மத்தில் ஈடுபட்ட ராவணனிடத்தில் அவருக்கு வெறுப்பு ஏற்பட்டது. பிற்பாடு ராவணவதமானவுடன் தன்னை பால்யம் முதல் வளர்த்து வந்த தமையன் இறந்து விட்டார் என்பதைப் பார்த்து அபிமானம் மேலிட்டு புலம்புகிறார். "ராவணன் ஆஹிதாக்னி; மஹா தபஸ்வீ; வேதாந்தமறிந்தவன்; கார்யங்களில் மிகவும் வீர்யமுள்ளவன்! அவனுடைய பிரேதகிருத்யத்தை உங்களுடைய அநுமதியின் பேரில் நான் செய்ய விரும்புகிறேன்."

> एष ह्याहिताग्निश्च महातपाश्च
> वेदान्तगः कर्मसु चाग्र्यवीर्यः।
>
> एतस्य यत् प्रेतगतस्य कृत्यं
> तत् कर्तुमिच्छामि तव प्रसादात् ॥ யுத்த. 112 (24)

என்கிறார். அப்படியே செய்யும்படி ராமரும் சொல்லுகிறார். பிறகு விபீஷணர் ஆலோசித்துத் தமையனார் என்ற அபிமானத்தினால் ஸம்ஸ்காரம்செய்வது ராமருக்குத் திருப்தி கரமாயிருக்குமா என்று ஸந்தேஹித்து இப்பொழுது "தர்மத்தின் வ்ரதத்தை விட்டு க்ரூரனாய், துஷ்டனாய், பொய்யனாய், பிற ஸ்திரீகளைத் தீண்டினவனாய் இருந்தவனுக்கு நான் ஸம்ஸ்காரம் செய்வது நியாயமல்ல; தமையனாராயிருந்தாலும் எனக்கு சத்ரு. எல்லாருக்குமே அஹிதம் செய்வதிலேயே ஈடுபட்டவர்" என்று சொல்லுகிறார்.

> विमृश्य बुद्ध्या धर्मज्ञो धर्मार्थसहितं वचः ॥
>
> रामस्यैवानुवृत्त्यर्थं उत्तरं प्रत्यभाषत ।
> त्यक्तधर्मव्रतं क्रूरं नृशंसमनृतं तथा ॥

नाहमर्होऽस्मि संस्कर्तुं परदाराभिमर्शिनम् ।
भ्रातृरूपो हि मे शत्रुः एष सर्वाहिते रतः ॥ யுத்த. 114 (93-9 )

இதைக்கேட்டு ராமர் ராவணனுடைய குணங்களை எடுத்துச்சொல்லி "நாம் எடுத்தகாரியம் பலித்துவிட்டது. வைரமெல்லாம் மரணத்தோடு தீர்ந்தது; அவருக்கு ஸம்ஸ்காரத்தைச்செய். அவர் உனக்கு எப்படியோ அப்படியே எனக்கும் உண்டு. ஹே, தர்மமறிந்தவரே! உம்மிடமிருந்து விதி பூர்வமாக ஸம்ஸ்காரத்தை அடைவதற்கு ராவணன் மிகவும் உரித்தானவன்; நீயும் யசஸ்வியாக இருப்பாய்"

महात्मा बलसंपन्नो रावणो लोकरावणः ।
मरणान्तानि वैराणि निवृत्तं नः प्रयोजनम् ॥ ,, ,, (101)

क्रियतामस्य संस्कारो ममाप्येष यथा तव ।
त्वत्सकाशाद्दशग्रीवः संस्कारं विधिपूर्वकम् ॥

प्राप्तुमर्हति धर्मज्ञ त्वं यशोभाग्भविष्यसि । ,, ,, 130

என்று சொன்ன பிற்பாடு விதிவத்தாக ஆஹிதாக்னிக்கு ஏற்பட்ட ரீதியில் பித்ருமேத க்ரமமாக கர்மாவை விபீஷணர் நடத்துகிறார். இங்கு ராமரிடத்திலிருந்த விசேஷ அபிமானத்தினால் ராவணனுக்குத் தான் கிரமப்படி செய்ய வேண்டிய உத்தரக்கிரியையிலிருந்து பின் வாங்கும்போது அவனுக்கு தர்மத்தை எடுத்துச்சொல்லி தர்மலோபம் ஏற்படாமல் ராமர் ரக்ஷித்திருக்கிறார்.

ராவணவதம் ஏற்பட்டபிறகு ஸீதையிடம் விருத்தாந்தம் சொல்லும்படி ஹனுமாரை அனுப்பியதில்

அவள் ராமரையும் லக்ஷ்மணனையும் பார்க்கவேண்டு மென்று பதில் சொல்லி அனுப்பினாள். இதைக்கேட்ட வுடன் கொஞ்சம் ஆலோசனை செய்துவிட்டு விபீஷணரை பார்த்து ஸீதையை ஸ்நாநம் செய்வித்து ஆபரணங் களுடன் நல்ல வஸ்திரம் தரித்துகொள்ளச்செய்து அழைத்துவா என்று சொன்னதையனுஸரித்து அப்படியே விபீஷணர் அழைத்து வருகிறார். சீக்கிரமாக அழைத்துவா என்று ராமர் சொன்னபடியால் கையில் பிரம்பு வைத்துக்கொண்டிருந்த தனது வேலைக்காரர் களால் கூட்டத்தை விலக்கச் செய்துகொண்டு அழைத்து வந்தார். அப்பொழுது விலக்கப்படுகிறவர்களுடைய சப்தம் வெகுஜாஸ்தியாக ஏற்பட்டது. உடனே ராமர் விபீஷணரைப்பார்த்து விலக்குவதை நிறுத்தும்படி பரபரப்புடன் சொல்லுகிறார். "என்னை அனுஸரித்தவனே! இந்த ஜனங்களை ஏன் துன்பப்படுத்துகிறாய்? இந்த பிர விருத்தியை விட்டுவிடு; இந்த ஜனங்கள் என்னுடைய சொந்த ஜனங்களாக்கும்" என்று சொல்லுகிறார்.

संरम्भाच्चाब्रवीद्रामश्चक्षुषा प्रदहन्निव ।
विभीषणं महाप्राज्ञं सोपालम्भमिदं वचः ।
किमर्थं मामनादृत्य क्लिश्यतेऽयं त्वया जनः ।
निवर्तयैनमुद्वेगं जनोऽयं स्वजनो मम ॥ யுத்த. 117 (24,25)

இவ்விதம் விபீஷணர் ராமருடைய பக்தர்களிடத் திலேயே அதிகாரம் செலுத்த ஆரம்பித்ததை ராமர் உடனே தடுத்துவிட்டார்.

ராமர் மற்றவர்களுக்கு தர்ம லோபம் ஏற்படக்கூடா தென்று எவ்வளவு அக்கறையுடன் கவனித்து ஸமயம் போல் திருத்தியும் கண்டித்தும் வந்தார் என்பதை இது வரை காட்டி வந்தோம். தன் தகப்பனார் தசரதர் முதல் தன் பக்தன் விபீஷணன் வரை எல்லாருமே ஸ்வபாவத்தில்

தார்மிகர்களாகவே இருந்தபோதிலும், சில ஸமயங்களில் தர்ம மார்க்கத்திலிருந்து கொஞ்சம் நழுவக் கூடிய ஸந்தர்ப்பங்கள் வரும்போது கொஞ்சம் நழுவப்பார்த்தார்கள் என்பதை எடுத்துக் காட்டினோம். இவர்கள் யாவரும் தர்மத்திலிருந்து நழுவப்பார்ப்பதற்கு ஒரே காரணம்தான் என்பதை குறிப்பிடவிரும்புகிறேன். இவர்கள் யாவரும் ஸ்ரீ ராமரிடம் வைத்திருந்த அதிசயமான ப்ரீதி தான் அவர்களைத் தடுமாறச் செய்தது. அதை நன்கு உணர்ந்த ராமருக்கு அவர்களைத் தவறவிட்டால் அதனால் ஏற்படும் தோஷத்தில் தனக்கும் பங்கு உண்டு என்பதும் நன்கு தெரியும். தன்னுடைய செல்வாக்குக்குக் கட்டுப்பட்டவர்களோ தன் வாக்குக்கு மதிப்புக் கொடுக்கிறவர்களோ யாராயிருந்தாலும் அவர்கள் கொஞ்சம் பிசகினாலும் எடுத்துச்சொல்லித் திருத்தவேண்டிய பொறுப்பு யாருக்கும் உண்டு. அதிலும் குடும்பத்திலோ, ஊரிலோ, தேசத்திலோ மதிப்புள்ளவராக இருக்கிறவருக்கு இந்தப் பொறுப்பு மிகவும் அதிகம். ராமர் தன்னுடைய தர்மத்தைமாத்திரம் பரிபாலனம் செய்து கொண்டால் போதுமென்று நின்றுவிடாமல், தன்னைச் சேர்ந்தவர்களுடைய சிரேயஸ்ஸை உத்தேசித்து அவர்களிடம் தோன்றக்கூடிய தோஷங்களை நன்கு அறிந்து திருத்திக்கொடுத்ததினால் परदोषवित् (பரதோஷவித்) என்றும் रक्षिता स्वस्य धर्मस्य स्वजनस्य च रक्षिता (ரக்ஷிதா ஸ்வஸ்ய தர்மஸ்ய ஸ்வஜநஸ்ய ச ரக்ஷிதா) என்றும் க்யாதி பெற்றிருந்தார். ராமர் அவ்விதம் கியாதி பெற்றிருந்தார் என்று மாத்திரம் தெரிந்துகொள்ளுவதில் நமக்கு எவ்வித பிரயோஜனமும் இல்லை. ஒவ்வொரு கிருஹஸ்தனுக்கும் அவ்விதப் பொறுப்பு உண்டு என்பதை நன்கு உணர்ந்து தன்னுடைய நித்யவாழ்வில் அப்பொறுப்பை நிறைவேற்றிக்கொண்டு வரவேண்டியதுதான் தர்மம் என்பதை நன்கு அறிந்து கொண்டால்தான் ராமாயண கதைக்கேட்டது ஸபலமாகும்.

---

# அத்யாயம் 14

## கால விமர்சம் 1

### விவாஹம் வரை

ஸ்ரீராமர் அவதரித்த காலத்தில் உலக ஸ்திதி எப்படி இருந்ததென்பது நமக்குத் தெரியாது. ராக்ஷஸர்கள், வானரர்கள் எல்லோரும் அக்காலத்தில் எப்படி இருந்தார்களென்று நம்மால் தீர்மானம் செய்ய முடியாது. "அழகான வீதை அரைப்பனை உயரம்" என்று இப்பொழுதும் சொல்லுகிறார்கள். நம் தேசத்திலிருந்து நூறு யோஜனைக்கப்பால் லங்கை இருந்ததென்று சொல்லியிருப்பதனால் இப்பொழுது லங்கையென்று வியவஹரிக்கப்படும் பிரதேசம் அதைக் காட்டிலும் வேறு என்று தெரிகிறது. ராமாயணத்திலேயே தென் திசையில் ஸிம்ஹளம் என்றொரு தீவு இருந்திருப்பதாகக் கண்டிருப்பதனாலும், இப்பொழுதும் அந்தப் பிரதேசத்திலுள்ளவர்கள் தம் தேசத்தை ஸிம்ஹளம் என்றே சொல்வதினாலும், அது ராமாயணத்தில் கண்ட லங்கையல்ல என்பது தெளிவாகிறது.

ஆகாயத்தில் பறக்கக்கூடிய விமானங்களும், சந்திரனைப்போய் எட்டக்கூடிய ஆகாயக் கப்பல்களும், ஆயிரக்கணக்கான மைல்களைத் தாண்டியடிக்கக் கூடிய ஆயுதங்களும், ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்புறமிருந்து பேசுவதை நாமிருக்குமிடத்திலேயே கேட்கும்படியான யந்திரங்களும் இருக்கமுடியுமென்று ஐம்பது வருஷங்களுக்குமுன் யாரும் ஸ்வப்னத்தில் கூட நினைத்திருக்க முடியாது. இன்னும் நூறு வருஷங்கள் சென்றால் வாலில்லாத குரங்கு, ஸிம்ஹம், யானை முதலான சில மிருகங்கள் இருந்தனவென்றால் கூட நம்பமாட்டார்கள். ஆகையால்

தத்கால ஸ்திதியை வைத்துக்கொண்டு முன்காலத்திலாவது பினகாலத்திலாவது இப்படித்தான் இருக்கவேண்டுமென்று நாம் நினைப்பது உலகப் போக்குக்கே விரோதமாகும்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் நம் அனுபவத்திற்கோ யுக்திக்கோ ஏதேனும் ஒத்துவராத விஷயங்கள் இருந்தால் அவைகள் "நமக்குப் புரியவில்லை" என்று மாத்திரம் நினைக்கவேண்டுமே தவிர பொய்யென்று தள்ளிவிட எவ்வித நியாயமுமில்லை. அவ்விதம் தள்ளுவதானால் "உன் காவியத்தில் ஒரு வார்த்தை கூட ஸத்தியத்திலிருந்து விலகினதாக இராது" என்று அனுக்ரஹித்த பிரஹ்ம தேவனுக்கும், அவ்வனுக்ரஹத்தை வைத்துக்கொண்டு ஸ்ரீமத் ராமாயணத்தை எழுதின வால்மீகி மஹரிஷிக்கும் நாம் அபசாரம் செய்வதாகவே ஆகும்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனிடம் "இந்த யோகத்தை ஸ்ருஷ்ட்யாரம்பத்தில் ஸூர்யனுக்கு நான் உபதேசித்தேன்" என்று சொன்னவுடன் இது வெறும் பொய்யென்று அர்ஜுனன் தள்ளிவிடவில்லை; "இதை நான் எப்படிப் புரிந்துகொள்ளுகிறது?" என்றே கேட்டான். அதே மாதிரி மனோபாவம் தான் நமக்கு இருக்க வேண்டும். அவனுக்கு ஸந்தேகத்தை நிவிருத்தி செய்து கொடுக்க ஸ்ரீ கிருஷ்ண பகவான் இருந்தார். நமக்குள்ள ஸந்தேகங்களை நிவிருத்தி செய்யக்கூடிய பெரியோர்கள் அகப்படாமல் போனாலும், நாம் பொய்தான் என்ற தீர்மானத்திற்கு வந்து விடக்கூடாது. இதில் மாத்திரம் ஆஸ்திகராயிருப்பவர்கள் வெகு ஜாக்கிரதையாக இருக்க

ஸ்ரீமத் ராமாயணத்தில் வால்மீகி மஹரிஷி ஒவ்வொரு ஸம்பவத்திற்கும் காலத்தைக் குறிப்பிடுகிறார். அதை நன்கு கவனித்துப் பார்த்தாலே அவர் நடந்ததை அப்படி

யப்படியே எழுதியிருக்கிறாரென்பதும் "உன் வாக்கு ஒரு விஷயத்திலாவது பிசகாது."

न ते वागनृता काव्ये काचिदत्र भविष्यति ॥ பால. 2 (35)

என்று பிரஹ்மா அனுக்ரஹித்தபடியே காவ்யம் அமைந்திருக்கிறதென்பதும் வியக்தமாகத் தெரியும்.

ஸ்ரீமத் ராமாயண கதை ஸாதாரணமாக யாருக்கும் தெரிந்தேயிருக்கிறபடியால் அதில் கண்ட கால நிர்ணயத்திற்கு பிரதான்யம் கொடுத்து கதையை சுருக்கி இங்கே சொல்லப்படுகிறது.

அயோத்யாதிபதியான தசரத மஹாராஜர் தனக்குப் புத்திர ஸந்தானமில்லையேயென்று வருத்தப்பட்டுக் கொண்டிருக்கையில், ஒரு நாள் அசுவமேத யாகத்தைச் செய்தால் எல்லாவிதமான பாபங்களும் நிவர்த்தியாகி ஸந்தானம் ஏற்படுமென்று அவருக்குத் தோன்றி உடனே வஸிஷ்டர் முதலானவர்களைத் தருவித்துக் கேட்டதில், அவர்களும் உத்ஸாஹத்துடன் நடத்தி வைப்பதாக ஏற்றுக் கொண்டார்கள்.

सुतार्थं तप्यमानस्य नासीद्वंशकरः सुतः । ,, 8 (1)

என்றபடி ஒரு புத்திரன்கூட இல்லாமல் வருந்தப்படுகிறவரைப் பார்த்து அவர்கள்,

सर्वथा प्रा[illegible] पुत्रान् अभिप्रेतांश्च पार्थिव ॥

यस्य ते धार्मिकी बुद्धिरियं पुत्रार्थमागता । ,, ,, (12,13)

"இவ்விதமாகத் தங்களுக்கு தர்மரீதியாக பிரவிருத்தி செய்ய வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டு விட்டபடி

யால், அவசியம் தாங்கள் புத்திரர்களை அடைவீர்கள்" என்றார்கள். பின்னால் ஸுமந்திரரும்

ऋश्यशृङ्गस्तु जामाता पुत्रांस्तव विधास्यति । ,, 9 ,, 19

"ரோமபாதருடைய மாப்பிள்ளை தங்களுக்குப் புத்திரர்களை ஏற்படுத்துவார்" என்றார். ஸம்ஸ்கிருதத்தில் பன்மைக்கு மூன்றுக்குக் குறையாமல் இருக்கவேண்டிய தால் தனக்கு மூன்று புத்திரர்கள் நிச்சயமுண்டென்று தசரதர் தீர்மானித்துக் கொண்டிருப்பார்.

பிறகு தசரதரே நேரில் போய் ரிஷ்யசிருங்கரை அழைத்துக் கொண்டு வந்து கொஞ்ச காலம் வெகு மரியாதையாய் வைத்துக் கொண்டு வஸந்த காலம் வந்த வுடன் யக்ஞத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும் படி வஸிஷ்டர் முதலானவர்களைக் கேட்டுக் கொண்டதில் அவர்கள் வ்யக்தமாக நான்கு புத்திரர்கள் உண்டாவார் கள் என்று சொன்னார்கள்.

सर्वथा प्राप्स्यसे पुत्रान् चतुरोऽमितविक्रमान् । ,, 12 (13)

உடனே ஏற்பாடுகள் செய்யப்பட்டு யாகத்திற்குரிய குதிரையை ஸஞ்சாரத்திற்கு அனுப்பி, அது கிரமப்படி ஒரு வருஷ காலம் ஸஞ்சாரம் செய்து திரும்பி வந்த பிற் பாடு அடுத்த வஸந்தத்தில் ஸரயூ நதியின் வடகரையில் வெகு விமரிசையாக அசுவமேதயாகம் மூன்று நாட்கள் நடைபெற்றது.

वसन्ते समनुप्राप्ते राज्ञो यष्टुं मनोऽभवत् ॥ ,, ,, (1)

अथ संवत्सरे पूर्णे तस्मिन् प्राप्ते तुरङ्गमे ।
सरय्वाश्चोत्तरे तीरे राज्ञो यज्ञोऽभ्यवर्तत ॥ ,, 14 (1)

त्र्यहोऽश्वमेधः संख्यातः कल्पसूत्रेण ब्राह्मणैः । ,, ;, (40)

அசுவமேதயாகம் பூர்த்தியானதும் தனது வம்ச விருத்தியைச் செய்து கொடுக்கவேண்டுமென்று மஹாராஜா ரிஷ்ய சிருங்கரைப் பிரார்த்தித்தபொழுது அவரும் அப்படியே ஆகட்டும். உமக்கு நான்கு புத்திரர்கள் உண்டாவார்கள் என்றார்.

तथेति च स राजानं उवाच द्विजसत्तमः।
भविष्यन्ति सुता राजन् चत्वारस्ते कुलोद्वहाः ॥ ,, (59)

கௌஸல்யை ஜ்யேஷ்டபத்னியாயிருந்தபடியால் அவளே அசுவமேதயாகத்தில் குதிரையைச் சுற்றிவந்து விசஸனம் செய்து அன்று ராத்திரி அதன் கூடவே இருந்தாள்.

ஆகையால் கௌஸல்யையிடத்திலேயே வரிசையாக நான்கு புத்திரர்களும் பிறப்பார்கள் என்று தசரதர் நினைத்திருக்கலாம். ஆனால் புத்திரகாமேஷ்டியானவுடன் அக்னி குண்டத்திலிருந்து வெளிக் கிளம்பின பிராஜாபத்ய புருஷன்

भार्याणामनुरूपाणां अश्नीतेति प्रयच्छ वै।
तासु त्वं प्राप्स्यसे पुत्रान् यदर्थं यजसे नृप ॥ ,, 16 (20)

"இதை உமக்குத் தகுந்தவர்களாக இருக்கும் பார்யைகளைச் சாப்பிடச்சொல்லவும். அவர்களிடத்தில் புத்திரர்களை அடைவீர்" என்று சொல்லிவிட்டான். இந்தப் பாயஸம் கௌஸல்யைக்கு மாத்திரம் என்பதில்லை, மூன்று மஹிஷிகளுக்கும் கொடுக்க வேண்டும், என்று ஏற்பட்டுவிட்டது. அப்புருஷன் சொல்லாத போதிலும் மஹரிஷிகள் சொன்னதிலிருந்து நான்கு பாகங்களாகப் பிரித்துக் கொடுக்கவேண்டுமென்றும் ஏற்பட்டது.

முதலில் ஜ்யேஷ்டபத்னியான கௌஸல்யையிடம் பாயஸத்தில் பாதியைக் கொடுத்தார். மீதிப் பாதியில்

பாதியை ஸுமித்திரைக்குக் கொடுத்தார். மிச்சமிருந்த கால் பங்கு பூராவையும் கடைசி மஹிஷியான கைகேயிக்குக் கொடுத்து விட்டால், தாரதம்யம் இராதே என்றும், நான்காவதற்கு இடமிராதே என்றும் நினைத்து, அதில் பாதியை மாத்திரம் கைகேயியிடம் கொடுத்து விட்டு பாக்கியை வேண்டுமென்றே ஸுமித்திரையிடம் மறுபடியும் கொடுத்தார்.

कौसल्यायै नरपतिः पायसार्धं ददौ तदा ॥

अर्धादर्धं ददौ चापि सुमित्रायै नराधिपः ।
कैकेय्यै चावशिष्टार्धं ददौ पुत्रार्थकारणात् ॥

प्रददौ चावशिष्टार्धं पायसस्यामृतोपमम् ।
अनुचिन्त्य सुमित्रायै पुनरेव महीपतिः ॥,, ,, (26-28)

ஆக கௌஸல்யைக்கு ($\frac{1}{2}$) அரைபாகம், ஸுமித்திரைக்கு ($\frac{1}{4}+\frac{1}{8}=\frac{3}{8}$) காலே அரைக்கால் பாகம், கைகேயிக்கு ($\frac{1}{8}$) அரைக்கால் பாகம். என்று கொடுத்தார். இதுவே வால்மீகி சொல்லும் கணக்கு.

இவ்விதம் வியக்தமாக இருந்தும், சிலர் பரதனுடைய விசேஷ மஹிமையைக்கண்டு கைகேயிக்குக் கொடுத்தது கால் பங்கு என்றும் ஸுமித்திரைக்கு இரண்டு அரைக் கால் பங்குகள் என்றும், கூறி அதற்கு பிரமாணமாக

भरतो नाम कैकेय्यां जज्ञे सत्यपराक्रमः ॥

साक्षात् विष्णोः चतुर्भागः सर्वैः समुदितो गुणैः ॥ ,, 18 (12,13)

என்ற சுலோகத்தையும் சொல்லுகிறார்கள். அந்த சுலோகத்திலுள்ள "சதுர்பாக:" என்ற பதத்திற்கு "நான்கில்

ஒன்று" என்று அர்த்தம் செய்கிறார்கள். "நான்கு பாகங்களில் ஒரு பாகம்" என்று அர்த்தம் செய்தால்தான் வால்மீகியின் வாக்கியங்களுடன் ஒத்துப்போகும். மேலும் கைகேயிக்குக் கால்பங்கும், ஸுமித்திரைக்கு இரண்டு அரைக்கால் பங்குகளும் கொடுத்திருந்தால் இருவருக்கும் ஸமமாகக் கொடுத்ததாக ஆகும். அது நியாயமில்லை. மூத்த பத்தினிக்கு அரை, அடுத்தவளுக்கு காலே அரைக்கால், அவளுக்கும் அடுத்தவளுக்கு அரைக்கால் என்று தாரதம்யப்படுத்திக் கொடுத்தால் தான் நியாயமாகுமென்று தசரதரே ஆலோசித்துக் கொடுத்திருப்பதாகத் தெரி

இவ்விதம் பாயஸத்தை அருந்தினபிறகு புத்திரோத்பத்திக்கு எவ்வித இடையூறுமில்லாததினால் "அதிகதாமஸமன்னியில்" ராஜபத்தினிகள் கர்ப்பவதிபாக ஆனார்கள்.

ततस्तु ताः प्राश्य तदुत्तमस्त्रियो
महीपतेरुत्तमपायसं पृथक् ।
हुताशनादित्यसमानतेजसो
ऽचिरेण गर्भान् प्रतिपेदिरे तदा ॥,, 16 (30)

இந்த சுலோகத்தில் "அசிரேண" (அதிக தாமஸமன்னியில்) என்பதற்கு பதிலாக "சிரேண" (தாமஸித்து) என்ற வேறொரு பாடமும் இருப்பது குறிப்பிடத்தக்கது. சாஸ்திரப்படி பிறக்கப் போகும் ஸந்தானம் பிதாவினிடத்தில் இரண்டு மாஸங்களும், தாயாரின் கர்ப்பத்தில் ஒன்பது அல்லது பத்துமாஸங்களும் இருந்து பின்னலேயே பிறக்கிறது என்று சொல்லி இருப்பதை அனுஸரித்து புத்திரகாமேஷ்டியாகி ஆறு ருதுக்கள், அதாவது சுமார் பன்னிரண்டு மாஸங்கள் சென்ற பிறகே கௌஸல்யை முதலானவர்கள் பிரஸவித்தார்கள்.

சிலர் பாயஸப் பிராசனமான உடனேயே அவர்கள் கர்ப்பம் தரித்து விட்டார்களென்றும், தசரதருடைய உதரத்தில் கர்ப்பம் இருந்திருப்பதில்லை யென்றும் சொல்லுகிறார்கள். அவர்களுக்குப் பிரமாணம் விபீஷணருடைய வாக்கியமாம். அவர் ராவணனிடம் ஸீதையைத் திருப்பிக் கொடுத்துவிடு என்று சொல்லும்போது

प्रदीयतां दाशरथाय मैथिली ॥யுத்த. 9 (22,23) ; 14 (3,4)

என்கிறார். "தாசரதர்" என்றால் தசரதரைச் சேர்ந்தவர் என்று மாத்திரமே அர்த்தம், தசரதருடைய குமாரர் என்று அர்த்தமாகாது, என்கிறார்கள். ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீராமரை "தாசரதி" (தசரதர் குமாரர்) என்றே பலவிடங்களில் சப்தம் பிரயோகம் செய்யப்பட்டிருப்பதுடன் லக்ஷ்மணன் இந்திரஜித்தைக் கொல்லுவதற்காக சபதமாகவும், மந்திரமாகவும் உபயோகித்த சுலோகத்தில் "தாசரதி" என்றே சொல்லியிருக்கிறான்.

धर्मात्मा सत्यसन्धश्च रामो दाशरथिर्यदि ।
चाप्रतिद्वन्द्वः शरैनं जहि रावणिम् । யுத்த. 91 (73)

அது பிசகாயிருந்தால் பாணம் பிரயோஜனப்பட்டிருக்குமா? என்பதையும் கவனிக்கவேண்டும். இந்த சுலோகத்தை "ஸ்ரீ ராமர் தர்மாத்மாவாக இருந்தால், ஸத்யஸந்தராக இருந்தால், தாசரதியாக இருந்தால், வீர்யத்தில் நிகரற்றவராயிருந்தால், ஹே பாணமே! இந்த ராவண புத்திரனைக் கொல்லு" என்றும் விஸ்தரிக்கலாம்.

தவிரவும் ராமாதிகள் கௌஸல்யை முதலானவர்களின் கர்ப்பத்தில் பன்னிரண்டு மாஸம் வாஸம் செய்திருக்கலாம், தசரதருடைய சரீரத்தில் இரண்டு மாஸம் இருந்திருக்கக் கூடாது, என்று சொல்ல என்ன நியாயமென்று தெரியவில்லை. தவிரவும், பகவான் அவதார

மெடுப்பதாய் நிச்சயம் செய்தவுடன் "தசரதரே தனக்குப் பிதாவாக இருக்கவேண்டுமென்று பிரியப்பட்டார்."

पितरं रोचयामास तदा दशरथं नृपम्। பால. 15 (31)

என்றிருக்கையில் தசரதரை விட்டுவிட்டு நேரே அவருடைய ஸ்திரீகளின் கர்ப்பத்தில் தோன்றினார் என்பது கொஞ்சமேனும் உசிதமாகாது. ஸ்ரீமத் ராமாயணத்திலேயே "அதிக தாமஸமன்னியில்" கர்ப்பம் தரித்தார்களென்று வியக்தமாகச் சொல்லியிருக்கையில் தசரதர் கர்ப்பாதானம் செய்யவில்லையென்று நினைப்பதற்கோ, எவ்வித சாஸ்திரத்திற்கும், உலக நடவடிக்கைக்கும் விரோதமாக குழந்தைகள் தாயார்களின் வயிற்றில் பன்னிரண்டு மாஸங்கள் இருந்தார்களென்று சொல்லுவதற்கோ எவ்வித நியாயமோ, பிரமாணமோ கிடையாது.

மறுபடியும் வஸந்தருது வந்தவுடன் சைத்ரமாஸத்தில் சுக்லபக்ஷ நவமியும், புனர்வஸு நக்ஷத்திரமும், கூடிய சுபதினத்தில் மத்யாஹ்நவேளையில் கடக லக்னத்தில் கௌஸல்யை ஸர்வ லக்ஷண ஸம்பன்னனான புத்திரனை ஜனிப்பித்தாள்.

ततो यज्ञे समाप्ते तु ऋतूनां षट् समत्ययुः ।
ततश्च द्वादशे मासे चैत्रे नावमिके तिथौ ॥

नक्षत्रेऽदितिदैवत्ये स्वोच्चसंस्थेषु पञ्चसु ।
ग्रहेषु कर्कटे लग्ने वाक्पताविन्दुना सह ॥

प्रोद्यमाने जगन्नाथं सर्वलोकनमस्कृतम् ।
कौसल्याऽजनयद्रामं सर्वलक्षणसंयुतम् ॥ பால. 18 (8-10)

அந்த ஸமயம் கடக லக்னத்திலேயே சந்திரனுடன் குருவுமிருந்தார். ஐந்து க்ரஹங்கள் உச்சஸ்தானத்திலிருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஸூர்யனுக்கு மேஷம் உச்சஸ்தானமானதினுல் சைத்ர நவமி என்பது மேஷமாஸத்தில் உள்ளதென்று தெரிகிறது. சந்திரன் கடகத்தில் என்றும் நக்ஷத்திரம் புனர்வஸு என்றும் சொல்லியிருப்பதால் கடகத்தில் இருக்கக்கூடிய நான்காம் பாதமென்று தெரிகிறது. சந்திரனுக்கு உச்சம் விருஷபமாயிருக்க இப்போது கடகத்திலிருப்பதால் உச்சனில்லை. குருவிற்கு கடகம் உச்சஸ்தானமே, புதனுக்கு உச்சஸ்தானம் கன்யையாயிருப்பதால் மேஷத்திலுள்ள ஸூர்யனிடமிருந்து அவ்வளவு தூரத்தில் கன்யையில் புதன் இருக்க முடியாததினுல் புதன் உச்சனில்லை. சாயாக்ரஹங்களான ராஹு கேதுக்களுக்குள்ள உச்சஸ்தானங்களை வால்மீகி குறிப்பிட்டிருப்பாரென்று தோன்றவில்லை. ஆகையால் பாக்கி கிரஹங்களாகிய சனி, செவ்வாய், சுக்ரன் இவைகளையே அவர் குறிப்பிட்டிருக்கலாமென்று தோன்றுகிறது. சனிக்கு துலாமும், செவ்வாய்க்கு மகரமும், சுக்ரனுக்கு மீனமும் உச்சஸ்தானங்கள். இப்படி ஐந்து பிரதான கிரஹங்களும் உச்சமாக இருந்ததாகத்தெரிகிறது.

ஸ்ரீ ராமர் அவதரித்ததினம் இரவு சென்று மறுநாள் ஸூர்ய உதயத்திற்கு முன்னுல் மீன லக்னத்தில் புஷ்ய நக்ஷத்திரத்தில் பரதனும், ஸூர்யோதயமாகி மறுபடியும் மத்யாஹ்நவேளையில் கடக லக்னத்தில் ஆயில்ய நக்ஷத்திரத்தில் லக்ஷ்மணனும் சத்ருக்னனும் பிறந்தார்கள். இவர்களுக்கு ஜன்ம லக்னமும் நக்ஷத்திரமும் மாத்திரம் மாறினதே தவிர கிரஹங்களெல்லாம் ஸ்ரீ ராமர் ஜனன காலத்தில இருந்த ராசிகளிலேயே இருந்திருக்கவேண்டும். திதியும நவமியாகவே இருந்திருக்கலாம்.

पुष्ये जातस्तु भरतो मीनलग्ने प्रसन्नधीः ॥
सार्पे जातौ च सौमित्री कुलीरेऽभ्युदिते रवौ ॥ ,, ,, 13,15

தசரத மஹாராஜர் வெகு ஸந்தோஷமடைந்து பரதாதிகள் பிறந்து 11ம் நாள் தாண்டி 12வது நாளில் எல்லாப் புத்திரர்களுக்கும் நாமகரணம் செய்தார்.

अतीत्यैकादशाहं तु नामकर्म तथाऽकरोत् ॥ ,, ,, (19)

இவர்களுக்கு கிரமமாக மற்ற ஸம்ஸ்காரங்களையும் செய்வித்து உபநயனத்தையும் செய்துவைத்தார். ஆனால் எந்த வயதில் உபநயனமென்று வியக்தமாய் காணவில்லை. பின்னால் ஸ்ரீராமர் வனத்திற்கு புறப்படும் ஸமயம் கௌஸல்யை ஸ்ரீராமர் யுவராஜாவாக ஏற்பட்டு தன் துக்கம் குறையுமென்று 17 வருஷங்களாக எதிர்பார்த்திருந்ததாகச் சொல்லுகிறாள். வனத்திற்குப் புறப்படும் போது அவருக்கு வயது 25.

दश सप्त च वर्षाणि तव जातस्य राघव ।
अतीतानि प्रकाङ्क्षन्त्या मया दुःखपरिक्षयम् ॥ அயோ. 20 (45)

எட்டாவது வயதில் உபநயனம் நடந்திருந்தால்தான் அவள் அப்படி எதிர்பார்த்திருக்க முடியும். பிராஹ்மணர்களுக்கு 8வது வயதும், க்ஷத்திரியர்களுக்கு 11வது வயதும் உபநயனத்திற்கு முக்கிய காலமாயிருந்த போதிலும், வெகு புத்திசாலிகளாகயிருந்தால் பிராஹ்மணனுக்கு 5வது வயதிலும், க்ஷத்திரியனுக்கு 8வது வயதிலும் செய்விக்க அநுமதி இருப்பதால் இந்த ராஜ புத்திரர்களுக்கு 8வது வயதிலேயே உபநயனமென்று

உபநயனமான பிறகு கிரமப்படி வேதாத்யயனம் அசுவாரோஹணம், கஜாரோஹணம், ரதவித்யை, தநுர் வித்யை முதலான ஸகல வித்யைகளிலும் மிகவும் தேர்ச்சி யுள்ளவர்களாகவும், உத்தமமான குணசாலிகளாகவும்

விளங்கினார்கள். 13வது வயது ஆரம்பத்தில் விசுவாமித்திரர் ஸ்ரீ ராமரை அழைத்துப்போக வருவதற்கு முன் இவ்வித யோக்யதைகளை ஸம்பாதித்துவிட்டபடியால் 11வது வயதில் உபநயனம் என்றால் அவகாசம் போதாது.

நான்கு புத்திரர்களும் நல்ல வித்வான்களாகவும் ஸாமர்த்தியசாலிகளாகவும் இருந்து வருவதைக் கண்ட தசரத மகாராஜர் மிகவும் ஸந்தோஷித்து அவர்களுக்கு பன்னிரண்டு வயது பூர்த்தியானவுடனேயே தக்க இடத்தில் விவாஹம் செய்துவைக்க வேண்டுமென்று நினைத்து, புரோஹிதர், பந்துக்கள், மந்திரிகள் இவர்களுடன் ஆலோசித்துக் கொண்டிருக்கையில் விசுவாமித்ர மஹரிஷி வந்து தான் செய்யும் யாகத்தை ஸம்ரக்ஷித்துக் கொடுப்பதற்காக ஸ்ரீராமரை தன்னுடன் அனுப்ப வேண்டுமென்று கேட்டார். அவருக்குத் தொந்தரவு செய்வது மாரீசன், ஸுபாஹு என்பவர்கள் என்று தெரிந்து தசரதர் ஸம்மதிக்காமலிருந்த ஸமயம், வஸிஷ்டர் அவரை ஸமாதானப்படுத்தி தைர்யம் சொல்லி ஸம்மதிக்கும்படி செய்தவுடன் ஸ்ரீராமர், லக்ஷ்மணன் இருவரையுமே தசரதர் ஸந்தோஷமாக விசுவாமித்ரருடன் அனுப்பிக் கொடுத்தார். விசுவாமித்ரர் வந்து ஸ்ரீ ராமரை அழைத்துக்கொண்டு போனநாள் முதல் மேல் ஸம்பவங்கள் எவ்வெப்பொழுது நடந்தன என்பதைக் கணக்கிட்டுப் பார்ப்போம்.

முதல்நாள்:—விசுவாமித்ரர் வந்ததினம் எந்த மாஸம், திதி, நக்ஷத்ரமென்று ராமாயணத்தில் காணவில்லை. ஆனாலும் பின் ஸம்பவங்களை கவனிக்கும்போது சைத்ர மாஸம் பௌர்ணமாஸ இஷ்டியை முடித்துக்கொண்டு கிருஷ்ண பிரதமைதினமே ஸ்வாதி நக்ஷத்திரத்தில் வந்திருக்கலாமென்று தோன்றுகிறது. புறப்பட்டுப் போகும் வழியில் ஸரயூ நதியின் தென்கரையில் அரை

யோஜனை தூரம் போனவுடன் ஸ்ரீராமரை ஆசமனம் செய்யச் சொல்லி பலை, அதிபலை என்ற இரண்டு உத்தம மந்திரங்களை உபதேசித்தார். அன்று ராத்திரி மூவரும் அங்கேயே ஸுகமாக சிரம பரிஹாரம் செய்து கொண்டார்கள்.

ऊषुस्तां रजनीं तीरे सरय्वाः सुसुखं त्रयः ॥ பால. 22 (22)

2-ம் நாள்: மறுநாள் காலையில் விசுவாமித்ரர் ராமரை "காலை ஸந்தியா காலம் வந்துவிட்டது. எழுந்திருந்து ஆஹ்நிகங்களைச் செய்" என்று எழுப்புகிறார்.

कौसल्या सुप्रजा राम पूर्वा सन्ध्या प्रवर्तते ।
उत्तिष्ठ नरशार्दूल कर्तव्यं दैवमाह्निकम् ॥ ,, 23 (2)

அன்று ஸ்நான ஜபாதிகளை முடித்துக்கொண்டு அங்கிருந்து ஸரயூ நதியும் கங்கையும் சேருமிடத்திலிருந்த காமனுடைய ஆசிரமம் போய் அங்கே இரண்டு நதிகளின் மத்தியில் அன்றிரவு தங்கினார்கள்.

इहाद्य रजनीं राम वसेम शुभदर्शन ।
पुण्ययोः सरितोर्मध्ये श्वस्तरिष्यामहे वयम् ॥ ,, ,, (16)

3-ம் நாள்: காலையில் அங்குள்ள முனிவர்கள் தயாரித்துக் கொடுத்த ஓடத்தில் நதியைக் கடந்து அங்கிருந்த கோரமான வனத்தில், ஜம்பாஸுரனின் புத்திரனை ஸுந்தனின் பார்யையும் மாரீசனின் தாயாருமான தாடகையை விசுவாமித்ரரின் வார்த்தையின் பேரில் அஸ்தமனத்திற்குமுன்னால் ஸம்ஹாரம் செய்து அன்றிரவு அங்கேயே வஸித்தார்கள்.

उवास रजनीं तत्र ताटकाया वने सुखम् । ,, 26 (35)

4-ம் நாள்: மறுநாள் காலையில் விசுவாமித்ரர் ஸகல விதமான அஸ்திரங்களையும் ஸ்ரீ ராமருக்கு உபதேசித்து விட்டு அங்கிருந்து போகும்போது ஸ்ரீ ராமருடைய வேண்டுகோளின்படி அஸ்திர உபஸம்ஹார மந்திரங்களையும் உபதேசிக்கிறார். மஹாவிஷ்ணு வாமனாவதாரத்தில் தபஸ் செய்ததினால் ஸித்தாசிரமம் என்று பெயர் கொண்ட தன்னுடைய வாஸஸ்தலத்திற்கே கிரமமாக இப்பாலகர்களுடன் போய் அங்கு முனிவர்களால் வெகு ஆதரவுடன் எதிர் கொண்டழைக்கப்பட்டார். அங்கே ஒரு முஹூர்த்தம் விசிராந்தி செய்துகொண்ட பிறகு, அன்றைய தினமே விசுவாமித்ரர் தீக்ஷை எ( கொள்ளலாமென்று ராம லக்ஷ்மணர்கள் கே டுக் கொண்டார்கள்.

अद्यैव दीक्षां प्रविश भद्रं ते मुनिपुङ्गव ॥ ,, 29 (30)

5-ம் நாள்

प्रभातकाले चोत्थाय पूर्वां संध्यामुपास्य च ॥ ,, (32)

காலையில் எழுந்து ராஜபுத்திரர்கள் ஸ்நானம் செய்து ஜபாதிகளை முடித்துக்கொண்டு விசுவாமித்ரரை நமஸ்கரித்து "ராக்ஷஸர்கள் எப்பொழுது வருவார்கள்?" என்று தங்களுக்கு யக்ஞ ஸம்ரக்ஷணத்திலிருந்த ஊக்கத்தைக்காட்டினார்கள். தீக்ஷையிலிருந்த விசுவாமித்ரர் பேசுவதற்கில்லாததினால் அங்குள்ள முனிவர்கள் இவர்களுடைய உத்ஸாகத்தை மெச்சி "இன்று முதல் ஆறு தினங்கள் காவலிருக்கவேண்டும்"

अद्यप्रभृति षड्रात्रं रक्षतं राघवौ युवाम् 30 (4)

என்று சொன்னார்கள். அப்படியே அன்று முதல் 6, 7, 8, 9ம் நாள் முடிய காத்து வந்தபிறகு அவர்கள் குறிப்பிட்ட 6வது நாளான 10ம் நாள் வந்தது.

**10-ம் நாள்:**

अथ काले गते तस्मिन् षष्ठेऽहनि समागते । ,, ,, (7)

அன்றையதினம் யாகத்தின் கடைசி தினமானதினுல் வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டுமென்று ராமர் லக்ஷ்மணனை எச்சரித்தார். அன்று மாரீசனும் ஸுபாஹுவும் தம் பரிவாரங்களுடன் வந்து ரக்தத்தை வர்ஷித்தார்கள். உடனே ராமர் மானவாஸ்திரத்தைப் பிரயோகித்து நூறு யோஜனத்திற்கு அப்பாலுள்ள ஸமுத்ரத்தில் மாரீசனை அமிழ்த்திவிட்டார். ஆனுல் கொல்லவில்லை. ஸுபாஹுவை ஆக்னேயாஸ்திரத்தினுலும் மற்றவர்களை வாயவ்யாஸ்திரத்தினுலும் அடித்து ஸம்ஹரித்துவிட்டார். பிறகு யக்ஞத்தை முடித்துவிட்டு, விசுவாமித்திரர் தன்னுடைய நன்றியைத் தெரிவித்து ராஜபுத்திரர்களை சிலாகித்துவிட்டு, அவர்களுடன் ஸாயங்கால ஸந்த்யை செய்த பிறகு, அன்றிரவு எல்லோரும் மிகவும் ஸந்துஷ்டர்களாக இருந்தார்கள்.

अथ तां रजनीं तत्र कृतार्थौ रामलक्ष्मणौ
ऊषतुर्मुदितौ वीरौ प्रहृष्टेनान्तरात्मना ॥ 31 (1)

**11-ம் நாள்:**

प्रभातायां तु शर्वर्यां कृतपौर्वाह्णिकक्रियौ । ,, ,, (1)

காலையில் எழுந்து ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு விசுவாமித்ரர் முதலானவர்களிடத்தில் "இனி என்ன செய்ய வேண்டும்?" என்று இவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர்கள், மிதிலாதிபதியான ஜனக மகாராஜர் யாகம் செய்வதால் அங்கே போக தாங்கள் உத்தேசித்திருப்பதாகவும், அங்கே போனுல் யக்ஞத்தையும் ஒரு தனுஸ்ஸையும் பார்க்கலாமென்றும் சொன்னுர்கள்.

அப்படியே அங்கிருந்து எல்லோரும் புறப்பட்டு வெகு தூரம் சென்று ஸூர்ய அஸ்தமன ஸமயத்தில் சோண நதிதீரம் போய் அங்கே தங்கினார்கள்.

ते गत्वा दूरमध्वानं लम्बमाने दिवाकरे ॥
वासं चक्रुर्मुनिगणाः शोणाकूले समाहिताः । ,, 31 (19,20)

அப்பொழுது ராமர் கேட்டதின்பேரில் விசுவாமித்ரர் தன் முன்னோர்களுடைய சரித்திரத்தை விஸ்தாரமாகச் சொன்னார். கதை சொல்லி முடியும்போது "அர்த்த ராத்திரி தாண்டிவிட்டது; இருட்டைப் போக்கிக் கொண்டு சந்திரனும் உதயமாகிறார்."

गतोऽर्धरात्रः काकुत्स्थ कथाः कथयतो मम । ,, 34 (14)
उत्तिष्ठति च शीतांशुः शशी लोकतमोनुदः । ,, ,, (17)

என்று விசுவாமித்ரர் சொல்லுகிறார். இதிலிருந்து அன்றைய தினம் கிருஷ்ணபக்ஷ அஷ்டமிக்குமேலிருக்கு மென்று தெரிகிறது. நவமி அல்லது தசமியாயிருக்கலாம்.

12-ம் நாள்: சோண நதியில் காலையில் ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு புறப்பட்டு வெகுதூரம் சென்று நடுப் பகலுக்குப் பின் கங்கைக் கரை போய்ச் சேர்ந்தார்கள்.

ते गत्वा दूरमध्वानं गतेऽर्धदिवसे तदा ।
जान्हवीं सरितां श्रेष्ठां ददृशुर्मुनिसेविताम् ॥ ,, 35 (6)

அங்கே ஸ்நானம் செய்து தேவபித்ரு தர்ப்பணாதிகளையும், அக்னி கார்யங்களையும் செய்துவிட்டு ஹவிஸ்ஸையே பிராசனம் செய்துவிட்டு எல்லோரும் விசுவாமித்ரரைச் சுற்றி உட்கார்ந்து கொண்டார்கள். அப்பொழுது ராமர் வெகு குதூகலத்துடன் விசுவாமித்ரரை கங்கையின்

சரித்திரத்தை விஸ்தாரமாகச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொண்டதின்பேரில் அம்முனிவர் முதலில் ஹிமவானுடைய இரண்டாவது புத்திரியான உமையின் வரலாறு, குமாரருடைய உத்பத்தி இவைகளைச் சொல்லி விட்டு, பிறகு ஸகர சக்ரவர்த்தியின் யாகம், கபிலருடைய கோபத்தினால் ஸகரபுத்திரர்களின் மரணம், அம்சுமான் திலீபர் இவர்களால் ஸாத்யப்படாமலிருந்த கங்காவதரணத்தை பகீரதர் செய்வித்து பித்ருக்களைக் கரையேற்றினது, முதலான புண்ய கதைகளை வெகு விஸ்தாரமாகச் சொன்னார். கதை முடியும்போது ஸாயங்கால மாகிவிட்டது.

एष ते राम गङ्गाया विस्तरोऽभिहितो मया।
स्वस्ति प्राप्नुहि भद्रं ते संध्याकालोऽतिवर्तते ॥ ,, 44 (20)

அன்றிரவு பூராவும் ராமலக்ஷ்மணர்கள் இந்தக் கதையைய ... ராகள்.

तस्य सा शर्वरी सर्वा सह सौमित्रिणा तदा।
जगाम चिन्तयानस्य विश्वामित्रकथां शुभाम् ॥ 45 (4)

13-ம் நாள்: பொழுதுவிடிந்தவுடன் ஆஹ்நிகங்களை முடித்துக் கொண்டு ரிஷிகளுக்குரிய ஓடத்தில் கங்கையைக் கடந்து வடகரையில் உள்ள விசாலா என்ற நகரம் சென்றார்கள். அவ்விடத்தில் முன்னால் காசியபரின் பார்யை திதி என்பவள் வ்ரதானுஷ்டானம் செய்கையில், தன்னைக் கொல்லக்கூடிய புத்திரன் அவளிடம் பிறப்பானென்று தெரிந்து இந்திரன் அவளுக்கு பரிசர்யை செய்வதாகப் போய், அவள் சுத்தமில்லாமலிருந்த ஸமயம் அவள் சரீரத்தில் பிரவேசித்து கர்ப்பத்தை துண்டுதுண்டாக வெட்டினதாகவும், திதியின் வேண்டுகோளின்படி துண்டாக்கினவர்களை மருத்தேவதைகளாக இருக்கட்டு

மென்று சொன்னதாகவும் சொல்லி, பிறகு அந்த இடத்திலேயே இக்ஷ்வாகுவிற்கு அலம்புஸை என்ற அப்ஸரஸிடம் பிறந்த விசாலன் என்பவன் இந்த நகரத்தை ஏற்படுத்தினதாகவும், அந்தப்பரம்பரையில் இப்பொழுது ஸுமதி என்ற மஹாராஜன் இருந்து வருவதாகவும் சொன்னார். அன்று ராத்திரி அந்த மஹாராஜனால் ஸத்காரம் செய்யப்பட்டு அங்கேயே தங்கினார்கள்.

ततः परमसत्कारं सुमतेः प्राप्य राघवौ ।

उष्य तत्र निशामेकां जग्मतुर्मिथिलां ततः ॥ ,,　48 (9)

14-ம் நாள்: விசாலையிலிருந்து புறப்பட்டு மிதிலாபுரிக்கு வெளியிலுள்ள ஒரு உபவனத்திற்கு விசுவாமித்ரர் ஸ்ரீராமரை அழைத்துக் கொண்டு போய், அஹல்யையின் விருத்தாந்தத்தைச் சொல்லி அவளுக்கு சாபவிமோசனம் செய்வித்த பின் பேரில், அஹல்யையும் கௌதம மஹரிஷியும் ஸ்ரீ ராமருக்குச் செய்த உபசாரத்தைப் பெற்றுக் கொண்டு, மிதிலையில் ஏற்படுத்தியிருந்த யக்ஞசாலை போய் சேர்ந்தார்கள். இவர்கள் வந்திருக்கிறார்களென்று தெரிந்த உடனேயே ஜனகமஹாராஜர் புரோஹிதரான சதாநந்தர் முதலான ரித்விக்குகளுடன் வெகு மரியாதையாய் வரவேற்றார். விசுவாமித்ரர் மூலமாக இந்த தசரத ராஜகுமாரர்கள் வந்து யக்ஞ ஸம்ரக்ஷணம் செய்ததையும் கௌதமாசிரமம் போய்வந்ததையும், தெரிந்ததும் கௌதமரின் குமாரரான சதாநந்தர் வெகு ஸந்தோஷமடைந்து, விசுவாமித்ரருடைய தபோ மஹிமையையும் அவர் பலவாறுகக் கஷ்டப்பட்டு பிராஹ்மண்யம் ஸம்பாதித்ததையும் விஸ்தாரமாக எடுத்துச் சொன்னார். இது சொல்லி முடிக்கும்போது ஸாயங்காலமாகிவிட்டபடியால் ஜனகர் விசுவாமித்ரரிடம மறுபடியும் மறுநாள் காலையில் பார்க்கலாமென்று சொன்னார்.

कल्यकाले मुनिश्रेष्ठ लब्धे रविमण्डलम् ।
श्वः प्रभाते महातेजो द्रष्टुमर्हसि मां पुनः ॥ „ 65 (36)

அதன்பிறகு ஜலஸௌகர்யமுள்ள ஒரு பிரதேசத்தில் விசுவாமித்ரர் ராஜகுமாரர்களுடன் அன்றிரவு தங்கினார்.

15-ம் நாள்: காலையில் ஜனக மஹாராஜா விசுவாமித்ரருக்குச் சொல்லியனுப்பி மரியாதையுடன் வரவேற்று, "நான் என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டார். இந்த ராஜகுமாரர்கள் அங்குள்ள தனுஸைப் பார்க்க வந்திருப்பதாக அவர் சொன்னதின்பேரில், அந்த தனுஸ் தன் குடும்பத்தில் வந்த வரலாற்றையும், அதை வளைத்து ஞாண் பூட்டுகிற வீரனுக்குத் தனக்குப் பூமியிலிருந்து கிடைத்து தன்னால் புத்திரியாக வளர்த்து வந்த ஸீதையைக் கொடுக்க உத்தேசமென்றும், அநேகர் பிரயத்னம் செய்தும் பலிக்கவில்லையென்றும், ராமர் ஆரோபணம் செய்தால் அவருக்கு ஸீதையைக் கொடுப்பதாகவும் சொன்னார்.

உடனே நகரத்திலிருந்து தனுஸ் கொண்டுவரப்பட்டு விசுவாமித்ரரின் அனுமதியின்பேரில் அதை ராமர் எடுத்து வளைத்து ஞாண் பூட்டும்போது மத்தியில் ஒடிந்துவிட்டது. உடனே ஸீதையை ராமருக்குக் கொடுப்பதற்காக, விசுவாமித்ரரின் அனுமதி பெற்று தசரத மஹாராஜருக்கு தூதர்கள் அனுப்பப்பட்டார்கள்.

16, 17-ம் நாட்கள்: 15-ம் நாள் ஸாயங்காலமே புறப்பட்ட தூதர்கள் அயோத்யை போய்ச் சேருவதற்குள் மூன்று இரவுகள் ஆகிவிட்டன.

जनकेन समादिष्टा दूतास्ते क्लान्तवाहनाः ।
त्रिरात्रमुषिता मार्गे त्वयोध्यां प्राविशन् पुरीम् ॥ 68 (1)

18-ம் நாள்: தூதர்கள் அயோத்யையைபோய் தசரதரிடம் மிதிலையில் நடந்த விருத்தாந்தத்தையும் ஜனகருடைய உத்தேசத்தையும் தெரிவித்தார்கள். இதுவரை புத்திரர்கள் திரும்பிவரவில்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த தசரதருக்கு தனுர்பங்கம், விவாஹ ஸமாசாரம், இவைகளைவிட முதலில் அவர்கள் மிதிலையில் விசுவாமித்ரருடன் ஸௌக்யமாயிருக்கிறார்களென்பதே ஸந்தோஷத்தைக் கொடுத்தது.

गुप्तः कुशिकपुत्रेण कौसल्यानन्दवर्धनः ॥

लक्ष्मणेन सह भ्राता विदेहेषु वसत्यसौ (17,18)

பிறகு ஜனகருடைய உத்தேசத்தை வஸிஷ்டர் முதலானவர்களிடம் தெரிவித்து யாவரும் ஸம்மதித்ததின் பேரில் மறுநாள் புறப்படுவோம் என்று தசரதர் உத்தரவிட்டார்.

सुप्रीतश्चाब्रवीद्राजा श्वो यात्रेति स मन्त्रिणः ॥ ,, (21)

19-ம் நாள்: உத்தேசித்தபடி பந்துக்கள், மஹரிஷிகள், சதுரங்க ஸைன்யம் இவர்களுடன் ஏராளமான தனத்தையும் எடுத்துக்கொண்டு தசரதர் மிதிலையை உத்தேசித்துப் புறப்பட்டார்.

20, 21-ம் நாட்கள்: தசரதரின் யாத்திரை நடந்தது.

22-ம் நாள்: ஸாயங்காலம் தசரதர் மிதிலை போய்ச் சேர்ந்தார். ஆக, புறப்பட்ட தினம் முதல் போய் சேரும் வரை நான்கு பகல்கள் சென்றன.

गत्वा चतुरहं मार्गं विदेहानभ्युपेयिवान् 69 (7)

ஜனகராஜனால் வெகு மரியாதையாய் எல்லாரும் வரவேற்கப்பட்டு அன்று ராத்திரி ஸுகமாயிருந்து வந்தார்கள்.

हर्षेण महता युक्तास्तां निशामवसन् सुखम् । ,, ,, (17)

அன்று வந்தவுடனே தசரதர் வஸிஷ்டர் முதலானவர்களுடன் ஜனகர் கலந்துகொண்டு தன் புத்ரி ஊர்மிளையை லக்ஷ்மணனுக்குக் கொடுப்பதாகவும் தீர்மானித்துவிட்டதாகத் தெரிகிறது. அன்று இரவிலேயே யக்ஞகார்யத்தை கவனிப்பதுடன் ஸீதைக்கும் ஊர்மிளைக்கும் விவாஹத்திற்குப் பூர்வாங்கமாகச் செய்யவேண்டியதையும் ஜனகர் செய்துவிட்டார் என்று வால்மீகி கூறுகிறார்.

जनकोऽपि महातेजाः क्रियां धर्मेण तत्त्ववित् ।
यज्ञस्य च सुताभ्यां च कृत्वा रात्रिमुवास ह ॥ (19)

23-ம் நாள்: விசுவாமித்ரர் ராமரை அழைக்கவந்ததிலிருந்து 23வது நாளான மறுநாள் காலையில் ஜனகர் சதாநந்தரைக் கேட்டுக்கொண்டு, இக்ஷுமதீ நதிக்கரையிலுள்ள ஸாங்காசியம் என்ற நகரத்தில் அரசனாயிருந்த தன் தம்பி குசத்வஜரை அழைத்துவர ஏற்பாடு செய்தார். அவரும் வந்து சேர்ந்தபிறகு, தசரதரை அழைத்துவர ஸுதாமா என்ற மந்திரியை அனுப்பினார். அவரும் தன்னுடைய கோஷ்டியுடன் வந்து சேர்ந்ததும் அவர் தன்னுடைய குலபரம்பரையைப்பற்றி வஸிஷ்டர் சொல்லுவார் என்று சொன்னதின் பேரில், வஸிஷ்டர் ஸ்ருஷ்ட்யாரம்பம் முதலே வம்சவரலாற்றைச் சொல்லி கடைசியாக ராம லக்ஷ்மணர்களுக்காக ஜனகரின் இரண்டு பெண்களான ஸீதையையும் ஊர்மிளையையும் வரிப்பதாகச் சொல்லி முடித்தார். உடனே ஜனகரும் நிமிசக்ரவர்த்தி முதல் ஆரம்பித்து தன் பரம்பரையைச்

சொல்லி ஸீதையை ராமருக்கும், ஊர்மிளையை லக்ஷ்மண னுக்கும் கொடுப்பதாக வாக்தானம் செய்தார். விவாஹத் திற்குமுன் ராமலக்ஷ்மணர்களுக்காகச் செய்யவேண்டிய கோதானம் பித்ருகார்யம் இவைகளைச் செய்யும்படிக்கும், இன்று மகா நக்ஷத்திரம் இதிலிருந்து மூன்றும் நாள் உத்தர பல்குனி நக்ஷத்திரத்தில் விவாஹத்தை நடத்திக் கொள்ளும்படிக்கும் ஜனகர் கேட்டுக் கொண்டார்.

मघा ह्यद्य महाबाहो तृतीये दिवसे विभो ॥

फल्गुन्यामुत्तरे राजन् तस्मिन् वैवाहिकं कुरु । ,, 71 (23,24)

இதைக்கேட்ட விசுவாமித்ரர், வஸிஷ்டருடைய ஸம்மதத்தின் பேரில், ஜனகரின் தம்பி குசத்வஜரின் குமாரிகள் இருவரையும் பரதனுக்கும் சத்ருக்னனுக்கும் கொடுக்கவேண்டுமென்று வரணம் செய்தார். ஜனகரும் குசத்வஜரும் வெகு ஸந்தோஷத்துடன் ஒப்புக் கொண் டார்கள். பிறகு ஜனகரிடம் சொல்லிக்கொண்டு வ டரையும் விசுவாமித்ரரையும் முன்னிட்டுக் கொண்டு தசரதர் தன் இருப்பிடம் சென்று அன்றைய தினமே விதிப்படி சிராத்த கார்யங்களைச் செய்தார்.

स गत्वा निलयं राजा श्राद्धं कृत्वा विधानतः । ,, 72 (29)

24-ம் நாள்: நான்கு புத்திரர்களையும் உத்தேசித்து தசரதர் பிராஹ்மணர்களுக்கு ஆயிரக்கணக்கான கோ தானம் செய்தார். கைகேயின் தம்பி யுதாஜித் பரதனைப் பார்ப்பதற்காக அயோத்யைக்கு வந்த ஸமயத்தில் எல்லாரும் ராமருடைய விவாஹத்தை உத்தேசித்து மிதிலாபுரி போயிருப்பதாகத் தெரிந்து அவரும் அன்றையதினம் மிதிலை வந்து சேர்ந்தார்.

प्रभाते काल्यमुत्थाय चक्रे गोदानमुत्तमम् ॥ ,, ,, (21)

यस्मिंस्तु दिवसे राजा चक्रे गोदानमुत्तमम् ।
तस्मिंस्तु दिवसे शूरो युधाजित् समुपेयिवान् ॥ ,, 73 (1)

14ம் நாள் விசுவாமித்ரர் மிதிலைக்கு வந்தவுடன் ஜனகர் இன்னும் யாகம் பன்னிரண்டு நாட்கள் பாக்கியிருப்பதாகச் சொல்லுகிறார். அன்றைய தினத்தையும் முடிவு தினத்தையும் சேர்த்துக் கணக்கிட வேண்டும்.

यज्ञोपसदनं ब्रह्मन् प्राप्तोसि मुनिभिः सह ।
द्वादशाहं तु ब्रह्मर्षे शेषमाहुर्मनीषिणः ॥ ,, 50 (15)

ஆனால் தசரதர் வந்த 22-ம் நாள் ஜனகர் யக்ஞம் முடிந்து மறுநாள் காலையில் விவாஹம் செய்யலாமென்

श्वः प्रभाते नरेन्द्र त्वं निर्वर्तयितुमर्हसि ॥
यज्ञस्यान्ते नरश्रेष्ठ विवाहमृषिसंमतम् । 69 (12,13)

மறுநாள் காலையில் கன்யாவரணமும் வாக்தானமும் அன்றைக்கே சிராத்தமும் நடக்கின்றன. இவைகளிலிருந்து விவாஹ காரியம் ஆரம்பித்துவிட்டதாக வைத்துக் கொள்ளலாம். "12 நாள் பாக்கி" என்ற கணக்குப்படி 25ம் நாள் விவாஹம்.

25-ம் நாள்: காலையில் தசரதர் எழுந்திருந்து விவாஹத்திற்குரிய ஸகல பூர்வாங்கங்களையும் செய்துவிட்டு புத்திரர்களை அழைத்துக்கொண்டு, ரிஷிகளை முன்னிட்டுக் கொண்டு யக்ஞசாலை போய்ச் சேர்ந்தார்.

प्रभाते पुनरुत्थाय कृत्वा कर्माणि कर्मवित् ।
ऋषींस्तदा पुरस्कृत्य यज्ञवाटमुपागमत् ॥ ,, 73 (8)

*பிறகு வஸிஷ்டர் விசுவாமித்ரரையும் சதானந்தரையும் முன்னிட்டுக்கொண்டு விதிவத்தாக எல்லாக்காரியங்களையும் செய்தவுடன் ஜனகர் அக்னி ஸாக்ஷியாக ஸீதையை ஸ்ரீராமருக்கும், ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும், மாண்டவியை பரதனுக்கும், சுருதகீர்த்தியை சத்ருக்னனுக்கும் பாணிக்ரஹணம் செய்துவைத்தார். பிறகு மேல் செய்யவேண்டிய கார்யங்களையும், வஸிஷ்டர் கிரமமாகச் செய்துவைத்த பிறகு, அவரவர்கள் பார்யைகளுடன் ராஜபுத்திரர்கள் ஜாகைக்குத் திரும்பும்போது ஸம்பிரதாயப்படி தம்பதிகளை முன்னிட்டு கொண்டு தசரதரும் மஹரிஷிகளும், பந்துக்களும் பின்னாலேயே சென்றார்களென்பதை வால்மீகி கண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.*

अथोपकार्यां जग्मुस्ते सभार्या रघुनन्दनाः ।
राजाऽप्यनुययौ पश्यन् सर्षिसङ्घः सबान्धवः ॥ ,, (41)

*விவாஹ தினத்தைப்பற்றி கவனிப்போமேயானால், அயோத்யையிலிருந்து புறப்பட்ட 11-வது நாள் அர்த்த ராத்திரிக்கு மேல் சந்திரோதயம் என்று வியக்தமாய் கண்டிருக்கிறபடியால், அதிலிருந்து பதினைந்தாவது நாளான 25ம் நாள் அடுத்த பக்ஷத்தில் அதே திதியாகத் தானிருக்கவேண்டும். அன்று நக்ஷத்திரம் உத்தரமானதினால் உத்தர நக்ஷத்திரமும் சுக்ல தசமியும் சேரக்கூடிய தினம் வைசாக மாஸத்தில் அல்லது ஜ்யேஷ்டத்தில்தான் வரும் அதிலும் வஸந்தத்தை விட்டு விட்டு ஜ்யேஷ்டத்தில் ஜனகர் யாகம் செய்திருக்கமாட்டார்.*

*இப்படியிருக்க சிலர் விவாஹம் நடந்தது பால்குன பௌர்ணமி என்கிறார்கள். பௌர்ணமி பர்வதினம்.*

விவாஹத்திற்கு நிஷித்தம். அர்த்த ராத்திரிக்குமேல் சந்த்ரோதயமான தினத்திலிருந்து 15வது நாள் பௌர்ணமி வராது. பால்குன பௌர்ணமியானால் அதற்கு முன் நடந்த ஜனகரின் யாகம் பால்குன மாஸத்திலும், அதற்குமுன் நடந்த விசுவாமித்ரரின் யாகம் மாகமாஸத்திலும் நடந்ததாக ஆகும். முக்கிய காலமான வஸந்தத்தை விட்டு விட்டு அதற்கு முன்னாலேயே பால்குனத்திலும், மாகத்திலும் இவை நடந்தனவென்று சொல்லுவது உசிதமாகாது.

மேலும் ராமர் விசுவாமித்ரருடன் வரும்போது அவருக்குப் பன்னிரண்டு வயது என்று மாரீசன் சொல்லுகிறான்.

बालो द्वादशवर्षोऽयं अकृतास्त्रश्च राघवः ॥ அர. 38 (6)

ராமர் வனத்திற்குப் புறப்படும்போது அவருக்கு வயது 25 என்றும் தான் பர்த்தாவுடன் 12 வருஷ காலம் ஸுகமாக இருந்ததாகவும் ஸீதை சொல்லுவதிலிருந்தும் மாரீசன் சொல்லுகிறபடியே விவாஹம் 13-வது வயதில் என்று உறுதிப்படுகிறது.

उषित्वा द्वादश समा इक्ष्वाकूणां निवेशने । அர. 47 (4)

मम भर्ता महातेजा वयसा पञ्चविंशकः ॥ ,, ,, (20)

12-வது வயது சைத்ரசுக்ல நவமியிலேயே பூர்த்தியாவதால், அதற்குபின் வந்து விசுவாமித்ரர் அழைத்துப் போய் 25 வது தினம் விவாஹமென்றால் சைத்ரத்திலேயே இருக்கமுடியாது. வைசாகத்தில்தான் ஸாத்யம். அப்பொழுதும் உத்தரபல்குனி சேரவேண்டுமானால் சுக்ல தசமியாகத்தான் இருக்கமுடியும்.

26-ம் நாள்: விவாஹம் நடந்து மறுநாளே விசுவாமித்ரர் ஜனகரிடமும் தசரதரிடமும் சொல்லிக்கொண்டு புறப்பட்டுவிட்டார்.

அவர் புறப்பட்ட பிறகு சீக்கிரமாகவே தசரதமஹாராஜனும் ஜனகரிடம் சொல்லிக்கொண்டு புறப்பட்டார்.

अथ रात्र्यां व्यतीतायां विश्वामित्रो महामुनिः ।

आपृच्छ्य तौ च राजानौ जगामोत्तरपर्वतम् ॥

विश्वामित्रे गते राजा वैदेहं मिथिलाधिपम् ॥

आपृच्छ्याथ जगामाशु राजा दशरथः पुरीम् । பால. 74 (1-3)

என்று மாத்திரம் வால்மீகி சொல்லி இருக்கிறாரே தவிர எத்தனை நாட்கள் மிதிலையில் இருந்துவிட்டுப் புறப்பட்டாரென்று காணவில்லை. விவாஹாங்கமான நான்கு நாள் ஔபாஸனம் சேஷஹோமம் முதலானவைகளையும் நடத்திக்கொண்டேதான் புறப்பட்டிருப்பார். உடனே புறப்பட்டாரென்று வைத்துக்கொண்டால் அந்தக் கார்யங்களை அயோத்யை போய்ச் சேர்ந்தவுடன் நடத்தியிருக்க வேண்டும். வால்மீகி வியக்தமாய் சொல்லாததினால் அவைகள் நடக்கவில்லை என்று நினைக்க எவ்வித நியாயமுமில்லை.

அயோத்யையிலிருந்து மிதிலை வருவதற்கு நான்கு தினங்கள் வேண்டியிருந்ததுபோலவே திரும்பிப்போகும் போதும் சீக்கிரமாகப் போனாலும் நான்கு நாட்கள் பிடித்திருக்கும். புறப்பட்ட தினத்திலேயே எதிரில் வந்த

பரசுராமருடைய வீர்யத்தை இறக்கி அவரிடம் ஸ்ரீ ராமர் வைஷ்ணவ தனுஸைப் பெற்றுக்கொண்டு மேல் யாத்திரை நடந்தது.

அயோத்யை போய் சில நாட்கள் சென்று தசரதரின் அனுமதியின் பேரில் யுதாஜித் பரதனையும் சத்ருக்னனையும் அழைத்துக்கொண்டு கேகய ராஜ்யம் போய்ச் சேர்ந்தார். அயோத்யையில் ராமரும் லக்ஷ்மணனும் பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்துகொண்டு அவரவர்கள் பார்யைகளுடன் ஸந்தோஷமாக இருந்து வந்தார்கள்.

## அத்யாயம் 15

## கால விமர்சம் 2

### சித்ரகூடம் வரை

தசரத மஹாராஜர் ராம லக்ஷ்மணர்களால் சுசுரூஷை செய்யப்பட்டு ஸந்தோஷமாக இருந்து வருகையில் பன்னிரண்டு வருஷங்களாகிவிட்டன. ராமருக்கு 25-வது வயது ஆரம்பிக்கும் ஸமயம் தசரதர் ஒருநாள் அசுபமான ஸ்வப்னங்களைக் கண்டார். தனக்கு மரணமோ கோரமான ஆபத்தோ ஏற்படுமென்று பயந்தார். இரண்டுமே சேர்ந்து ஏற்படப்போகிறதென்று அவர் எதிர்பார்க்கவில்லை. உடனே ஸ்ரீ ராமரை யுவராஜாவாகச் செய்துவிடவேண்டுமென்று தீர்மானித்து மந்திரிகளுடன் ஆலோசித்துக்கொண்டு பெரிய ஸபை கூட்டித் தன்னுடைய உத்தேசத்தைத் தெரிவித்தார். எல்லோரும் வெகு ஸந்தோஷமாக ஸம்மதித்ததின் பேரில் அந்த சைத்ர மாஸத்திலேயே மறுநாள் ஸூர்யோதயமானவுடன் ஸ்வஸ்திவாசநம் நடத்திப் பின் பட்டாபிஷேகத்தைச் செய்விக்க வேண்டுமென்று உத்திரவிட்டார்.

चैत्रः श्रीमानयं मासः पुण्यः पुष्पितकाननः ।
यौवराज्याय रामस्य सर्वमेवोपकल्प्यताम् ॥ அயோ. 3 (4)

सूर्येऽभ्युदितमात्रे श्वो भविता स्वस्तिवाचनम् । ,, ,, (16)

உடனே ராமரை வரவழைத்து மறுநாள் புஷ்ய நக்ஷத்திரத்தில் யௌவ ராஜ்யத்தையடைய வேண்டுமென்று கூறி ராஜ தர்மத்தையும் கொஞ்சம் எடுத்துச் சொல்லி அனுப்பிவிட்டார்.

तस्मात् त्वं पुष्ययोगेन यौवराज्यमवाप्नुहि ॥ ,, ,, (41)

மறுபடியும் மந்திரிகளிடம் நிச்சயமாக

श्व एव पुष्यो भविता श्वोऽभिषेच्यस्तु मे सुतः । ,, 4 (2)

என்று சொல்லிவிட்டு மறுபடியும் ராமரை வரவழைத்து தனக்கு ஏற்பட்ட துர்நிமித்தங்களினுலேயே அவஸரமாக மறுநாள் என்று தீர்மானித்ததாகவும் அபிஷேகத்திற்குப் பூர்வாங்கமாக அன்று ராத்திரி ஸீதையுடன் உபவாஸமிருக்க வேண்டுமென்றும் சொல்லியனுப்பினுர்.

तत्र पुष्येऽभिषिञ्चस्व मनस्त्वरयतीव माम् ।
श्वस्त्वाहमभिषेक्ष्यामि यौवराज्ये परंतप ॥

तस्मात् त्वयाऽद्यप्रभृति निशेयं नियतात्मना ।
सह वध्वोपवस्तव्या दर्भप्रस्तरशायिना ॥ ,, ,, 22 (23)

உடனே ராமர் இந்த சுப ஸமாசாரத்தைத் தன் தாயார் கௌஸல்யையிடம் தெரிவித்துவிட்டு அவளேயும் அங்கிருந்த ஸுமித்ரையையும் நமஸ்கரித்துவிட்டு, அவர்களைக் கேட்டுக்கொண்டு ஸீதையைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு, தன் இருப்பிடம் சென்ருர். தசரதரின் சொல்லின் பேரில் வஸிஷ்டரே நேரில் போய் ராமருக்கு உபவாஸ ஸங்கல்பம் செய்துவிட்டு வந்தார். ராமரும் ஸீதையுடன் ஸ்நானம் செய்து விதிவத்தாக அக்னியில் ஆஜ்யத்தை ஆஹுதி செய்து ஹவிஸ் மிச்சத்தையே பிராசனம் செய்துவிட்டு ஸ்ரீமந் நாராயணரை தியானித்துக்கொண்டு மௌனமாக தர்ப்பத்தில் சயனம் செய்துகொண்டார். பொழுது விடிவதற்கு ஒரு ஜாமம் இருக்கிற போதே ராமர் எழுந்திருந்து ஸ்நாநாதிகளை முடித்துக் கொண்டு காலை ஸந்த்யாவந்தனத்தைச் செய்தார்.

एकयामावशिष्टायां रात्र्यां प्रतिविबुध्य सः ॥
पूर्वां सन्ध्यामुपासीनो जजाप यतमानसः ॥ ,, 6 (5.6)

*பிராஹ்மணர்களைக்கொண்டு ஸ்வஸ்திவாசநம் செய்வித்தார். நகர ஜனங்களும் மிக உத்ஸாஹத்துடன் நகரத்தை வெகுவாக அலங்காரம் செய்து ராமருக்கு அபிஷேகமென்றே ஸூர்யோதயத்தை எதிர்பார்த்திருந்தார்கள். அபிஷேகம் நின்றுபோகுமென்று தெரிந்திருந்தால் ஸூர்யனோ உதயமாக வேண்டாமென்று எண்ணியிருப்பார்கள் போலும்.*

रामाभिषेकमाकाङ्क्षन् आकाङ्क्षन्नुदयं रवेः ॥ ,, 5 (19)

*[ஸ்ரீமத் ராமாயணத்தில் வால்மீகி மஹரிஷி வர்ணித்திருக்கிற முறையில் எல்லா ஸம்பவங்களும் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியதாக இருந்தபோதிலும், இங்கு காலவிமர்சனம் என்பதையே பிரதானமாக உத்தேசித்திருப்பதால், முக்யமான ஸம்பவங்களைக் கொஞ்சம் கொஞ்சம் தொட்டுக்கொண்டுதான் மேல் போக வேண்டியிருக்கிறது. இந்தக் கட்டுரையில் அவைகளை அதிகமாக விஸ்தரிக்க முடியவில்லை.]*

*யௌவராஜ்ய பட்டாபிஷேகமென்று தீர்மானித்த தினத்திலேயே நகரத்தில் அலங்காரம் செய்ய ஆரம்பித்து ஜனங்கள் உத்ஸாஹமாக இருப்பதை, அகஸ்மாத்தாக அரண்மனையின்மேல் மாடியில் ஏறின மந்தரை என்ற கைகேயியின் வேலைக்காரி பார்த்தாள். பக்கத்திலிருந்த தாதியிடம் கேட்டதில் விஷயம் தெரிந்துகொண்டாள். உடனே வெகு கோபத்துடன் கைகேயியிடம் சென்று, அவளுக்கு ஸ்வபாவமாக ராமரிடத்தில் இருந்துவந்த பிரீதியை தன் வார்த்தைகளினால் மாற்றி, ராமருக்குப் பட்டாபிஷேகமானால் ராமனால் பரதனுக்கும், கௌஸல்*

யையால் கைகேயிக்கும் ஆபத்து ஏற்படுமென்று வற்புறுத்தி அவளை நம்பும்படி செய்துவிட்டாள். ராமருக்கு ராஜ்யம் வராமல் பரதனுக்கே கிடைப்பதற்கு என்ன உபாயம் என்று அவள் கேட்டதின் பேரில் மந்தரை, முன்னொரு காலம் நடந்த தேவாஸுர யுத்தத்தில் ரதத்தை ஓட்டிக்கொண்டிருந்த கைகேயி தசரதரைக் காப்பாற்றினபோது அவர் கொடுத்த இரண்டு வரங்களைப் பின்னால் வேண்டியபோது கேட்டுக்கொள்ளுவதாக கைகேயி சொல்லியிருப்பதை ஞாபகப்படுத்தி, இப்பொழுது ராமரைப் பதினான்கு வருஷகாலம் காட்டுக்கு அனுப்ப வேண்டுமென்றும், பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்க வேண்டுமென்றும், அந்த இரண்டு வரன்களைக் கேட்க வேண்டுமென்று யுக்தி சொல்லிக் கொடுத்தாள். அவ்விதமாகவே செய்வதாக உறுதி கூறி, கைகேயி கோபகிருஹம் சென்று நகைகளையெல்லாம் கழற்றியெறிந்து விட்டு பூமியில் படுத்துக்கொண்டாள். இவ்விதம் செய்யத் தோன்றினதே பின்வரும் வைதவ்யத்திற்கு ஸூசகமாகும்.

தசரதமஹாராஜர் ஸபை கலைந்த பிறகு அபிஷேக ஸமாசாரம் கைகேயிக்கும் பிரியமாகவேயிருக்குமென்று நினைத்து அவளிடம் சொல்லவேண்டுமென்ற எண்ணத்துடன் அவளிருப்பிடம் சென்றார். அங்கு அவளைக் காணாமல் அங்குள்ள காவல்காரி சொன்னதின் பேரில் கோபகிருஹம் சென்று கைகேயியைப் பார்த்து பலவிதமாக ஸமாதானம் செய்தும் பலிக்காமல் "எதை வேண்டுமானாலும் கேள்" என்றார்.

தான் கேட்கப்போவது தசரதருக்குப் பிரியமாயிராதென்று தெரிந்தவளானதினால் அவரை சபதம் செய்து கொடுக்கச் சொல்லுகிறாள். அவரும்

अवलिप्ते न जानासि त्वत्तः प्रियतरो मम ।
मनुजो मनुजव्याघ्राद्रामादन्यो न विद्यते ॥ ,, 11 (5)

यं मुहूर्तमपश्यंस्तु न जीवेयमहं ध्रुवम् ।
तेन रामेण कैकेयि शपे ते वचनक्रियाम् ॥ ,, ,, (7)

"உன்னைவிட மேலாக நான் அபிமானம் வைத்திருக்கிற மனுஷ்யன் ராமரைத் தவிர வேறு கிடையாது என்பது உனக்குத் தெரியாதா? எவனை ஒரு முகூர்த்தம் பார்க்காமலிருந்தாலும் நான் நிச்சயமாய் பிழைத்திருக்க மாட்டேனோ அந்த ராமர் பேரில் ஆணையாய்ச் சொல்லுகிறேன். நீ சொல்லுகிறபடி செய்கிறேன்" என்றார். இதுவும் போதாததுபோல அவள் ஸூர்யன் சந்திரன் முதலான தேவதைகளையும் ஸாக்ஷிகளாகக் கோருகிறாள்.

மேலும் வாக்குக் கொடுத்துவிட்டு அவ்விதம் நடத்தாமலிருந்தால் பிராணனையே விட்டுவிடுவேனென்று பயமுறுத்திவிட்டு பின்னாலேயே தன்னுடைய வரன்களை குறிப்பிடுகிறாள். தசரதர் திடுக்கிட்டு எவ்வளவோ கெஞ்சிப்பார்த்தும், திட்டிப்பார்த்தும் பிரயோஜனப் படாமல், மிகவும் சோகத்தினால் பீடிக்கப்பட்டு, தர்ம பாசத்திலிருந்து தப்பிக்க வழியில்லாமல் புலம்பிக் கொண்டேயிருக்கையில் இரவு வந்துவிட்டது.

तथा विलपतस्तस्य परिभ्रमितचेतसः ॥
अस्तमभ्यगमत् सूर्यो रजनी चाभ्यवर्तत । ,, 13 (14,15)

ராத்திரி பூராவும் இப்படியே இருந்தது. ஸூர்யோதய ஸமயத்தில் ராமரைக் காட்டுக்கு அனுப்பவேண்டிய வேகத்துடன் இருந்த கைகேயி ராமரை அழைத்து வரும்படி மஹாராஜரைத் தூண்டினாள். அவருக்கும் ராமரைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணமேற்பட்டது.

காலையில் வழக்கம் போல் மஹாராஜரை எழுப்புவதற்காக ஸுமந்திரன் வந்த ஸமயம், தசரதருக்கு ஒன்றும்

சொல்வதற்குத் தோன்றாமலிருக்கும்போது கைகேயீ யாகவே, ராஜா அவஸரமாக ராமரை அழைத்துவரச் சொன்னதாகச் சொல்லிவிட்டாள்.

இன்று காலையிலிருந்து நாட்களைக் கணக்கிடுவோம். இன்று சைத்ர மாஸம் புஷ்ய நக்ஷத்திரம். இதுவே பரத னின் ஜன்ம தினமாயிருப்பதால் நவமியாகவோ தசமி யாகவோ இருந்திருக்கலாம். ஆனல் அஷ்டமி நவமி பட்டாபிஷேகத்திற்குரிய நாட்களில்லையானதினாலும், வனவாஸம் ஸப்தமியில் ஸமாப்தியென்று தெரிகிறபடி யாலும் ஸப்தமியாகத்தான் இருக்குமென்று தோன்று கிறது.

முதல் நாள் :—முந்தின நாள் ஏற்பாட்டின்படி வஸிஷ்டர் முதலான யாவரும் அபிஷேகத்தை எதிர்பார்த்து அரமனையில் கூடிவிட்டார்கள். குறிப்பிட்ட முகூர்த்தம் வந்துவிட்டதென்று எல்லாரும் எதிர்பார்த் துக்கொண்டிருந்தார்கள்.

ततः प्रभातां रजनीं उदिते च दिवाकरे ।
पुण्ये नक्षत्रयोगे च मुहूर्ते च समागते ॥ ,, 14 (25)

வஸிஷ்டர் முதலானவர்கள் வந்திருக்கிறார்களென்று தெரிவிக்க மறுபடியும் ஸுமந்திரர் உள்ளே வந்தவுடன் "ஏன் இன்னும் ராமரை அழைத்து வரவில்லை?" என்று தசரதரே கேட்டுவிட்டதின்பேரில், ஸுமந்திரர் வெகு அவஸரமாக ராமருடைய இருப்பிடம் சென்று ராமரிடம் தெரிவித்தார். உடனே ராமர் லக்ஷ்மணனுடன் ரதத்தில் ஏறிக்கொண்டு வரும் வழியில் ஜனங்களுக்கு இருக்கும் உத்ஸாஹத்தைப் பார்த்துக்கொண்டே அரண்மனை வந்து மூன்று கட்டுகள் தாண்டின பிறகு ரதத்திலிருந்து இறங்கி கால்நடையாகவே மற்ற கட்டுக்களைக்கடந்து

எல்லா ஜனங்களையும் நிறுத்திவிட்டு அந்தப்புரத்திற்குள் பிரவேசித்தார்.

அங்கு வாடின முகத்துடனிருந்த தகப்பனரையும் கைகேயியையும் நமஸ்கரித்துவிட்டு தகப்பனர் ஒன்றும் சொல்லமுடியாமலுள்ள நிலையிலிருப்பதைப் பார்த்து மிகவும் வருத்தப்பட்டுக் கைகேயியைக் காரணம் கேட்டார். அவள் "இவருக்கு உன்னைப் பார்த்து அப்பிரியமான வார்த்தை சொல்ல வாக்கு எழும்பவில்லை. நீ எப்படியாலும் நடத்துவேனென்று வாக்குக் கொடுத்தால் நானே சொல்லுகிறேன்" என்று அவரிடம் உறுதி வாங்கிக்கொண்டு விஷயத்தைச் சொன்னள். அவர் "அப்படியே பரதனுக்கு அபிஷேகம் செய்யட்டும். நான் காட்டுக்குப் போகிறேன்" என்று சொன்னதும், பரதன் வந்து அபிஷேகமான பிற்பாடுதான் ராமர் புறப்படுவாரோ என்ற ஸந்தேஹத்தின்பேரில், "பரதனுக்கு நான் தூதர்களை அனுப்பிக்கொள்ளுகிறேன். அதற்காக நீ தாமஸிக்க வேண்டாம். நீ புறப்படும்வரை உன் பிதா ஸ்நானம் செய்யமாட்டார், சாப்பிடமாட்டார்" என்றாள். இதைக்கேட்ட தசரதர் "சுடு" என்று பெருமூச்சுவிட்டுச் சொல்லிக்கொண்டு மூர்ச்சையடைந்தார். அப்பொழுது ராமர் "நீ சொன்னலுமே கேட்பேனே. இதற்காக மஹாராஜரிடம் கேட்கவேண்டுமா? இப்பொழுதே புறப்பட்டு விட்டேன். தாயாரையும் ஸீதையையும் ஸமாதானப் படுத்திவிட்டு இன்றைக்கே புறப்படுகிறேன்" என்று சொல்லி பிரக்ஞையன்னியிலிருந்த தகப்பனரையும் கைகேயியையும் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்துவிட்டு வெளிக்கிளம்பினர். நகர ஜனங்கள் ராமருடைய ஸந்தோஷகரமான முகத்தில் எவ்வித மாறுதலையும் காணவில்லை லக்ஷ்மணன் தனக்குள்ள துக்கத்தை அடக்கிக் கொண்டே அவருக்குப்பின் சென்றான்.

நேரே கௌஸல்யையின் இருப்பிடம் சென்று விஷயத்தைச் சொல்லி, அவள் செய்த விலாபங்களுக்கும,

லக்ஷ்மணனுக்கு வந்த கோபத்திற்கும், மிருதுவாக ஸமா தானம் செய்து, கடைசியில் அவளுடைய ஆசீர்வாதங் களைப் பெற்றுக்கொண்டு, அரண்மனையை விட்டு வெளி யில் வந்து தன்னிருப்பிடம் சென்று, நடந்த விருத்தாந் தத்தை ஸீதையிடம் சொன்னார். தானும் காட்டிற்கு வருவேனென்று அவள் வறபுறுத்தினதினால் அதற்கு அவ ரும் ஸம்மதித்தார். உடனே லக்ஷ்மணனும் ராமருடைய பாதங்களை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு மன்றாடின தின் பேரில் அவனையும் தன்னுடன் அழைத்துப்போக ஒப்புக்கொண்டார்.

உடனே தனக்குச் சொந்தமான சொத்திலிருந்து பிராஹ்மணர்களுக்கும், வேலைக்காரர்களுக்கும், கேட்ப வர்களுக்கும் ஏராளமான கோக்களையும் தனத்தையும் கொடுத்துவிட்டு, ஸீதையையும் லக்ஷ்மணனையும் தன் னுடன் அழைத்துக்கொண்டு தசரதரிடம் போனார். அங்கே பலவிதமாக தசரதருக்கு ஸமாதானம் சொல்லி, தனக்கும் லக்ஷ்மணனுக்கும் போலவே ஸீதைக்கும் மரவுரி கொண்டு வந்ததால் கைகேயியிடம் கோபித்துக் கொண்ட ஸுமந்திரர், ஸித்தார்த்தர், வஸிஷ்டர் இவர் களையும் ஸமாதானப்படுத்திவிட்டு, தசரதருடைய எல்லா மனைவிகளிடத்திலும் தசரதரிடத்திலும் அனுமதி கேட்டுக்கொண்டு, தசரதரின் சொல்லின்பேரில் ஸுமந் திரரால் கொண்டுவரப்பட்ட ரதத்தில் மூவரும் ஏறிக் கொண்டார்கள். ஸுமித்ரையும் லக்ஷ்மணனை உச்சி முகர்ந்து அழுதுகொண்டே அவன் செல்வதை சிலா கித்து வழியனுப்பினாள்.

ரதம் புறப்படுகிறதென்று தெரிந்தவுடன் துக்கம் தாங்கமாட்டாமல் தசரதர் அரண்மனையைவிட்டு வீதிக்கே வந்துவிடுகிறார். அவரும் கௌஸல்யையும் ரதத்துடன் ஓடப் பிரயத்னம் செய்கையில், ராமர் க்ஷேமமாகத் திரும்பவேண்டுமானால் அதிகதூரம் பின்தொடர்ந்து

போகக்கூடாதென்று பக்கத்திலுள்ளவர்கள் சொன்னதைக் கேட்டு, அங்கேயே நின்றுகொண்டு ரதத்தின் தூளி மறைந்தவுடன் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்து விட்ட தசரதரைத் தூக்குவதற்காக வந்த கைகேயியை உதறிவிட்டு கௌஸல்யையின் உதவியைக்கொண்டு எழுந்து அரண்மனைக்குள் போய் அன்று ராத்திரி பூராவும் ராமரைப்பற்றி அழுதுகொண்டிருந்தார். அர்த்த ராத்திரியில் அவர் கண்களே மங்கிவிட்டன.

अर्धरात्रे दशरथः कौसल्यामिदमब्रवीत् ॥

रामं मेऽनुगता दृष्टिः अद्यापि न निवर्तते ।
न त्वा पश्यामि कौसल्ये साधु मां पाणिना स्पृश ॥ ,, 42 (33,34)

நகரத்திலுள்ள பால விருத்தர்கள் உள்பட எல்லா ஜனங்களும் ராமர் கூடவே செல்ல, எல்லாரும் ஸாயங் காலம் தமஸாநதிதீரம் சென்றார்கள். அங்கு தீர்த்தம் மாத்திரம் அருந்திவிட்டு அன்றிரவு அங்கேயே தங்கினார்கள். ஸுமந்திரரும் லக்ஷ்மணனும் மாத்திரம் ராமருடைய குணங்களைச் சொல்லிக்கொண்டு விழித்துக் கொண்டே இருந்தார்கள்.

जाग्रतो ह्येव तां रात्रिं सौमित्रेरुदितो रविः ।
सूतस्य तमसातीरे रामस्य ब्रुवतो गुणान् ॥

अवसत् तत्र तां रात्रिं रामः प्रकृतिभिः सह ॥ ,, 46 (16,17)

2-வது நாள்: பிரஜைகள் மறுபடியும் இதுமாதிரி கஷ்டப்படக் கூடாதென்ற எண்ணத்துடன் அவர்கள் தூங்கிக்கொண்டிருக்கையிலேயே, ராமரின் உத்திரவின் பேரில் அவர்களுக்குத் தெரியாமல் இருட்டிலேயே ரதத்தைப்பூட்டி, ராமர் முதலானவர்களை ஏற்றிக்

கொண்டு ஸுமந்திரர் நதியைத் தாண்டி வெகுதூரம் போய்விட்டார். அந்த ஜனங்கள் எழுந்திருந்து பார்க்கையில் ராமரைக் காணுமல் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டு மெள்ள மெள்ள அயோத்யைக்கே திரும்பி விட்டார்கள்

ராமரும் வெகுதூரம் சென்று கோஸல தேசத்து எல்லையைக் கடந்து வேதசுருதி, கோமதி என்ற நதிகளைத் தாண்டி மறுபடியும் வெகுதூரம் சென்று கங்கைக்கரை போய்ச் சேர்ந்தார். அங்கே குஹன் என்ற நிஷாதாதிபதி வந்து பலவிதமாய் ஸத்காரம் செய்ய குதிரைகளுக்குப் புல்தான் தேவையென்று சொல்லிவிட்டு, லக்ஷ்மணன் கொண்டுவந்த ஜலத்தை மாத்திரம் ஆஹாரமாக கிரஹித்துக்கொண்டு அன்றிரவு அங்கேயே சயனம் செய்து கொண்டார். குஹனும் ஸுமந்திரனும் லக்ஷ்மணனுடன் ராத்திரி பூராவும் பேசிக்கொண்டே நின்றூர்கள்.

परिदेवयमानस्य दुःखार्तस्य महात्मनः ।
तिष्ठतो राजपुत्रस्य शर्वरी साऽत्यवर्तत ॥ ,, 51 (26)

3-வது நாள்: காலையில் ஸூர்யோதயமாகிவிட்டபடியால் கங்கையைத் தரணம் செய்யலாம்

भास्करोदयकालोऽसौ गता भगवती निशा ।
तराम जाह्नवीं सौम्य शीघ्रगां सागरंगमाम् ॥ ,, 52 (2,3)

என்று ராமர் சொன்னதின் பேரில் குஹன் ஓடம் கொண்டு வந்தான். பிறகு ஸுமந்திரனை சிரமப்பட்டு ஸமாதானம் செய்து அயோத்யைக்குத் திரும்பிப் போய் மஹாராஜர் முதலானவர்களை ஆசுவாஸப்படுத்தி கவனித்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டு, ஓடத்தில் ஏறிக்கொண்டு கங்கையைத் தரணம் செய்து தென்கரை போய்ச் சேர்ந்தார்.

அவர்கள் புறப்பட்டுப்போன பிறகு குஹன் ஸுமந்திரனுடன் வெகு நேரம் வருத்தப்பட்டுப் பேசிக்கொண்டிருந்துவிட்டு தன் வீட்டுக்குத் திரும்பினான்.

कथयित्वा सदुःखार्तः सुमन्त्रेण चिरं सह ।
रामे दक्षिणकूलस्थे जगाम स्वगृहं गुहः ॥ ,, 57 (1)

ஸுமந்திரன் குதிரைகளை ரதத்தில் பூட்டிக்கொண்டு அயோத்யைக்குத் திரும்பிவிட்டான்.

अनुज्ञातः सुमन्त्रोऽथ योजयित्वा हयोत्तमान् ।
अयोध्यामेव नगरीं प्रययौ गाढदुर्मनाः ॥ ,, ,, (3)

ஆனால் ஸுமந்திரன் பின்னால் தசரதரிடம் சொல்லும் போது ராமர் மறுபடியும் சப்தம் போட்டு கூப்பிடுவாரோ என்று நினைத்து குஹனுடன் அங்கேயே "வெகுநாட்கள்" இருந்ததாகச் சொல்லுகிறான்.

गुहेन सार्धं तत्रैव स्थितोऽस्मि दिवसान् बहून् ।
आशया यदि मां रामः पुनः शब्दापयेदिति ॥ ,, 59 (3)

இங்கேயுள்ள "வெகுநாட்கள்" என்பதற்கு "வெகு நேரம்" என்றுதான் அர்த்தம் சொல்லவேண்டும். "சப்தம்கொடுப்பார்" என்று சொல்லியிருப்பதினாலேயே வாயாலோ கை தட்டியோ கூப்பிடக்கூடிய தூரம் செல்லும் வரைதான் ஸுமந்திரன் தாமஸித்ததாகத் தெரிகிறது. ராமர் நான்கு நாட்கள் சென்று சித்ரகூடம் போனதாக ஸமாசாரம் தெரியும்வரை அங்கேயே நின்றதாகச் சொல்லுவதற்கு எவ்வித பிரமாணமும் இல்லை. அவ்வித ஸமாசாரம் வேறு யாரேனும் கொண்டுவந்ததாகவாவது, ராமாதிகளுடன் வேறு யாரேனும் போனதாகவாவது சொல்லவேயில்லை. தவிரவும் சில பாடங்

களில் ராமாதிகள் அக்கரைக்குப் போய் பிரயாகைப்பக்கம் போவதைப் பார்த்துவிட்டுத் திரும்பிவிட்டேனென்று ஸுமந்த்ரன் சொன்னதாகக் காண்கிறது.

गङ्गामुत्तीर्य तौ वीरौ प्रयागाभिमुखौ गतौ ।
अग्रतो लक्ष्मणो याति पालयन् रघुनन्दनम् ॥

अनन्तरं च सीताऽथ राघवो रघुनन्दनः ।
तांस्तथा गच्छतो दृष्ट्वा निवृत्तोऽस्म्यवशस्तदा ॥

அக்கரை போய்ச் சேர்ந்து கொஞ்சதூரம் போன பிறகு ஸாயங்காலமாகிவிட்டபடியால ஸந்த்யை செய்து விட்டு ஒரு ஆலமரத்தடியில் படுத்துக்கொண்டார்கள்.

स तं वृक्षं समासाद्य संध्यामन्वास्य पश्चिमाम् । ,, 53 (1)
न्यग्रोधे सुकृतां शय्यां भेजाते धर्मवत्सलौ ॥ ,, ,, (33)

4-வது நாள்: காலையில் எழுந்து வெகுதூரம் நடந்து ஸாயங்காலம் கங்கையும் யமுனையும் சேருமிடம் போய் அங்கிருந்த பரத்வாஜ மஹரிஷியால் மிகவும் ஸத்காரம் செய்யப்பட்டு அன்றிரவு அங்கேயே தங்கினார்கள்.

ते तु तस्मिन् महावृक्षे उषित्वा रजनीं शिवां ।
विमलेऽभ्युदिते सूर्ये तस्मात् देशात् प्रतस्थिरे ॥ ,, 54 (1)

धन्विनौ तौ सुखं गत्वा लम्बमाने दिवाकरे ।
गङ्गायमुनयोः सन्धौ प्रापतुर्निलयं मुनेः ॥ ,, ,, (8)

सीतातृतीयः काकुत्स्थः परिश्रान्तः सुखोचितः ।
भरद्वाजाश्रमे रम्ये तां रात्रिमवसत्सुखम् ॥ ,, ,, (35)

அங்கேயேயிருக்கலாமென்று பரத்வாஜர் சொன்னதற்கு, அங்கிருந்தால் ஜனங்கள் தன்னைப் பார்ப்பதற்காக அடிக்கடி வந்துகொண்டேயிருப்பார்களாதலால் ஏகாந்தமான வேறு இடம் சொல்ல வேண்டுமென்று ராமர் கேட்டுக்கொண்டதின்பேரில் சித்ரகூட பர்வதம் ஸௌகர்யமாயிருக்குமென்று மஹரிஷி சொன்னார்.

5-வது நாள்: காலையில் மஹரிஷியை நமஸ்கரித்து அவருடைய ஆசியைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டு அவர் சொன்ன வழியாக யமுனா நதிக்கரையில் வெகு தூரம் சென்றார்கள்.

उषित्वा रजनीं तत्र राजपुत्रावरिंदमौ ।
महर्षिमभिवाद्याथ जग्मतुस्तं गिरिं प्रति ॥ ,, 55 (1)

பிறகு தெப்பம் கட்டிக்கொண்டு யமுனையைக் கடந்து தென்கரை போய் வெகுதூரம் ரமணீயமான காடுவழியாகச் சென்று அன்றிரவு யமுனா வனத்திலேயே தங்கினார்கள்.

6-வது நாள்: சிரமத்தினால் கொஞ்சம் தூங்கிவிட்ட லக்ஷ்மணனை எழுப்பி எல்லோரும் நதியில் ஸ்நானம் செய்துவிட்டு மறுபடியும் நடக்க ஆரம்பித்தார்கள்.

अथ रात्र्यां व्यतीतायां अवसुप्तमनन्तरम् ।
प्रबोधयामास शनैः लक्ष्मणं रघुनन्दनः ॥ ,, 56 (1)
तत उत्थाय ते सर्वे स्पृष्ट्वा नद्याः शिवं जलम् ।
पन्थानं ऋषिणादिष्टं चित्रकूटस्य तं ययुः ॥ ,, ,, (4)

சித்ரகூடம் போய்ச் சேர்ந்தவுடன் அங்கிருந்த வால்மீகி மஹரிஷியின் ஆசிரமம் சென்று நமஸ்கரித்து அவரால் வரவேற்கப்பட்டார்கள். உடனே லக்ஷ்மணன்

பலவிதமான மரங்களை உபயோகித்து பர்ணசாலை கட்டிக் கொடுத்தான. உடனே ராமர் ஸ்நானம் செய்து மந்த்ர புரஸ்ஸரமாக வாஸ்து சாந்தி செய்து தேவதைகளுக்கு உசிதமான பலிகளைக் கொடுத்து சுத்தி செய்த பிறகு எல்லோரும் பர்ணசாலைக்குள் பிரவேசம் செய்தார்கள். அதன் பிறகு அங்கேயே ஸுகமாக வாஸம் செய்து வந்தார்கள்.

ஸ்ரீராமர் அயோத்யையிலிருந்து புறப்பட்டு அன்றிரவு தமஸா நதிக்கரையிலும் அதற்கு மறுநாள் இரவு கங்கைக் கரையிலும் தங்கிவிட்டு மூன்றாவது நாள் கங்கையின் தென்கரைக்குப் போய்ச் சேர்ந்ததைப் பார்த்துவிட்டு, ஸுமந்திரன் அங்கிருந்து வெறும் ரதத்தை ஓட்டிக் கொண்டு, அதிலிருந்து இரண்டாவதுநாள் ஸாயங்காலம் அயோத்யைக்கு வந்து சேர்ந்தான். ஸந்தோஷமற்றிருந்த அயோத்யையைக் கண்டான்.

ततः सायाह्नसमये द्वितीयेऽहनि सारथिः ।
अयोध्यां समनुप्राप्य निरानन्दां ददर्श ह ॥ ,, 57 (5)

நேரே அரண்மனை போய் தசரதரிடமும் கௌஸல்யை யிடமும் நடந்த விஷயங்களைச் சொன்னதும் அவர்கள் பலவிதமாக பிரலாபம் செய்துகொண்டேயிருந்தார்கள். ராமர் புறப்பட்டு அன்று ஐந்தாவது தினம்.

वनवासाय रामस्य पञ्चरात्रोऽद्य गण्यते ।
यः शोकहतहर्षायाः पञ्चवर्षोपमो मम ॥ ,, 62 (17)

ஒவ்வொரு நாளும் ஒரு வருஷம்போலிருந்தது என்கிறாள் கௌஸல்யை. இவ்விதமாக அவள் சொல்லிக் கொண்டிருக்கையில் ஸூர்யாஸ்தமனமாகி இரவு வந்துவிட்டது.

एवं हि कथयन्त्यास्तु कौसल्यायाः शुभं वचः ।
मन्दरश्मिरभूत् सूर्यो रजनी चाभ्यवर्तत ॥ ,, ,, (19)

*மறுநாள் அதாவது ராமர் புறப்பட்டு 6-வது நாள் அர்த்தராத்திரியில் தசரதர் கௌஸல்யையிடம், அவளை விவாஹம் செய்துகொள்ளுவதற்கு முன் யுவராஜாவாக இருந்த ஸமயம் தான் இருட்டில் பாணம் பிரயோகித்து ஒரு தாபஸ தம்பதிகளின் புத்திரனைக் கொன்றுவிட்டதால் அவர்கள் தன்னையும் புத்திர சோகத்தினலேயே சாகவேண்டுமென்று சபித்த வரலாறு ஞாபகத்திற்கு வந்ததை விஸ்தாரமாகச் சொன்னர். பிறகும் பிரலாபம் செய்துகொண்டிருக்கும்போதே அவருக்கு பிராண வியோகம் ஏற்பட்டுவிட்டது.*

स राजा रजनीं षष्ठीं रामे प्रव्राजिते वनम् ।
अर्धरात्रे दशरथः सोऽस्मरत् दुष्कृतं कृतम् ॥ ,, 63 (4)

तथा तु दीनं कथयन् नराधिपः प्रियस्य पुत्रस्य विवासनातुरः ।
गतेऽर्धरात्रे भृशदुःखपीडितः तदा जहौ प्राणमुदारदर्शनः ,, 64 (78)

*அவர் இறந்தது ராமர் புறப்பட்டு 6-வது நாள் ராத்திரி என்றிருப்பதினல் சைத்ர சுக்ல த்வாதசியாயிருந்திருக்கலாமென்று தோன்றுகிறது.*

*7-வது நாள்: காலையில் ராஜாங்க வழக்கப்படி ராஜனை எழுப்புவதற்காக வந்திகள் வந்து சேர்ந்தார்கள்.*

अथ रात्र्यां व्यतीतायां प्रातरेवापरेऽहनि ।
वन्दिनः पर्युपातिष्ठन् तत्पार्थिवनिवेशनम् ॥ ,, 65 (1)

மஹாராஜா எழுந்திராதபடியால் ஸந்தேஹப்பட்டு சில ஸ்திரீகள் உள்ளே போய்ப் பார்த்ததில் தசரதர் பிராணனற்றுக் கிடப்பதைக் கண்டு அலற ஆரம்பித்தார்கள். சோகத்தினால் மிகவும் பிடிக்கப்பட்டுத் தூங்கிவிட்ட கௌஸல்யையும் ஸுமித்திரையும் இந்த சப்தம் கேட்டு விழித்துக்கொண்டு தசரதரைப் பார்த்துவிட்டு, தொட்டுப் பார்த்து துக்கம் தாங்கமாட்டாமல் பூமியில் ழந்துவிட்டார்கள்.

कौसल्या च सुमित्रा च पुत्रशोकपराजिते ।
प्रसुप्ते न प्रबुध्येते यथाकालसमन्विते ॥ ,, ,, (16)

तासामाक्रन्दशब्देन सहसोद्गतचेतने ।
कौसल्या च सुमित्रा च त्यक्तनिद्रे बभूवतुः ॥ ,, ,, (21)

कौसल्या च सुमित्रा च दृष्ट्वा स्पृष्ट्वा च पार्थिवम् ।
हा नाथेति परिक्रुश्य पेततुर्धरणीतले ॥ ,, ,, (22)

பிறகு மந்திரிகள் வந்து புத்திர ஸம்ஸ்காரம் ஏற்படும் வரை ரக்ஷிப்பதற்காக தசரதரின் சரீரத்தை எண்ணெய் தொட்டியில் வைத்தார்கள். ஸ்திரீகள் கீழே விழுந்து அழுதுகொண்டிருக்கையில் இரவு வந்துவிட்டது.

गते तु शोकात् त्रिदिवं नराधिपे
महीतलस्थासु नृपाङ्गनासु च
निवृत्तचारः सहसा गतो रविः
प्रवृत्तचारा रजनी ह्युपस्थिता ॥ ,, 66 (26)

8-வது நாள்: காலையில் வஸிஷ்டர் முதலானவர்கள் எல்லோரும் ஸபை கூட்டி ஆலோசித்தார்கள்.

व्यतीतायां तु शर्वर्यां आदित्यस्योदये ततः।
समेत्य राजकर्तारः सभामीयुर्द्विजातयः ॥ , 67 (2)

ராஜா இல்லாமல் இருந்தால் ராஜ்யம் பலவித கஷ்டங்களுக்குள்ளாகுமென்று கருதி உடனே பரதனை அழைத்துவர வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அப்படியே வஸிஷ்டர் தூதர்களை அனுப்பும்போது ராமர் வனம் சென்றிருப்பதையாவது தசரதர் காலமானதையாவது பரதனிடம் சொல்லாமல் ஏதோ அவசியமான காரியத்திற்காக வஸிஷ்டர் அழைத்துவரச் சொன்னதாக மாத்திரம் சொன்னால் போதுமென்று சொல்லி, சந்தோஷத்திற்கிடமன்னியில் இருக்கும்பொருட்டு பட்டு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் கொண்டுபோகும் படி ஆக்ஞாபித்தார்.

அந்த தூதர்கள் அன்றைய தினமே புறப்பட்டு மேற்கு திசையாகச் சென்று அநேக நதிகளையும், நகரங்களையும் கடந்து கேகய ராஜனின் ராஜதானியான கிரிவ்ரஜம் போய்ச் சேர்ந்தார்கள். அவர்கள் போய்ச் சேருவதற்கு எத்தனை நாட்கள் பிடித்தனவென்று ஸ்ரீமத் ராமாயணம் அநேக பிரதிகளில் காணாமல் போனாலும் ஒரு பாடத்தில் ஏழு இரவுகள் என்று கண்டிருக்கிறது.

सप्तरात्रेण ते तत्र गत्वा राजगृहं वरम् ।

பரதன் அங்கிருந்து அயோத்திக்கு வந்து சேருவதற்கு ஏழு இரவுகள் வேண்டியிருந்ததென்று வியக்தமாய் சொல்லி இருப்பதால், இவர்களுக்கும் அத்தனை நாட்கள் வேண்டியிருந்தனவென்று வைத்துக்கொள்ளலாம். அதாவது 8-வது நாள் மத்யானம் முதல் 14-வது நாள் ராத்திரி

வரையில் யாத்திரை செய்து அன்றிரவு கிரிவ்ரஜம் போய்ச் சேர்ந்தார்கள். ஆனால் அன்று ராத்திரி வெகு நாழிகையாகிவிட்டபடியால் உடனே பரதனைப் பார்க்கப் போகவில்லை.

அதே ராத்திரியில் பரதன் பல துஸ்ஸ்வப்னங்களைக் கண்டு, முக்யமாய் தசரதர் விஷயமாகவே அந்த ஸ்வப்னங்கள் இருந்தபடியால் மிகவும் கவலையுடனிருந்து வந்தான்.

यामेव रात्रिं ते दूताः प्रविशन्ति स्म तां पुरीम्।
भरतेनापि तां रात्रिं स्वप्नो दृष्टोऽयमप्रियः ॥ ,, 69 (1)

15-வது நாள்: காலையில் ஸ்வப்ன விஷயத்தை பரதன் ஸ்நேஹிதர்களிடம் சொல்லிக்கொண்டிருக்கையில் தூதர்கள் வந்து சேர்ந்து வஸிஷ்டர் சொல்லியனுப்பினபடி ஸமாசாரம் சொல்லி உடனே புறப்படவேண்டுமென்று சொன்னார்கள்.

व्युष्टामेव तु तां रात्रिं दृष्ट्वा तं स्वप्नमप्रियम् ।
पुत्रो राजाधिराजस्य सुभृशं पर्यतप्यत ॥ ,, ,, (2)

भरते ब्रुवति स्वप्नं दूतास्ते क्लान्तवाहनाः । ,, 70 (1)
राज्ञः पादौ गृहीत्वा तु तमूचुर्भरतं वचः ॥ ,, ,, (2)

त्वरमाणश्च निर्याहि कृत्यमात्ययिकं त्वया ॥ ,, ,, (3)

உடனே மாதாமஹரிடம் சொல்லிக்கொண்டு பரதன் புறப்பட்டுவிட்டான். ஆனால் மனஸில் மிகவும் கவலையிருந்துவந்தது. துஸ்ஸ்வப்னங்கள் கண்டதினாலும் தூதர்கள் அவஸரப்படுத்தினதினாலும் பலவித ஆலோசனைகள் ஏற்பட்டன.

தூதர்களுக்கு பரிவாரமில்லை. பரதனுக்கோ பரிவாரங்களுடனும், மாதாமஹர் அனுப்பிக்கொடுத்த ஸன்மானங்களுடனும் வரவேண்டியிருந்தபடியால் வேகமாய் வர முடியவில்லை. வேகமாய் வரவேண்டுமென்ற எண்ணத்துடன் பாதிதூரம் வந்தவுடன் ஸைன்யத்தை மெள்ள வரும்படி சொல்லிவிட்டுத் தான் மாத்திரம் மிக வேகமாய் வந்தான். அப்படியிருந்தும் வழியில் ஏழு ராத்திரிகள் சென்றுவிட்டன.

अनुज्ञाप्याथ भरतो वाहिनीं त्वरितो ययौ ॥ ,, 71 (13)

22-வது நாள்: 15 முதல் ஏழு ராத்திரிகள் சென்று காலையில் ஸூர்யோதயத்திற்கு முன்னலேயே அருணோதய ஸமயத்தில் பரதன் அயோத்யையில் பிரவேசித்து, அது பாழடைந்ததுபோல் இருப்பதைக் கண்டு மிகவும் துக்கப்பட்டுக்கொண்டே, பிதாவின் அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

भरतः क्षिप्रमागच्छन् सुपरिश्रान्तवाहनः ।
वनं च समतीत्याशु शर्वर्यामरुणोदये ॥
अयोध्यां मनुना राज्ञा निर्मितां संददर्श ह ।
तां पुरीं पुरुषव्याघ्रः सप्तरात्रोषितः पथि ॥ ,, 71,, (17,18)

அங்கே பிதாவைக் காணமல் மாதாவின் இருப்பிடம் சென்று அவளை நமஸ்கரித்துக் கேட்டதின் பேரில் கொஞ்சம் கொஞ்சமாக நடந்த ஸம்பவங்கள் அவனுக்குத் தெரியவந்தன. தாயார் செய்த காரியத்தை வெகுவாக நிந்தித்துவிட்டு கௌஸல்யையைப் பார்க்க வேண்டுமென்று புறப்பட்டுப் போகையில் வழியிலேயே கௌஸல்யை வந்து பரதனிடம் ஸந்தேஹமிருப்பதாகத் தோன்றும்படி சில வார்த்தைகளைச் சொன்னவுடன்,

அதை ஸஹிக்காமல் பரதன் பலவிதமான சபதங்களைச் செய்ததின் பேரில் அவன் தர்மத்திலிருந்து விலகவில்லை யென்று கௌஸல்யை தெரிந்துகொண்டு அவனை மடியில் போட்டுக்கொண்டு அழுதாள். அடிக்கடி பிரக்ஞை தவறியும், பெருமூச்சு விட்டுக்கொண்டும் பூமியில் விழுந்து கதறிக்கொண்டும், பரதன் அன்று இரவைக் கழித்தான்.

लालप्यमानस्य विचेतनस्य
प्रणष्टबुद्धेः पतितस्य भूमौ ।
मुहुर्मुहुर्निश्वसतश्च दीर्घं
सा तस्य शोकेन जगाम रात्रिः ॥ ,, 75 (65)

23-வது நாள்: காலையில் வஸிஷ்டர் வந்து தசரதருக்குச் செய்யவேண்டிய கார்யங்களை நடத்தவேண்டுமென்று தூண்டினதின்பேரில் பரதன் ஸரயூ நதியில் ஆஹிதாக்நிகளுக்கு ஏற்பட்ட ஸம்ஸ்காரங்களை செய்தான்.

ஆஹிதாக்நிகளுக்கு இறந்த தேதியிலிருந்து ஆசௌசம் என்பது கிடையாது. ஸம்ஸ்காரமான நாளிலிருந்து தான் கணக்கு. இவ்விதமே ஸ்ரீமத் ராமாயணத்தில் கணக்கிடப்பட்டிருப்பதினால் நாமும் அதையே அனுஸரிப்போம்.

ராமர் புறப்பட்டு 6-வது தினத்தில் தசரதர் இறந்தது சைத்ர சுக்ல த்வாதசி திதியாயிருந்தால், அவருக்கு ஸம்ஸ்காரம் நடந்து அதிலிருந்து 17-வது நாளானதினால் சைத்ர கிருஷ்ண சதுர்தசியாயிருந்திருக்கலாம்.

க்ஷத்திரியர்களுக்குள் ஸாதாரணமாக ஆசௌசம் 16 நாட்களாக இருந்த போதிலும்,

क्षत्रियस्तु दशाहेन स्वकर्मनिरता: शुचि: ।

கர்மாநுஷ்டான நிஷ்டராக இருந்தால் 10 நாட்கள்தான் என்று விதித்திருப்பதையனுஸரித்து பரதன் முதலானவர்களும் 10 நாட்கள்தான் ஆசௌசம் அநுஷ்டித்தார்கள்.

कृत्वोदकं ते भरतेन सार्धं
नृपाङ्गना मन्त्रिपुरोहिताश्च ।
पुरं प्रविश्याश्रुपरीतनेत्रा:
भूमौ दशाहं व्यनयन्त दु:खम् ॥ ,, 76 (23)

11-வது நாள்: ஆசௌசம் நிவிருத்தியாகிறது.

ततो दशाहेऽतिगते कृतशौचो नृपात्मज: ।

12-வது நாள்: கிரமப்படி ஸபிண்டீகரண சிராத்தத்தை பரதன் செய்தான்.

द्वादशेऽहनि संप्राप्ते श्राद्धकर्माण्यकारयत् ॥ ,, 77 (1)

13-வது நாள்: துக்கத்துடன் அழுதுகொண்டு படுத்துக்கொண்டிருந்த பரதனை வஸிஷ்டர் காலையில் எழுப்பி மேல் கார்யங்களைச் செய்யச் சொல்லுகிறார்.

तत: प्रभातसमये दिवसेऽथ त्रयोदशे ।
विललाप महाबाहु: भरत: शोककर्शित: ॥ ,, ,, (4)
वसिष्ठो भरतं वाक्यं उत्थाप्य तमुवाच ह ॥ ,, ,, (21)
त्रयोदशोऽयं दिवस: पितुर्वृत्तस्य ते विभो ।
सावशेषास्थिनिचये किमिह त्वं विलम्बसे ॥ ,, ,, (22)

அப்படியே அன்றைய தினம் பரதன் அஸ்திஸஞ்சயனம் செய்ததாகக் காண்கிறது. 13-வது நாள் அஸ்திஸஞ்சயனம் என்பதற்கு பிரமாணம் தெரியவில்லை. யுகாந்தர விஷயமாகவாவது வேறுவிதமாகவாவது விசேஷ விதியிருக்கவேண்டுமென்று நினைக்கவேண்டியிருக்கிறது.

*14-வது நாள்:* தசரதருக்குச் செய்யவேண்டிய ஸம்ஸ்காரங்கள் யாவற்றையும் கிரமமாக 13 நாட்களில் பரதன் செய்து முடித்த பிறகு மறுநாள் காலையில் சில அதிகாரிகள் பரதனைக்கண்டு ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளும்படி சொன்னார்கள்.

ततः प्रभातसमये दिवसे च चतुर्दशे ।

समेत्य राजकर्तारो भरतं वाक्यमब्रुवन् 79 (1)

அதற்கு பரதன் "ராமர்தான் அரசனாயிருக்க வேண்டும். நானே சதுரங்க ஸைன்யத்துடன் அவரைத் தேடிப்போய் வனத்திலேயே அபிஷேகம் செய்துவைத்து அழைத்துக்கொண்டு வந்துவிடுகிறேன். போகும் பாதைகளை எல்லாம் சரிப்படுத்தி ஸௌகர்யமாயிருக்கும்படி ஏற்பாடு செய்யுங்கள்." என்றான். அப்படியே மார்க்கமெல்லாம் சரிப்படுத்தப்பட்டது. அரண்மனையில் ஸம்ஸ்காரங்கள் முடிந்து அன்று சுபதினமானதினால் சுபமான அப்யுதய கார்யங்களை நடத்தினார்கள்.

*15-வது நாள்:* நாந்தி நடந்ததினம் ராத்திரி சென்று ஸூர்யோதயத்திற்கு முன்னால் ஸூதமாகதர்கள் வந்து பரதனை எழுப்பினார்கள். உடனே பரதன் திடுக்கிட்டு எழுந்து "நான் ராஜா இல்லை." என்று சொல்லிக்கொண்டு அவர்கள் ஸ்துதி செய்ததை நிறுத்தி விட்டான்.

ततो नान्दीमुखीं रात्रिं भरतं सूतमागधाः ।
तुष्टुवुर्वाग्विशेषज्ञाः स्तवैर्मङ्गलसंहितैः ॥ ,, 81 (1)

ततः प्रबुद्धो भरतस्तं घोषं संनिवर्त्य च ।
नाहं राजेति चाप्युक्त्वा शत्रुघ्नमिदमब्रवीत् ॥ ,, ,, (4)

*பிறகு வஸிஷ்டர் பரிவாரங்களுடன் ராஜஸபைக்கு வந்து முக்கியமான பிரஜைகளையும் சத்ருக்னனுடன் பரதனையும் அங்கு அழைத்து வரும்படி கட்டளையிட்டார். அந்த ஸமயம் கைகேயியின் தம்பி யுதாஜித்தும் அங்கு இருந்திருப்பதாகத் தெரிகிறது.*

ब्राह्मणान् क्षत्रियान् वैश्यानमात्यान् गणवल्लभान् ।
क्षिप्रमानयताव्यग्राः कृत्यमात्ययिकं हि नः ॥

सराजपुत्रं शत्रुघ्नं भरतं च यशस्विनम् ।
युधाजितं सुमन्त्रं च ये च तत्र हिता जनाः ॥ ,, ,, (12, 13)

*இவ்விதமாக ராஜஸபை கூடினவுடன் வஸிஷ்டர் பரதனைப் பார்த்து "உனக்கு தகப்பனார் தமையன் இருவரும் கொடுத்திருக்கும் ராஜ்யத்தை ஒப்புக்கொள்" என்றார். அதற்கு பரதன் "ராமர்தான் ராஜா. அவரை எப்படியாவது அழைத்து வருகிறேன். நான் ஸைன்யத்துடன் போய் அழைத்து வருவதற்காகப் பாதைகளையெல்லாம் சரிப்படுத்த ஏற்பாடு செய்துவிட்டேன். சீக்கிரமாகவே புறப்படவேண்டும்" என்றான். அப்படியே வெகு உத்ஸாஹத்துடன் ஸைன்யமும் பிரஜைகளும் புறப்படுவதற்கு ஸித்தமானார்கள்.*

16-வது நாள்: காலையில் எழுந்து ரதத்தில் ஏறிக் கொண்டு பரதன் ராமரைப் பார்க்க மிகவும் ஆவலுடன் புறப்பட்டான்.

ततः समुत्थितः कल्यं आस्थाय स्यन्दनोत्तमम् ।
प्रययौ भरतः शीघ्रं रामदर्शनकाङ्क्षया ॥ ,, 83 (1)

வஸிஷ்டர் முதலானவர்களும், கைகேயி ஸுமித்ரை கௌஸல்யையாகிய ராஜபத்நிகளும், நகரவாஸிகளும் வெகு உத்ஸாஹத்துடன் கூடவே புறப்பட்டார்கள். வேகமாகவே வெகு தூரம் போய் கங்கைக்கரையில் அன்று தங்கிக்கொண்டு மறுநாள் நதியைத்தாண்டலா மென்று பரதன் உத்தரவிட்டார்.

निवेशयत मे सैन्यमभिप्रायेण सर्वतः ।
विश्रान्ताः प्रतरिष्यामः श्वः इदानीमिमां नदीम् ॥ ,, 83 (23)

அங்கு வந்த குஹன் ஸைன்யத்தைக்கண்டு ஸந்தே ஹப்பட்டபோது, பரதன் தன்னுடைய வாஸ்தவமான மனோபாவத்தை விளக்கிப் பேசிக் கொண்டிருக்கையில் அஸ்தமித்துவிட்டது.

एवं संभाषमाणस्य गुहस्य भरतं तदा ।
बभौ नष्टप्रभः सूर्यो रजनी चाभ्यवर्तत ॥ ,, 85 (14)

பிறகு ஆலம்பால் கொண்டுவரச்சொல்லி பரதன் ஜடை தரித்துக்கொண்டான். குஹன் அன்று ராத்திரி தன் ஸத்காரத்தைப் பெற்றுக்கொண்டு மறுநாள் போகலாம் என்று சொன்னதை அனுஸரித்து அன்றிரவு அங்கேயே தங்கினார்கள்.

आशंसे स्वाशिता सेना वत्स्यतीमां विभावरीम् ।
अर्चितो विविधैः कामैः श्वः ससैन्यो गमिष्यसि ॥ ,, 84 (16)

17-வது நாள்: பொழுது விடிந்தவுடன் சத்ருக்ன னிடம் குஹனை அழைத்துவரும்படி பரதன் சொல்லிக் கொண்டிருக்கையில் குஹனே வந்துவிட்டான். அவன் ஏற்பாடு செய்த 500 ஓடங்களால் எல்லாரும் நதியைத் தாண்டி அக்கரை சென்று பிரயாகவனம் போய்ச் சேர்ந் தார்கள்.

व्युष्य रात्रिं तु तत्रैव गङ्गाकूले स राघवः ।
भरतः काल्यमुत्थाय शत्रुघ्नमिदमब्रवीत् ॥ ,, 98 (1)

सा पुण्या ध्वजिनी गङ्गा दाशैः संतारिता स्वयम् ।
मैत्रे मुहूर्ते प्रययौ प्रयागवनमुत्तमम् ॥ ,, ,, (20)

பரத்வாஜருடைய ஆசிரமத்திற்கு வெகு தூரத் திலேயே ஸைன்யத்தை நிறுத்திவிட்டு, கால்நடையாகவே போய் அம்மஹரிஷியை பரதன் நமஸ்கரித்தான். இவ னிடம் தனக்கு ஸந்தேஹமிருப்பதுபோல் காட்டிக் கொண்ட அவரை ஸமாதானப்படுத்தினான். அதன் பேரில் அன்றிரவு அங்கேயே தங்கிவிட்டு மறுநாள் போக லாமென்று பரத்வாஜர் சொன்னார்.

असौ वसति ते भ्राता चित्रकूटे महागिरौ ।
श्वस्तु गन्तासि तं देशं वसाद्य सह मन्त्रिभिः ॥ ,, 90 (23)

பரதன் ஸம்மதத்தின் பேரில் பூரா ஸைன்யத் திற்குமே ஆதித்யம் செய்வதாகச் சொல்லித் தன்னுடைய

தபோ மஹிமையினால் அத்புதமாக ஏற்பாடு செய்து எல்லாரையும் பிரமிக்கும்படி செய்தார். அன்று ராத்திரி அவ்விதம் சென்றது.

अमन्यन्त मनुष्यास्ते स्वप्नकल्पं तदद्भुतम् । ,, 91 (80)
भरद्वाजाश्रमे रम्ये सा रात्रिर्व्यत्यवर्तत ॥ ,, ,, (81)

18-வது நாள்: காலையில் எழுந்து பரத்வாஜரிடம் சென்று சித்ரகூட பர்வதத்திற்கு வழியெப்படி என்று விவரம் தெரிந்து கொண்டான்.

ततस्तां रजनीं व्युष्य भरतः सपरिच्छदः।
कृतातिथ्यो भरद्वाजं कामादभिजगाम ह । 92 (1)

அம்மஹரிஷி சொன்ன மார்க்கமாகவே வெகுதூரம் சென்று சித்ரகூடத்திற்கு ஸமீபத்தில போகும்போது புகையைக்கண்டு அதுவே ராமரின் இருப்பிடமாயிருக்குமென்று நிர்மானித்து, பரிவாரங்களையெல்லாம் அங்கேயே நிறுத்திவிட்டு, வஸிஷ்டரைப் பின்னால் தாயார்களை அழைத்துவரும்படி சொல்லிவிட்டு, தான் மாத்திரம் ஸுமந்திரனையும், த்ருதியென்ற மந்திரியையும் அழைத்துக்கொண்டு வேகமாய்ப் போனான்.

ஸைன்யம் வருவதால் ஏற்பட்ட தூளியையும் சப்தத்தையும் கவனித்து என்ன காரணமென்று பார்ப்பதற்காக ராமரின் சொல்லின்பேரில் ஒரு ஸாலமரத்தில் ஏறி லக்ஷ்மணன் ஸைன்யத்தில் கோவிதாரக் கொடியைக் கண்டு பரதனே கெட்ட எண்ணத்துடன் வருவதாகத் தோன்றுவதாகச் சொன்னவுடன், ராமர் பரதனை அவ்விதம் நினைக்கக்கூடாதென்று பலவாறாக எடுத்துச் சொல்லி லக்ஷ்மணனை மரத்திலிருந்து இறங்கச் சொன்னார்.

பரதன் வனத்தில் தேடிக்கொண்டு பர்ணசாலைக்கு வந்து தூரத்தில் ராமர் இருப்பதைக்கண்டு துக்கம் தாங்காதவனாக அங்கேயே விழுந்துவிட்டான் "அண்ணா" என்பதற்குமேல் ஒன்றும் பேசமுடியவில்லை.

पादावप्राप्य रामस्य पपात भरतो रुदन् ॥ ,, 99 (37)

आर्येत्येवाभिसंक्रुश्य व्याहर्तुं नाशकत ततः ॥ ,, ,, (39)

பிறகு சத்ருக்னனும் வந்து நமஸ்கரித்தான். ஸுமந்திரனும் குஹனும் வந்து சேர்ந்தார்கள்.

மரவுரியும் ஜடையும் தரித்துக் கொண்டிருந்த பரதனைப்பார்த்து "தகப்பனார் உயிருடன் இருந்தால் நீ இவ்விதம் காட்டுக்கு வரமுடியாதே? ஒருக்கால் சத்ருக்கள் உன்னிடமிருந்து ராஜ்யத்தைப் பிடுங்கிக் கொண்டுவிட்டார்களா? ராஜதர்மங்களை நீ சரிவர அனுஷ்டித்து வருகிறாயா"? என்று ராமர் கேட்டபிறகு, மிகவும் துக்கத்துடன் பிதா காலமாகிவிட்டார் என்ற விஷயத்தை பரதன் தெரிவித்தான். ராமர் மிகவும் துக்கமடைந்து லக்ஷ்மணனையும் ஸீதையையும் ஸமாதானப்படுத்தி அவர்களுடன் நதிக்கரை சென்று ஸ்நான தர்ப்பண பிண்டதானாதி கிரியைகளைச் செய்துவிட்டுத் திரும்பினார். இவர்களுடைய அழுகை சப்தத்தைக்கேட்டு வெகு விரைவாக வஸிஷ்டரும் தாயார்களும் ஜனங்களும் அங்கே வந்து சேர்ந்தார்கள். ராமர் தாயார்களையும் வஸிஷ்டரையும் நமஸ்கரித்த பிறகு எல்லாரும் உட்கார்ந்து கொண்டார்கள்.

ஸ்ரீராமர் பரதனைப் பார்த்து காட்டிற்குவந்த காரணத்தை கேட்டதின்பேரில், பரதன் அவர் கால்களில் விழுந்து, ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டான். அதற்கு ராமர், தகப்பனார் செய்திருக்கும்

பாகப்படிதான் நாம் நடந்துகொள்ள வேண்டும். அயோத்யா ராஜ்யத்தில் நீ வஸிக்கவேண்டும். நான் காட்டில் வஸிக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டார். இவர்கள் துக்கப்பட்டுக் கொண்டிருக்கையிலேயே அன்றிரவு சென்றது.

शोचतामेव रजनी दुःखेन व्यत्यवर्तत 105 (1)

19-வது நாள்: காலையில் ஸ்நாந ஜபாதிகளை முடித்துக்கொண்டு எல்லோரும் ராமர் முன்னிலையில் கூடினர்.

रजन्यां सुप्रभातायां भ्रातरस्ते सुहृद्वृताः ।
मन्दाकिन्यां हुतं जप्यं कृत्वा राममुपागमन् ॥ (2)

பரதன் மறுபடியும் ராமரிடம் ராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி பலவிதமாக வியவஹாரம் செய்தான்; கெஞ்சியும் கேட்டான்; ஜாபாலி ராமர் திரும்பி வருவதே நியாயமென்று நாஸ்திக யுக்திகளைக் கொண்டும், வஸிஷ்டர் தசரதரின் ஜ்யேஷ்ட புத்திரன் என்ற நிலைமையிலும், பரதன் கெஞ்சிக் கேட்கிறானென்ற முறையிலும், திரும்பி வருவதினால் எவ்வித விரோதமில்லையென்றும், தசரதருக்கே ஆசார்யரான தன் வார்த்தைப்படி நடப்பதில் தோஷமில்லையென்றும், சொல்லிப்பார்த்தார்கள். ஒன்றும் பலிக்காமல் போகவே பரதன் ராமர் திரும்பிவர ஸம்மதிக்காத விஷயத்தில் பிராயோபவேசம் செய்வதாகச் சொன்னபோது அது எவ்விதத்திலும் நியாயமாகாதென்று எடுத்துச் சொல்லிவிட்டு "சந்திரனை

சோபையோ, ஹிமாசலத்தைவிட்டு பனியோ வில

ரும், ஸமுத்ரம் கரைமீறி வந்தாலும் என் தகப்பனார் கொடுத்திருக்கும் வாக்கை (தகப்பனாருக்கு நான் கொடுத்திருக்கும் வாக்கை என்றும் அர்த்தம் சொல்லலாம்) நான் மீறமாட்டேன்".

लक्ष्मीश्चन्द्रादपेयाद्वा हिमवान् वा हिमं त्यजेत् ।
अतीयात् सागरो वेलां न प्रतिज्ञां अहं पितुः ॥　　(12 (18)

என்ற ஒரே நிலையில் அசைக்க முடியாமல் ராமர் இருந்துவிட்டார். அதன்பேரில், அங்கேயே ராமருக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கும் உத்தேசத்துடன் கொண்டு வந்திருந்த தங்கப்பாதுகைகளில் ஏறி அநுக்ரஹித்துக் கொடுக்கவேண்டுமென்று பரதன் வஸிஷ்டரின் ஆலோசனைப்படி ராமரைக் கேட்டுக்கொண்டான். அந்தப் பாதுகைகளே ராஜ்யபாரத்தை வஹித்து வருமென்றும் 14-வது வருஷம் பூர்த்தியான தினத்தில் ராமர் திரும்பி வராமலிருந்தால் தான் அக்னி பிரவேசம் செய்து விடுவதாகவும் சொல்லி, அப்பாதுகைகளைப் பெற்றுக் கொண்டான். பிறகு ராமருடைய அநுமதி பெற்று பரதன் ஸைன்யங்களுடன் அங்கிருந்து புறப்பட்டான்.

திரும்பிப்போகும் வழியில் பரத்வாஜ மஹரிஷியைக் கண்டு சித்ரகூட பர்வதத்தில், தான் ராமரிடம் பிரார்த்தித்துக்கேட்டும், ராமர் ஸம்மதிக்காமலே இருந்துவிட்டபடியால் வஸிஷ்டர் சொல்படி பாதுகைகளை வாங்கிவந்திருக்கும் விஷயத்தைச் சொன்னான். அம்மஹரிஷியும் இவனை மிகவும் சிலாகித்தார். பிறகு அவரிடம் சொல்லிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டு கங்கையைத்தாண்டி சிருங்கிபேரபுரம் வந்து குஹனிடம் சொல்லிக்கொண்டு நேரே ஸைன்யங்களுடன் அயோத்யை போய்ச்சேர்ந்தான். அயோத்யையில் தாயார்களையெல்லாம் அரண்மனையில் விட்டு விட்டு அங்கிருந்து கொஞ்சம் கிழக்கேயுள்ள நந்திக் கிராமம் என்ற ஊர் போய்ச்சேர்ந்தான்.

பரதன் சித்ரகூடபர்வதத்திலிருந்து புறப்பட்டது முதல் வால்மீகி நாள்கணக்கு சொல்லவில்லை. எப்படியும் ஸைன்யத்துடனும், பிரஜைகளுடனும் பரதன் போன

படியால் போவதற்கு மூன்று நாட்களாயிருக்கிறபோது திரும்பி வரும் ஸமயம் பரத்வாஜாசிரமத்தில் தாமஸித்ததாகச் சொல்லாத முறையில், திரும்பி அயோத்யை போய்ச் சேருவதற்கு இரண்டு நாட்களாவது வேண்டியிருந்திருக்கும். அயோத்யையில் தாயார்களை விட்டு விட்டு மறுநாள் காலையிலேயே நந்திகிராமம் போயிருக்கலாம் அப்படியானால் 21வது நாள் அயோத்யைக்குத் திரும்பிவந்து 22வது நாள் நந்திக்கிராமம் போயிருக்கலாம். தசரதருக்கு பரதன் ஸம்ஸ்காரம் செய்தது சைத்ர மாஸம் க்ருஷ்ண சதுர்தசியானால், அதிலிருந்து 22வது நாள் வைகாச க்ருஷ்ண பக்ஷ பஞ்சமியாயிருந்திருக்கலாம்.

நந்திகிராமம் போனவுடன் பரதன் பாதுகைகளை உத்தமமான ராஜாஸனத்தில் வைத்து அபிஷேகம் செய்து அவைகளுககுத்தானே சத்ரம் சாமரம் பிடித்துக் கொண்டு அவைகளுக்கு கீழ்படிந்தவனாகவே ராஜ்ய நிர்வாஹம் செய்துவந்தான்.

ततस्तु भरतः श्रीमान् अभिषिच्यार्यपादुके ।
तदधीनस्तदा राज्यं कारयामास सर्वदा ॥ அயோ. 115 (26)

# அத்யாயம் 16

## கால விமர்சம் 3

## வனவாஸம் வரை

பரதன் வந்துவிட்டுப் போனபிறகு ராமர் சித்ரகூடத்திலேயே வஸித்துக்கொண்டிருக்கையில், அங்குள்ள முனிவர்களுக்குள் ஏதோ பரபரப்பு இருப்பதாகத் தெரிந்து கொண்டார். தங்களால் ஏதேனும் அபசாரம் ஏற்பட்டிருக்குமோவென்று ஸந்தேஹித்து அவர்களில் குலபதியான முனிவரை ராமர் கேட்டார். அதற்கு அவர் அவ்வித அபசாரம் ஏற்படக்கூடியதேயில்லை யென்றும், மிக துஷ்டனான கரன் என்கிற ராக்ஷஸன் ஜனஸ்தானத்திலுள்ள தாபஸர்களை ஹிம்ஸைப்படுத்துவதால்தான் தாங்கள் ஸமீபத்திலுள்ள வேறு வனத்திற்குப் போவதாகவும் சொன்னார். அவர்கள் அப்படியே புறப்பட்டு விட்டார்கள்.

அதன் பிறகு ராமரும், இங்கே பரதன் முதலானவர்களைப் பார்த்த ஞாபகமே அடிக்கடி வந்துகொண்டிருப்பதினாலும், யானை குதிரைகள் வந்திருந்ததினால் வனத்தின் பரிசுத்தி குறைந்திருப்பதினாலும், தானும் வேறு இடம் போய்விடலாமென்று தீர்மானித்து ஸீதை லக்ஷ்மணர்களுடன் புறப்பட்டுவிட்டார். அங்கிருந்து அத்ரி மஹரிஷியின் ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே அம்மஹரிஷியினாலும் அவர் பத்னி அனஸூயையினாலும் மிக ஆதரவுடன் வரவேற்கப்பட்டார்கள். அனஸூயை கேட்டதின் பேரில் ஸீதை தன்னுடைய விவாஹ விருத்தாந்தத்தைச் சொன்னாள். இதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்து, தான் கொடுத்த வஸ்திராபரணாதிகளை தரித்துக்கொண்டு ராமரிடம் போகும்படி அனஸூயை சொல்கிறாள். அப்பொழுது ராத்திரி வந்துவிடுகிறது.

संप्रवृत्ता निशा मीते नक्षत्रसमलंकृता ।
ज्योत्स्नाप्रावरणश्चन्द्रो दृश्यतेऽभ्युदितोऽम्बरे ॥ அயோ. 119 (9)

அஸ்தமித்து சந்திரன் உதயமாகுமென்று கண்டிருப்பதால் பௌர்ணமியாயிருக்கலாம். அப்படியானல் சித்ரகூட பர்வதத்தில் வாஸம் செய்தது சுமார் இரண்டு மாஸங்களாகும். அன்றிரவு அத்ரியின் ஆசிரமத்தில் இருந்துவிட்டு மறுநாள் காலையில் அங்குள்ள முனிவர்களிடம் சொல்லிக்கொண்டு ராமர் அங்கிருந்து புறப்பட்டுவிட்டார்.

ततस्तां शर्वरीं प्रीतः पुण्यां शशिनिभाननः ।
अर्चितस्तापसैः सिद्धैः उवास रघुनन्दनः ॥ ,, ,, (16)

तस्यां रात्र्यां व्यतीतायां अभिषिच्य हुताग्निकान् ।
आपृच्छेतां नरव्याघ्रौ तापसान् वनगोचरान् ॥ ,, ,, (17)

அப்படியே பெரிய அரண்யமான தண்டகாரண்யத்தில் பிரவேசித்து அங்கே பிரஹ்மலோகம் மாதிரி பிரகாசித்துக் கொண்டிருந்த ஆசிரம மண்டலத்தைப் பார்த்தார். அங்குள்ள மகரிஷிகள் வெகு ஆதரவுடன் இவர்களுக்கு ஆதித்யம் செய்தார்கள். மறுநாள் காலையில் அம்முனிவர்களிடம் சொல்லிக்கொண்டு மேலும் அரண்யத்திற்குள் ராமர் சென்றார்.

कृतातिथ्योऽथ रामस्तु सूर्यस्योदयनं प्रति ।
आमन्त्र्य स मुनीन् सर्वान् वनमेवान्वगाहत ॥ அர. 2 (1)

காட்டுக்குள் நுழைந்த உடனேயே அதிபயங்கரமான ரூபத்துடன் விராதன் என்ற ராக்ஷஸன் வந்து ஸீதையைப் பிடித்துக்கொண்டான். அதைப்பார்த்து

வெகு கோபத்துடன் அவனை பாணங்களால் அடிக்கை யில் அவன் அவளை இறக்கிவிட்டு சூலத்தை ஏந்தி இவர் களைத் தாக்கவந்து இவர்களையே தூக்கிக்கொண்டுபோக ஆரம்பித்துவிட்டான். இதைப் பார்த்து ஸீதை புலம்பு வதைக்கண்டு விராதனின் தோள்களில் இருந்தபடியே அவனுடைய கைகளை ராம லக்ஷ்மணர்கள் வெட்டி விட்டார்கள். அதன்பேரில் அவன், தான் ஜயன் என்ற கந்தாவனுக்கு சதஹ்ரதை என்பவளிடம் ஜனித்த தும்புரு என்ற கந்தர்வனென்றும், ஒரு ஸமயம் ரம்பையினிடம் ஆஸக்தனாயிருந்தபடியால் குபேரன் கூப்பிட்டபோது போகத் தவறினதற்காக ராக்ஷஸனாகப் போகவேண்டு மென்றும் ராமரால் கொல்லப்படும்போது சாப விமோ சனமென்றும் குபேரன் சொன்னதாகவும், தன் விருத் தாந்தத்தைச் சொல்லி, தன்னைப் பள்ளத்தில் தள்ளிப் புதைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். ஸமீ பத்தில் உள்ள சரபங்க மகரிஷியின் ஆசிரமம் சென்றால் அவரால் விசேஷ அனுகூலமேற்படுமென்றும் சொன் ஞன். அப்படியே அவனைப் புதைத்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்கள்.

சரபங்கருடைய ஆசிரமத்திற்கு ஸமீபம் போகையில் அங்கே அம்மஹரிஷியுடன் தேவேந்திரன் பேசிக்கொண் டிருப்பதாகத் தெரிந்து அவன் புறப்பட்டுப் போன பிறகே இவர்கள் போனார்கள். அப்பொழுது சரபங்கர், இந்திரன் தன்னை அழைக்க வந்ததாகவும் ராமரை நேரில் கண்டு தன் புண்யங்களை அர்ப்பணம் செய்துவிட்டே போகவேண்டுமென்று தாமதித்ததாகவும், இவர்களை ஸுதீக்ஷ்ணருடைய ஆசிரமத்திற்குப் போகும்படிக்கும் சொல்லிவிட்டு உடனே அக்னி பிரவேசம் செய்து யௌவன சரீரத்துடன் வெளிக்கிளம்பி பிரஹ்மலோகம் போய் பிரஹ்மாவினாலேயே வெகு ஸந்தோஷத்துடன் வரவேற்கப்பட்டார்.

சரபங்கர் புறப்பட்டுப் போனபிறகு அங்குள்ள தாபஸர்கள் தங்களுக்கு ராக்ஷஸர்களால் ஏற்படும் ஹிம்ஸையைப்பற்றி முறையிட்டுக்கொண்டபோது அவர்களுக்கு இடைஞ்சல் செய்வோர்களை நிக்ரஹம் செய்வதாக ராமர் வாக்குக்கொடுத்தார். பிறகு அங்கிருந்து ஸுதீக்ஷ்ணருடைய ஆச்ரமம் போய்த் தனக்கு ஒரு இருப்பிடம் கல்பித்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அங்கேயே இருக்கலாமென்று சொன்னதற்கு அதிகமாக அங்கே தாமதிக்க இஷ்டமில்லையென்று ராமர் சொல்லி ஸாயம் ஸந்த்யையை முடித்துக்கொண்டு அங்கே தங்கினார்.

अन्वास्य पश्चिमां संध्यां तत्र वासमकल्पयत् । ,, 7 (23)

காலையில் எழுந்திருந்து ஸ்நாநாதிகளை முடித்துக்கொண்டு எல்லா ஆச்ரமங்களையும் தர்சிக்க விரும்புவதால் செல்வதற்கு அனுமதிக்க வேண்டுமென்று ஸுதீக்ஷ்ணரை ராமர் கேட்டுக்கொண்டார். அவரும் அப்படியே செய்யலாமென்றும், ஆனால் மறுபடியும் தன் ஆச்ரமத்திற்குத் திரும்பிவர வேண்டுமென்றும் சொன்னார்.

परिणाम्य निशां तत्र प्रभाते प्रत्यबुध्यत ॥ ,, 8 (1)

போகும் வழியில், ராக்ஷஸர்களைக் கொல்லுவதாக ராமர் பிரதிக்ஞை செய்தது நியாயம்தானாவென்று ஸீதைக்கிருந்த ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்து, ரிஷிகள் கேட்டுக்கொள்ளாமல் போனாலும் அவர்களை ரக்ஷிக்க வேண்டியது தன் கடமையாக இருக்கும்போது, அவர்கள் கேட்டுத் தானும் ஸம்மதித்திருக்கையில் அவர்களுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றித்தான் தீரவேண்டுமென்றார். அப்படியே வெகுதூரம் போய் அஸ்தமன ஸமயத்தில் ஒரு விசாலமான தடாகத்தைப் பார்த்தார்கள்.

ते गत्वा दूरमध्वानं लम्बमाने दिवाकरे ।
ददृशुः सहिता रम्यं तटाकं योजनायतम् ॥ ,, 11 (5)

அந்தத் தடாகத்திலிருந்து வாத்ய ஸங்கீத சப்தம் கேட்கிறதே தவிர யாரையும் காணவில்லை. இந்த ஆச்சர்யத்தைக்கண்டு, தன்னுடன் வந்துகொண்டிருந்த தர்மப்ருதர் என்ற முனிவரைக் கேட்டதில் மாண்டகர்ணி யென்ற தபஸ்வி கோரமான தபஸ் செய்வதைக்கண்டு பயந்து தேவர்கள் ஐந்து அப்ஸரஸ்களை ஏவி அவருக்கு பத்தினிகளாக இருக்கும்படி செய்ததின்பேரில் அவர் தன் தபோமஹிமையினால் தடாகத்தின் கீழே அத்புதமாய் இருப்பிடம் ஏற்படுத்திக்கொண்டு அவர்களுடன் ரமித்து வருகிறார் என்ற விஷயம் தெரிந்துகொண்டார்.

இவ்விதமாக தண்டகாரண்யத்தில் ஒவ்வொரு ரிஷியின் ஆசிரமமாகப் போய் அவர்களால் விசேஷமாக உபசரிக்கப்பட்டார்கள். போன இடங்களில் ஒரு வருஷம், பத்து மாஸம்வரை சில மாஸங்கள் என்றவாறு தங்கித் தங்கி வந்ததில் மொத்தம் பத்து வருஷங்களாகிவிட்டன. பிறகு மறுபடியும் ஸுதீக்ஷ்ணரின் ஆசிரமத்திற்கே திரும்பிவந்து சேர்ந்தார்கள். அங்கே வந்தபிறபாடு அங்கேயும் கொஞ்சநாள் தங்கியிருந்தார்கள்.

एवं संवसतस्तस्य मुनीनामाश्रमेषु वै ॥
रमतश्चानुकूल्येन ययुः संवत्सरा दश ।
तत्रापि न्यवसद्रामः किंचित् कालमरिन्दमः ॥ ,, 11 (27-30)

பிறகு ஒருநாள் அகஸ்திய மஹர்ஷியைப் பார்க்க வேண்டுமென்று ராமர் சொன்னதின்பேரில் அன்றே புறப்படலாமென்று போகவேண்டிய மார்க்கத்தையும்

ஸுதீக்ஷ்ணர் சொன்னார். "இங்கேயிருந்து நான்கு யோஜனை தூரத்தில் அகஸ்தியருடைய தம்பியின் ஆசிரமம் இருக்கிறது. அங்கு ராத்திரி தங்கிவிட்டு காலையில் ஒரு யோஜனை போனால் அகஸ்தியருடைய ஆசிரமத்திற்குப் போய்விடலாம்" என்றும் சொன்னார்.

तत्रैकां रजनीं व्युष्य प्रभाते राम गम्यताम् ,, ,, (40)

அப்படியே புறப்பட்டு ராமர் வழியில் அகஸ்தியர் இல்வலவாதாபிகளை நிக்ரஹம் செய்த வரலாற்றைச் சொல்லிக் கொண்டு போகையில் அஸ்தமன ஸமயம் வந்துவிட்டபடியால் ஸந்த்யையை அனுஷ்டித்த பிறகே அம்முனிவரின் ஆசிரமம் சென்றார்கள்.

एवं कथयमानस्य तस्य सौमित्रिणा सह ।

रामस्यास्तं गतः सूर्यः संध्याकालोऽभ्यवर्तत ।

उपास्य पश्चिमां संध्यां सह भ्रात्रा यथाविधि ॥

प्रविवेशाश्रमपदं तमृषिं सोऽभ्यवादयत् ॥ ,, ,, (69-71)

அன்றிரவு அவர் செய்த ஸத்காரத்தைப் பெற்றுக் கொண்டு அங்கேயே தங்கிவிட்டு மறுநாள் காலையில் அவரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள்.

न्यवसत्तां निशामेकां प्राश्य मूलफलानि च ।

तस्यां रात्र्यां व्यतीतायां विमले सूर्यमण्डले ॥

भ्रातरं तमगस्त्यस्य ह्यामन्त्रयत राघवः । ,, ,, (72,73)

அவ்வழியே போய் அகஸ்த்யாசிரமம் வந்தவுடன் மற்ற ஆசிரமங்கள் போலில்லாமல் இங்கே அநேகர்

அவருக்கு சுசுரூஷை செய்வதைக்கண்டு தான் நேரே ஆசிரமத்திற்குள் போகாமல், தான் வந்திருப்பதை தெரிவிக்கும்படி லக்ஷ்மணனிடம் சொல்லுகிறார். லக்ஷ்மணனும் அங்கே போய் அகஸ்த்யருடைய சிஷ்யரிடத்தில் மஹரிஷியைத் தர்சிக்க வேண்டுமென்று சொன்னான்.

உடனே அந்த சிஷ்யன் உள்ளே போய் அகஸ்த்யரிடம் தெரிவித்து அவருடைய உத்தரவின்பேரில் இவர்களை உள்ளே அழைத்துச்சென்றான். அங்கு ஒவ்வொரு தேவதைக்கும் ஏற்பட்டிருந்த ஸ்தானங்களைப் பார்த்துக் கொண்டு போகையில் அகஸ்த்யரே உள்கட்டிலிருந்து வெளிவந்தார். இவர்கள் உடனே நமஸ்கரித்தார்கள். ராமருக்கு அர்க்யபாத்யாதிகள் கொடுத்து உட்காரச் சொல்லி எல்லாருக்கும் போஜனம் செய்வித்தார். பிறகு விசுவகர்மாவால் செய்யப்பட்ட வைஷ்ணவ தனுஸ், பிரஹ்மாவால் கொடுக்கப்பட்ட அமோகமான பாணம், தேவேந்திரனால் கொடுக்கப்பட்ட இரண்டு அக்ஷயமான தூணீரங்கள், தங்கத்தினால் அலங்கரிக்கப்பட்ட வாள் இவைகளை அகஸ்த்யர் கொடுத்தார்.

பிறகு தனக்கு ஒரு வாஸஸ்தானம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று ராமர் கேட்டுக் கொண்டதின் பேரில் அங்கிருந்து இரண்டு யோஜனை தூரத்தில் பஞ்சவடி என்ற ஸ்தலம் இருக்கிறதென்றும், அங்கேயே போய் வாஸம் செய்யலாமென்றும் சொன்னார். அத்துடன் தசரதர் குறிப்பிட்ட பதினான்கு வருஷத்தில் பெரும் பாகம் ஆகிவிட்டதென்பதையும் ஞாபகப்படுத்தினார்.

कालोऽयं गतभूयिष्ठो यः कालस्तव राघव ।
समयो यो नरेन्द्रेण कृतो दशरथेन ते ॥

பிறகு அவரை நமஸ்கரித்து உத்திரவு பெற்றுக்கொண்டு பஞ்சவடியை உத்தேசித்துப் புறப்பட்டார்கள்.

பஞ்சவடிக்குப் போகும் வழியில் ஜடாயுஸ் என்ற கழுகு வந்து, தான் அருணனுடைய குமாரனென்றும், தசரதருடைய ஸ்நேஹிதனென்றும், பஞ்சவடிக்குத் தானும் வந்து காவலிருப்பதாகவும் சொன்னதைக் கேட்டு அவரையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு பஞ்சவடி போய்ச்சேர்ந்தார். அங்கே லக்ஷ்மணனைக் கொண்டு பர்ணசாலை கட்டச் சொன்னார். அவன் கட்டின பர்ணசாலையைக் கண்டு மிகவும் ஸந்தோஷித்து அவனை ஆலிங்கனம் செய்து சிலாகித்துவிட்டு பிறகு அதில் பிரவேசித்தார்; அங்கே ஸீதையினாலும் லக்ஷ்மணனாலும் சுச்ரூஷை செய்யப்பட்டுக் கொண்டு ராமர் கொஞ்ச காலம் வஸித்து வந்தார்.

कंचित् कालं स धर्मात्मा सीतया लक्ष्मणेन च ।
अन्वास्यमानो न्यवसत् स्वर्गलोके यथाऽमरः ॥ அர. 15 (31)

அப்பொழுது சரத்ருது போய் ஹேமந்தம் வந்தது. இதனால் ராமர் பஞ்சவடிக்கு சரத்ருதுவில் வந்தார் என்று தோன்றுகிறது.

பஞ்சவடியில் ஒருநாள் ராமர் உட்கார்ந்திருக்கையில் அகஸ்மாத்தாக ராவணனுடைய தங்கை சூர்ப்பணகை வந்து ராமரைக் கண்டு மோஹித்துத் தன்னை பார்யையாக கிரஹிக்கவேண்டுமென்று கேட்டாள். அதற்கு ராமர் லக்ஷ்மணனைக் கைகாட்டியும், லக்ஷ்மணன் ராமரைக் கை காட்டியும், இருவரும் ஸம்மதிக்காததற்கு ஸீதைதான் காரணமென்று தோன்றி ஸீதையைத் தாக்குவதற்காக சூர்ப்பணகை ஆரம்பித்து விட்டபடியால், லக்ஷ்மணன் அவளுடைய காதையும் மூக்கையும் அறுத்துவிட்டான். உடனே அவள் ஓடிப்போய் அவ்வனத்திலிருந்த அவளுக்குத்தம்பி முறையான கரனென்ற ராக்ஷஸ வீரனிடம் முறையிட்டதில், ராமலக்ஷ்மணர்களைக் கொன்று

வரும்படி பதினன்கு ராக்ஷஸர்களை அவன் அனுப்பினன். அவர்களை ராமர் ஸம்ஹரித்துவிட்டபடியால், வெகு கோபம் கொண்டு கரனே பதினன்காயிரம் ராக்ஷஸ ஸைன்யத்துடன் வந்து சேர்ந்தான். ஸீதையை லக்ஷ்மணன் பாதுகாப்பில் குகையில் வைத்துவிட்டு, தான் மாத்திரம் நின்றுகொண்டு தூஷணன், த்ரிசிரஸ் முதலானவர்களை ஸம்ஹாரம் செய்துவிட்டு, கரனுடன் அதி கோரமாக யுத்தம் செய்து கடைசியில் அவனையும் ஸம்ஹரித்து விட்டார். இவருடைய பராக்ரமத்தைக் கண்டு ஸந்தோஷம் தாங்காமல் ஸீதை தானகவே ஆலிங்கனம் செய்து கொண்டாள்.

உடனே அங்கிருந்து அகம்பனன் என்ற ராக்ஷஸன் லங்கைக்குப் போய் கரதூஷணுதிகள் மடிந்த விஷயத்தைச்சொன்னதும், ராவணன் உடனே ஜனஸ்தானம் போய் ராமரை ஸம்ஹரித்துவிடுவதாகச் சொன்னன். அதைக்கேட்டு அகம்பனன் ராமரை யுத்தத்தில் ஜயிப்பது சிரமமென்றும், அவருடைய பார்யையைத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டால், அவர் தானகவே பிராணனை விட்டுவிடுவார் என்றும் சொன்னன். இந்த யுக்தியை அங்கீகரித்துக் கொண்டு, ராவணன் மாரீசனிடம்போய், தனக்கு ஸஹாயம் செய்ய வேண்டுமென்று கேட்டதில் அவன் இந்தக் கெட்ட ஆலோசனை சொன்னவன் யார் என்று சொல்லி மறுத்துவிட்டபடியால் லங்கைக்குத் திரும்பி விட்டான்.

ஆனலும் பின்னல் சூர்ப்பணகையே நேரில் வந்து ராவணனிடம் ஸீதையைப்பற்றி வர்ணித்ததிலிருந்து, அவனுக்கு ராமரிடம் இருந்த கோபத்துடன் ஸீதையிடம் ஆசையும் ஏற்பட்டது. மறுபடியும் புறப்பட்டு மாரீசனிடம் சென்றபோது அவன் எவ்வளவோ தடுத்துப் பார்த்தும் கேட்காமல் அவனையே பயமுறுத்த ஆரம்பித்ததின்பேரில் அவனும் இஷ்டமில்லாமலே ஸம்மதித்தான்.

பிறகு மாரீசன் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்வர்ணமயமான மானாக மாறி ராமருடைய ஆசிரமத்திற்கு ஸமீபத்திலுள்ள தோட்டத்தில் ஸஞ்சாரம் செய்ததை ஸீதை பார்த்து அந்த மானை எப்படியாவது பிடித்துக் கொடுக்க வேண்டுமென்று சொன்னாள். இது வாஸ்தவமான மான் இல்லை, மாரீசன் மாயை என்று லக்ஷ்மணன் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. அதைத் துரத்திக்கொண்டு வெகுதூரம் ராமர் போன பிறபாடு, அதன்மேல் பாணம் போட்டதில், அந்த மான் வேஷம் போட்டிருந்த மாரீசன் அடிபட்டுக் கீழே விழும் போது தன் சொந்த ரூபத்துடன் ராமருடைய குரலில் "ஹா! ஸீதே! ஹா! லக்ஷ்மணா" என்று சப்தமிட்டுக் கொண்டு பிராணனை விட்டான். இந்த சப்தத்தைக் கேட்ட ஸீதா தேவி ராமருக்கு ஏதோ ஆபத்து என்று பயந்து, லக்ஷ்மணன் எவ்வளவு தைர்யமும் ஸமாதானமும் சொல்லியும் கேட்காமல், ராமரைப்பார்த்து வரும்படி லக்ஷ்மணனை அனுப்பிவிட்டாள்.

இந்த ஸந்தர்ப்பத்தில் ஆசிரமத்தில் ராமர் லக்ஷ்மணன் இருவரும் இல்லாமல் ஸீதை தனித்து இருக்கிறாளென்று அறிந்த ராவணன் ஸமீபத்தில் நெருங்குவதற்கு அனுகூலமாயிருக்குமென்று த்ரிதண்டி ஸந்யாஸி வேஷம் பூண்டு ஆசிரமத்திற்குள் நுழைந்தான். ஸன்யாஸியென்று நினைத்து ஸீதை அவனுக்கு மரியாதை செய்து தன் வரலாற்றைச் சொன்னபிறகு, ராவணன் தான் இன்னாரென்று சொல்லி, தன் அபிப்ராயத்தை வியக்தமாய் ஸீதையிடம் சொன்னான். அவள் உடனே வெகு கோபத்துடன் பலவிதமாக நிராகரித்து விட்டபடியால், அவளை பலாத்காரமாகவே தூக்கி ரதத்தில் வைத்துக்கொண்டு புறப்பட்டுவிட்டான். அந்த ஸமயம் கொஞ்சம் தூக்கத்தினால் அயர்ந்திருந்த ஜடாயுஸ் ஸீதையின் சப்தம் கேட்டு விழித்துக் கொண்டு உடனே ராவணனை எதிர்த்து ரதத்தையும் ஸாரதியையும் குதிரை

களையும் நாசம் செய்துவிட்டார் உடனே ராவணன் வாளையெடுத்து ஜடாயுவின் இரண்டு இறக்கைகளையும் வெட்டி அவரைக் கீழே தள்ளிவிட்டு மறுபடியும் ஸீதையைத் தூக்கிக்கொண்டு ஆகாச மார்க்கமாய் லங்கை போய்ச் சேர்ந்தான். அவளைத் தன்னுடைய ஸம்மத மன்னியில் புருஷனோ ஸ்திரீயோ யாரும் பார்க்கக்கூடாது என்று சொல்லி ராக்ஷஸிகளை காவலாக வைத்தான்.

பிறகு அவனே வந்து ஸீதையை நிர்ப்பந்தமாக அழைத்துக்கொண்டு தன் அரண்மனை சென்று தன்னுடைய விபவங்களையெல்லாம் காட்டினான். அப்பொழுதும் அவள் அவனை துச்சமாகப் பேசினபடியால் ராவணன் கோபமடைந்து "இது முதல் பனிரண்டு மாதங்கள் உனக்கு அவகாசம் கொடுத்திருக்கிறேன். அதற்குள்ளும் நீ என்னை அடைய ஸம்மதிக்காத விஷயத்தில் உன்னை சமையல்காரர்கள் காலை சாப்பாட்டுக்காக நறுக்கிவிடுவார்கள்" என்று சொல்லிவிட்டு ராக்ஷஸிகளைப்பார்த்து "இவளை அசோக வனத்தின் மத்தியில் அழைத்துப்போய், நீங்கள் பயப்படுத்தியும், நயமாகவும், எனக்கு வசமாகும்படி செய்யுங்கள்" என்று உத்திரவிட்டான். அப்படியே அந்த ராக்ஷஸிகள் ஸீதையை அசோக வனத்தில் கொண்டுபோய் வைத்தார்கள்.

शृणु मैथिलि मद्वाक्यं मासान् द्वादश भामिनि ।
कालेनानेन नाभ्येषि यदि मां चारुहासिनि ॥
ततस्त्वां प्रातराशार्थं सूदाश्छेत्स्यन्ति लेशशः । ,, 55 (24,25)

ராவணன் ஸீதையை அபஹரித்துக் கொண்டு போனது எப்பொழுது என்று வால்மீகி வ்யக்தமாய் சொல்லவில்லை. ஆனாலும் ராவணன் ஸீதைக்கு ஏற்படுத்தினகெடுவிலிருந்து ஒருவாறு சுமாராகத் தீர்மானிக்கலாம். பின்னால ராமர் ஸமுத்திரக்கரைக்கு வந்து

சேர்ந்தபிறகு ராவணன் ஸபைகூட்டி அதில் சொல்லும் போது ஸீதை கேட்டு தான் ஒருவருஷம் கெடு கொடுத்ததாகச் சொல்லுகிறான்.

सा तु संवत्सरं कालं मामयाचत भामिनी ।
प्रतीक्षमाणा भर्तारं राममायतलोचना ॥
तन्मया चारुनेत्रायाः प्रतिज्ञातं वचः शुभम् ॥ யுத்த. 12(19-20)

இதற்கு முன்னால் ஹநுமார் அசோகவனம் வந்திருக்கும் ஸமயம் ராவணன் ஸீதையிடம் வந்து மன்றாடியும் பிரயோஜனப்படாமல் கோபத்துடன் "நான் உனக்கு கொடுத்த கெடுவில் இன்னம் இரண்டு மாஸங்கள் இருப்பதால் நான் காப்பாற்ற வேண்டியிருக்கிறது இரண்டு மாஸங்களுக்குப் பிறகு நீ என்னிடம் ஆசை வைக்காத விஷயத்தில் உன்னை, என் காலையாஹாரத்திற்காக சமையல் அறையில் நறுக்கி விடுவார்கள்" என்கிறான்.

द्वौ मासौ रक्षितव्यौ मे योऽवधिस्ते मया कृतः ॥
द्वाभ्यामूर्ध्वं तु मासाभ्यां भर्तारं मामनिच्छतीम् ।
मम त्वां प्रातराशार्थं आलभन्ते महानसे ॥ ஸுந். 22 (8,9)

ஹனுமார் அசோகவனம் வந்தது பால்குன பௌர்ணமிக்கு சற்று முந்திய தினம் என்று ஏற்படுவதால், ராவணன் ஸீதையை தூக்கிக்கொண்டு வந்தது அதற்குப் பத்து மாஸங்கள் முன்னால், அதாவது சைத்ரமாஸமாயிருக்குமென்று தீர்மானிக்க இடம் கொடுக்கிறது.

இது நடந்தது ஸ்ரீராமர் வனவாஸத்திற்குப் புறப்பட்டு 14-வது வருஷம் என்பதும் தெரிகிறது இதற்குமுன் 13-வது வருஷத்தில் வர்ஷருதுவிற்குப் பின் அகஸ்த்யரை தர்சித்துவிட்டு சரத்ருதுவில் பஞ்சவடி போயிருக்கலாம்.

ஸ்ரீ ராமர் மாரீசனை ஸம்ஹாரம் செய்துவிட்டுத் திரும்பி வருகையில் எதிர்கொண்டு வந்த லக்ஷ்மணனைப் பார்த்து அவன் ஸீதையைத் தனியாய் விட்டுவிட்டு வந்தது மிகவும் பிசகு என்று கண்டித்துவிட்டு, இருவருமாகப் பர்ணசாலைக்கு வந்து ஸீதையைக் காணாமல் பரிதபித்துத் தேட ஆரம்பித்தார்கள். எங்கேயும் காணாமல் இருக்கும்போது சில மான்கள் கண்களில் நீர் ததும்பத் தென்திசை நோக்கி நின்றதைக்கண்டு அந்தப் பக்கம் போயிருக்கலாம் என்று தேடினார்கள். அப்படித் தேடி வருகையில் ஜடாயுவைக்கண்டு, முதலில் அவரைத் தெரிந்து கொள்ளாமல் ராக்ஷஸன் என்று ஸந்தேஹப் பட்டு, பின்னால் தெரிந்து கொண்டு, அவர் மூலமாக ராவணன் ஸீதையை அபஹரித்துக் கொண்டுபோன விஷயமும், அவனால் இறக்கைகள் அறுபட்டு அவர் பிராணன் போகும் தருணத்தில் இருப்பதும் தெரியவந்தது. ராவணனைப்பற்றி அவர் விவரமாய் சொல்லுவதற்குள் இறந்துவிட்டார். உடனே மிகவும் துக்கத்துடன் ராமரே அவருக்கு ஸம்ஸ்காரம் செய்து உத்தமலோகத்திற்கு அனுப்பிவிட்டு, மறுபடியும் ஸீதையை தேட ஆரம்பித்தார்கள்.

ஸ்ரீராமரும் லக்ஷ்மணனும் ஜனஸ்தானம் பூராவும் ஸீதையைத் தேடியும் அகப்படாமல், அதிலிருந்து தெற்கே போய் க்ரௌஞ்சாரண்யத்தையும் தாண்டிக் கொண்டிருக்கையில், அயோமுகி என்ற ராக்ஷஸி முன்னால் போய்க்கொண்டிருந்த லக்ஷ்மணனை ஆலிங்கனம் செய்து கொண்டாள். உடனே வெகு கோபத்துடன் அவளுடைய காதையும் மூக்கையும் அறுத்துத் துரத்திவிட்டு, மேலும் வனத்தில் தேடிக் கொண்டு போனார்கள். அப்பொழுது வெகு நீளமான கைகளுடையவனும், வயிற்றிலேயே முகமுடையவனுமான கபந்தன் என்ற ராக்ஷஸன் இவ்விருவர்களையும் பிடித்துக்கொண்டபோது

அவனுடைய இரு கைகளையும் இவர்கள் வெட்டிவிட்டார்கள். அப்பொழுது அவன், தான் தனு என்ற அஸுரனின் புத்திரனென்றும், வெகு அழகான சரீரத்துடன் கூடினவனாயிருந்தும் ரிஷிகளை பயமுறுத்துவதற்காக கோரமான ரூபம் எடுத்துக் கொண்டிருந்த போது ஸ்தூலசிரஸ் என்ற மகரிஷி அந்த ரூபமே இருக்கட்டுமென்று சபித்துவிட்டாரென்றும், பின்னால் தபஸ் செய்து பிரஹ்மாவை ஸந்தோஷிப்பித்து அவர் மூலமாய் தீர்க்கமான ஆயுஸ் ஸம்பாதித்த உடன் இந்திரனையே எதிர்க்கப் போனதில் அவன் வஜ்ராயுதத்தினால் அடித்ததினால் தலை உள்ளே இறங்கிவிட்டபடியால் வயிற்றில் வாயும் நீளமான கைகளும் இருக்கட்டுமென்று இந்திரன் சொல்லிவிட்டானென்றும், தனக்கு அக்னி ஸம்ஸ்காரம் செய்தபிறகு ராமருக்கு ஸஹாயம் செய்வதாகவும் சொன்னான். அப்படியே அவனை தஹனம் செய்தவுடன் அவன் திவ்யமான ரூபத்துடன் வெளிக்கிளம்பி, பம்பா ஸரஸ்ஸின் ஸமீபத்தில் ரிஷ்யமூக பர்வதத்தில் வாலியினால் விரட்டப்பட்டு நான்கு வானரர்களுடன் இருந்து வரும் ஸுக்ரீவனை ஸக்யம் செய்து கொள்ளும்படிக்கும், அந்த ஸுக்ரீவனே ஸீதையைத் தேடுவதற்கு ஏற்பாடு செய்வானென்றும் பம்பா ஸரஸ்ஸின் மேல் கரையிலுள்ள சபரீ என்ற தபஸ்வினியையும் பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்றும் சொன்னான்.

அப்படியே ராமர் சபரியின் ஆசிரமம் சென்று அவளை அனுக்ரஹித்துவிட்டு, அவர் ஸன்னிதியிலேயே அவள் அக்னி பிரவேசம் செய்து திவ்யமான ரூபத்துடன், அவள் சுசுரூஷை செய்துவந்த மஹரிஷிகள் சென்ற புண்ய லோகத்தை அடைந்ததையும் பார்த்துவிட்டு, அங்கிருந்து புறப்பட்டு பம்பா கரையோரமாகச்சென்று ரிஷ்யமூக பர்வதத்திற்கு ஸமீபம் போய் சேர்ந்தார். அந்த

ஸமயமும் வஸந்தருது இருந்தபடியால் அதன் சோபை யைப் பார்க்கப் பார்க்க ஸீதையை விட்டுப் பிரிந்த துக்கம் ராமரை வெகுவாக பாதித்தது.

अय वसन्तः सौमित्र नानाविहगनादितः ।
सीतया विप्रहीणस्य शोकसंदीपनो मम ॥ கிஷ். 1 (22)

இவ்விதம் ராமர் பலவிதமாக விலாபம் செய்கையில் லக்ஷ்மணன் ஆசுவாஸனம் செய்தான். இவ்விதமாக பம்பாக் கரையில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

ரிஷ்யமூக பர்வதத்திலிருந்த ஸுக்ரீவன் பம்பா ஸரஸ் ஸின் கரையில் வில் ஏந்திக் கொண்டு ஸஞ்சரித்துக் கொண்டிருந்த ராம லக்ஷ்மணர்களைப் பார்த்து வாலியைச் சேர்ந்தவர்களோ என்று பயந்து ஓடும்போது, "இது மலயபர்வதம். இங்கே வாலியின் பயத்திற்கு இடமில்லை" என்று ஹனுமார் ஞாபகப்படுத்தினார். உடனே அவரையே போய் இவர்கள் யாரென்று தெரிந்து வரும்படி ஸுக்ரீவன் அனுப்பினான். அப்படியே ஹனு மார் போய், அவர்களும் ஸுக்ரீவனையே தேடி வருகிறார்க ளென்று தெரிந்து அவர்களையும் அழைத்துக்கொண்டு வந்து ஸுக்ரீவனிடம் அவர்களுடைய விருத்தாந்தத்தைச் சொன்னார் உடனே ராமரும் ஸுக்ரீவனும் மிக ஸந்தோ ஷத்துடன் அக்னி ஸாக்ஷியாக ஸக்யம் செய்துகொண்டு ஒருவருக்கொருவர் ஸஹாயம் செய்வதாக பிரதிக்ஞை செய்து கொண்டார்கள்

பிறகு ஸுக்ரீவன், ஒரு ராக்ஷஸன் ஒரு ஸ்திரீயை அபஹரித்துக் கொண்டுபோவதைத் தானே நேரில் பார்த் ததாகவும், அவள் இங்குள்ள ஐந்து வானரர்களை கவனித்து சில நகைகளை உத்தரீயத்தில் முடிந்து கீழே போட்டதாகவும் சொல்லி, அந்த நகைகளைக் கொண்டு

வந்து காட்டினன். ராமர் மிகவும் துக்கப்பட்டுக் கொண்டிருக்கையில் ஸீதையை எப்படியாவது தேடிக்கொடுப்பதாக ஸுக்ரீவன் ஸமாதானம் செய்துவிட்டு, தனக்கும் வாலிக்கும் ஏற்பட்ட விரோதத்தின் காரணத்தை விஸ்தாரமாக எடுத்துச் சொன்னுன். வாலியின் பலத்தை நினைக்கையில் அவனைக் கொல்லுவதற்கு ராமருக்கு சக்தி இருக்குமா என்று ஸுக்ரீவன் ஸந்தேஹப்பட்டபோது, அவனுக்கு நம்பிக்கையேற்படும்படி முதலில் துந்துபியின் சரீரத்தைத் தன் கால்விரலால் ராமர் தூக்கியெறிந்து பிறகு ஒரே பாணத்திஞல் ஏழு ஸாலமரங்களையும் துளைத்துக்காட்டினூர். அதன்பேரில் தைர்யம் கொண்டு ஸுக்ரீவன் வாலியை சண்டைக்கு இழுத்ததில் அடிபட்டுக்கொண்டு திரும்பிவிட்டான். மறுபடியும் ராமர் சொல்லின்பேரில் வாலியை அழைக்கும்போது, வாலியின் பார்யை தாரை எவ்வளவோ தடுத்தும் கேடகாமல் வாலி யுத்தத்திற்கு வந்தான். அப்பொழுதும், ஸுக்ரீவன் கை சோர்ந்து நிற்கும் ஸமயம் ராமர் பாணம் போட்டு வாலியை விழ்த்தினூர். அவனுக்கு ராமர் விஷயமாய் ஏற்பட்ட ஸந்தேஹங்களை ராமரே நிவிருத்தி செய்து ஸமாதானப்படுத்தினதின் பேரில் அவனும் ஸமாதானமடைந்து பிராணனை விட்டான். பிறகு அவனுடைய சரீரத்திற்குரிய ஸம்ஸ்காரங்களை ஸுக்ரீவன் மூலமாய் செய்விதுவிட்டு கிரமப்படி ஸுக்ரீவனுக்கு பட்டாபிஷேகம் செய்துவைத்தார்.

இதற்குள் கோடைகாலம் முடிந்து மழைகாலம் ஆரம்பிக்கும் ஸமயமாகிவிட்டபடியால், மழை பெய்யக் கூடிய நான்கு மாஸங்களும் சென்று ஸீதையைத் தேடலாமென்றும் அதுவரை லக்ஷ்மணனும், தானும் ஒரு விசாலமான மலை குஹையிலிருப்பதாகவும் சொன்னூர்.

पूर्वोऽयं वार्षिको मासः श्रावणः सलिलागमः ॥
प्रवृत्ताः सौम्य चत्वारो मासा वार्षिकसंज्ञकाः ।

नायमुद्योगसमयः प्रविश त्वं पुरीं शुभाम् ॥ ,, 26 (13,14)
कार्तिके समनुप्राप्ते त्वं रावणवधे यत ॥ ,, ,, (16)

*இவ்விதமாக பிரஸ்ரவண கிரியின் குகையில் ராமர் இருக்கையில் ஸீதையை நினைத்து நினைத்து துக்கப்படும் போது லக்ஷ்மணன் "இப்பொழுது மழைகாலம். சரத் காலம் வந்தவுடன் ராவணனைக் கொன்றுவிடலாம்"*

शरत्कालं प्रतीक्षस्व प्रावृट्कालोऽयमागतः ।
ततः सराष्ट्रं सगणं रावणं त्वं वधिष्यसि ॥ ,, 27 (36)

*என்று ஸமாதானம் சொன்னான். அப்படியே சிராவண மாஸமான பிறகு பாத்ரபத மாஸம் வந்தவுடன் ஸாம வேதிகள் அத்யயன உபாகர்மா செய்யும் காலமென்று ராமருக்கு ஞாபகம் வந்தது.*

मासि प्रोष्ठपदे ब्राह्मणानामधीयताम् ।
अयमध्यायसमयः सामगानामुपस्थितः ॥ ,, 28 (54)

*மேகங்கள் விலகி ஆகாசம் தெளிந்த உடனேயே ஹனுமார் ஸுக்ரீவனிடம் ஞாபகப்படுத்தி வானரர்களைப் பதினைந்து நாட்களுக்குள் அழைத்துவரும்படி ஏற்பாடு செய்துவிட்டார். பதினைந்து நாட்களில் வராதவனுக்கு மரண தண்டனையென்று ஸுக்ரீவன் விதித்தான். இவ் விதம் ஸுக்ரீவன் ஏற்பாடு செய்திருக்கிறனென்ற விஷயம் தெரியாமல், ராமர் லக்ஷ்மணனிடம் "ஸீதையைக் காணுமல் துக்கப்படும் நான் மழை காலத்திய இந்த நான்கு மாஸங்களையும் நூறு வருஷங்களுக்கொப்பாகவே கஷ்டப் பட்டுக் கழித்தேன. வாக்குக் கொடுத்த நான்கு மாஸங் களும் சென்றுவிட்டதை ஸுக்ரீவன் இன்னும் அறிந்து கொள்ளாமலிருக்கிறான். நீ போய் கண்டிப்பாய் அவ னிடம் சொல்லிவா"*

चत्वारो वार्षिका मासा गता वर्षशतोपमाः ।
मम शोकाभिभूतस्य सौम्य सीतामपश्यतः ॥ ,, 30 (64)
वर्षाः समयकालं तु प्रतिज्ञाय हरीश्वरः
व्यतीतांश्चतुरो मासान् विहरन् नावबुध्यते ॥ ,, ,, (78)

என்று சொல்லி அனுப்பினதில், கடைசியாக ஸுக்ரீவன் ஏற்கனவே அனுப்பியிருந்த வானரர்களை அவஸரப்படுத்தும்படி வேறு வானரர்களையும் அனுப்பினான்.

ஒரு முஹூர்த்தத்திற்குள் நாலா பக்கங்களிலிருந்தும் கோடிக்கணக்கான வானரர்கள் புஷ்பம், பழம், கிழங்கு, ஔஷதிகள் முதலான காணிக்கைகளுடன் வந்து சேர்ந்தார்கள். அவைகளைப் பெற்றுக்கொண்டு பிறகு பல்லக்கில் லக்ஷ்மணனுடன் ஏறிக்கொண்டு ராமரிருக்குமிடம் போய் கீழே இறங்கி ஸுக்ரீவன் ராமரை நமஸ்கரித்தான். அப்பொழுது இன்னம் ஏராளமான வானரர்கள் வந்து சேர்ந்தார்கள். பிறகு ராமருடைய அனுமதியின் பேரில் ஸுக்ரீவனை விநதன் என்பவனைக் கிழக்கு திக்குக்கும், நீலன் ஹனுமார் முதலானவர்களைத் தெற்கு திக்குக்கும், ஸுஷேணன் என்பவனை மேற்கு திக்குக்கும், சதவலி என்பவனை வடக்கு திக்குக்குமாக பல வானர வீரர்களுடன் ஸீதையைத் தேடுவதற்கு அனுப்புகிறான். எல்லோருமே ஒரு மாஸத்திற்குமேல் போகாமல் திரும்பிவிட வேண்டுமென்றும் கண்டிப்பாய் உத்திரவிடுகிறான்.

ஸீதையை அபஹரித்துக்கொண்டு போனது தென் திசை நோக்கியென்று தெரிந்தபடியாலும், ஸுக்ரீவனுக்கு ஹனுமாரிடம் விசேஷ நம்பிக்கையிருப்பதாகத் தெரிந்தபடியாலும், ராமருக்கும் ஹனுமாரிடம் விசேஷ நம்பிக்கையிருந்ததாலும், ராமர் அவரிடம் தன் பெயரிட்ட மோதிரத்தை ஸீதைக்கு அடையாளமாகக் கொடுத்து

அனுப்புகிறார். அந்த ஒரு மாஸமும் ராமர் பிரஸ்ரவண கிரியிலேயே தங்கிக்கொண்டு ஸீதையைப்பற்றிய ஸமாசாரத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்.

रामः प्रस्रवणे तस्मिन् न्यवसत् सहलक्ष्मणः ।

प्रतीक्षमाणस्तं मासं यः सीताधिगमे कृतः ॥ ,, 45 (3,4)

கிழக்கு, வடக்கு, மேற்கு திக்குகளில் சென்றவர்கள் ஸீதை அகப்படவில்லையென்று அந்த மாஸக்கடைசியில் வந்து தெரிவித்துவிட்டார்கள்.

ஸுக்ரீவன் கிஷ்கிந்தையிலிருந்து சொன்ன போதிலும், தேடுவதற்கு திக்குகளைப் பிரிக்கும்போது விந்திய பர்வதத்திற்கு வடக்கேயிருந்தே கணக்கிட்டிருக்கிறான். இதையனுஸரித்துத் தென் திசையை யுத்தேசித்து அனுப்பப்பட்டவர்கள் பல மலைகள், காடுகளெல்லாம் தேடிக்கொண்டு விந்த்யமலையின் தென்மேற்கு மூலையில் இருக்கும்போதே குறிப்பிட்டிருந்த ஒரு மாஸம் முடிந்துவிட்டது.

आसेदुस्तस्य शैलस्य कोटिं दक्षिणपश्चिमम् ।

तेषां तत्रैव वसतां स कालो व्यत्यवर्तत ॥ ,, 50 (31)

சிரமத்தினாலும், தாஹத்தினாலும் மிகவும் பீடிக்கப்பட்டவர்களாக இவர்கள் இருக்கும் ஸமயம், ஒரு பொந்து வழியாக நனைந்த இறக்கைகளுடன் வந்த சில பக்ஷிகளைப் பார்த்து அங்கே ஜலமிருக்குமென்று தீர்மானித்துக்கொண்டு, இருளடர்ந்த அந்தப் பொந்து வழியாகவே சென்று பார்க்கையில் அங்கே அத்புதமான தடாகங்களையும் விருக்ஷங்களையும் கண்டு பிரமித்தார்கள். அப்பொழுது அங்கே ஸ்வயம்ப்ரபா என்பவள் வந்து, அந்த பிரதேசம் மயனால் ஹேமையென்பவளுடன் ரமிப்ப

தற்காக ஏற்பட்டதென்றும், மயனை இந்திரன் அடித்து விரட்டின பிறகு, இந்த வனத்தை பிரஹ்மா ஹேமைக்கு கொடுத்தாரென்றும், மேருஸாவர்ணியின் புத்திரியான தான் அந்த ஹேமையின் பிரியமான தோழியாயிருப்பதால் இங்குள்ள கிருஹத்தையும் வனத்தையும் ரக்ஷித்து வருவதாகவும், வந்திருக்கும் வானரர்கள் அவரவர்கள் இஷ்டப்படி அங்குள்ள பழம் முதலானதுகளை கிரஹித்துக் கொள்ளலாமென்றும் சொன்னாள். அப்படியே அவர்கள் சிரமபரிஹாரம் செய்துகொண்ட பிறகு தங்களுடைய நன்றியைத் தெரிவித்துக்கொண்டு தங்கள விருத்தாந்தத்தைச் சொன்னார்கள். பிறகு ஒருநாள் அவர்களைக் கண்களை மூடச்சொல்லி ஒரு க்ஷணத்தில் வெளியில் கொண்டு விட்டாள். வெளியில் வந்து பார்க்கும்போது தங்களுக்குக் குறிப்பிட்ட காலமெல்லாம் போய் வஸந்தமும் நெருங்கிவிட்டதென்பதைப் பார்த்து மிகவும் கவலை கொண்டார்கள்.

கிஷ்கிந்தை மலை பிரதேசமானதினாலும், ஸாதாரணமாக ஆஷாடத்திற்கு முன்னமேயே மழை பெய்ய ஆரம்பித்துவிடுமானதினாலும் ராமர் ஆஷாடத்தையும் சேர்த்தே கணக்கிட்டு நான்கு மாஸங்களென்று ஆச்வயுஜமாஸத்தில் ஸுக்ரீவனை ஞாபகப்படுத்தியிருக்க வேண்டுமென்றும் தோன்றுகிறது. ராமர் வர்ஷா காலத்தைப்பற்றிச் சொல்லும்போது "மழை காலத்திற்காக சேகரிக்கவேண்டிய சாமான்களை யெல்லாம் பரதன் முன்னதாக சேகரித்துக்கொண்டு ஆஷாட பௌர்ணமி வந்ததும் சேகரிப்பதை நிறுத்திவிட்டிருப்பான். ஸரயூ நதியிலும் பிரவாஹம் பெருகிக்கொண்டிருக்கும்"

निवृत्तकर्मायतनो नूनं संचितसंचयः ।
आषाढीमभ्युपगतो भरतः कोसलाधिपः ॥
नूनमापूर्यमाणायाः सरय्वा वर्धते रयः ॥ ,, 28 (55,56)

என்று சொல்லுகிறார்.

ஆச்வயுஜமாஸத்திலிருந்து தேடுகிறவர்களுக்கு ஒரு மாஸத் தவணை கொடுக்கப்பட்டது. அதுவும் சென்று ஸ்வயம்பிரபையின் பிலத்திலேயே ஒரு மாஸமும் சென்று

मासः पूर्णो बिलस्थानां हरयः किं न बुध्यते ।
वयमाश्वयुजे मासि कालसंख्याव्यवस्थिताः ।
प्रस्थिताः सोऽपि चातीतः किमतः कार्यमुत्तरम् ॥ ,, 53 (21,22,

द्रुमान् वासन्तिकान् दृष्ट्वा बभूवुर्भयशङ्किताः
ते वसन्तमनुप्राप्तं प्रतिवेद्य परस्परम् ।
नष्टसंदेशकालार्था निपेतुर्धरणीतले ॥ ,, , (17,18)

அங்கதன் மிகவும் மனது உடைந்தவனாக, ஹனுமார் சொல்லியும் கேட்காமல், பிராணனை விட்டுவிடுவதாகத் தீர்மானித்து உட்கார்ந்துவிட்டதும் மற்றவர்களும் அப்படியே உட்கார்ந்துகொண்டு, ராமருடைய பத்னியை ராவணன் அபஹரித்துக்கொண்டு போகும்போது எதிர்த்த ஜடாயுஸை அவன் வதம் செய்ததை சொல்லிக் கொண்டிருந்தார்கள். அங்கு ஸமீபத்திலிருந்த அந்த ஜடாயுஸின் தமையன் ஸம்பாதி இவ்விஷயத்தைக் கேட்டு மிகவும் துக்கப்பட்டு ராவணன் ஸீதையைத் தூக்கிக்கொண்டுபோன விஷயம் தன் புத்திரன் ஸுபார்சுவன் மூலம் தனக்குத் தெரியவந்ததென்றும், இப்பொழுது அவள் ஸமுத்திர மத்தியில் நூறு யோஜனை தூரத்திலிருக்கும் லங்கை என்ற த்வீபத்தில் இருப்பதாகவும் சொன்னார்.

உடனே இவர்கள் வெகு ஸந்தோஷத்துடன், ஸமுத்திரத்தைத் தாண்டுவதில் தங்கள் தங்களுக்குள்ள சக்தி

யைத் தெரியப்படுத்தினதின்பேரில், ஜாம்பவான் கடைசியில் தனித்து உடகார்ந்திருந்த ஹனுமாருடைய பராக்ரமத்தை அவரிடமே எடுத்துச் சொல்லி அவருக்கு உத்ஸாஹம் வரும்படி செய்தார். உடனே அவர் அங்குள்ள பெரியோர்களை நமஸ்கரித்துவிட்டு மலையின் உச்சியில் ஏறி "நான் ஸீதையைப் பார்த்துவருகிறேன். நீங்கள் ஸந்தோஷமாயிருங்கள்" என்று எல்லோருக்கும் அபயப் பிரதானம் செய்துவிட்டு ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு ஆரம்பித்தார்.

अभिवाद्य हरीन् वृद्धान् हनूमानिदमब्रवीत् । ,, 67 (8)
अहं द्रक्ष्यामि वैदेहीं प्रमोदध्वं प्लवङ्गमाः ॥ ,, ,, (27)

ஹனுமார் ஸமுத்திரத்தைத் தாண்டிப்போகும் வழியில் ஸுரஸா என்ற நாகமாதாவை புத்தி சாதுர்யத்தினாலும், மைநாக பர்வதத்தை அனுநயத்தினாலும், ஸிம்ஹிகை என்ற ராக்ஷஸியை பராக்ரமத்தினாலும், மீறிக்கொண்டு தங்காமலே நேரே ஸமுத்திரத்தின் தென்கரையிலுள்ள வனம் போய்ச் சேர்ந்தார். ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்காக எடுத்துக் கொண்ட பெரிய சரீரத்துடன் லங்கைக்குள் பிரவேசிப்பது ஸாத்தியமில்லையென்பதுடன் வெளிச்சத்தில் பிரவேசிப்பதும் உசிதமில்லையென்று நிர்மானித்து ஸூர்யன் அஸ்தமனமான பிறகு பூனைமாதிரி சிறிய உருவத்தை எடுத்துக் கொண்டார்.

सूर्ये चास्तं गते रात्रौ देहं संक्षिप्य मारुतिः ।
पृषदंशकमात्रः सन् बभूवाद्भुतदर्शनः ॥
प्रदोषकाले हनूमान् तूर्णमुत्प्लुत्य वीर्यवान् ।
प्रविवेश पुरीं रम्यां सुविभक्तमहापथाम् ॥ ஸு. 2 (49,50)

அப்பொழுது இவருக்கு ஸஹாயம் செய்வதற்குப் போல சந்திரனும் மேலே கிளம்பி பிரகாசித்தார்.

லங்கைக்குள் பிரவேசிக்க ஆரம்பிக்கையிலேயே அந்த நகரத்தின் அதிதேவதையான லங்கை ஸ்வரூபத்துடன் முன் தோன்றித் தடுத்தபோது, அவளை இடது கையினால் ஒரு குத்துக்குத்தி விட்ட பிறகு, அவளே ஸம்மதித்ததின் பேரில், சத்ருகிருஹத்தில் நேர்வழியாகப் போகக்கூடாதென்று பிராகாரத்தில் ஏறிக்குதித்து உள்ளே சென்றார். அங்கே வீடுவீடாகவும், பலவிடங்களிலும் தேடிப்பார்த்துவிட்டு அந்தப்புரத்தில் நுழைந்தார். அப்பொழுது சந்திரன் ஆகாசமத்தியில் இருப்பதைக்கண்டார்.

புஷ்பக விமானத்திலும் பல மாளிகைகளிலும் தேடிக்கொண்டு வருகையில் ராவணனுடைய சயனகிருகம் வந்து அங்கு தாறுமாருகப் படுத்துக்கொண்டிருக்கிற ஸ்திரீகளின் மத்தியில் தூங்கிக் கொண்டிருந்த ராவணனைக்கண்டு கொஞ்சம் பின்வாங்கி, மறுபடியும் தேடும்போது தனியாகப் படுத்திருந்த ஒரு ரூபவதியைக் கண்டு, அவள் மண்டோதரி என்று தெரியாமல் ஒரு க்ஷணம் ஸீதைதானோ என்று ஸந்தேஹப்பட்டு ஸீதை இவ்விதமிருக்க மாட்டாளென்று நிச்சயித்து, மறுபடியும் தேடியும் பிரயோஜனப்படவில்லை. அப்பொழுது மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த ஸமயம், மதின்மேல் ஏறிப்பார்க்கையில் இதுவரை தேடிப்பார்க்காத அசோக வனம் தென்பட்டது. அப்பொழுது வஸந்தம் ஸமீபத்து விட்டபடியால் மரங்கள் புஷ்பிக்க ஆரம்பித்துவிட்டன.

पुष्पिताग्रान् वसन्तादौ ददर्श विविधान् द्रुमान् । ,, 14 (2)

ஹனுமார் அசோகவனத்தில் தேடும்போது அர்த்த ராத்திரிக்கு மேலாகிவிட்டபடியால் சந்திரன் வெகுதூரம்

ஆகாசத்தில் சென்றுவிட்டார். ராத்திரியில் கொஞ்சம் தான் பாக்கியிருந்தது.

तथा विप्रेक्षमाणस्य वनं पुष्पितपादपम् ।
विचिन्वतश्च वैदेहीं किंचिच्छेषा निशाऽभवत् ॥ ,, 18 (1)

அப்பொழுது பின் ராத்திரியில் ராக்ஷஸர்களுக்குள் வேத வித்வான்களாகவும் யாகம் செய்தவர்களாகவும் இருக்கும் பிராஹ்மணர்கள் வேத கோஷம் செய்வதை ஹனுமார் கேட்டார்.

षडङ्गवेदविदुषां क्रतुप्रवरयाजिनाम् ।
शुश्राव ब्रह्मघोषांश्च विरात्रे ब्रह्मरक्षसाम् ॥ ,, 8 (2)

அந்த ஸமயம் ராவணனும் விழித்துக்கொண்டு ஸீதையை நினைத்துக்கொண்டு, தீவட்டிகளுடன் அநேக ஸ்திரீகள் சூழ்ந்துவர, அங்கே வந்துசேர்ந்தான். அநேகம் தீவட்டிகள் வந்தன என்பதிலிருந்து அப்பொழுது சந்திரன் அஸ்தமனமாகி இருட்டாயிருந்ததென்று நினைக்க இடம் கொடுக்கிறது. அதனால் அங்கே ஹனுமார் வந்த தினம் பௌர்ணமிக்கு ஒருநாள், இரண்டுநாட்கள், முன்னேயிருந்திருக்கலாமென்று தெரிகிறது

ராவணன் அங்கே வந்து ஸீதையை பலவிதமாய் கெஞ்சிக் கேட்டும் அவள் பருஷமாகவே பதில் சொன்னதின் பேரில் "நான் உனக்குக் கொடுத்திருக்கும் கெடுவில் இரண்டு மாஸங்கள்தான் பாக்கி. அதற்குள் நீ ஸம்மதிக்காவிட்டால் உன்னை நறுக்கிவிடுவார்கள்" என்றான்.

द्वौ मासौ रक्षितव्यौ मे योऽवधिस्ते मया कृतः । ,, 22 (8)

द्वाभ्यामूर्ध्वं तु मासाभ्यां भर्तारं मामनिच्छतीम् ।
मम त्वां प्रातराशार्थं आलभन्ते महानसे ॥ ,, ,, (1)

இவ்விதம் பயமுறுத்தியும் பிரயோஜனமில்லாமல் திரும்பிவிட்டான்.

ராவணனது உத்தரவின்பேரில் லங்கையில் அசோக வனத்தில் ராக்ஷஸிகளெல்லோரும் சேர்ந்து ஸீதா தேவியைத் துன்புறுத்தும்போது, த்ரிஜடை என்பவள் மாத்திரம் ஸமாதானம் சொல்லிப் பார்த்தாள். அப்படியும் துக்கம் மேலிட்டு, பிராணனைத் தியாகம் செய்வதாகத் தீர்மானித்து, தன் கேசங்களைக் கையில் பிடித்துக்கொண்டு ஒரு மரத்தின் கொப்பைப் பிடிக்கும்போது சுப நிமித்தங்கள் ஏற்பட்டன. அதே ஸமயத்தில் அங்கு நடந்ததையெல்லாம் ஒரு மரத்தில் ஒளிந்துகொண்டு கவனித்துவந்த ஹநுமார் பலவிதமாக ஆலோசித்து இனி தாமஸிக்கக்கூடாதென்று தீர்மானித்து மரத்திலிருந்தபடியே ராமசரிதத்தைச் சொல்ல ஆரம்பித்தார். இதைக் கேட்டு ஸீதை நிமிர்ந்து பார்த்தவுடன் கீழே இறங்கினார். உடனே அவளுக்கு ராவணன்தான் இந்த வேஷத்துடன் வருகிறானோ என்று ஏற்பட்ட ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்து பலவிதமாக அவளை ஆசுவாஸனம் செய்து, தன்னை நம்பும்படி செய்த பின்பு ராமர் கொடுத்தனுப்பிய மோதிரத்தைக் கொடுத்தார்.

பிறகு அவளுக்கும் இவரிடம் பூர்ண நம்பிக்கை ஏற்பட்டுவிட்டபடியால், தனக்கு இரண்டு மாஸ கெடு கொடுத்திருந்தபோதிலும், ராமர் எப்படியாவது சீக்கிரம் வரவேண்டுமென்று நினைத்து, ராவணன் சொன்னபடி "இது பத்தாவது மாஸம் நடக்கிறது. இன்னம் இரண்டு மாஸந்தான் பாக்கி. ஒரு வருஷம் முடிவதற்குள் அவரை அவஸரமாக வரச் சொல்லவேண்டும்'

स वाच्यः संत्वरस्वेति यावदेव न पूर्यते ।
अयं संवत्सरः कालः तावद्धि मम जीवितम् ॥

वर्तते दशमो मासो द्वौ तु शेषौ प्लवङ्गम ।
रावणेन नृशंसेन समयो यः कृतो मम ॥ ,, 37 (7-8)

என்று சொன்னதுடன் "ஆனால் அதுவரை நான் காத்திருக்கமாட்டேன். ஒரு மாஸம்தான் பிராணனை வைத்துக்கொள்ளுவேன். அதற்குமேல் ஜீவித்திருக்க மாட்டேன் என்பது ஸத்யம்"

जीवितं धारयिष्यामि मासं दशरथात्मज ।
ऊर्ध्वं मासान्न जीवेयं सत्येनाहं ब्रवीमि ते ॥ ,, 38 (67)

என்று ராமருக்குச் சொல்லி அனுப்புகிறாள். தன் வஸ்திரத்தில் முடிந்திருந்த சூடாமணியையும் ராமரிடம் கொடுக்கும்படி கொடுக்கிறாள். பிறகு ஹநுமார் அவளுக்கு தைர்யம் சொல்லிவிட்டு அவளிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டுவிடுகிறார்.

அதன்பிறகு மேலும் என்ன செய்யலாமென்று ஆலோசித்து அந்த வனத்தையே அழிக்க ஆரம்பித்தார். பின்னிரவில் தூங்கிவிட்ட ராக்ஷஸிகள் இந்த சப்தத்தைக் கேட்டு எழுந்து ராவணனிடம் தெரிவித்தார்கள். இவரைப் பிடிப்பதற்காக ராவணன் அனுப்பின வேலைக்காரர்களையும், பிரஹஸ்தனுடைய குமாரன் ஜம்புமாலியையும், ஏழு மந்திரி புத்திரர்களையும், ஐந்து ஸேனாபதிகளையும், ராவணனுடைய ஜ்யேஷ்ட குமாரனான அக்ஷகுமாரனையும், இவர் வரிசையாக ஸம்ஹரித்துவிட்டார். அதன்பேரில் ராவணனின் இரண்டாவது புத்திரன் இந்திரஜித்தை ராவணன் அனுப்பியதில்

அவனும் பலவித அஸ்திரங்களைப் பிரயோகித்தும் பிரயோஜனப்படாமல் பிரஹ்மாஸ்திரத்தையே பிரயோகித்தபோது, அதற்குக் கட்டுப்பட்டவர்போல ஹநுமார் இருந்து வந்தார். அப்படியே அவரை ராவணன் முன் கொண்டுபோனபோது அவர் அவனுக்குப் பலவிதம் ஹிதோபதேசம் செய்தும் பலிக்காமல், ராவணனுக்கு கோபம் மேலிட்டு இவரை வதம் செய்துவிட உத்தேசிக்கையில், தூதரை வதம் செய்வது நியாயமில்லையென்று விபீஷணர் எடுத்துச் சொன்னதின்பேரில், அவர் வாலில் துணிகளைச்சுற்றி நெருப்பு வைத்துவிட்டார்கள். இதுவும் நல்லதென்றே அவர் நினைத்து காவலர்களாலேயே ஊர் பூராவும் இழுக்கப்பட்டுக்கொண்டு போகையில், நல்ல வெளிச்சத்தில் ஊரின் ஸன்னிவேசத்தை நன்றாகப் பார்க்கமுடியுமென்று ஸமாதானப்படுத்திக் கொண்டு எல்லாவற்றையும் வெகு கவனமாய் கவனித்துக்கொண்டே போனார். கடைசியில் தன்னுடன் வந்தவர்களை உதறிவிட்டு அந்த அக்னியினாலேயே லங்காபட்டணத்தைக் கொளுத்தினார். ஸீதையின் அனுக்ரஹத்தினால் தன் வாலில் இருந்த அக்னி தன்னைச் சுடவில்லையென்று அறிந்திருந்தும், ஊரைக்கொளுத்தின அக்னியினால் அவள் பாதிக்கப்படாமலிருக்கிறாளென்பதைக் கேள்விப்பட்டதுடன், தானும் நேரில் பார்த்துத் தெரிந்து கொண்டு, மறுபடியும் அவளைப்பார்த்து ஆசுவாஸனம் செய்துவிட்டு ஸமுத்திரக்கரை வந்து சேர்ந்து அங்குள்ள குன்றின்மேல் ஏறினார்.

அங்கிருந்து தாவி மத்தியில் மைனாக பர்வதத்தைத் தொட்டு விட்டு ஸமுத்திரத்தைத் தாண்டி மற்ற வானரர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் இடம் போய் "கண்டேன் ஸீதையை" என்று முதலில் சுருக்கமாகச் சொல்லிவிட்டு, பிறகு விஸ்தாரமாக நடந்ததையெல்லாம் சொன்னார். மேல்காரியத்தை ராமனிடம் கேட்டுக்கொண்டுதான் செய்யவேண்டுமென்று ஜாம்பவான்

சொன்னதை அனுஸரித்து எல்லாரும் உடனே புறப்பட்டு மதுவனம் போய் உத்ஸாஹமாகத் தேனைக்குடித்துக் கொண்டிருந்தார்கள். அதன் காவலனும் ஸுக்ரீவனின் மாமனுமான ததிமுகன் என்பவன் தடுத்தபோது அவனை ஹிம்ஸித்ததால், அவன் உடனே போய் ஸுக்ரீவனிடம் முறையிட்டான். இவன் சொன்னதிலிருந்து கார்யஸித்தியுடன் ஹனுமார் முதலானவர்கள் திரும்பி வந்துவிட்டார்களென்று தெரிந்து, உடனே அவர்களை வரச் சொல்லி ததிமுகனிடத்திலேயே ஸுக்ரீவன் சொல்லி அனுப்பினான். அப்படியே அவன் போய் சொன்னவுடன் அவர்கள் புறப்பட்டு ப்ரஸ்ரவணகிரி வந்து சேர்ந்தார்கள். ஹனுமார் மூலம் எல்லா விஷயங்களையும் ராமர் அறிந்து கொண்டு தன்னுடைய நன்றியைக் காட்டும் முறையில் அவரை ஆலிங்கனம் செய்து ஸன்மானம் செய்தார்.

# அத்யாயம் 17

## கால விமர்சம் 4:

## பட்டாபிஷேகம் வரை

ஹனுமார் லங்கையிலிருந்து திரும்பி வந்தவுடன் அங்கதன் முதலானவர்களிடம் சொல்லும்போது ராவணன் வைத்த இரண்டு மாஸ கெடுவைப்பற்றியும் அந்த இரண்டு மாஸத்திற்குள் ராமர் வராத போனால் தன்னை உயிருடன் பார்க்க முடியாதென்று ஸீதை சொன்னதையும் சொன்னவர் ராமரிடம் சொல்லும்போது இரண்டு மாஸம் என்பதை பிரஸ்தாவிக்காமலே ஸீதை சொன்ன ஒரு மாஸத்தையே சொல்லி அவஸரப்படுத்தினார். இதைக்கேட்டு ராமர் "அவள் ஒரு மாஸம் ஜீவித்திருப்பதென்பதே பெரிய காரியம்; என்றால் ஸீதையை விட்டு ஒரு க்ஷணம்கூட இருக்கமுடியாது. ஸீதையின் இருப்பிடம் தெரிந்த பிறகு நான் ஒரு க்ஷணம்கூடத் தாமஸிக்கமாட்டேன்" என்று சொன்னவுடன் புறப்படுவதற்கு நல்லவேளையாக ராமரே குறிப்பிட வேண்டும் என்று ஹனுமார் சொன்னார். இதைக்கேட்டு ராமர் "இப்பொழுதே நல்ல முஹூர்த்தமாயிருக்கிறது. ஸூர்யன் வானத்தின் நடுவில் வந்துவிட்டார். இந்த விஜய முஹூர்த்தமே சிலாக்கியம். இன்று உத்தர பல்குனி நக்ஷத்திரம். நாளை ஹஸ்தம் (என் நக்ஷத்திரம் புனர்வஸூவிற்கு ஏழாம் நக்ஷத்திரமானதினால் சுபமில்லை) அதனால் இப்பொழுதே புறப்படுவோம்" என்று ஸுக்ரீவனிடம் சொன்னார்.

अस्मिन् मुहूर्ते सुग्रीव प्रयाणमभिरोचये ।
युक्तो मुहूर्तो विजयः प्राप्तो मध्यं दिवाकरः ॥ யுத்த. 4 (3)

उत्तरा फल्गुनी ह्यद्य श्वस्तु हस्तेन योक्ष्यते ॥ ,, ,, (5)

பகல் முப்பது நாழிகைகளை இரண்டு, இரண்டு நாழிகைகள் ஒரு முஹூர்த்தம் என்று ஏற்படுவதில் 11-வது

முஹூர்த்தம், அதாவது 20 நாழிகைக்குமேல் 22 நாழிகை முடிய, விஜய முஹூர்த்தம் எனப்படும். இதையே ராமர் குறிப்பிட்டதாக வைத்துக் கொள்ளலாம். விஜயத்தைக் கொடுக்கக்கூடிய முஹூர்த்தம் என்று அர்த்தம் செய்ய அவசியமில்லை ஹனுமார் அன்று காலையில் ஸூர்யோதயத்திற்கு முன்னாலேயே ராக்ஷஸிகள் தூங்கிக் கொண்டிருக்கிறபோதே அசோகவனத்தை அழிக்க ஆரம்பித்துவிட்டபடியால், அதிலிருந்து நாலைந்து நாழிகைக்குள் ராவணன் முன்போய், பிறகு லங்கையைக் கொளுத்திவிட்டு. முற்பகலிலேயே ஸமுத்ரத்தைத் தாண்டி வடகரை வந்து மதுவனம் போய்விட்டு, நடுப்பகலில் ராமர் ஸன்னிதிக்கு வந்திருக்க முடியும். பிறகு ஸைன்யத்தை அழைத்துக்கொண்டு புறப்படும்போது 20வது நாழிகை தாண்டி இருக்கலாம் ஸிம்ஹலக்னமாகவும் இருக்கும். இவ்வளவு குறிப்பாக நக்ஷத்திரத்தைச் சொன்ன ராமர் திதியைக்குறிப்பிடவில்லை அவர் சொல்லுகிற உத்தரபல்குனி நக்ஷத்திரம் ஸாதாரணமாக பங்குனி மாஸத்தில் பௌர்ணமியிலோ அதற்கு முந்தின நாளிலேயோ, பிந்தின நாளிலேயோ ஏற்படலாம். யாத்திரையாரம்பித்கு தினமான பௌர்ணமியில் புறப்படுவது சிலாக்கியமில்லையென்பதுடன் பௌர்ணமி தெற்கு திக்குக்கு யோகினி தோஷமுள்ளதாயிருப்பதால், ராமர் சுக்ல சதுர்தசியிலேயே புறப்பட்டிருக்கலாமென்று தோன்றுகிறது.

உடனே ராமர் ஹனுமார் பேரிலும், லக்ஷ்மணன் அங்கதன் பேரிலும் ஏறிக்கொண்டு புறப்பட்டார்கள். அன்று பகலும் ராத்திரியுமாக ஒரு இடத்திலும் தாமஸிக்காமல் அதிவேகமாக எல்லாரும் சென்று, மறு நாள் ஸாயங்காலம் ஸமுத்திரக்கரை போய்ச் சேர்ந்து தங்கினார்கள். அப்பொழுது ஸாயங்காலமாகி இரவு ஆரம்பிக்கும் போது சந்திரோதயமாகி அலைகளிலெல்லாம் சந்திர பிரதி பிம்பங்கள் தோன்றின.

चण्डनक्रग्रहं घोरं क्षपादौ दिवसक्षये ॥

चन्द्रोदयसमुद्भूतं प्रतिचन्द्रसमाकुलम् ॥ ,, 4 (113,114)

என்று வர்ணித்திருக்கிறபடியால் அன்றே பௌர்ணமியாயிருந்திருக்குமென்று தோன்றுகிறது. அங்கு போனவுடன் ஸமுத்திரத்தைக்கண்டு மறுபடியும் கவலைப்பட்டு ராமர் புலம்பும்போது லக்ஷ்மணன் தைர்யம் சொல்லி ஆசுவாஸனம் செய்ததின்பேரில் ஸந்த்யோபாஸனத்தைச் செய்தார்.

एवं विलपतस्तस्य तत्र रामस्य धीमतः ।

दिनक्षयान्मन्दरुचिः भास्करोऽस्तमुपागमत् ॥

आश्वासितो लक्ष्मणेन रामः संध्यामुपासत । ,, 5 (22,23)

ஹனுமார் லங்கைக்கு வந்துவிட்டுப் போன பிறகு ராவணனுக்கு கவலைஏற்பட்டு மந்திரிகளுடன் ஆலோசித்ததில், அநேகர் அவனை ஸ்தோத்திரம் செய்து தைர்யம் சொன்னார்கள். விபீஷணர் மாத்திரம் ஸீதையைத் திருப்பிக் கொடுத்தால்தான் க்ஷேமமாயிருக்கலாமென்று சொன்னார். இதைக்கேட்டு விட்டு ராவணன் தன் அரண்மனைக்குள் சென்றுவிட்டான். மறுநாள் காலையில் எழுந்திருந்தவுடன் விபீஷணர் ராவணன் கிருஹத்திற்குச் சென்று நமஸ்கரித்து, ஸீதை வந்தது முதல் பல அபசகுனங்கள் ஏற்பட்டு வருவதை ஞாபகப் படுத்தியும், ராவணன் பயப்படுவதற் கொன்றுமில்லை யெனறே சொல்லிவிட்டான்.

ஆனால் ராமர் ஸுக்ரீவனுடன் ஸமுத்திரக்கரைக்கு வந்து விட்டாரென்று தெரிந்தவுடன், முக்கியமான எல்லா ராக்ஷஸர்களையும் பெரிய ராஜ ஸபாஸ்தானத்திற்கு வரவழைத்துத் தானும் அங்கே போய் எல்லாரையும்

பார்த்து "கும்பகர்ணன் தூங்கிக் கொண்டிருந்தபடியால் முன்னால் தெரிவிக்கவில்லை. இன்றைய தினம் எழுந்து வந்திருக்கிறான். ஸீதையைக்கொண்டுவந்தேன். ஆனால் அவள் தன் பர்த்தா வருவார் என்ற ஆசையின்பேரில் ஒரு வருஷம் கெடு கேட்டாள். நானும் ஸம்மதித்தேன். இப்பொழுது ஸமுத்திரத்தின் அக்கரையில் ராம லக்ஷ்மணர்கள் வந்துவிட்டார்கள். ஸீதையைத் திருப்பிக் கொடுக்கக்கூடாது. ராம லக்ஷ்மணர்களை ஸம்ஹரிக்க வேண்டும், இதற்கு நீங்கள் ஆலோசித்து யோஜனை சொல்லுங்கள்" என்றான்.

இதைக்கேட்டு, கும்பகர்ணன், ராவணன் செய்தது மிகவும் பிசகென்று சொன்னபோதிலும், ராவணனுக்கு ஸஹாயமாயிருந்து ராம லக்ஷ்மணர்களுடன் யுத்தம் செய்வதாகச் சொன்னான். மஹாபார்சுவன் பிரஹஸ்தன் முதலானவர்களும் இந்திரஜித்தும் ராவணனை அனுஸரித்தே பேசுகையில், அவர்களை மிகவும் கண்டித்து விட்டு, ஸீதையைக் கொடுத்துவிட்டால்தான் ஸுகமாக வாழலாமென்று விபீஷணர் சொன்னார். இதைக்கேட்டு ராவணன் பருஷமான வார்த்தைகளை உபயோகித்து விபீஷணரை தூஷித்தபோது, அதை ஸஹிக்கமுடியாதவராக அவர் உடனே தன்னுடைய நான்கு மந்திரிகளுடன் ஆகாயத்தில் கிளம்பி நேரே ராமர் இருக்குமிடம் வந்து சேர்ந்தார். அவர் ராமரையே சரணமடைந்திருப்பதாகச் சொன்னவுடன், அவரைச் சேர்த்துக் கொள்ளலாமாவென்று ராமர், ஸுக்ரீவன் முதலானவர்களைக் கேட்டார். சேர்த்துக் கொள்ளக்கூடாதென்றே ஹனுமாரைத்தவிர மற்றவர்களும், சேர்த்துக் கொள்ளுவதுதான் உசிதமென்று ஹனுமாரும், சொன்னதின் பேரில் தன்னை அண்டி வருபவனைச் சேர்த்துக்கொள்வது தான் தன் விரதமென்று ராமர் தீர்மானமாய்ச் சொல்லி விட்டு, விபீஷணரை அழைத்துவரும்படி ஸுக்ரீவனிடமே சொல்லுகிறார். அதன்பேரில் விபீஷணர்

ஆகாசத்திலிருந்து கீழே இறங்கி ராமருடைய பாதங்களில் நமஸ்கரித்தார். பிறகு அவரிடம் ராக்ஷஸர்களுடைய பலாபலங்களைப் பற்றி ராமர் கேட்டதில் அவர் உள்ளபடி சொன்னதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்து, ராவணனைக் கொன்றுவிட்டு இவரை லங்காதிபதியாகச் செய்வதாகச் சொல்லி, உடனே லக்ஷ்மணனைக் கொண்டு விபீஷணருக்கு அபிஷேகம் செய்து வைத்தார்.

பிறகு, ஸமுத்திரத்தை எப்படித் தரணம் செய்வதென்று ஆலோசிக்கையில், ஸமுத்திர ராஜனை உபாஸிப்பதே நல்லதென்று விபீஷணர் சொன்னார். உடனே ராமர் ஸமுத்திரக்கரையில் வலது கையில் சிரசை வைத்துக்கொண்டு தர்பாஸனத்தில் மூன்று நாட்கள் சயனம் செய்து கொண்டு நியமத்துடன் இருந்தார்.

अधिशिश्ये च विधिवत् प्रयतो नियतो मुनिः ।
नियमादप्रमत्तस्य निशास्तिस्रोऽतिचक्रमुः ॥ யுத்த. 21 (9,10)

இவ்விதம் மூன்று இரவுகள் சென்றும் ஸமுத்திர ராஜன் அனுக்கிரஹம் செய்யாததினால் ராமர் கோபம் கொண்டு வில்லேந்தி ஸமுத்திரத்தில் பாணம் போட ஆரம்பித்தார். ஸமுத்திரம் கலங்கி அல்லோலகல்லோலப் பட்டது. உடனே ஸமுத்திரராஜனே நேரில் வந்து "ஜலஸ்வரூபனான என்னை விலகி நில் என்றால் எப்படி முடியும்? என்னைத் தாண்டிப்போவதற்கு வழி சொல்லுகிறேன்" என்று சொல்லி நளனைக் கொண்டு அணை கட்டும்படி சொன்னார். அப்படியே நளனும் ஏற்றுக் கொண்டு அப்பொழுதே அணை கட்ட ஆரம்பிக்கலாமென்று சொன்னான். அன்றைக்கே ஆரம்பித்து மரங்களை வெட்டிப்போட்டு கற்களால் நிரப்பி முதல்நாள் 14 யோஜனை, 2வது நாள் 20, 3வது நாள் 21, 4வது நாள் 22, 5வது நாள் 23 ஆக 100 யோஜனை தூரமும் அணை கட்டி விட்டார்கள்.

कृतानि प्रथमेनाह्ना योजनानि चतुर्दश ॥
द्वितीयेन तथा चान्हा योजनानि तु विंशतिः ॥
अन्हा तृतीयेन तथा योजनानि कृतानि तु ॥
त्वरमाणैर्महाकायैः एकविंशतिरेव च ।
चतुर्थेन तथा चान्हा द्वाविंशतिरथापि च ॥
पञ्चमेन तथा चान्हा प्लवगैः क्षिप्रकारिभिः ॥
योजनानि त्रयोविंशत् सुवेलमधिकृत्य वै । „ 22 (68-73)

*அணைகட்டி முடிந்தவுடனேயே ஸுக்ரீவன் சொன்ன தின்பேரில் ராமர் ஹனுமார் பேரிலும், லக்ஷ்மணன் அங்க தன் பேரிலும் ஏறிக்கொண்டு ஸைன்யத்துடன் அணை வழியாக ஸமுத்திரத்தைக் கடந்து தென்கரைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். சில நிமித்தங்களைக் கண்டு அன் றைக்கே லங்கைக்கு ஸமீபம் போய்விட வேண்டுமென்று ராமர் ஆக்ஞை செய்தார். அப்படியே வேகமாகப் போய் ஸுவேலம் என்ற குன்றின்மேல் ஏறி அங்கிருந்து லங்கையைப் பார்த்தார்கள். அப்பொழுது ஸூர்யன் அஸ்தமித்துவிட்டார். அன்றிரவு பூர்ண சந்திரனிருப் பதுபோல பிரகாசமாயிருந்தது.*

ततोऽस्तमगमत् सूर्यः संध्यया प्रतिरञ्जितः ।
पूर्णचन्द्रप्रदीप्ता च क्षपा समभिवर्तते ॥ „ 38 (18)

*ஸ்ரீராமர் கிஷ்கிந்தையிலிருந்து பௌர்ணமிக்கு ஸமீ பத்தில் புறப்பட்டு இதுவரை 8, 9 நாட்கள் சென்றிருப் பதினால் இன்று பௌர்ணமியாக இருந்திருக்க முடியாது. அன்று ராத்திரி அந்த ஸுவேலத்திலேயே தங்கியிருந் தார்கள்.*

तां रात्रिमुषितास्तत्र सुवेले हरिपुङ्गवाः । ,, 39 (1)

மறுநாள் காலையில் அங்கிருந்து இறங்கி இன்று லங்கைக்கே போய்விடுவோமென்று நிர்மானித்துக் கொண்டு தாமஸமன்னியில் லங்கையின் வடக்கு வாசல் போய்ச் சேர்ந்து வானர ஸைன்யத்தை வ்யூஹம் செய்து நிறுத்தினார். பிறகு விபீஷணருடன் ஆலோசித்து ராஜ தர்மத்தை அநுஸரித்து அங்கதனை ராவணனிடம் தூதனாக அனுப்பியும் பிரயோஜனப்படாமல் போனபடியால், லங்கையைத் தாக்கி யுத்தம் செய்ய வேண்டியதுதான் என்று நிர்மானித்துக்கொண்டார். ராமர் லங்கையைத் தாக்க வானர ஸைன்யத்துடன் நகர வாசலிலேயே வந்து விட்டாரென்பதை அறிந்துகொண்ட ராவணன் தன் அரண்மனை மேல்மாடியில் ஏறிப்பார்க்கும்போது கணக்கில்லாத வானரர்களால் லங்காபுரி எல்லாப்பக்கங்களிலும் சூழப்பட்டிருந்ததைப் பார்த்து இவர்களை எப்படி நாசம் செய்வதென்று கவலையுற்றான்.

முதல் நாள் :—ராமர் லங்கையைத் தாக்கலாமென்று உத்திரவு கொடுத்த உடனேயே வானரர்கள் வெகு உத்ஸாஹத்துடன் மரங்களையும் கற்களையும் எடுத்துக்கொண்டு மதில்களையும் வனங்களையும் அழிக்கவும் அகழ்களை நிரப்பவும் எதிரில் வந்தவர்களை ஸம்ஹரிக்கவும் ஆரம்பித்துவிட்டார்கள். உடனே கோரமான யுத்தம் நடந்தது ஒவ்வொரு வானர வீரனும் தக்க ராக்ஷஸனோடு த்வந்த்வ யுத்தம் செய்து அவர்களை வீழ்த்தினார்கள். யானைகள் குதிரைகள் ரதங்களெல்லாம் சின்னபின்னமாய் செய்யப்பட்டன. அன்று இரவு வந்தும்கூட யுத்தத்தை நிறுத்தாமலே சண்டையிட்டார்கள்.

யுத்தத்தை விஸ்தாரமாக வர்ணிப்பது இங்கே பிரகிருதமாகாது. அதனால் சுருக்கமாகவே சொல்லிக்கொ[illegible] போகவேண்டியிருக்கிறது. அன்று இரவு

ஜித் பலவித பாணங்களால் வானர ஸைன்யத்தை அடித்துவிட்டு நாகபாசத்தினால் ராமலக்ஷ்மணர்களைக் கட்டிவிட்டான். அப்பொழுது கருடபகவானே நேரில் வந்து அந்த பாசத்திலிருந்து விமோசனம் செய்வித்தார். உடனே ராமலக்ஷ்மணர்கள் எழுந்திருந்து ராத்திரி மத்தியிலேயே ஸ்வஸ்தர்களாயினர். வானரர்கள் ஸந்தோஷத்தினால் செய்த கோஷத்தைக் கேட்டு ஆச்சர்யப்பட்டு ராவணன் தூம்ராக்ஷனை அனுப்பினான். அவனை யுத்தத்தில் ஹனுமார் ஸம்ஹாரம் செய்தபிறகுவந்த வஜ்ரதம்ஷ்ட்ரனை அங்கதன் ஸம்ஹரித்தான்.

இரண்டாவது நாள்:—மறுநாள் காலையில் ராவணன் ஸகல அஸ்திரங்களையும் தெரிந்த ஸேனாதிபதியான அகம்பனனை யுத்தத்திற்கு அனுப்பினான். அன்று வாஸ்தவத்தில் ஆகாசம் தெளிந்திருந்த தினமாயிருந்தும் அவன் புறப்படும்போது இருளடைந்தது போல் தோன்றிற்று. இதுபோல் வேறு அபசகுனங்கள் ஏற்பட்டும், அவன் அவைகளை லக்ஷ்யம் செய்யாமலே புறப்பட்டான். அவன் வெகு பலமாக யுத்தம் செய்தும் கடைசியில் ஹனுமாரால் கொல்லப்பட்டான். இந்த விஷயம் தெரிந்து முற்பகலிலேயே வெளிக்கிளம்பி நகரத்தின் கோட்டை முதலியவைகள் சரியாக இருக்கிறதா என்று ராவணன் பார்த்துவிட்டு வந்தான்.

உடனே தன் முக்கிய மந்திரியான பிரஹஸ்தனை யுத்தகளத்திற்கு அனுப்பினான். அவனும் நீலன் என்ற வானர ஸேனாதிபதியால் கொல்லப்பட்டுவிட்டான். இவ்வாறு பல முக்கிய வீரர்கள் யுத்தத்தில் சண்டை செய்து இறந்தனர். இதைக்கண்டு மிகக்கோபம் கொண்டு ராவணன் தானே நேரில் யுத்தகளம் வந்து வானர ஸைன்யத்தைக் கலக்கினான். பல வானர வீரர்கள் எதிர்த்து யுத்தம் செய்தபின், கடைசியாக ராமரே எதிரில் வந்து யுத்தம் செய்து அவனுடைய ரதம் குதிரைகள் ஸாரதி இவர்களை

அடித்துத்தள்ளி அவன் கையிலிருந்து தனுஸ்ஸும் நழுவினபோது, அவனைப்பார்த்து "ஆசுவாஸனம் செய்து கொண்டு பிறகு வா" என்று சொல்லி அனுப்பிவிட்டார். ராவணன் அவமானம் தாங்கமாட்டாமல் தனக்கு முன் பல ஸமயங்களில் ஏற்பட்ட சாபங்களை நினைத்துக் கொண்டு வருத்தப்பட்டு கும்பகர்ணனை எழுப்பியாக வேண்டுமென்று தீர்மானித்தான். கும்பகர்ணன் முன் ஆலோசனை சொல்லிவிட்டு தூங்கப்போனதிலிருந்து இன்று ஒன்பதாவது நாள். அவன் மாஸக்கணக்காக தூங்குகிறவனுயிருந்தாலும் இந்த ஆபத்து ஸமயத்தில் எழுப்பித்தாளுகவேண்டுமென்று ராவணன் நினைத்தான்.

नव षट् सप्त चाष्टौ वा मासान् स्वपिति राक्षसः ।

मन्त्रयित्वा प्रसुप्तोऽयं इतस्तु नवमेऽहनि ।

तं तु बोधयत क्षिप्रं कुम्भकर्णं महाबलम् ॥ ,, 60 (17,18

அப்படியே அவனை வெகு சிரமப்பட்டு எழுப்பி யுத்த களத்திற்கு அனுப்பியதில், அவன் வானரர்களைப் பிடித்துப்பிடித்து விழுங்க ஆரம்பித்தான். அவனுடைய கோரமான யுத்தத்தைக் கண்டு, ராமர் அவனை தானே ஸம்ஹாரம் செய்ய நினைத்து கைகால்களை வெட்டி இந்திராஸ்திரத்தை பிரயோகித்து வீழ்த்தினர்.

கும்பகர்ண வதத்தை கேட்டு ராவணன் மிகவும் துக்கித்து பிரலாபம் செய்யும்போது ராவணனின் புத்திரர்களான திரிசிரஸ், அதிகாயன், தேவாந்தகன், நராந்தகன் ஆகிய நால்வரும் ராவணனுக்கு தைர்யம் சொல்லிவிட்டு யுத்தத்திற்குப் புறப்பட்டார்கள். அவர்களுக்கு ஸஹாயத்திற்காக ராவணன் தனக்கு தம்பி முறையாகிய மஹாபார்சுவன் மஹோதரன் என்ற இருவர்களையும் அனுப்பினன். பிறகு உக்கிரமாக நடந்த யுத்தத்தில் அங்கதன்

நராந்தகனைக் கொன்றுவிட்டவுடன் பாக்கியுள்ளவர்களும் அயகதனைப் பிடிக்கையில் ஹனுமார் தன் முஷ்டியிலேயே தேவாந்தகனையும், மாஹோதரனை நீலனும், த்ரிசிரஸ் வைத்துக்கொண்டிருந்த கத்தியைப் பிடுங்கி அவனை ஹனுமாரும், மஹாபார்சுவனை கவாக்ஷனும் கொன்றுவிட்டார்கள். பிறகு பிரஹ்மாவினிடம் பலவித வரன்களைப்பெற்று உத்தமவீரனுகப் பிரகாசித்த அதிகாயன் யுத்தத்தில் லக்ஷ்மணன் போட்ட அஸ்திரங்களுக்கெல்லாம் பதில் அஸ்திரம் போட்டுக்கொண்டேயிருந்தபடியால், வாயுபகவான் சொன்னதின்பேரில், பிரஹ்மாஸ்திரத்தையே உபயோகித்து அதிகாயனை ஸம்ஹரித்தான்.

இவ்விதம் நான்கு புத்திரர்களும், இரண்டு தம்பிகளும் இறந்ததைக்கேட்டு ராவணன் பிரமித்துக் கொண்டிருக்கையில், இந்த்ரஜித் கிளம்பி, அக்னியில் ஆஹுதிகளைச்செய்து, அதிலிருந்து ஆவிர்ப்பவித்த ரதம் தனுஸ் பிரஹ்மாஸ்திரம் இவைகளை கிரஹித்துக்கொண்டு, ஆகாசத்தில் மறைந்து கொண்டு வானர ஸைன்யத்தைத் தாக்கி முக்கியமான வானர சிரேஷ்டர்களையெல்லாம் கீழே தள்ளினதுடன், ராமலக்ஷ்மணர்களையும் பிரக்ஞையற்று விழும்படி செய்துவிட்டான். அன்று ஸாயங்காலம் அவன் அடித்துத்தள்ளின வானரர்கள் 67 கோடி. இவ்விதம் செய்துவிட்டு இந்திரஜித் நகரத்திற்குள் பிரவேசித்து விட்டான்.

ஹனுமாரும் கொஞ்சநேரம் பிரஹ்மாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டவர் போல் இருந்துவிட்டு எழுந்து, அஸ்தமித்தவுடன் விபீஷணரையும் அழைத்துக்கொண்டு கையில் தீவட்டியுடன், யார் யார் உயிருடன் இருக்கிறார்கள் என்று பார்த்து வந்தார். அவ்விதம் பார்த்து வருகையில், மிகவும் அடிபட்டுக்கிடந்த ஜாம்பவானுடைய யோஜனையின் பேரில் ஹனுமார் உடனே போய்

ஓஷதிபர்வதத்தையே பெயர்த்து எடுத்துக்கொண்டு வந்துவிட்டார். அதன் வாஸனை பட்டவுடனேயே எல்லா வானரர்களும், ராமலக்ஷ்மணர்களும் ஸ்வஸ்தர்களாக எழுந்து விட்டார்கள். உடனே அன்றையதினம் இரவு ஆரம்பத்திலேயே ஸுக்ரீவன் சொன்னதின் பேரில் வானரர்கள் லங்கைக்குள் கொள்ளிக்கட்டைகளை ஏந்திக் கொண்டு பிரவேசித்து ஊரையே கொளுத்த ஆரம்பித்தார்கள்.

ततोऽस्तं गत आदित्ये रौद्रे तस्मिन् निशामुखे ।
लङ्कामभिमुखाः सोल्का जग्मुस्ते प्लवगर्षभाः ॥ ,, 75 (4)

அப்பொழுது எதிர்க்க வந்த ராக்ஷஸர்களை ஸம்ஹரித்துக்கொண்டு வருகையில், அங்கதன் கம்பனனை கதையினாலும் சோணிதாக்ஷனைக் கத்தியினாலும், ஸுக்ரீவன் கும்பனையும், ஹனுமார் நிகும்பனையும், ஸம்ஹரித்தார்கள். இதைக்கேட்டு ராவணன் கரனுடைய புத்திரனான மகராக்ஷனை அனுப்பினான். அவனுடன் யுத்தம் செய்து ராமரே பாவகாஸ்திரத்தினால் அவனைக் கொன்றார். இவ்விதமாக யுத்தத்தில் இரண்டாம்நாள் பகலராத்ரி முக்கியமான ராக்ஷஸர்களெல்லாம் இறந்துவிட்டார்கள். இந்திரஜித், ராவணன், அவனுடைய மூலபலம் இவைகள் தான் மீதமிருந்தன.

மூன்றாம் நாள்: மறுநாள் ராவணன் இந்திரஜித்திடம் "இந்திரனையெல்லாம் ஜயித்திருக்கிறாய், இந்த மனுஷ்யர்களை ஜயிக்கமுடியவில்லையா?" என்று கேட்டதின்பேரில் அவன் மறுபடியும் யக்ஞபூமிக்குப்போய் ஆஹுதிகளைச் செய்தான். உடனே திவ்யமான ரதத்தில் ஏறிக்கொண்டு மறைந்து நின்று எல்லாரையும் அடித்துவிட்டு, தனக்கு இன்னம் மேலான ஹோமாதிகளைச்செய்வதற்கு அவகாசம் கிடைக்கக்கருதி, மாயையினால் ஸீதையைப் போல் ஒரு உருவம் கல்பித்து அதைத்தான் வெட்டுவ

தாகக் காட்டினவுடன் ஹனுமார் இதைப்பார்த்து வாஸ்தவமாகவே ஸீதை இறந்துவிட்டாள் என்று துக்கப் பட்டு ராமரிடம் போய்ச் சொன்னார். அவரும் இதைக் கேட்டு பிரக்ஞையற்றுக் கீழே விழுந்துவிட்டார். அந்த ஸமயம் விபீஷணர் அங்கே வந்து இது அவ்வளவும் இந்திரஜித்தின் மாயையென்றும், அவன் ஹோமம் செய்வதற்காக நிகும்பலைக்குப் போயிருக்கிறானென்றும் அவனை ஹோமம் செய்யவிடாமல் தடுத்துவிட வேண்டுமென்றும், இதற்காகத் தன்னுடன் லக்ஷ்மணனை ஸைன்யத்துடன் அனுப்பவேண்டுமென்றும் சொன்னார். ராமர் இவர் சொன்ன விஷயத்தை கிரஹித்துக்கொண்டு அப்படியே லக்ஷ்மணனை ஆசீர்வதித்து அனுப்பினார்.

**நான்காவது ஐந்தாவது நாட்கள்:** அங்கே போன பிற்பாடு லக்ஷ்மணனும் இந்திரஜித்தும வெகு உக்கிரமாக அஸ்திரசஸ்திரங்களைப் பிரயோகித்து இடைவிடாமல் மூன்று பகலும் இரவும் யுத்தம் செய்து, கடைசியாக லக்ஷ்மணன் இந்திராஸ்திரத்தை எடுத்து, ஸ்ரீராமர்பேரில் ஆணை வைத்துப் பிரயோகம் செய்து, இந்திரஜித்தின் சிரஸை அறுத்துவிட்டான்.

अहोरात्रैस्त्रिभिर्वीरः कथंचिद्विनिपातितः । ,, 92 (16)

உடனே ஸ்ரீராமரிடம் வந்து தெரிவித்தபோது அவர் அவனை ஆலிங்கனம் செய்துகொண்டு மிகவும் மெச்சிவிட்டு, ஸுஷேணனைக் கொண்டு வைத்தியம் செய்யும்படி சொன்னார். அப்படியே முகர்ந்து பார்க்க ஒரு மருந்து கொடுத்தவுடன், லக்ஷ்மணன் எவ்வித வலியுமற்று ஸ்வஸ்தனாகிவிட்டான்.

**ஆறுவது நாள்:** இந்திரஜித் இறந்த விவரத்தை ராவணன் கேட்டு மிகவும் புத்திரசோகத்தினால் பீடிக்கப் பட்டுப் புலம்புகையில், தனக்கு வந்த ஆபத்திற்கெல்

லாம் ஸீதைதானே காரணமென்று தோன்றி அவளைக் கொன்றுவிடுவதென்ற தீர்மானத்துடன் அவன் ஸ்நேகிதர்கள் தடுத்தும் கேட்காமல், அவள் இருக்குமிடம் சென்றான். அப்பொழுது ஸுபார்சுவன் என்ற மந்திரி ராவணனைப்பார்த்து "தாங்கள் வேதாப்யாஸம் செய்து விரதங்களை அனுஷ்டித்து ஸ்வதர்மத்தில் ஈடுபட்டவராயிருக்கையில் எப்படி இந்த ஸ்திரீவதத்தை உத்தேசிக்கிறீர்? தாங்கள் கோபத்தை ராமரிடத்திலல்லவா காட்ட வேண்டும்? இன்று கிருஷ்ண சதுர்தசியாயிருக்கிறது. இன்றே யுத்தத்திற்குப் புறப்படுங்கள்; அல்லது நாளை அமாவாஸ்யைதினம் அப்பொழுது புறப்படுங்கள்" என்றான்.

अभ्युत्थानं त्वमद्यैव कृष्णपक्षचतुर्दशीम् ।
कृत्वा निर्याह्यमावास्यां विजयाय बलैर्वृतः ॥ 93 (66)

இந்த நியாயமான வார்த்தையைக் கேட்டு ஸீதையை ஹிம்ஸிக்கும் உத்தேசத்தை நிறுத்திக்கொண்டு எல்லா ஸேனாதிபதிகளையும் பார்த்து "இன்று நீங்கள் எல்லோருமே சேர்ந்து புறப்பட்டுப்போய் ராமனைக் கொல்லுங்கள். முடியவில்லையானால் நாளை நானே கொன்றுவிடுகிறேன்" என்றான்.

அப்படியே ராக்ஷஸ ஸைன்யம் பூராவும் புறப்பட்டு வானரர்களை த்வம்ஸம் செய்யும்போது, வானரர்கள் ராமரை சரணம் அடைந்தார்கள். உடனே அவர் ராக்ஷஸ ஸைன்யத்தில் நுழைந்து காந்தர் வாஸ்திரத்தை பிரயோகம் செய்து அவர்கள் பிரமிக்கும்படி செய்து அடிக்கும்போது, பாணம் வந்து அடிக்கிறதே தவிர ராமர் தென்படவில்லை. தென்பட்டாலும் அநேக ராமர்களாகத் தென்பட்டது. அன்று ஒருமுஹூர்த்தத்திற்குள் 10000 ரதங்கள் 18000 யானைகள், 14000 குதிரைகள் 20000 பதாதிகள்

இவர்களை ராமர் ஒருவராகவே ஸம்ஹரித்துவிட்டார். அன்றிரவு லங்கையில் ஒவ்வொரு கிருஹத்திலும் ஸ்திரீகள் பலவிதமாய் புலம்பி அழுதார்கள். இதைக் கேட்கக் கேட்க ராவணனுக்கு கோபம் அதிகரித்தது.

ஏழாவது நாள்: மறுநாள் காலையில் மீதமுள்ள ராக்ஷஸர்களுடன் ராவணன் யுத்தத்திற்குப் புறப்பட்டான். அப்பொழுது ஸூர்யன் மங்கி, திக்குகள் இருளடைந்து விட்டன. அநேக துர்நிமித்தங்கள் ஏற்பட்டும், அவைகளை கவனிக்காமலே ராவணன் புறப்பட்டான். யுத்தம் ஆரம்பித்து நடக்கும்போது அவனுடன் கூடவந்த விருபாக்ஷனையும், மஹோதரனையும் ஸுக்ரீவனும், மஹாபார்சுவனை அங்கதனும் ஸம்ஹரித்து விட்டார்கள். (இந்த மஹோதரனும் மஹாபார்சுவனும் முன் சொன்ன ராவணனின் தம்பி முறையான மஹோதரன் மஹாபார்சுவன் இவர்களைவிட வேறு என்று தெரிகிறது.)

பிறகு ராமரும் ராவணனும் நேருக்குநேர் யுத்தம் செய்யும்போது இருவரும் பலவித அஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். ராமரை ராவணன் அடிப்பதைக்கண்டு கோபம் கொண்ட லக்ஷ்மணன் ராவணனுடைய ஸாரதியைக் கொன்று தனுஸை ஒடித்துவிட்டான். விபீஷணர் கதையினால் குதிரைகளைக் கொன்றுவிட்டார். அதனால் மிகவும் கோபத்துடன் சக்தி ஆயுதத்தை விபீஷணர் பேரில் போட்டதில், அதை லக்ஷ்மணன் பாணங்களால் வெட்டிவிட்டான். உடனே ராவணன் வேறு சக்த்யாயுதத்தை எடுத்தபோதும் லக்ஷ்மணன் பாணம் போட்டபடியால், லக்ஷ்மணன் பேரிலேயே போட்டுவிட்டான். உடனே அடிபட்டு லக்ஷ்மணன் கீழே விழுந்து விட்டான். இப்பொழுது துக்கப்படும் ஸமயமில்லையென்று சொல்லிவிட்டு, ராமர் வெகு கோரமாய் யுத்தம் செய்ய ஆரம்பித்தார். ஸுஷேணனால் வைத்யம் செய்யப்பட்டு லக்ஷ்மணனும் எழுந்திருந்தான். அவன் "இன்றைக்கே அஸ்தம

னத்திற்குள் ராவணனைக் கொன்றுவிட வேண்டும்" என்றான்.

अहं तु वधमिच्छामि शीघ्रमस्य दुरात्मनः ।
यावदस्तं न यात्येष कृतकर्मा दिवाकरः ॥ 102 (46)

ராவணன் வேறு ரதத்தில் ஏறிக்கொண்டு யுத்தம் செய்யும்போது, இந்திரன் தன்னுடைய ரதத்தை ஸாரதி மாதலியுடன் அனுப்பிக் கொடுத்தான். ராமர் அதற்கு பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து ஏறிக்கொண்டு யுத்தம் செய்ய ஆரம்பித்தார். மறுபடியும் பலவித அஸ்திரங்களைப் பிரயோகித்து ஒருவருக்கொருவர் கோரமாய் யுத்தம் செய்து வருகையில் ராவணன் சோர்ந்து இருந்த போதிலும், யுத்தத்திற்காக எதிரில்வந்து நிற்கும் ஸமயம் அகஸ்தியர் கவலையுடன் கூடிய ஸ்ரீராமருக்கு ஆதித்ய ஹ்ருதயத்தை உபதேசித்து ஸூர்யனை உபாஸிக்கச் சொன்னதின் பேரில் ஸூர்யனைப் பார்த்துக் கொண்டு ஸ்ரீராமர் அவ்விதமே ஜபித்தார்.

பிறகு ராவணனுடைய சிரஸ்ஸுகளை ராமர் அறுக்க அறுக்க மறுபடியும் உண்டாவதைக் கண்டு ராமர் கவலைப்பட்டு அன்றிரவு பூராவும் ஒரு க்ஷணம்கூட நிறுத்தாமல் சண்டை செய்தார்.

पश्यतां तन्महद्युद्धं सर्वरात्रमवर्तत 110 (37)

எட்டாவது நாள்: பிறகு மாதலி ஞாபகப்படுத்தினதின் பேரில் மறுநாள் காலையில் பிரஹ்மாவினால் இந்திரனுக்காக ஏற்படுத்தி அகஸ்தியர் மூலமாக ராமருக்குக் கிடைத்திருந்த பாணத்தை அபிமந்திரணம் செய்து ராவணனுடைய மார்பில் அடித்தார். உடனே அவன் பிராணனற்று கீழே சாய்ந்துவிட்டான். அப்பொழுது வானரர்களும் தேவர்களும் வெகு ஸந்தோஷத்தை

அடைந்தார்கள். ஸுகமாக காற்று வீசிற்று ஆகாசத்திலிருந்து புஷ்பவ்ருஷ்டி வர்ஷித்தது. பிறகு விபீஷணரும் மந்தோதரி முதலானவர்களும் வெகு துக்கப்பட்டு விலாபம் செய்யும் போது, ராவணனுக்கு பித்ருமேத ஸம்ஸ்காரம் செய்யும்படி ராமர் சொன்னதை அனுஸரித்து விபீஷணரே மேல் செய்யவேண்டியதையெல்லாம் செய்தார்.

ஸ்ரீராமர் ராவணனை ஸம்ஹாரம் செய்து விபீஷணரைக்கொண்டு ஸம்ஸ்காரம் செய்வித்த தினத்திற்கு மறுநாள் அதாவது சைத்ர சுக்லத்விதீயை தினம், லக்ஷ்மணனை அனுப்பி விபீஷணரை லங்காதிபதியாக அபிஷேகம் செய்துவைத்தார். விபீஷணர் பிரஜைகளை ஸமாதானப்படுத்திவிட்டுத் திரும்பி வந்தவுடன் ராமர் ஹனுமாரைக் கூப்பிட்டு ஸீதையிடம் போய் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லும்படி அனுப்பினார். அவர் போய் ஸீதையிடத்தில் தெரிவித்தவுடனே, தான் ராமரைப்பார்க்கப் பிரியப்படுவதாகச் சொல்லி அனுப்பினாள். அதன்பேரில் அவளுக்கு ஸ்நாநம் அலங்காரம் செய்வித்து அழைத்து வரும்படி விபீஷணரிடம் ஸ்ரீராமர் சொன்னார். அவள் அப்பொழுதே வரவேண்டுமென்று சொல்லியும், விபீஷணர் அவளுக்கு ஸ்நாநாலங்காரங்கள் செய்வித்தே ராமர் ஸன்னிதிக்கு அழைத்துவந்தார். அப்பொழுது அவளைப் பார்த்து ராமர் "எனக்கேற்பட்ட அவமானத்தை நிவிருத்திப்பதற்காகவே ராவணனைக் கொன்றேன். உனக்காக இல்லை, நீ பரக்ருஹத்தில் மாஸக்கணக்காக இருந்தவள். எங்கே வேண்டுமானாலும் போகலாம்" என்றார். இந்த பருஷமான வார்த்தையைக்கேட்டு ஸஹிக்காதவளாக உடனே அக்னியை வளர்க்கச்சொல்லி "நான் ராமரைத் தவிர யாரையும் நினைக்காமலிருந்தால் அக்னி பகவான் என்னை ரக்ஷிக்கட்டும்" என்று பலவாறாக சபதம் செய்து அக்னியில் பிரவேசித்து விட்டாள். அங்குள்ள யாவரும் ஹாஹாகாரம் செய்தனர். உடனே அக்னி பகவானே

வெளிக்கிளம்பி, அவளிடத்தில் எவ்வித தோஷமும் இடையாதென்று சொன்னார். அப்பொழுது பிரஹ்மா முதலான ஸகலதேவர்களும் வந்து ராமரை ஸ்துதித்து விட்டு பல வித வரன்களைக் கொடுத்தார்கள். பரமசிவனுடைய அனுக்கிரஹத்தினால் தசரதரையும் பார்க்கும் பாக்யம் கிடைத்தது. தசரதர், ராமர் ஸீதை லக்ஷ்மணர் இவர்களைமெச்சி ஆசீர்வதித்து விட்டு, ஸ்ரீராமருடைய வேண்டுகோளின் பேரில் கைகேயிக்கும் பரதனுக்கும தாலிட்ட சாபத்தை விலக்கி விட்டார். இவ்விதமாக அனுக்கிரஹித்துவிட்டு எல்லோரும் புறப்பட்டுபோன பிறகு ஸ்ரீராமர் அன்று ராத்திரி அங்கேயே வஸித்தார்.

अभिवाद्य च काकुत्स्थः सर्वांस्तांस्त्रिदशोत्तमान् ।
लक्ष्मणेन सह भ्रात्रा वासमाज्ञापयत् तदा । ,, 123 (22)

மறுநாள் அதாவது த்ருதீயை தினம், விபீஷணர் வந்து ராமரை தன்னுடைய ஸத்காரத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அதற்கு ராமர் "அதற்கு ஸாத்தியமில்லை, இப்பொழுதே புறப்பட வேண்டும்" என்றார். "ஒருநாள் தங்கிவிட்டு நாளை புஷ்பக விமானத்தில் போய்விடலாம்" என்று விபீஷணர் சொன்னதின் பேரில், ஸ்ரீராமர் "பரதனைப் பார்க்க மனது மிகவும் அவஸரப்படுகிறது. இப்பொழுதே புஷ்பக விமானத்தில் புறப்பட்டு விடுகிறேன்" என்றார். அப்படியே விமானம் வந்தவுடன் எல்லோரும் தனக்குச்செய்த பேருதவிக்கு, தன்னுடைய நன்றியைத் தெரிவித்துவிட்டு வறுதி சொல்லிக்கொண்டு விமானத்தில் ஏறும்போது, ஸுக்ரீவன் விபீஷணர் முதலானவர்கள் தாங்களும் கூடவே வந்து பட்டாபிஷேகத்தைப் பார்த்துவிட்டு, கௌஸல்யையையும் நமஸ்கரித்துவிட்டு வர ஆசைப்படுவதாகத் தெரிவித்தார்கள். இதைக்கேட்டு ராமர் வெகு ஸந்தோஷமாக எல்லோரையும் புஷ்பக விமானத்தில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டார்.

போகும் வழியில் ஸீதையிடம் "இங்குதான் உனக்காக ராவணனுடன் யுத்தம் செய்து கொன்றேன். இதுதான் உனக்காக ஸமுத்திரத்தில் கட்டின அணை. இதுதான் கிஷ்கிந்தை" என்று ஒவ்வொரு இடமாகக் காட்டிக்கொண்டே போகையில், ஸீதை கிஷ்கிந்தையி லுள்ள தாரை முதலிய ஸ்திரீகளையும் அழைத்துக் கொண்டு போக வேண்டுமென்ற அபிப்ராயத்தை ராம ரிடம் தெரிவித்தாள். உடனே அப்படியே ஆகட்டு மென்று விமானத்தை அங்கு இறக்கினார்.

एवमस्त्विति किष्किन्धां प्राप्य संस्थाप्य राघवः ॥
विमानं प्रेक्ष्य सुग्रीवं वाक्यमेतदुवाच ह । ,, 123.(21,22)

ஸுக்ரீவனை அனுப்பி தாரை மூலமாக எல்லா ஸ்திரீகளை யும் அழைத்துவரச் சொன்னார். அன்றிரவு அங்கேயே தங்கி இருப்பாரென்று தோன்றுகிறது.

மறுநாள் புறப்பட்டுப் போகும்போது பஞ்சவடீ, ரிஷிகளின் ஆசிரமங்கள், சித்ரகூடம் முதலானதுகளைக் காட்டிக்கொண்டே போனார். விமானத்திலிருந்தபடியே கங்கை, ஸரயூ, அயோத்தியை எல்லாம் தெரியும்போது, க்ஷேமமாய் திரும்பி வந்திருப்பதால் அயோத்தியை நமஸ் காரம் செய்யென்று ராமர் ஸீதையிடம் சொன்னார். அயோத்யை என்று கேட்ட உடனே எல்லா வானரர்க ளும் விபீஷணரும் வெகு உத்ஸாஹத்துடன் எழும்பி எழும்பி பார்த்தார்கள்.

ஸ்ரீராமர் முன் அயோத்யையிலிருந்து சைத்ரசுக்ல பக்ஷத்தில் புறப்பட்டபடியால் பால்குன கிருஷ்ணபக்ஷம் முடிந்ததும் வருஷக்கணக்கில் 14 வருஷங்கள் ஆகிவிட் டன என்ற முறையில் ராமர் சைத்ரசுக்ல பஞ்சமியில் பரத்வாஜாசிரமம் போய்ச் சேர்ந்தாலும், அதற்கு

முந்தின அமாவாஸ்யையுடன் 14 வருஷம் பூர்த்தி ஆன தாக வால்மீகி சொல்லுகிறார்.

पूर्णे चतुर्दशे वर्षे पञ्चम्यां लक्ष्मणाग्रजः ।
भरद्वाजाश्रमं प्राप्य ववन्दे नियतो मुनिम् ॥ ,, 127 (1)

அங்கு சென்று அம்முனிவரை நமஸ்கரித்தபோது, அவர் அதுவரை நடந்த விஷயங்களையெல்லாம், தான் தபோமஹிமையினால் தெரிந்துகொண்டதாகச் சொல்லி, அன்றிரவு தன் ஆதித்யத்தைப் பெற்றுக் கொண்டு மறு நாள் போகலாமென்று கேட்டுக் கொண்டார்.

अर्घ्यमद्य गृहाणेदं अयोध्यां श्वो गमिष्यसि (17)

அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு ராமர் முன்னதாக ஹனுமாரை அனுப்பி குஹனுக்கும் பரதனுக்கும் தான் திரும்பி வந்துவிட்ட ஸமாசாரத்தைச் சொல்ல ஏற்பாடு செய்தார். அவர் போய் குஹனிடம் "பரத்வாஜர் சொற்படி இன்று ராத்திரி அவர் ஆசிரமத்தில் ராமர் தங்கிவிட்டு அவர் உத்திரவு பெற்று இப்பொழுதே வந்து விடுவார்."

पञ्चमीमद्य रजनीं उषित्वा वचनान्मुनेः ॥
भरद्वाजाभ्यनुज्ञातं द्रक्ष्यस्यद्यैव राघवम् । ,, 128 (22,23)

என்றார். இதில் "இப்பொழுது" என்பது "தாமஸமன்னியில் உடனே" என்பதைக் காட்டும்.

ஸ்ரீராமர் உத்தரவின் பேரில் ஹனுமார் பரதனிடம் போய்

तं गङ्गां पुनरासाद्य वसन्तं मुनिसन्निधौ ।
अविघ्नं पुष्ययोगेन श्वो रामं द्रष्टुमर्हसि ॥ ,, 129 (53)

"மறுபடியும் கங்கைக்கரை வந்து முனிவரிடம் இருந்து வரும் ராமரை நாளை புஷ்ய நக்ஷத்திர யோகத்தில் தடையன்னியில் பார்ப்பாய்" என்கிருர். இங்கேயும் பரதனுக்கு ராமரைப் பார்க்கவேண்டுமென்ற வேகமிருப்பதை கவனித்த ஹனுமார், ராமர் காட்டிற்குப் புறப்பட்டது புஷ்ய நக்ஷத்திரமான திஞல் 14 வருஷம் முடிவதற்குள் ராமர் வந்துவிடுவார் என்று அழுத்திச் சொல்வதற்காக "புஷ்யநக்ஷத்திரம் வருவதற்கு முன்னமேயே" என்ற அர்த்தத்தில் சொல்லியிருக்கிருர்.

ஹனுமார் சொன்னதைக் கேட்டவுடன் பரதன் களையெல்லாம் உடனே ஜலம் தெளித்து பொழுது விடிவதற்குள் அலங்காரம் செய்யும்படி உத்திரவு செய்தான். அயோத்யைக்குச் சொல்லி அனுப்பியதில் மறுநாள் காலையில் வஷ்டிதினம் மந்திரிகள், ராஜ மாதாக்கள், ஊர்ஜனங்கள் யாவரும் திரளாக நந்திக்கிராமம் வந்து ராமரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆகாசத்தில் விமானம் தென்பட்டவுடனேயே பரதன் நமஸ்கரித்தான். அது பூமியில் இறங்கினவுடன் அதில் ஏறி மறுபடியும் ராமரை நமஸ்கரித்தான். பின் லக்ஷ்மணனிடம் சென்று, ஸீதையை நமஸ்கரித்துவிட்டு, ஸுக்ரீவன் விபீஷணர் முதலான யாவருக்கும் நல்வரவு கூறினன். அப்படியே சத்ருக்னனும் எல்லோரையும் நமஸ்கரித்தான். ராமரும் கௌஸல்யை, ஸுமித்ரை, கைகேயி, வஸிஷ்டர் இவர்களை நமஸ்கரித்தார். அயோத்யா நகர ஜனங்கள் யாவரும் ராமருக்கு நல்வரவு கூறினர்கள். இந்த வரவேற்பெல்லாம் நந்திகிராமத்திற்கு ஸமீபத்திலேயே நடந்தபடியால் விமானத்திலேயே ராமர் முதலானவர்கள் பரதனுடைய ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்து கீழே இறங்கினர்கள். உடனே ராமருடைய அனுமதியின்பேரில் புஷ்பக விமானம் குபேரனிடமே போய்ச் சேர்ந்தது.

*பிறகு நந்திக்கிராமத்திலேயே தீக்ஷா விஸர்ஜனம் செய்து கொண்டு ராமர் முதலானவர்கள் எல்லோருடனும் அயோத்யை போய்ச் சேர்ந்தார்கள். மறுநாள் நடக்கவேண்டிய பட்டாபிஷேகத்திற்காக நான்கு ஸமுத்திரங்களிலிருந்தும் தீர்த்தம் கொண்டுவர வேண்டுமென்று ஸுக்ரீவன் ஏற்பாடு செய்தான்.*

यथा प्रत्यूषसमये चतुर्णां सागराम्भसाम् ।
पूर्णैर्घटैः प्रतीक्षध्वं तथा कुरुत वानराः ॥ ,, 131 (50)

*அப்படியே மறுநாள் சுக்லஸப்தமி, புஷ்ய நக்ஷத்திரத்தில் ராமரை ஸீதையுடன் ரத்ன ஸிம்ஹாஸனத்தில் உட்கார்த்தி வஸிஷ்டர் முதலானவர்கள் அபிஷேகம் செய்து வைத்தார்கள்.*

ततः स प्रयतो वृद्धो वसिष्ठो ब्राह्मणैः सह ।
रामं रत्नमये पीठे सहसीतं न्यवेशयत् ॥
वसिष्ठो वामदेवश्च जाबालिरथ काश्यपः ।
कात्यायनः सुयज्ञश्च गौतमो विजयस्तथा ॥
अभ्यषिञ्चन् नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना ।
सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा ॥ ,, ,, (59-61)

*பிறகு ராமருக்கு அலங்காரம் செய்து ரத்ன பீடத்தில் உட்காரவைத்து வஸிஷ்டர் கிரீடத்தைச் சாத்தினார். ஸுக்ரீவன் சாமரம் வீசினான். விபீஷணர் இன்னொரு சாமரத்தை எடுத்து வீசினார். சத்ருக்னன் வெண்குடை பிடித்தான். இந்திரன் சொல்லி வாயுபகவான் எல்லா ரத்தினங்களும் பதித்திருந்த தங்க மாலையை ராமருக்குக் கொடுத்தார். கந்தர்வர்கள் பாடினார்கள். அப்ஸரஸ்கள் நர்த்தனம் செய்தார்கள்.*

ராமரும் இந்த ஸமயத்தில் பிராஹ்மணர்களுக்கு லக்ஷம் குதிரைகளும், லக்ஷம் முதல் ஈற்றுப் பசுக்களும், நூறு விருஷபங்களும், முப்பது கோடி தங்கமும் கொடுத்தார். அப்படியே ஸுக்ரீவனுக்கு ஒரு தங்க மாலையும் அங்கதனுக்கு இரண்டு தோள்வளைகளும் கொடுத்தார். ராமர் ஸீதைக்கு உத்தமமான மணிகளுடன் கூடின முக்தாஹாரத்தைக் கொடுத்தார். ஸீதை இரண்டு சுத்தமான வஸ்திரங்களையும் சுபமான ஆபரணங்களையும் ஹனுமாருக்குக் கொடுத்தாள். பிறகு தன் கழுத்திலிருந்து ஒரு ஹாரத்தைக் கழற்றிக் கொண்டு ராமரைப் பார்க்கையில் அவர் "எவரிடத்தில் தேஜஸ், திர்மானம், யசஸ், புத்தி சாலித்தனம், ஸாமர்த்தியம், விநயம், நீதி, பௌருஷம், விக்ரமம், புத்தியின் வன்மை, இவையெல்லாம் எப்பொழுதுமிருக்கின்றனவோ, அவருக்குக் கொடு" என்றார். உடனே அவள் அந்த ஹாரத்தை ஹனுமாருக்குக் கொடுத்தாள். ராமர் ஸீதைக்குக் கொடுத்த ஹாரமே தான் இது என்று சொல்ல அவசியமில்லை. பிறகு ராமர் மற்ற வானரர்களுக்கும் விபீஷணருக்கும் வஸ்திரங்கள் ஆபரணங்கள் எல்லாவற்றையும் ஏராளமாக கொடுத்தார்.

பிறகு ஸுக்ரீவன் உத்திரவு பெற்றுக்கொண்டு தன் பரிவாரங்களுடன் கிஷ்கிந்தைக்குத் திரும்பினான். அப்படியே விபீஷணரும் தன் பூர்வீக சொந்தமான லங்கா ராஜ்யத்தை அடைந்து ஊர் போய்ச் சேர்ந்தான்.

लब्ध्वा कुलधनं राजा लङ्कां प्रायाद्विभीषणः ।

இங்கு "குலதனம்" என்பதை ராமருடைய குலதனமான ரங்கநாதமூர்த்தி என்று அர்த்தம் செய்வது உசிதமாய் தோன்றவில்லை. ராமர் வனவாஸம் பதினான்கு வருஷம் போய்விட்டு வந்தவுடன் தன் குலத்தில் ஆராதித்து வந்த மூர்த்தியை ஆராதித்து வந்தாரென்பது

உசிதமாகுமே தவிர கொடுத்துவிட்டார் என்பது ஸம்பாவதமில்லை. மேலும் பின்னால் ராமர் வைகுண்டாரோஹணம் செய்யும்போது,

आराधय जगन्नाथं इक्ष्वाकुकुलदैवतम् ।
आराधनीयमनिशं सर्वैर्देवैः सवासवैः ।

तथेति प्रतिजग्राह रामवाक्यं विभीषणः ।
राजा राक्षसमुख्यानां राघवाज्ञामनुस्मरन् ॥ உத்தர. 108 (31,32)

"இக்ஷ்வாகு குலதைவதமான ஜகன்னாதரைப் பூஜித்துவா என்று சொன்னதை விபீஷணர் ஏற்றுக்கொண்டார்" என்று கண்டிருப்பதனால், அப்பொழுதே ரங்கநாதரைக் கொடுத்திருக்கலாமென்று தோன்றுகிறது.

பிறகு லக்ஷ்மணனை யுவராஜாவாக இருக்கவேண்டுமென்று ராமர் சொன்னதற்கு அவன் ஸம்மதிக்காததினால் பரதனையே யுவராஜர்வாக அபிஷேகம் செய்து வைத்தார்.

பிறகு ராமர் ராஜ்யபாரம் வஹித்து நடத்தும்போது எல்லா பிரஜைகளும் ஸந்தோஷமாய் தர்மபரர்களாக ஒருவரையொருவர் ஹிம்ஸிக்காமல், வியாதியற்று, சோகமற்று, ஆனந்தமாய், எப்பொழுதும் ராமரையே பார்த்துக்கொண்டு, அவரையே சொல்லிக்கொண்டு ஆயிரக் கணக்கான வருஷங்கள் ஜீவித்திருந்தார்கள். ராமரும் பதினோராயிரம் வருஷ காலமிருந்து நூறு அசுவமேத யாகங்களை நடத்தினார். இந்த உத்தமமான சரித்திரத்தைக் கேட்போருக்கு ஸகல சிரமங்களும் நிவிருத்தியாகி எல்லாவிதமான சிரேயஸ்களும் ஏற்படும்.

एवमेतत् पुरावृत्तं आख्यानं भद्रमस्तु वः ।
प्रव्याहरत विस्रब्धं बलं विष्णोः प्रवर्धताम् ॥

---

श्रीरामचन्द्रः श्रितपारिजातः
समस्तकल्याण गुणाभिरामः ।
सीतामुखाम्भोरुह चञ्चरीको:
निरन्तरं मङ्गलमातनोतु ॥

அநுபந்தம்

## பௌலஸ்த்ய வம்சம்

1

ஸ்ரீமத் வால்மீகி மஹர்ஷி இயற்றிய ஸ்ரீமத் ராமாயணத்தைப் பாராயணம் செய்வதால் ஏற்படும் பலன்களை உத்தர காண்ட கடைசியில் சொல்லும்போது

शृण्वन् रामायणं भक्त्या यः पादं पदमेव वा ।
स याति ब्रह्मणः स्थानं ब्रह्मणा पूज्यते सदा ॥ உத்தர. 111 (24)

என்று கண்டிருக்கிறது. "ஸ்ரீமத் ராமாயணத்தைப் பாராயணம் செய்யாமல் போனாலும் அதையோ அதிலுள்ள ஒரு சுலோகத்தின் ஒரு பதத்தையோ, அல்லது ஒரு பாதத்தையோ, காதால் பக்தியுடன் கேட்டாலும் கூட பிரஹ்மாவின் லோகத்தையடைய முடியும், எப்பொழுதும் நான்முகனால் பூஜிக்கப்பட்டவனாகவும் ஆகலாம்" என்றிருக்கிறது.

இவ்விதம் சொல்லியிருப்பது ஸ்ரீமத் ராமாயணத்தின் பெருமையை எடுத்துக்காட்டுவதற்காக அர்த்தவாத ரூபமான வெறும் பேச்சா, அல்லது வாஸ்தவத்திலேயே இவ்வித பலன் ஏற்படுமா, என்று ஆஸ்திகர்களுக்குக் கூட ஸந்தேஹம் ஏற்படுவது ஸஹஜம். மேலும், நேரில் தானே வாசிப்பதற்கும், இன்னொருவர் வாசித்து அர்த்தம் சொல்லிக் கேட்பதற்கும் அதிக வித்யாஸம் இல்லாமல் இருக்கலாம். "பாதத்தையோ பதத்தையோ" என்ற அம்சமாவது அர்த்தவாதமில்லையா என்று தோன்றக் கூடியதே. ஆனால் இந்த சுலோகத்தில் வாசித்துக் கேட்க வேண்டிய முறையை "பக்தியுடன்" என்று கண்டிருப்பதை மறந்துவிடக்கூடாது. பாதத்தையோ பதத்

தையோ காதில்வாங்கும்போது "இது பாதம், இது பதம்," என்பதை மறந்து "இதுவும் ஸ்ரீமத் ராமாயணம்" என்ற எண்ணத்துடன் கேட்கவேண்டும் "எவன் பாதத்தையோ பதத்தையோ ராமாயணமாகக் கேட்கிறானோ அவன்" என்றும் சுலோகத்தின் அர்த்தம் ஏற்படுகிறது.

நம் சரீரத்தில் உத்தமாங்கம் என்று சொல்லப்படும் சிரஸ்ஸில் உள்ள கேசத்தைத் தொட்டாலே கையலம்ப வேண்டும்; அப்படியே காலைத் தொட்டாலும் கையலம்ப வேண்டும். இவ்விதமாக கேசமும் பாதமும் அசுத்தமானவையேயாகும். அப்படியிருக்க ஒருவன் "கேசம், கேசம்" என்றோ "கால், கால்" என்றோ திருப்பித் திருப்பிச் சொன்னாலும் அனுஸந்தானம் செய்தாலும் எவ்வித நன்மையையும் பெறமாட்டான். ஆனாலும் அந்த அங்கங்களையே பகவானுடைய அங்கங்களாக அனுஸந்தானம் செய்தால் பரமமான சிரேயஸ் ஏற்படுமென்று கருதியே ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யார் முதலான பெரியோர்கள் பரமசிவன், மகாவிஷ்ணு முதலான இஷ்ட தேவதைகளுக்கு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம், கேசாதி பாதாந்த ஸ்தோத்ரம், என்றெல்லாம் இயற்றியிருக்கிறார்கள், அவ்வித ஸ்தோத்ரங்களில் கண்டபடி கேசத்தையோ மற்றும் அங்கங்களையோ அனுஸந்தானம் செய்வது வெறும் கேசம் முதலிய அங்கங்களின் அனுஸந்தானமாகாது. வாஸ்தவத்தில் பகவானையே அனுஸந்தானம் செய்ததாக ஆகும். ஆசீர்வதித்து ஒருவர் சிரஸ்ஸில் அக்ஷதையைப் போட்டால் அது சிரஸிற்கு இல்லை, ஒரு அதிதியின் காலை அலம்பினால் அது காலுக்கு இல்லை, ஒரு ஸ்நேகிதரின் கையைப்பிடித்தால் அது கைக்கு இல்லை. அங்கங்களையுடைய அங்கியான ஜீவர்களை உத்தேசித்தே இவ்விதம் செய்யப்படுகிறது.

இதே ரீதியாக ஸ்ரீமத் ராமாயணத்திலுள்ள பாதத்தையோ பதத்தையோ கேட்கும்போது, இவை ஸ்ரீமத்

ராமாயணத்தின் ஒரு பகுதி என்ற மனோபாவத்துடன் கேட்போமேயானால் ஸ்ரீமத் ராமாயணத்தையே கேட்டதாக ஆகும். அந்தப் பதம் ராக்ஷஸனையோ குரங்கையோ கரடியையோ குறிப்பிட்டாலும் அல்லது வேறு எவ்வித நிகிருஷ்டமான வஸ்துவைக் குறிப்பிட்டாலும், அந்தப் பதமும் ஸ்ரீமத் ராமாயணத்தின் அங்கமே என்ற ஞாபகத்துடன் இருந்து வந்தால் ஸ்ரீமத் ராமாயணத்தையே அனுஸந்தானம் செய்ததாக ஆகும்.

தவிரவும் ஸ்ரீமத் ராமாயணத்தில் வரும் ராக்ஷஸர்களிடம் பல தோஷங்கள் இருந்தபோதிலும், அவர்கள் பிரஸித்தமான மஹர்ஷிகளின் ஸந்தானமாக இருந்திருப்பதுடன், மஹா தபஸ்விகளாகவும் வரப்பிரஸாதமடைந்தவர்களாகவும் இருந்துவந்தார்கள். தர்ம ஸம்ரக்ஷணத்திற்காக பகவான் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியாக அவதாரம் செய்திருந்த ஸமயத்தில் அவருக்கு ஸகாயமும் கைங்கர்யமும் செய்ய வேண்டியதற்காகவே தேவாம்சமாக குரங்குகளும் கரடிகளும் ஏற்பட்டார்கள். ராக்ஷஸர்கள் பகவானுடன் நேரில் யுத்தம் செய்து அவரால் நிக்ரஹம் செய்யப்பட்டு ஸர்வ பாபங்களும் நிவிருத்தியாகி அவருடைய ஸன்னிதியிலேயே அவரையே அனுஸந்தானம் செய்து கொண்டு தேகங்களை பரித்யாகம் செய்தவர்கள். எப்படியும் பகவானுக்கு எவ்வித ஸேவையும் செய்யாமல் அவரை எவ்விதத்திலும் அனுஸந்தானம் செய்யாமலிருந்துவரும் நம்மைவிட அவர்கள் பெரியவர்களே. அவர்கள் விஷயமாகவே ஸ்ரீமத் ராமாயணத்தின் அங்கமென்ற பாவனையன்னியில் அவர்களைக் குறிப்பிடுகிறதென்று மாத்திரம் வைத்துக் கொண்டாலும்கூட அவர்களுடைய வரலாறுகளைத் தெரிந்து கொள்வதில் எவ்வித தோஷமும் இருக்க நியாயமில்லை.

இந்த ரீதியாக ராவணனுடைய வம்சத்தைப்பற்றி கொஞ்சம் எடுத்துச்சொல்ல நினைக்கிறேன். அவனுடைய

தபோமஹிமை, பக்தியின் பெருக்கு, கர்மானுஷ்டானத்தில் ஊக்கம், வைதுஷ்யம், புத்தி ஸாமர்த்தியம், பிரஜா ரஞ்ஜனை, முதலிய அம்சங்களைப்பற்றி இங்கு பிரஸ்தாபிக்க உத்தேசமில்லை. அவனுக்கும் அவனுடைய ஸஹோதரர் விபீஷணருக்கும் ஸ்வபாவத்தில் எவ்வளவு வித்யாஸமிருந்தபோதிலும் விபீஷணர் தன் தமையனைப்பார்த்து,

> "நாங்கள் தர்மம் அறிந்தவர், நன்றியறிந்தவர், ராஜ தர்மமறிந்தவர், உத்பத்தியானவர்களில் மேலக்கும் அறிந்தவர், உத்தமமான தத்வத்தை அறிந்தவர். தர்மத்தை எடுத்துச் சொல்வதிலோ, உலக நடவடிக்கையிலோ, சாஸ்திர விஷயங்களை கிரஹிப்பதிலோ தங்களுக்கு ஸமானமாக யாரும் கிடையாது. தேவாஸுரர்களுக்கெல்லாம் தாங்களே மேலானவர்" (ஸுந்தர. 52)

என்றும், ராவண ஸம்ஹாரத்திற்குப் பிறகு விலாபம் செய்யும்போது,

> "நன்கு பயிற்சி பற்றவர்களுக்குள் அணையாக இருந்தவர் போய்விட்டார். தர்மத்திற்கே விக்ரஹமாக இருந்தவர் போய்விட்டார். பலத்திற்கு இருப்பிடமாக இருந்தவர் போய்விட்டார். கீர்த்திக்கெல்லாம் விஷயமாயிருந்தவர் போய்விட்டார்" (யுத்த. 112)

என்றும் சொல்கிறார். ராவணனுக்கு ஸ்ரீராமரே கூட விருந்து ஆஹிதாக்னிக்கு ஏற்பட்ட கிரமமாக ஸம்ஸ்காரம் செய்து வைக்கிறார். அவன் தர்மத்தை மீறினதற்காக தண்டிக்க பகவானே அவதாரம் செய்யவேண்டியிருந்தது என்பதிலிருந்தும் அவனுடைய மஹிமை தெரிகிறது. அவனுடைய தோஷங்களை மறந்து குணங்களை கிரஹிப்போமானல், அவன் மஹான் என்பதில் ஸந்தேஹமில்லை.

தவிரவும் பகவானை மதுஸூதனன், முராரி முதலான சப்தங்களால் குறிப்பிடும்போது மது, முரன் முதலான அஸுரர்களையும் அநுஸந்தானம் பண்ணினதாக ஆனாலும் அதனால் தோஷமேற்படக் காரணமில்லை. அந்த அநுஸந்தானமும் பகவத் அநுஸந்தானத்திற்கு அங்கமானதினால் புண்ணியமேயாகும். இதே ந்யாயத்தை யநுஸரித்து ராவணாதிகளின் வம்ச வரலாறுகளைத் தெரிந்துகொண்டாலும் புண்யமுண்டென்று சொல்வது மிகையாகாது.

2

ப்ரஹ்மா பிரஜைகளை ஸ்ருஷ்டி செய்வதற்காகத் தன்னுடைய ஸங்கல்பத்தினாலேயே உண்டு பண்ணின ஆதி மஹரிஷிகளில் புலஸ்த்யர் என்பவர் ஒருவர். அவர் ஒரு ஸமயம் திருணபிந்து என்ற ராஜரிஷியின் ஆசிரமத்திற்குச்சென்றார். அங்குள்ள ஸன்னிவேசம் மனதிற்கு மிகவும் திருப்தியைக் கொடுத்தபடியால் அந்த பிரதேசத்திலேயே தபஸ் செய்து கொண்டிருந்தார். அப்பிரதேசத்தின் அழகைக்கண்டு சிறு பெண்கள் அங்கே விளையாடுவதற்கு வருவது வழக்கம். ஆனால் இது மஹரிஷியின் தபஸிற்கு மிகவும் இடைஞ்சலாக இருந்தபடியால் ஒருநாள் இவர் “இனி யாராவது என் கண்ணில் பட்டால் உடனே அவள் கர்ப்பிணியாகிவிடுவாள்” என்று சொல்லிவிட்டார் இதைக்கேட்ட பெண்கள் அங்கே போவதை நிறுத்திக்கொண்டார்கள். திருணபிந்து ராஜனின் குமாரிக்கு மாத்திரம் இந்த விஷயம் காதில்படாமலிருந்தபடியால் தோழிகளைத் தேடிக்கொண்டு அந்தப்பக்கம் போன போது யாரோ வேதாத்யயனம் செய்வதைக் கண்டாள். உடனே அவள் உடம்பு வெளுத்து மாறுதலடைந்தது. இதைக்கண்டு பயந்து தகப்பனாரிடம் சென்று தெரிவித்தாள். இவ்விதமேற்பட்டது மகரிஷியின் காரியம் என்று உணர்ந்து அவர் உடனேயே அவளையும் அழைத்துக்

கொண்டு புலஸ்த்ய முனிவரிடம் சென்று இவளை அவர் சுசுரூஷைக்காக ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். முனிவரும் ஸம்மதித்து அவளை அங்கீகரித்துக் கொண்டார். அவளுடைய நடத்தையினால் மிகவும் திருப்தியடைந்து அவளுக்கு தனக்கு ஸமானமான புத்திரன் உண்டாவான் என்று அநுக்ரஹம் செய்தார். அப்படியே ஜனித்த புத்திரனுக்கு, வேதசிரவணம் செய்தபோது கர்ப்பிணியாகிப் பிறந்தபடியால். "விசிரவஸ்" என்றே பெயரிட்டார்.

இந்த விசிரவஸ்ஸூம் எவ்வித விஷய போகத்திலும் பற்றுதலில்லாமல் ஸத்ய தர்ம நிஷ்டராகவே இருந்துவந்தார். இதைப்பார்த்து பரத்வாஜ மஹா முனிவர் மிகவும் ஸந்தோஷித்து தன்னுடைய புத்திரி தேவவர்ணினி என்பவளை விசிரவஸ்ஸூக்கு விவாஹம் செய்து கொடுத்தார். இந்த உத்தம தம்பதிகளுக்கு ஸர்வகுண ஸம்பன்னனாக ஒரு புத்திரன் பிறந்தான். அவனைக்கண்டு பிரஹ்மாவே ஸந்தோஷித்து "வைசிரவணன்" என்று பெயர் வைத்தார். இவனும் தர்மாசரணத்திலேயே ஈடுபட்டவனாக வெகு நியமத்துடன் ஆயிரக்கணக்கான வருஷங்கள் தபஸ் செய்தான். பிரஹ்மா பிரஸன்னராகி "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டதற்கு "லோக பாலனாக இருக்க ஆசைப்படுகிறேன்" என்றான். அதற்கு பிரஹ்மா "கிழக்கு, தெற்கு. மேற்கு திக்குகளுக்கு இந்திரன், யமன், வருணன், இவர்களை நியமித்துவிட்டேன். நான்காவதான வடக்கு திக்குக்கு அதிபதியாக நீ இருந்துவா" என்று சொல்லி அவனுக்கு ஸஞ்சாரத்திற்காக புஷ்பக விமானத்தையும் கொடுத்து அநுக்ரஹித்துவிட்டு மறைந்தார்.

பிறகு, தனக்கு வாஸஸ்தானம் எங்கேயென்று பிரஹ்மா குறிப்பிடவில்லையேயென்று தகப்பனாரிடம் கேட்டதில் அவர் "தெற்கு ஸமுத்திரக்கரையில் திரிகூட

மலையின்மேல் இந்திரப்பட்டணம் போலவே லங்கை யென்ற நகரம் விச்வகர்மாவினாலேயே முன்னால் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கிறது. அங்கு வாஸம் செய்து வந்த ராக்ஷஸர்கள் எல்லோரும் பின்னால் மஹாவிஷ்ணுவிடமிருந்து பயந்தவர்களாக லங்கையைக் காலிசெய்துவிட்டு ரஸாதலம் போய்விட்டார்கள். இப்பொழுது அங்கு யாரும் இல்லை. நீ அங்கேபோய் ஸௌக்கியமாய் இருந்து வரலாம்" என்றார். அப்படியே அவன் அந்த லங்கா நகரத்திற்குத் தன் பரிவாரங்களுடன் சென்று அங்கே இருந்து வந்தான். ஆனாலும் தாயார் தகப்பனார்களை தர்சனம் செய்வதற்காக அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தான். இவனைத்தான் குபேரன் என்பார்கள்

ப்ரஹ்மா ஆரம்பத்தில் ஸ்ருஷ்டி செய்த ராக்ஷஸர்களில் ஹேதி, ப்ரஹேதி, என்று இரண்டு ஸஹோதரர்கள் இருந்தார்கள். அவர்களில் ப்ரஹேதி என்பவர் வைராக்கிய நிஷ்டராக தபஸ் செய்து கொண்டிருந்து விட்டார். ஹேதி என்பவர் காலனுடைய தங்கையான பயை என்பவளை விவாஹம் செய்து கொண்டார். அவர்களுக்கு வித்யுத்கேசன் என்றொரு புத்திரன் பிறந்தான். அவன் யௌவன பர்வமடைந்ததும் ஸந்த்யையின் புத்திரியான ஸாலகடங்கடை என்பவளை மணந்தான். அவள் கிரமப்படி கர்ப்பவதியாகி மந்தர பர்வதத்தில் ஒரு குழந்தையைப் பெற்றாள். ஆனால் பர்த்தாவுடன் ரமிக்க வேண்டுமென்ற வேகத்தில் குழந்தையை மறந்து பர்த்தாவிடம் போய்விட்டாள். அந்தக்குழந்தை அநாதையாய் அழுதுகொண்டிருக்கையில் ஆகாச மார்க்கமாய் போய்க் கொண்டிருந்த பார்வதி தேவியும் பரமேசுவரனும் அக்குழந்தையிடம் மனமிரங்கி, அது அப்பொழுதே தாயாருடைய வயதுள்ளவனாக ஆகவேண்டுமென்று அனுக்ரஹம் செய்தார்கள். தவிரவும் பரமேசுவரர் அக்குழந்தையை சாவற்றவனாகச் செய்தார்; பார்வதியின் வேண்டு

கோளின்படி ஆகாசத்தில் சஞ்சரிக்கக்கூடிய ஒரு நகரத்தையும் கொடுத்தார். எல்லா ராக்ஷஸர்களுக்குமே இனி உடனே கர்ப்பம், உடனே பிரஸவம், உடனே தாயாரின் வயது, என்ற வரன்களையும் அம்பிகை அளித்தாள்.

இவ்விதமாக விசேஷ அனுக்ரஹத்தையடைந்த இந்த ஸுகேசன் என்ற ராக்ஷஸன் மிகவும் தார்மிகனாகவே இருந்து வந்தான். இவனுக்கு கிராமணி என்ற கந்தர்வன் தன் இரண்டாவது புத்திரியான தேவவதீ என்பவளை விவாஹம் செய்து கொடுத்தான். இந்த தம்பதிகளுக்கு மஹா தேஜஸ்விகளாக மால்யவான், ஸுமாலி, மாலி என்று மூன்று புத்திரர்கள் ஜனித்தார்கள். இம்மூவர்களும் தபஸ்ஸின் பிரபாவத்தை நன்கு அறிந்தவர்களானதினால் உக்கிரமாக தபஸ் செய்து பிரஹ்மாவின் அனுக்ரஹத்திற்கு பாத்திரமானார்கள். தங்களுக்கு இருப்பிடமாக இந்திரனுடைய அமராவதியைப் போலவே ஒரு நகரம் நிர்மாணம் செய்து கொடுக்க வேண்டுமென்று தேவ சில்பியான விசுவகர்மாவையே கேட்டார்கள். ஏற்கனவே இந்திரனின் வேண்டுகோளின்படி திரிகூட சிகரத்தில் ஒரு நகரம் நிர்மாணம் செய்திருப்பதால் அதிலேயே வாஸம் செய்யலாமென்று விசுவகர்மா சொன்னதின்பேரில் அங்கேயே 'லங்கா பட்டணத்தில் வஸித்து வந்தார்கள்.

இம்மூவர்களுக்கு நர்மதை என்ற கந்தர்வி தன் மூன்று கன்யைகளான ஸுந்தரி, கேதுமதீ, வஸுதா என்பவர்களை முறையே விவாஹம் செய்து கொடுத்தாள். மால்யவானுக்கு ஸுந்தரியிடத்தில் வஜ்ரமுஷ்டி, விரூபாக்ஷன், துர்முகன், ஸுப்தக்னன், யக்ஞகோபன், மத்தன், உன்மத்தன் என்று ஏழு புத்திரர்களும் அனலா என்ற ஒரு கன்னிகையும் பிறந்தனர். இந்த அனலா என்ற பெண்ணை விசுவாவஸு என்ற கந்தர்வனுக்கு விவாஹம் செய்து கொடுத்ததில் அவர்களுக்கு கும்பீநஸி

என்ற புத்திரி பிறந்தாள். அவளை மது என்ற அஸுரன் விவாஹம் செய்து கொண்டான். இவர்களுடைய புத்திரன் லவணாஸுரன். (இவனை பின்னால் சத்ருக்நன் ஸம்ஹரித்தான்.)

ஸுமாலிக்கு கேதுமதியிடம் பிரஹஸ்தன், அகம்பனன், விகடன், காலகார்முகன், தூம்ராக்ஷன், தண்டன், ஸுபார்சுவன், ஸம்ஹ்ராதி, ப்ரகஸன், பாஸகர்ணன் என்று பத்து புத்திரர்களும், ராகா, புஷ்போத்கடா, கைகஸீ, கும்பீநஸி என்று நான்கு புத்திரிகளும் பிறந்தனர்.

மாலி என்ற மூன்றாவது ஸஹோதரருக்கு வஸுதை என்பவளிடத்தில் அநிலன், அநலன், ஹரன், ஸம்பாதி என்ற நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள்.

இந்த மால்யவான், ஸுமாலி. மாலி ஆகிய மூவருமே மிகவும் பலிஷ்டர்களாயிருந்தபடியால் தேவர்களையே பல விதமாக ஹிம்ஸை செய்து வந்தார்கள். இவர்களுடன் யுத்தம் செய்வதற்கு தேவர்களால் முடியாமல் ஸ்ரீமந் நாராயணருடைய உதவியையே அவர்கள் கோரினார்கள். அதன் பேரில் தேவ ஸைன்யத்துடன் பகவானே இந்த ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்யும்படி ஏற்பட்டது. அவர்களை வேறுவிதமாக ஜயிக்கமுடியாமல் ஸுதர்சன சக்ரத்தையே ஏவி மாலியை வதம் செய்தார். கருடன் தன் இறக்கைகளினால் ஏற்படுத்திய காற்றைத் தாங்க முடியாதவர்களாக மால்யவானும், ஸுமாலியும், இனி லங்கையில் இருப்பது ஸாத்தியமில்லையென்று உணர்ந்து தங்கள் பரிவாரத்துடன் ரஸாதலம் போய்விட்டார்கள். இதனால்தான் லங்கை காலியாகி குபேரன் அங்கேயிருப்ப தற்கு அவகாசம் கிடைத்தது.

3

இவ்விதம் அவர்கள் ரஸாதலத்தில் இருக்கும்போது ஒருநாள் ஸுமாலி பூலோகத்திற்கு வந்த ஸமயம் குபேரன் தன் தகப்பனார் விச்ரவஸ் மஹாமுனியை தர்சிப்பதற்காக ஆகாசத்தில் புஷ்பக விமானத்தில் போவதைப் பார்த்தான். குபேரனுடைய வைபவத்தைப் பார்த்தவுடன் அவனுக்கு ஸமானமாக தனக்கும் ஒரு ஸந்தானம் ஏற்பட வேண்டுமென்ற எண்ணம் கொண்டான். பிறகு தன் புத்ரி கும்பீநஸியைப் பார்த்து "என்னிடத்திலுள்ள பயத்தினால் யாரும் உன்னை வரிக்க வரவில்லை. ஆனாலும் உனக்கு விவாஹத்திற்குரிய வயது வந்துவிட்டபடியால் நீ உசிதமான பர்த்தாவிடம் போய்ச்சேர வேண்டியது அவசியம். ஆகையால் நீயாகவே விச்ரவஸை சரணமடை" என்று சொன்னான். அவளும் பிதாவின் ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு அந்த மஹர்ஷியிடம் சென்று லஜ்ஜையுடன் தலை குனிந்து கொண்டு நின்றாள். "நீ யாரம்மா? எங்கே வந்தாய்?" என்று அவர் வினவினதற்கு, "என் தகப்பனாரின் ஆக்ஞையின்பேரில் வந்தேன். மற்ற விஷயங்களை தாங்களேதான் தங்கள் பிரபாவத்தினால் அறிந்துகொள்ள வேண்டும்" என்றாள். இதைக்கேட்டு அவர் தியானம் செய்து விஷயம் அறிந்து கொண்டு அவளைப்பார்த்து 'உன் அபிப்பிராயம் தெரிந்து கொண்டேன் ஆனால் நீ என்னிடம் வந்த ஸமயம் அஸுர ஸந்த்யா காலமாயிருக்கிறபடியால் உனக்குப் பிறக்கும் ஸந்தானம் துஷ்டர்களாகவும் பயங்கரமான ரூபமுடையவர்களாகவும் இருப்பார்கள்' என்று சொன்னார். இதைக் கேட்டதும் அவள் வெகு வருத்தத்துடன் அவரை நமஸ்கரித்து "எனக்கு தங்கள் அநுக்ரஹத்தினால் ஏற்படும் ஸந்தானம் இப்படியா இருக்க வேண்டும்?" என்று கெஞ்சிக் கேட்டதின்பேரில், "கடைசியில் நல்ல தார்மிகனான ஒரு புத்திரன் பிறப்பான்" என்று அநுக்ரஹித்தார். அப்படியே அவளுக்கு வரிசையாக தசக்ரீவன் (இவனுக்கே

பின்னால் ராவணன் என்ற பெயர் ஏற்பட்டது. கும்பகர்ணன், சூர்பணகை, விபீஷணன் இவர்கள் பிறந்தார்கள்.

கும்பீநஸியினுடைய மற்ற ஸஹோதரிகளை யார் யாருக்கு ஸுமாலி விவாஹம் செய்து கொடுத்தான் என்பது தெரியவில்லை. ஆனால் அந்த ஸஹோதரிகளில் ஒருவளுடைய புத்திரன் தண்டகாரண்யத்தைக் காத்து வந்த கரன் என்று மாத்திரம் தெரிகிறது.

மயன் என்ற அஸுர சில்பிக்கு ஹேமை என்ற அப்ஸரஸிடம் மோஹம் ஏற்பட்டு பூமிக்கு அடியில் ஒரு பிலத்தில் அற்புதமான ஸந்நிவேசத்தை ஏற்படுத்திக் கொண்டு அவளுடன் ரமித்து வந்தான். அப்பொழுது அவர்களுக்கு மாயாவி, துந்துபி என்று இரண்டு புத்திரர்களும் மந்தோதரி என்ற புத்திரியும் பிறந்தார்கள். (இந்த மாயாவி, துந்துபி இருவர்களையும் பின்னால் வாலி ஸம்ஹாரம் செய்தான். மயனையும் இந்திரனை அடித்ததாக கிஷ்கிந்தா காண்டத்தில் தெரிகிறது. அந்த பிலத்தில் ஹனுமார் முதலான வானரர்கள் பிரவேசித்து ஹேமையின் ஸகியான ஸ்வயம்பிரபை என்பவளைக் கண்டதாகவும் அங்கே கண்டிருக்கிறது.)

தன் பெண் மந்தோதரியை அழைத்துக்கொண்டு மயன் ஒருநாள் காட்டில் ஸஞ்சாரம் செய்துகொண்டிருந்த ஸமயம் ராவணன் அங்கே வேட்டைக்காகப் போனவன் மயனைப் பார்த்து "தாங்கள் யார்?" என்று கேட்டான். அதற்கு அவன் தன் வரலாற்றை சொல்லிவிட்டு "ஹேமை என்னை விட்டுப்போய் பதின்மூன்று வருஷங்களாகின்றன. இந்தப் பெண்ணுக்குத் தகுந்த பர்த்தாவைத்தேடி வந்திருக்கிறேன். மானத்துடன் இருக்க வேண்டுமென்று நினைக்கும் யாருக்குமே கன்னியின் தகப்பனாராக இருப்பது துக்கமேயாகும். அவள் பிறந்த

வீடு, புகுந்த வீடு, இரண்டையுமே ஸம்சயத்தில் வைக்கக் கூடியவள். தாங்கள் யார்?" என்று கேட்டான்.

कन्यापितृत्वं दुःखं हि सर्वेषां मानकाङ्क्षिणाम् ॥

कन्या हि द्वे कुले नित्यं संशये स्थाप्य तिष्ठति । உத். 12 (11,12)

தான் பிரஹ்மாவின் புத்திரரான புலஸ்த்யரின் புத்திரரான விசிரவஸ்ஸின் குமாரன் என்று ராவணன் சொன்னதும், வெகு ஸந்தோஷமடைந்து தன் புத்திரியை கிரஹித்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். உடனே அங்கேயே அக்னி ஸாக்ஷிகமாக மயன் மந்தோதரியை ராவணனுக்கு விவாஹம் செய்துவைத்தான். அத்துடன் தனக்கு உத்தமமான தபஸினால் கிடைத்த அமோகமான சக்தியாயுதத்தையும் கொடுத்தான். (இதைத்தான் பின்னால் ராவணன் லக்ஷ்மணன் பேரில் பிரயோகம் செய்தது.) ராவணனுக்கு மந்தோதரியிடம் பிறந்தவன் இந்திரஜித் என்று பிரஸித்தியடைந்த மேகநாதன். ஹனுமாரால் பின்னால் ஸம்ஹரிக்கப்பட்ட அக்ஷகுமாரன் இவளுக்குப் பிறந்தவனாக தெரியவில்லை. மந்தோதரியைத் தவிர வேறு அநேக பார்யைகளும் ராவணனுக்கு இருந்ததாகத் தெரிகிறது. அவர்களில் தான்யமாலினி யென்பவளுக்குப் பிறந்தவன் அதிகாயன், வேறு ஸ்திரீகளிடத்தில் பிறந்தவர்கள் தேவாந்தகன், நராந்தகன், த்ரிசிரஸ் என்பவர்கள். (இந்த த்ரிசிரஸ் கரனுடைய ஸேனாதிபதியாயிருந்து ஸ்ரீராமரால் கொல்லப்பட்ட த்ரிசிரஸ் அல்ல.)

கும்பகர்ணன் விரோசனின் புத்திரரான பலி சக்கிரவர்த்தியின் தௌஹித்திரியான வஜ்ரஜ்வாலை என்பவளை விவாஹம் செய்து கொண்டான். அவர்களின் புத்திரர்கள் கும்பன் நிகும்பன் என்பார்கள்.

கந்தர்வராஜனை சைலூஷன் என்பவனின் புத்திரி மானஸ ஸரஸ்ஸின் கரையில் பிறந்தபோது அந்த ஸரஸ் பொங்கி வருகையில் குழந்தையைக் காப்பாற்றுவதற்காக அவள் தாயார் ஸரஸைப் பார்த்து "सरः मा" (ஸமீபத்தில் வராதே) என்று சொன்னதால் அந்தக் குழந்தைக்கு அப்படியே ஸரமா என்று பெயர் ஏற்பட்டுவிட்டது. இவளையே பின்னால் ராவணன் விபீஷணனுக்கு விவாஹம் செய்து வைத்தான். ஸீதை அசோக வனத்தில் துக்கப்படும்போதெல்லாம் அவளுக்கு ஆறுதல் சொல்லி தைர்யம் கொடுத்துக் கொண்டு வந்தவள் இந்த ஸரமாதான். விபீஷணனுக்கு இவளிடத்தில் ஸந்தானம் ஏற்பட்டதாக ஸ்ரீமத் ராமாயணத்தில் காணவில்லை. மாலியின் நான்கு குமாரர்களான அநிலன், அநலன், ஹரன், ஸம்பாதி என்பவர்கள் விபீஷணனுடனேயே இருந்து ஸ்ரீராமரை சரணமடைந்ததாகக் காண்கிறது.

சூர்ப்பணகை என்ற தங்கையை வித்யுத்ஜிஹ்வன் என்ற ராக்ஷஸனுக்கு ராவணனே விவாஹம் செய்து கொடுத்தான். ஆனால் பின்னால் திக்விஜயம் செய்யும் போது யுத்த வெறியில் இனம் தெரியாமல் அவனை ராவணனே ஸம்ஹாரம் செய்துவிட்டான். இந்த தவறுதலுக்காக மிகவும் வருந்தி சூர்ப்பணகையை ஸமாதானம் செய்து ஸஹோதரன் முறையான கரனுடைய ஸம்ரக்ஷணையில் தண்டகாரண்யத்தில் இருந்துவரும்படி ஏற்பாடு செய்தான். (பின்னால் ஸீதையை மோஹம் செய்வதற்காக மாயையினால் ஸ்ரீராமர் சிரஸ்ஸை கல்பித்துக் காட்டின வித்யுத்ஜிஹ்வன் என்பவன் வேறு.)

ராவணன் தவறுதல் செய்துவிட்டு வருந்துபவனா என்ற ஸந்தேஹம் வரலாம். ஸீதாதேவி விஷயத்தில் பிடிவாதமாக இருந்தானே தவிர அவன் தர்மம் தெரியாதவனில்லை. பந்துக்களிடத்தில் பிரீதியுடனில்லாமல் இல்லை.

உதாஹரணமாக, அவன் தபஸ் செய்யப் போயிருந்த ஸமயம, கும்பகர்ணன் தூங்கும் ஸமயம், விபீஷணரும் இந்த்ரஜித்தும் வேறு கார்யங்களில் ஈடுபட்டிருந்த ஸமயம், மது என்ற அஸுரன் லங்கைக்கு வந்து மால்யவானுடைய தௌஹித்ரி கும்பீநஸி என்பவளை பலாத்காரமாக தூக்கிக்கொண்டு போய் விவாஹம் செய்து கொண்டு விட்டான். இவ்விஷயம் ராவணனுக்கு திரும்பி வந்தவுடன் தெரிந்தது. உடனே வெகு கோபத்துடன் அந்த மதுவை ஸம்ஹாரம் செய்துவிடுகிற தென்று அவன் நகரத்திற்குப் போய்ச்சேர்ந்தான். மதுவைக் காணுமல் அவன் அரண்மனைக்குள் சென்றுன். கும்பீநஸி வந்து ராவணனை நமஸ்கரித்தாள். அவன் அவளை எழுப்பி "பயப்படாதே நான் உனக்கு என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான். உடனே அவள் "குலஸ்த்ரீகளுக்கு வைதவ்யத்திற்கு ஸமானமான பயப் படக்கூடியது வேறு ஒன்றும் கிடையாது. ஆகையால் என் பர்த்தாவை கொல்லக்கூடாது" என்று கேட்டுக் கொண்டாள். ராவணனும் உடனே ஸந்தோஷத்துடன் தன் உத்தேசத்தைக் கைவிட்டான். கும்பீநஸி உள்ளே போய், தூங்கிக்கொண்டிருந்த தன் பர்த்தாவை அழைத்துக்கொண்டு வந்தாள். அவன் ராவணனை மரியாதையாய் வரவேற்றதின்பேரில் அங்கேயே ஒரு ராத்திரி தங்கிவிட்டு மதுவையும் தனக்கு ஸஹாயமாக அழைத்துக்கொண்டு திக்விஜயத்திற்குப் புறப்பட்டான்.

ராவணன் குபேரனிடமிருந்து லங்காபுரியையும் புஷ்பக விமானத்தையும் அபஹரித்துக் கொண்ட பிற்பாடு ரஸாதலத்திலிருந்த மால்யவான், ஸுமாலி அவர்களுடைய ஸந்தானம் பரிவாரங்களுடன் லங்கைக்கு வந்துவிட்டார்கள். பின்னல் ராவணன் திக்விஜயம் செய்கையில் இந்திரலோகம் சென்று தேவர்களுடன் யுத்தம் செய்ததில் எட்டாவது வஸுவான ஸாவித்ரன் என்ற தேவன் ஸுமாலியை கதையினுல் அடித்து ஸம்ஹாரம்

செய்துவிட்டான். மால்யவான் மாத்திரம் லங்கையி லேயேயிருந்துகொண்டு, பின்னால் ஸீதையை விட்டு விடும்படி ராவணனுக்கு எவ்வளவு சொல்லியும் பலிக் காமல் மேல் சொல்வதை நிறுத்திக் கொண்டான். ஸுமாலியின் குமாரர்களோ மால்யவானின் குமாரர் களோ எல்லோருமே ராவணனுக்கு ஸஹாயமாக இருந்து வந்தார்கள். இவ்வொவ்வொருவருடைய யோக்யதை யையும் வரலாற்றையும் எடுத்துச் சொல்வதானால் வெகு விரிவாக ஆகிவிடுமானதினால் வம்சவர்ணனையில் பிரக்ருத மில்லையென்று இத்துடன் நிறுத்திவிடுகிறேன்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் வரும் மாரீசனும் ஸுபாஹு வும் இந்த ராக்ஷஸ கோஷ்டியில் சேர்ந்தவர்களல்ல. ஸுந்தன், உபஸுந்தன் என்ற இரண்டு அஸுர ஸஹோ தரர்கள் இருந்தார்கள். ஸுகேது என்ற யக்ஷனுடைய பெண் தாடகையை ஸுந்தன் விவாகம் செய்து கொண் டதில் பிறந்தவன் மாரீசன். உபஸுந்தனின் புத்திரன் ஸுபாஹு. ரஸாதலத்தில் இருக்கும்போது ஸுமாலி யின் மந்திரிகளில் ஒருவனாக மாரீசன் இருந்து வந்தான். பிற்பாடு ராக்ஷஸர்கள் எல்லோருமே லங்கைக்கு வந்து ராவணனை லங்காதிபதியென்று ஒப்புக்கொண்ட பிறகு ராவணனிடத்திலேயே மந்திரி பதவியை வஹித்து வந்தான். தாடகை, மாரீசன், ஸுபாஹு மூவரும் ஸ்ரீராமர் கையினாலேயே தேக வியோக மடைந்தார்க ளென்பது குறிப்பிடத்தக்கது.

வால்மீகி மஹா முனிவர் ஸ்ரீமத் ராமாயணம் ஏழு காண்டங்களையும் எழுதியிருந்த போதிலும் அச்வமேத மஹாமண்டபத்தில் குசலவர்கள் கானம் செய்தது பட்டா பிஷேகம் வரையில்தானாகையால், ஸ்ரீமத் ராமாயண பாராயணக்கிரமத்தில் உத்தரகாண்டத்தைச் சேர்ப்பது ஸம்பிரதாயமில்லை. பாராயணக்கிரமமன்னியில் பிரவசன ரீதியாக உபன்யாஸம் செய்யும் வித்வான்களும் சுப

மாகவே முடிக்கவேண்டுமென்ற நியாயத்தை யனுஸரித்து ஸ்ரீராமபட்டாபிஷேகத்துடன் ஸமாப்தி செய்துவிடுகிறார்கள். ஆகையால் ஸாமான்ய ஜனங்களுக்கு உத்தர காண்டத்திலுள்ள விஷயங்களின் பரிசயம் ஏற்படுவதில்லை. ஆனாலும் பொதுவாக ஸ்ரீராமர் ஸீதையை பரித்யாகம் செய்தாரென்றும் அசுவமேதயாகம் செய்தாரென்றும் பின்னால் ஸ்ரீராமர் உள்பட யாவரும் ஸரயூ நதியில் இறங்கி வைகுண்டம் போனார்கள் என்றும் ஜனங்கள் அறிவார்கள். அவர்கள் ராக்ஷஸர்களின் முன் வரலாற்றை அறிந்து கொள்வதற்கு அவகாசமேயேற்படாது. அதை யுத்தேசித்து இங்கு சுருக்கமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதுவும் ஸ்ரீமத் ராமாயணத்தின் ஒரு பகுதியாகவேயிருப்பதால் அதை உதாஸீனம்செய்வது நியாயமில்லையென்று உணர்ந்து வாசகர்கள் ரஸிப்பார்களென்று நம்புகிறேன்.

'मङ्गलं कोसलेन्द्राय महनीय गुणात्मने ।
चक्रवर्ति तनूजाय सार्वभौमाय मङ्गलं ॥"

ओं तत् सत्